# அலங்கல் அணிந்தருளே




''அப்பா! அருளாரமுதே!
அன்பின் உறைவிடமே!
அமைதியின் நிறை குடமே
அகிலத்து உயிர்களின்
அன்னையின் தனிவடிவே!
அடியேனின்
அன்புமலர் ஏற்று
அலங்கல் அணிந்தருளே!''

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS. TIRUPATI UNDER THEIR SCHEME "AID TO AUTHORS" TO PUBLISH RELIGIOUS BOOKS



''ஆய்வுகள் அச்சேறி அழகிய வடிவம் பெற
அரிய பொருளை அள்ளித்தந்த
அன்புசால் திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு
அடியேனின் அகங்கனிந்த நன்றி''

# உள்ளே...

**தமிழண்ணல்**
முனைவர் இராம. பெரியகருப்பன்

ஆராய்ச்சிப் பேராசிரியர்,
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை—625 021.

**'ஏரகம்'**
384, சதாசிவநகர்
மதுரை. 625020
தொ. பே. எண் : 43792
17-12-1989.

# அணிந்துரை

'கோயிலாய்வு' என்ற ஒன்றை மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம், தமிழியல் துறையில் புகுத்தியது. அதன் வழி ஆய்வு செய்து எம். பில்., பி.எச். டி. எனும் பட்டங்கள் பெற்றோர் பலராவர். அவ்வழியில் பேராசிரியர் நாகப்பா நாச்சியப்பன் அவர்கள் 'திருப் பரங்குன்றம் திருக்கோயிலை தம் பி.எச்.டி., ஆய்வுக்கு எடுத்துக் கொண்டார்.

கோயிலாய்வு என்பது பல்துறைக் கூட்டாய்வாகும். இலக்கியம், கட்டிடக்கலை, சிற்பம், வரலாறு, கல்வெட்டியல், தொல் பொருளியல், சமூகவியல் யாவும் கலந்ததொரு ஆய்வாகும். இதன்கண் இலக்கிய மாணவன், தனக்குரிய கண்ணோட்டத்துடன்தான் அணுக முடியும். சிலர் இவ்வாய்வு, வரலாற்றுத் துறை யினருக்கும் தொல்பொருள் துறையினருக்கும் உரிய தன்றோ என வினவுவர். அவர்கள் மேற்கொள்ளும் போது, ஆய்வு நோக்கமும் போக்கும் வேறுபடும். இலக்

கிய மாணவன் மேற் கொள்வதால், வேறு பல உண்மைகள் வெளிப்பட வாய்ப்புளது.

சான்றாக இவ்ஆய்வேட்டில் நாட்டுப்புற மக்களின் வழிபாடுகளும், அவர்களுடன் தொடர்புடைய திருவிழாக்களும், அவர்கள் பாடும் நாட்டுப்புறப் பாடல்களும் நன்கு ஆராயப்பட்டுள்ளமையைக் குறிப்பிடலாம். திருப்பரங்குன்றம் தொன்மை மிக்க திருத்தலமாகும். வரலாற்றுப் புகழ் பெற்ற இத்திருக் கோயிலில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் கவனித்தால், வியப்பாக இருக்கிறது.

பரிபாடலும் திருமுருகாற்றுப் படையும், அகநானூறு, கலித்தொகை, மதுரைக் காஞ்சியும் குறிப்பிடும் இம்முருகன் திருத்தலம் சமண முனிவர் தங்கியிருந்த இடமாகவும் விளங்கியிருக்கிறது. முருகனையே பாடும் இத்தலத்தினை தேவார மூவரும் பாடியுள்ளனர். ஆயினும் அவர்கள் சிவனையே குறிப்பிட்டுப் பாடியுள்ளனரன்றி முருகனை உறவு முறை கூட்டி ஒருங்கிணைத்துக் கூறவும் முற்பட்டிலர். ஒரு காலத்தில் முருகன் திருத்தலமாகவே இருந்த இப்பதி சிவனின் தலமாகவே கருதி பாடப்பட்டிருப்பதும் விந்தை தான்! இங்கு மலையுச்சியில் இசுலாமியர் வழிபாடும் ஏற்பட்டுள்ளது. வரலாறு தழுவிய இம்மாற்றங்களையெல்லாம் இவ் ஆசிரியர் வரன் முறையாக எடுத்துக் காட்டி, நிரல்பட விளக்கும் பாங்கு பாராட்டத்தக்கதாகும்.

இக்கோயில் 'சிவன் கோயிலாகவே ஏற்படுத்தப்பட்டது' என்ற ஆய்வாளர் கருத்து, மேலும் ஆராயத்தக்கது. கோயிலிலுள்ள முருகன் கருவறை பற்றிய குறிப்புகள் மிகவும் ஆழமாகச் சிந்திக்க வைக்கின்றன. ''தெய்வ யானையின் திருமணம் திருப்பரங்குன்றத்தில் நடந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனால் இங்குள்ள மூலவர் சிலை திருமணக் கோலத்துடன் அமைக்கப்படவில்லை'' என்று கூறுகிறார் ஆய்வாளர். மேலும் டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள் ''திருப்பரங்குன்றம் கோயிலில் முருகனுக்கென்று தனிக் கருவறையோ, தனிச் சிலையோ இல்லை என்றும் இன்று ஆயிரக்கணக்கான பக்தர்கள் முருகன் என எண்ணி வணங்கும் சிலை சேட்டா தேவியின் சிலை'' என்றும் கூறுவதை இவ் ஆய்வாளர் சுட்டிக்காட்டி,

அலசி ஆராய்கிறார். மூலக் கருவறையிலுள்ளது முருகன் சிலையே என நிறுவுகிறார்.

சங்கக் காலத்தில் முருகனுடன் மட்டுமே தொடர்பு படுத்திப் பாடப்பட்ட தலம், தேவார காலத்தில் சிவனொடு மட்டுமே தொடர்புபடுத்தி பாடப்பட்டுள்ளது. மூலக் கருவறைச் சிலையே முருகன் சிலையா, சேட்டாதேவி சிலையா என ஐயம் ஏற்பட்டுள்ளது. முருகன் தெய்வானையை மணந்த சிறப்புக்குரிய தலமென்ற இலக்கியக் குறிப்புக்கு ஏற்ப மூலச் சிற்பம் அமைந்திலது. நாயக்கர் கால மண்டபத்தில்தான் தெய்வானை திருமணக் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது. பரிபாடல் வியந்து பாராட்டும் ஓவிய மண்டபங்கள், இன்ன பலப்பல எழுத்து நிலை மண்டபங்கள் என்ன ஆயின என்று தெரியவில்லை. இடையிடையே சமண வழிபாடு கலக்கும் காலகட்டங்கள் வேறு இருந்துள்ளன. இவை அனைத்தையும் நடுவு நிலையுடன் ஆராயும் இவ் ஆய்வேடு, ஆய்வுலகிற்கும் கோயிலாய்வுக்கும் பத்திமை உலகிற்கும் ஒரு சிறு கொடையேயாகும்.

பற்பல ஆவணங்களைப் பார்த்தும், பல பெரியவர் களைக் கண்டு பேசியும், கோயிலுடன் பல ஆண்டுகள் ஒட்டி உடனுறைந்து, விரத நோன்புகளை மேற் கொண்டு கலந்துறவாடியும், மக்களுடன் பழகிக் கலந் துரையாடியும் இலக்கியங்களைப் படித்தும் பல புதிய புதிய செய்திகளை சான்றாதாரங்களைத் தொகுத்துத் தரும் இவ் ஆய்வேடு தன்னளவில் திருப்பரங்குன்றம் பற்றிய ஒரு நிலையான ஆவணமாகத் திகழ்கிறது என்றால் மிகையாகாது. எளிய நடையில், அரிய செய்தி களை ஆய்வாளர் வரிசைப்படுத்தித் தந்துள்ளார். 'நெடுவேள் மார்பில் ஆரம் போல' என்று வானில் உயரப் பறக்கும் வெண் பறவைகளை அகநானூற்றில், நக்கீரர் போற்றுவார். ஆய்வுலகின் மதிப்பீடு பெற்ற இவ்வுரைக் கோவையும், தண்பரங்குன்றில் உறையும் முருகப் பெருமானுக்கு ஒரு முத்தாரமாக விளங்கு மென்பது உறுதி. டாக்டர் நாகப்பா-நாச்சியப்பனின் அரிய உழைப்புக்கும் எளிய படைப்புக்கும் ஓர் எடுத்துக் காட்டாக, இவ் ஆய்வேடு என்றும் இலங்கும் என்பது உறுதி.

(ஒப்பம்) **தமிழண்ணல்**

# நன்றியுரை

'வேற் கோட்டம்' பற்றிய என்னுடைய ஆய்வை மேற்கொள்வதற்கு எனக்குத் துணை நின்று அனுமதி வழங்கிய புதுச்சேரி அரசு கல்வித் துறைக்கும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திற்கும், சென்னை இந்து அறநிலைய ஆட்சித் துறைக்கும் என் நன்றி.

தமிழ் ஆய்வுலகத்தின் வேந்தராகத் திகழும் என் பேராசிரியர் முனைவர். தமிழண்ணல் இராம. பெரிய கருப்பன் அவர்கள் எனக்கு ஆய்வு நெறியாளராக இருந்து என்னை நெறிப்படுத்திய பெருமகனார். அவர்கள் நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த மைக்கு நான் என்றென்றும் நன்றிக் கடப்பாடுடையேன். ஆய்வுக் காலத்தில் எனக்குத் துணை நின்று; களப்பணி ஆய்வில் பங்கேற்று அரிய பல கருத்துக்களை வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் முனைவர். கோ. விசய வேணு கோபால், முனைவர் ம. திருமலை, முனைவர். மு.மணி வேல் ஆகியோர்க்கு நன்றி கூறுவதில் பெருமை கொள் கிறேன்.

ஆய்வு தொடர்பான பழஞ் சுவடிகளைத் தந்துதவிய என் நண்பர் பேராசிரியர் சு. சௌந்திரபாண்டியன் (கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை) ஆய்வாளர் களுக்குத் துணை செய்வதையே தம் வாழ்வின் குறிக் கோளாய்க் கொண்டவர். ஆய்வேட்டை எழுதும் பொழுதும், நூலாக்கும் பொழுதும் எனக்குத் துணை நின்ற என் நண்பர் பேராசிரியர் ரா. இராச கோபாலச் சாரியார் (அறிஞர் அண்ணா கலைக் கல்லூரி, காரைக் கால்) ஆகிய இருவரையும் என் இரு கண்களாகப் போற்றி நன்றி கூறி மகிழ்கின்றேன். ஆய்வுக்குப்

பல்லாற்றானும் துணை புரிந்து, கள ஆய்வில் வந்து உதவி, வரை படங்கள் எடுத்து உதவிய என் துணைவி திருவாட்டி. நா. தமயந்திக்கு நன்றி சொல்லத்தான் வேண்டுமா? அவள் என்னில் பாதிதானே. என் பெருமை, புகழ் அனைத்தும் அவளுக்குப் பிறகுதானே மற்றவர்க்கு,

நூலைச் சிறந்த முறையில் அச்சேற்றி, முகப்பு ஓவியங்கள், வரை படங்கள், பிழை திருத்தம் ஆகியவற்றைச் செவ்வனே செய்து நூலுக்கு ஓர் அழகான அமைப்பைத் தந்த ஆய்வறிஞர் பள்ளத்தூர். திரு. பழ. அண்ணாமலை அவர்கட்கும், காரைக்குடி திரு. பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கட்கும் (இராமர் கார்ப்பரேஷன், சென்னை-1) என் இதயங் கனிந்த நன்றி. நூலினை உரிய காலத்தில் அச்சேற்றிச் செம்மையான வடிவம் தந்த சென்னை, இராமர் கார்ப்பரேஷன் அச்சகத்தார்க்கும், சென்னை ஸ்ரீ எஸ்லெஸ் பிரிண்ட் ஹவுஸ் திரு. நா. செல்வராசன் அவர்கட்கும் என் இனிய நன்றி.

ஆய்வுலகிற்கு அடியேனின் பணி மிகச் சிறியது. இச்சிறிய பணிக்குப் பெருந் தொண்டாற்றிய பரந்த உள்ளம் கொண்ட அன்பர்கள் பலர். அவர்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமை கொள்கிறேன்.

காரைக்கால்
18-12-1989

ஆசிரியன்

# சுருக்கக் குறியீடுகளின் விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | ... | அகநானூறு |
| பரி. | ... | பரிபாடல் |
| புறம். | ... | புறநானூறு |
| உ. வே. சா. பதிப்பு | ... | உ. வே. சாமிநாதையர் பதிப்பு |
| கழகப் பதிப்பு | ... | திருநெல்வேலித் தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப்பதிப்பு |
| சிலம்பு. | ... | சிலப்பதிகாரம் |
| தொ. ஆ. | ... | தொகுப்பாசிரியர் |
| ப. | ... | பக்கம் |
| ப. ஆ. | ... | பதிப்பாசிரியர் |
| பக். | ... | பக்கங்கள் |
| மு. நூ. | ... | முற்காட்டிய நூல் |
| மு. ப. | ... | முதற்பதிப்பு |
| மேலது. | ... | மேற்காட்டிய நூல் |
| A. R. E. | ... | Annual Report on Epigraphy |
| Chap. | ... | Chapter |
| Ed. | ... | Edition |
| Epi. Ind. | ... | Epigraphica Indiea |
| Ibid. | ... | Ibidem |
| Op. Cit | ... | Opera Citato |
| P. | ... | Page |
| PP. | ... | Pages |
| S. I. I. | ... | South Indian Inscriptions |
| Vol. | ... | Volume |

# முன்னுரை

கோயில் பற்றிய ஆய்வுகள் ஒரு நாட்டின் சமய வரலாற்றை யும், அரசியல், கலை, சமூக, பண்பாடுகளின் வரலாற்றையும் அறிந்து கொள்ளத் துணை செய்கின்றன. தமிழ்நாட்டுக் கோயில் களில் காணப்பெறும் கட்டிடக்கலை, சிற்பங்கள், கல்வெட்டுக்கள், திருவிழாக்கள் போன்றவை ஒரு சிலரால் ஆய்வு செய்யப்பட்டு வந்துள்ளன. இவ்வகையில் பேராசிரியர் கே.கே. பிள்ளையின் 'சுசீந்திரம் கோயில்', பேராசிரியர் கே.வி. இராமனின் 'காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயில்', திரு. குடவாயில் பாலசுப்பிர மணியனின் 'திருவாரூர்த் திருக்கோயில்', திரு. ஏ.வி. செயச் சந்திரனின் 'மதுரைக் கோயில்' ஆகிய நூல்கள் குறிப்பிடத் தக்கவை. கோயில் ஆய்வில் திரு. ந. கலியாணசுந்தரத்தின் 'திருச்செந்தூர் முருகன் கோயில்', திரு. தொ. பரமசிவனின் 'அழகர் கோயில்', திருமதி. உமாமகேசுவரியின் 'நெல்லையப்பர் கோயில்' முதலியவை முன்னோடிகளாகத் திகழ்கின்றன தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினர் தமிழ்நாட்டில் கோயில்களைப் பற்றிய நூல்கள் பல வெளியிட்டுள்ளனர். இவ் வாய்வுகளின் தொடர்ச்சியாக மதுரைக்குத் தென்மேற்கே ஐந்து கல் தொலைவிலுள்ள 'திருப்பரங்குன்றம் கோயில்' என்னும் வேற்கோட்டம் பற்றிய ஆய்வே இவண் நூல்வடிவம் பெற்றுள்ளது.

கோயில்கள், வழிபடும் இடங்களாக மட்டும் (Place of worship) கருதத்தக்கவை அல்ல. அவை நாட்டின் சமய வரலாற் றிற்கும், சமூகம், கலை, பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்கும் இடமளிப்பனவாகும். கோயில்கள் குடிகளைத் தழுவியும், குடிகள் கோயில்களைத் தழுவியும் இருந்து வந்துள்ள நிலைமையை யும் காணமுடிகிறது. கோயில்கள் மக்கள் நம்பிக்கையின் சின்ன மாக (Symbol of Hope) இருந்து வந்துள்ளன. மக்களின் விருப்பு, வெறுப்புகளுக்கு ஏற்பவும், காலத்தின் வெப்ப, தட்ப நிலைமை, வளம், வறட்சி இவைகளுக்கு ஏற்பவும், கோயில்களில் விழாக் களும் வழிபாடுகளும் நடந்து வந்துள்ளன. நாட்டில் அரசியல்

நெருக்கடி நிலைமை ஏற்படுகின்ற காலத்தில் மக்கள் அனைவரும் ஒன்று சேரும் ஓர் ஒற்றுமைக் கூடமாகவும் கோயில்கள் இருந்து வந்துள்ளன. கோயிலைச் சுற்றியுள்ள ஊர்களில் வேளாண்மை, நிதி, நீதி, காவல், கடமைகள் ஆகியவற்றை வரையறுக்கும் இடமாகவும் இவை விளங்கியுள்ளன. மக்களின் சிறு தெய்வ வழிபாட்டு நெறியைப் புறக்கணிக்காமல் ஏற்று அவற்றைப் பெருந் தெய்வ வழிபாட்டுடன் சேர்த்து ஒரு சமரச நிலையைக் கொண்டு வரும் இடமாகவும் கோயில்கள் விளங்கியுள்ளன.

நாட்டின் வரலாற்றை முழுமையும் அறிந்து கொள்ளக் கோயில்களில் உள்ள கல்வெட்டுக்கள் ஓரளவு துணை செய்கின்றன. காலவரிசையில் காணப்படும் இடைவெளியையும், வரலாற்றுக்கு முந்திய காலத்தையும் அறிந்து கொள்ள கோயில் பற்றிய இலக்கியங்கள் பெரிதும் துணை செய்வனவாகும். கோயில்களில் நடைபெறும் வழிபாடுகள், திருவிழாக்கள், நாட்டுப்புற மக்களின் பாடல்கள் ஆகியவை கோயிலின் சமய வளர்ச்சியையும், மாற்றத்தையும் தெரிந்து கொள்ளத் துணை புரிகின்றன. கோயில் ஆட்சியினரால் பாதுகாத்து வைக்கப் பட்டுள்ள ஒரு சில குறிப்புக்கள், கோயில் ஆட்சியமைப்பு, ஆட்சி முறை, வருவாய், செலவுகள் ஆகியவை பற்றி அறிந்துகொள்ளத் துணை செய்யும் ஆதாரங்களாகும். கோயில்களின் தொன்மை பற்றி அறிந்து கொள்ளச் செவி வழிச்செய்தியாகக் கிடைக்கும் கருத்துக்களும் துணைபுரிவதைக் காணமுடிகிறது.

இந்நூலுள் திருப்பரங்குன்றின் வடதிசையில் வழிபாட்டில் உள்ள கோயிலும், தென்திசையில் வழிபாடற்ற நிலையில் உள்ள கோயிலும், இக்கோயில் ஆட்சி முறையோடு தொடர்புடைய குன்றைச் சூழ்ந்துள்ள கோயில்களும், குன்றின் மேலுள்ள இசுலாமியரின் தர்காவும் ஆராயப்பட்டுள்ளன. தமிழ்நாட்டின் சமய வளர்ச்சி, சமய மாறுதல்களுக்கேற்ப இக்குன்றம் எவ்வாறு சமய வரலாற்றில் மாறி மாறியமைந்துள்ளது என்பதும் விளக்கப்பட்டுள்ளது. இக்குன்றத்தைச் சுற்றி அமைந்துள்ள சிற்றூர்கள் பல இக்கோயில்களோடு தொடர்புடைமையையும், இதனால் மக்கள் பெற்ற பயனும், மக்களிடமிருந்து கோயில் பெற்ற பயனும் தரப்பட்டுள்ளன. ஆய்வு முறையில் விளக்க முறை, வரலாற்று முறை, மதிப்பீட்டு முறை ஆகிய அணுகு முறைகள் இங்கு பின்பற்றப்பட்டுள்ளன.

இந்நூல் எட்டு இயல்களைக் கொண்டது. ‘திருக்கோயில் அமைப்பு’ என்னும் இயலில் கோயில் அமைந்துள்ள குன்றம்

கோயிலின் குடைவரை அமைப்பு, மண்டபங்கள் முதலியவை கல்வெட்டுச் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

குடைவரை அமைப்பு, மண்டபங்கள் அமைப்பு ஆகியவையும், அவை காட்டும் அரசர்களின் பெயர்களும் இதிற் சுட்டப்பட்டுள்ளன. இவ்வியலில் இக்கோயிலின் அமைப்பு சந்நிதித் தெருவில் உள்ள மயில்மண்டபம் தொடங்கிக் கோயிலினுள் இருக்கும் கருவறை வரை விளக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மண்டபமும் தனித்தனியே விளக்கப்பட்டு, அவை எவ்வாறு பெயர் பெற்றன என்பதும் காட்டப்பட்டுள்ளன. மண்டபங்களில் இடம் பெற்றுள்ள சிலைகள், சிற்பங்கள் அமைந்துள்ள முறை, அமைக்கப்பட்ட காலம் ஆகிய செய்திகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

திருக்கோயில் அமைப்பையும், திருவுருவங்களின் அமைப்பையும், அவை தோன்றிய காலக்கண்ணோட்டத்தோடு பார்க்கும் பொழுது, அவ்வக்கால மக்களின் விருப்பு வெறுப்புக்கேற்ப இக்கோயில் அமைப்பு எவ்வாறு மாறியுள்ளது என்பது தெரிய வருகிறது. பலதெய்வ வணக்கம், ஒரு தெய்வ வணக்கமாக மாறி, ஒரு தெய்வ வணக்கத்திலும் போட்டிகள், பூசல்கள் ஏற்படா வண்ணம் சமரச முயற்சிகள் நடந்திருப்பதையும் இங்குக் காண முடிகிறது. கோயிலின் அமைப்பில், சிற்பங்களில் மாறுதல்கள் ஏற்பட்டாலும் மக்கள் எண்ணியிருந்த ஆற்றலில் குறைவேதுமின்றி, அவை தொடர்ந்து வரும் முறையையும் இங்குக் காண முடிகிறது. முருகவணக்கம் பழமையைப் புதுப்பித்துக் கொண்டு தனி வணக்கமாக மாறிய காலகட்டத்திற்குப் பின்னர்தான் இக்கோயில் குடைவரை அமைப்பிலிருந்து கட்டிடக்கோயில் அமைப்பைப் பெற்றுள்ளமையை அறியமுடிகிறது. ஆட்சியாளர்கள் மக்களின் வழிபாட்டுப் பற்றினை உணர்ந்து, அதனை ஒதுக்க எண்ணாமல் சிறுதெய்வ வழிபாட்டைப் பெருந்தெய்வ வழிபாட்டுடன் இணைக்க முயன்றதைக் கருப்பண்ண சுவாமி கருவறைத் தோற்றத்திலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. கோயிலை வழிபடும் மக்களின், ஆட்சியாளர்களின் விருப்பிற்கேற்பக் கால வெள்ளத்தில் ஒரு கோயில் எவ்வாறு வளர்ச்சியும், மாற்றமும் பெறுகிறது என்பது இவ்வியலில் விளக்கப்படுகிறது.

'இலக்கியங்களில் திருப்பரங்குன்றம்' என்னும் இயலில் சங்க கால இலக்கியங்கள், பத்திமைக் கால இலக்கியங்கள், இடைக்காலச் சமய இலக்கியங்கள், பிற்காலப் புராணச் சிற்றிலக்கியங்கள் என்னும் நான்கு பெரும் பிரிவுகளில் இலக்கியங்கள் விளக்கப்பட்டுள்ளன. சங்க காலத்தில் வேல் வழிபாடு இருந்த

மையையும், வேற்கோட்டம் இருந்தமையையும், அவற்றுடன் முருகன் தனித் தெய்வமாக விளங்கியுள்ளான் என்பதையும் அறிய முடிகிறது. பத்திமைக் கால இலக்கியங்களான திருப் பரங்குன்றத் தேவாரத்தில் முருகன் பற்றிய குறிப்புக்கள் ஏதும் இல்லை. தேவார காலத்தில் முருகன் வழிபாடு இரண்டாம் நிலையையடைந்து, சிவவழிபாடு பெருவழக்குப் பெற்றுள்ளது. தேவார மூவர்கள் முருகனையோ, மற்ற தெய்வங்களையோ பெரும்பாலும் தலைமை தந்து பாடுவதில்லை. முருகனைப் பாடும்படி நேரிட்டால் சிவனோடு உறவுநிலைத் தொடர்பு படுத்தித்தான் பாடியுள்ளனர். ஆனால் இத்திருத்தலத்தை முருக னோடும் தொடர்புபடுத்திப் பாடவில்லை. ஆகவே அக்காலத் தில் இக்கோயில் முழுமையான சிவன் கோயிலாகவே எண்ணிப் பாடப்பட்டுள்ளது. ஆயினும் கல்லாடம் மட்டும் பரங்குன்றில் உள்ள முருகனின் இருதேவியர் உடனான தெய்வத் திருக் கோலத்தைப் பாடுகிறது. கந்தபுராணம் முருக வழிபாட்டின் மறுமலர்ச்சியையும், அருணகிரிநாதர் பாடல்கள் முருக வழி பாட்டின் உயர் வளர்ச்சி நிலையையும் காட்டுகின்றன. பிற்காலப் புராணச் சிற்றிலக்கியங்கள் முன்னையோர் நெறியைப் பின் பற்றியும், புராண மரபையும் மரபுக் கதைகளையும் பின்பற்றி யும் தோன்றியுள்ளன. ஆனால் இவ்விலக்கியங்கள் இங்குத் தற்பொழுது நடைபெற்று வரும் வழிபாட்டை வைத்துப் பாட வில்லை; மரபைப் பின்பற்றியே பாடியுள்ளன.

'வரலாற்றில் திருப்பரங்குன்றம்' என்னும் இயல் தமிழ் பிராமிக் கல்வெட்டுக்காலம், சங்ககாலம், களப்பிரர் காலம், முதற் பாண்டியப் பேரரசுக் காலம், சோழராட்சிக் காலம், பிற்காலப் பாண்டியப் பேரரசுக் காலம், சுல்தான்களின் ஆட்சிக் காலம், விசயநகரப் பேரரசுக் காலம், நாயக்கராட்சிக் காலம், கருநாடக நவாப்புகளின் காலம், ஆங்கிலேயர் ஆட்சிக் காலம், விடுதலை இந்தியாவின் ஆட்சிக் காலம் என்ற பன்னிரண்டு பிரிவு களில் விளக்கப்படுகின்றது. இதில் தமிழ் பிராமிக் கல்வெட்டுக் காலத்திலும், சங்க இலக்கியக் காலத்திலும் இம்மலை பெரும் பாலும் சமணரோடு தொடர்புபட்ட மலையாகவே இருந் துள்ளது என்பதற்குப் போதிய கல்வெட்டுச் சான்றாதாரங்கள் உள்ளன. அக்காலக் கட்டத்தில் தமிழர்களின் வழிபாடான வேல் வழிபாடும், முருகன் வழிபாடும் தம் ஏற்றம் குறையாமல் இருந் துள்ளன. பின்னர் களப்பிரர் காலத்தில் பௌத்த—சமணச் செல்வாக்கு அதிகம் பெருகியதால் வேல் வழிபாடும், முருகன் வழிபாடும் செல்வாக்குக் குறைந்துள்ளன என எண்ண வேண்டி

யுள்ளது. முதல் பாண்டியப் பேரரசுக் காலம் முதல் சுல்தான்கள் ஆட்சிக் காலம் வரை சிவவழிபாடே சிறந்து வந்துள்ளதால் முருகன் வழிபாடு இரண்டாம் நிலையில் வைக்கப்பட்டு, பரிவார தெய்வங்களுள் ஒன்றாகவே கருதப்பட்டுள்ளது. விசயநகரப் பேரரசு மற்றும் நாயக்கராட்சிக் காலத்தில் முருகன் வழிபாடு மறுமலர்ச்சி பெற்றுப் பெரு வளர்ச்சியடைந்துள்ளது.

'கோயில் ஆட்சி முறை' என்னும் இயலில் நாயக்கர்கள் காலத்திலிருந்த ஆட்சியமைப்புத் தொடங்கி, இன்றைய தமிழ் நாடு அரசு அறநிலையத்துறை ஆட்சி வரையிலான செய்திகள் கிடைத்த வரை விளக்கப்பட்டுள்ளன. இதில் கி.பி. 1801 முதல் இன்று வரையான ஆட்சியாளர்கள், அறங்காவலர்கள் வரிசை யும், அமைப்பும் தரப்பட்டுள்ளன. அறநிலைய ஆட்சித் துறை யில் மூன்று வெவ்வேறு பிரிவுகள் உள்ளன. இதில் அதிகாரமும், ஆற்றலும், பொறுப்பும் உள்ள குழுக்கள் எவையென்பது விளக் கப்பட்டுள்ளன. இன்றைய கோயில் ஆட்சி முறையில் வருமான மும், செலவினங்களும்தான் எல்லோருடைய கருத்தையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்துள்ளன. வருமானத்தை வைத்துக் கோயில்கள் தரம் பிரிக்கப்படுகின்றன. இவ்வாறு வருமான அடிப்படையில் கோயில்கள் பிரிக்கப்படுவதால், அறங்காவலர் பதவிக்குப் போட்டியும், பூசலும் ஏற்படும் சூழல்கள் தோன்று கின்றன. கோயில்களில் செல்வர்கள், கட்சிகள், அரசியல் என்று பலர் இடம் பிடிக்க நினைப்பதால் உண்மையிலேயே தக்கவர் களாக இருப்பவர்கள் ஒதுங்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. அரசும் நீதிமன்றமும் இதில் அடிக்கடி தலையிட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. ஆகவே கோயில் ஆட்சி முறையில் கோயில்களை வருமான அடிப்படையில் பிரிப்பதும், அரசியல் சார்பினரான அறங்காவலர்களை நியமிப்பதும் பொருந்திய முறையாகுமா என ஐயுற வேண்டியுள்ளது.

'நாள் வழிபாடும் திருவிழாக்களும்' என்னும் இயலில் கோயிலில் நடைபெறும் நாள் வழிபாடு, ஓராண்டின் பன்னிரு மாதங்களிலும் நடக்கும் திருவிழாக்கள் பற்றிக் கூறப்பட் டுள்ளன. நாள் வழிபாடு இக்கோயிலில் எட்டு நேரங்களில் நடை பெறுகின்றன. அவை நடைபெறும் முறைகள், காலங்கள் ஆகியவை இங்கு விளக்கப்பட்டுள்ளன. நாள் வழிபாட்டில் இடம் பெறும் நாதசுவர மேளங்களின் இராகங்களும் இங்குக் காட்டப் பட்டுள்ளன. வணங்கிய மக்களுக்கு ஏற்ப வழிபடப்பட்ட தெய் வங்களும், வழிபாட்டு முறைகளும் மாறியமைந்துள்ளமையும் இங்கு விளக்கப்பட்டுள்ளது. திருவிழாக்கள் ஐந்து பிரிவாகப்

பிரிக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இங்கு நடைபெறும் திருவிழாக்கள் அனைத்தும் சமூகத் தொடர்புடைய திருவிழாக்கள் எனவும், சமூகத் தொடர்பில்லாத திருவிழாக்கள் எனவும் இரு பகுதிகளாகப் பகுக்கப்பட்டு விளக்கம் செய்யப்பட்டுள்ளன. திருவிழாக்களை ஒட்டு மொத்தமாக வைத்துப் பார்க்கும் பொழுது அவை கீழ்க்காணும் மூன்று முறையில் ஏற்பட்டுள்ளமை தெரிய வருகிறது :

1. பழைய நாட்டுப்புறத் திருவிழாக்களை மக்கள் விருப்பத்திற்கேற்ப ஆகமத்திற்குட்படுத்தி ஆகம வழிப்பட்ட திருவிழாக்களாக மாற்றியவை.
2. மற்றைய பிற பெரிய ஊர்களில் உள்ளது போல் இக்கோயிலிலும் திருவிழாக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளமை.
3. சில அன்பர்கள், செல்வர்கள், அரசர்கள் (சமஸ்தானங்கள்) ஆகியவர்களின் விருப்பத்தினால் ஏற்பட்டவை. பன்னிரு மாதங்களிலும் நடைபெறும் திருவிழாக்களையும், பங்கேற்கும் கடவுளரையும், நிகழ்ச்சிகளையும் வைத்து ஒரு விளக்க அட்டவணை தரப்பட்டுள்ளது.

'கோயிலும் குடிகளும்' என்னும் இயலில் கோயிலோடு தொடர்புடைய, தொண்டு செய்து வருகிற குடிகள் வகைப்படுத்தப்பட்டு விளக்கப்பட்டுள்ளன. கோயிலைச்சுற்றி அமைக்கப்பட்டு வந்துள்ள சத்திரம், மடம், மண்டபங்கள் பற்றி விளக்கப்பட்டுள்ளன. கோயிலில் தொண்டு செய்து வந்த மக்களுக்கு அரசர்களால் ஏற்படுத்தப்பட்ட இரு மானியங்கள் பற்றி இங்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. தொண்டு செய்து வரும் மக்களுக்கு நாள் வழிபாட்டில் திருவிழாக் காலங்களில், கோயிலிலிருந்து செய்யப்படும் மரியாதைகள், அவர்களின் இறப்புக் காலத்தில் கிடைக்கும் மரியாதைகள் ஆகியவை இங்குப் பேட்டிகள் மூலம் கேட்டறிந்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன. தொழில்வழிப் பிரிவு கொண்ட அக்காலச் சமுதாய மக்கள் தம் தொழிலோடு தொடர்புடைய வகையில் கோயிலுக்குத் தொண்டு செய்து வந்துள்ளமையும், அதற்குக் கோயிலிலிருந்து செய்யப்பட்ட மரியாதைகளும் பிற்காலத்தில் சடங்குகளாக மாறி வந்துள்ளமையை இங்குக் காண முடிகிறது. கோயிலில் நேரடியாகத் தொண்டு செய்ய இயலாதவரும், வழிபட வர இயலாதவரும், செல்வர்களும் அறக்கட்டளைகளை ஏற்படுத்தி அதன் மூலம் தொண்டு செய்து வந்துள்ளனர். அவ்வறக் கட்டளைகள் தனிப்பட்டவர்களுக்காக இல்லாமல் ஓர் ஊரினர்க்காக, குலத்தினர்க்

காக ஏற்பட்டவை என்ற நிலையில் அவற்றில் அதிக ஈடுபாடும், சிறப்பும் காணப்படுகின்றன. தனிப்பட்டவர்களின் கட்டளைகளில் இதைக் காண இயலவில்லை. பிற்காலத்தில் கோயிலைச் சுற்றிச் சத்திரம், மடம், மண்டபங்கள், ஆகியவை பலரால் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பிற்காலத்தில் அறச்சிந்தனையோடும், தெய்வ வழிபாட்டிற்குமாக ஏற்படுத்தப்பட்டுள்ளன. பிற்காலத்தில் சில மடம், மண்டபங்கள் கேட்பாரற்ற நிலையில் விடப்பட்டன. சில வணிகத்திற்குரிய இடமாகவும், சில குறிப்பிட்டவர்களின் தனியுடைமையாகவும் மாறியுள்ளன. சில மடம், மண்டபங்கள் மட்டும் தம் பணியைச் சிறப்பாகச் செய்து வருவதையும் காண முடிகிறது.

'குன்றைச் சூழ்ந்துள்ள கோயில்கள்' என்னும் இயலில் திருப்பரங்குன்றம் கோயிலோடு தொடர்புடைய சொக்கநாதர் கோயில், பழனியாண்டவர் கோயில், ஆறுமுகநயினார் கோயில், காசி விசுவநாதர் கோயில், பாம்பலம்மன் கோயில், கன்னிமார் கோயில், வெயிலுகந்த அம்மன் கோயில், குருநாதசாமி கோயில், தென்பரங்குன்றம் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. குன்றின் மேலுள்ள சிக்கந்தர் தர்காவும் விளக்கப்பட்டுள்ளது. கி. பி. 1583-இல் கிருஷ்ண வீரப்ப நாயக்கர் கட்டிய கல்மடம் இன்று சொக்கநாதர் கோயில் என்ற பெயரில் உள்ளது.

இங்குச் சிற்பங்கள் மிக்க அழகுடையன. பழனியாண்டவர் கோயில் திருமலைநாயக்கரால் திருப்பணி செய்யப்பட்டது. இது மூன்று மண்டபங்களைக் கொண்டதாய் அமைந்துள்ளது. இக்கோயிலின் பின்புறம் சமணச் சிற்பங்களும், செஞ்சி நாயக்கரின் கல்வெட்டும் உள்ளன. ஆறுமுகநயினார் கோயில் பன்னிருகரம் கொண்ட ஆறுமுகசாமிக்காக மலைக்கோயிலாக சரவணப் பொய்கையின் ஓரத்தில் எடுக்கப்பட்டுள்ளது. காசி விஸ்வநாதர் கோயில் குன்றின் மேலுள்ள சுனைக்கருகில் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு சமணச் சிற்பங்கள் இருந்து சிதைக்கப்பட்டுள்ளன. இக்கோயிலை நக்கீரர் வரலாற்றுடன் இணைத்துக்கூறும் மரபு இன்றுமுள்ளது. பாம்பலம்மன் கோயில் நாட்டுப்புற மக்களின் நாகவழிபாட்டைக் காட்டும் ஒரு சிறு கோயிலாகத் திகழ்கிறது. கன்னிமார் கோயில் நாட்டுப்புற மக்கள் வழிபடும் ஏழு கன்னித் தெய்வங்களைக் கொண்ட கோயில். இதில் குறிகேட்டல், பொங்கலிடுதல், கும்மி கொட்டிக் குலவையிடுதல் போன்றவை குறிப்பிடத்தக்கவை. வெயிலுகந்த அம்மன் கோயில் மாரியம்மன் எனப்படும் பெண் தெய்வத்திற்காக ஏற்படுத்தப்பட்டது. இத்தெய்வத்திடம் நாட்டுப்புற மக்கள்

கொண்டுள்ள ஈடுபாட்டையறிந்து திருமலைநாயக்கர் இக்கோயில் விழாக்களைப் பெருங்கோயில் விழாக்களுடன் இணைத்து இதற்கு மானியங்கள் அளித்து நாடகம் ஒன்றும் நடத்த வழி செய்துள்ளார். இக்கோயில் திருவிழாவில் சாதிவேறுபாடின்றி மக்கள் பெரும் ஈடுபாட்டுடன் கலந்து கொள்கின்றனர். குருநாத சாமி கோயிலில் குருநாதசாமியோடு அங்காள ஈசுவரி, பேய்ச்சி யம்மன் போன்ற பெண் தெய்வங்களும் இடம்பெற்றுள்ளன. இதில் பாரிவேட்டை, கப்பரைப்பூசை போன்ற நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்கவை. இங்குள்ள பேய்ச்சியம்மன் திருவுருவம் குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைந்துள்ளது. இங்குச் சப்பாணி சாமி, கருப்பணசாமி ஆகிய சிறு தெய்வங்களும் விழாக் காலங் களில் சிறப்பிடம் பெறுகின்றன. தென்பரங்குன்றம் என்ற வழக்கு கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்டது என்பர். இது சமணக் கோயிலாக இருந்து திருத்தப் பெற்றுச் சிவன் கோயிலாக மாறியுள்ளது. இதற்கு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1216-1238) திருப்பணிகள் செய் துள்ளான். பின்னர் சிவன் கோயிலும் சிதைவுற்றுத் தற்பொழுது வழிபாடற்ற நிலையில் மத்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் பொறுப்பில் உள்ளது. இதுவே பாடல்பெற்ற பாண்டி நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று என்ற கருத்தும் நிலவுகிறது. இக்கோயில் அருணகிரிநாதர் திருப்புகழில் குறிக்கப்படுவதால் இஃது அருணகிரிநாதர் காலம் வரை வழிபாட்டில் இருந் துள்ளது என்பது தெளிவாகிறது. சிக்கந்தர் தர்கா எனும் சமாதிகள் மதுரையில் பதினான்காம் நூற்றாண்டில் ஆட்சி செய்து வந்த சுல்தான் சிக்கந்தர் ஷாவிற்கும் அவனுடைய படைத் தளபதியாருக்கும் அமைக்கப்பட்டவையாகும். சுல்தான் சிக்கந்தர் ஷா முகமதியர்கட்காகச் செய்த தியாகத்திற்காக அவரை ''அவுலியாவாக'' வணங்குகின்றனர். இத்தர்காவிற்கு வெள்ளிக்கிழமை தோறும் முகமதிய மக்கள் வந்து வணங்கு கிறார்கள். இங்கேயே வந்து தங்கி விரதமிருந்து வழிபடும் மக்களும் உள்ளனர்.

'நாட்டுப்புற வழிபாடுகள்' என்னும் இயலில் திருப்பரங் குன்றம் ஊரில் நடைபெற்றுவரும் நாள் ஏர் உழுதல், வேல் திரு விழா, செவ்வாய் சாட்டுதல், பாரிவேட்டை, கப்பரைப்பூசை, நேர்த்திக் கடன்கள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. திருப்பரங் குன்றத்தில் மூன்று முறையில் வழிபாடுகள், பழக்க வழக் கங்கள் ஏற்பட்டுள்ளன என இன்றுள்ள அடிப்படையில் பிரிக்கலாம். அவை,

1 பண்டு தொட்டு இருந்து வரும் நாட்டுப்புற மக்கள் வழிபாடுகள் (இவை ஆகமத்திற்கு முற்பட்ட வழிபாடுகள்)

2. அரசர்களாலும், அந்தணர்களாலும் ஏற்படுத்தப்பட்ட வழிபாடுகள்

3. பிற ஊர்களைப் பார்த்து அவ்வூர் வழிபாடுகளைக் கோயில் ஆட்சியாளர்கள் பின்பற்றியமை என்பன.

பின்னர்க் கூறப்பட்ட இரண்டு வழிபாடுகளும் ஆகமங்கட்கு ஏற்ப அமைந்த வழிபாடுகள். நாட்டுப்புற வழிபாடுகளானவை மட்டும் இங்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. நாள் ஏர் உழுதல் என்பது வேளாண்மை செய்யும் மக்கள் இங்கு அதிகம் இருப்ப தால் முதலில் ஏரை வணங்கித் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்து ஊரே ஒருங்கு கூடி எடுக்கும் விழா. ஊர் மக்கள் அனைவரும் பேசி முடிவுகள் செய்து ஒன்றாக வழிபாடு செய்யும் ஒருகூட்டு வழிபாடாக இஃதுஉள்ளது. வேல் திருவிழா, பண்டை மக்கள் வேற்கோட்டம் அமைத்து வழிபட்டதை நினைவுபடுத்து கிறது. மேலும் முருகன் திருக்கை வேலை ஆண்டுக்கொரு முறை மலைமேல் கொண்டு சென்று வழிபடுவதாகவும் உள்ளது. செவ்வாய் சாட்டுதல் என்பது இங்குள்ள வெயிலுகந்த அம்மனுக்கு மாசிமாதம் நடைபெறும் பத்து நாள் திருவிழா வாகும். இதில் கிராம மக்கள் அனைவரும் ஒருங்கு கூடிக் குலவை யிட்டுக் கும்மிப் பாடல்கள் பாடி மழை வேண்டுவது குறிப்பிடத் தக்கது. பாரிவேட்டை, கப்பரைப்பூசை போன்றவைகள் மாசி மாதம் சிவராத்திரியன்று (ஐந்து நாட்கள்) நடைபெறுகின்றன. இவை அங்காள ஈசுவரி, பேச்சியம்மன், இராக்காயி அம்மன், கருப்பணசாமி, சப்பாணி சாமி போன்ற தெய்வங்களுக்கு நடத் தப் படுகின்றன. இது அக்கால வேட்டைச் சமுதாய மக்களின் பழக்கத்தையும், பலி கொடுத்தலையும் காட்டுகிறது. ஆனால் இன்று இஃது ஒரு சடங்குபோல நடத்தப்படுகிறது. முருகன் கோயிலில் நேர்த்திக்கடன்களாக மக்கள் கொடுப்பவைகள் பற்றியும் இங்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

# பிற்சேர்க்கை

இங்ஙனம் திருப்பரங்குன்றம் தொடர்பாக அனைத்துச் செய்திகளும் இவ்வியல்களில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இடையிடையே அரிய செய்திகள் சிலவும் இடம்பெற்றுள்ளமையை ஆங்காங்குக் காணலாம்.

1. தமிழ் இலக்கியங்களில் பரங்குன்றம் இடம்பெறும் பகுதிகளையும், பரங்குன்றைப் பற்றி எழுந்த இலக்கியங்களையும் வரிசைப்படுத்திப் பட்டியல் தரப்பட்டுள்ளது.

2. திருப்பரங்குன்றக் கோயிலிலும், குன்றைச் சூழ்ந்துள்ள நாட்டுப்புறத் தெய்வங்களின் கோயில்களிலும், விழாக்காலங்களில் பாடப்பெறும் அச்சிடப்படாத நாட்டுப்புறப் பாடல்கள் ஒலிப்பதிவு செய்யப்பட்டு இங்கு எடுத்தெழுதப்பட்டுள்ளன.

3. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் மைசூர் மாநிலத்திலுள்ள மத்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையினராலும் கல்வெட்டாய்வுத் துறையினராலும் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவற்றில் சில முழுமையாக வெளியிடப்பட்டுள்ளன. பல ஆண்டறிக்கையளவிலேயே உள்ளன. அவற்றை வரிசைப்படுத்தி இங்கே கல்வெட்டுக் குறிப்புக்கள் எனும் தலைப்பில் தரப்பட்டுள்ளது.

4. இக்கோயிலுக்குரிய சொத்துகள், வருவாய், செலவினங்கள், ஆகியவை பற்றி மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் கோயில் நிருவாக அலுவலகத்தில் குறிக்கப்பட்டிருந்தன. அவை இங்கே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

5. இக்கோயிலுக்குத் தொடர்புடைய மடம், மண்டபங்கள் பல உள்ளன. இவற்றில் சில தற்பொழுது அவையேற்பட்ட நோக்கத்திலிருந்து மாறுபட்டு இருக்கின்றன. இருப்பினும் அவற்றின் பெயர்கள் மட்டும் உள்ளன. இது தவிரத் திருத் தொண்டு செய்து வரும் மடம், மண்டபங்களும் பல உள்ளன. ஆகவே, இவையனைத்தும் தொகுத்து இங்கே தரப்பட்டுள்ளன. திருப்பரங்குன்றம் ஊராட்சி மன்ற அலுவலகத்தி

லிருந்து கிடைத்த குறிப்புக்களின் அடிப்படையில் இவை தரப்பட்டுள்ளன.

6, 7. இக்கோயில் நிருவாகம் மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் கோயில் நிருவாகத்தின் கீழ் பல ஆண்டுகாலம் இருந்து வந்துள்ளது. இந்நிருவாக அதிகாரிகள், அறங் காவலர்கள், ஆட்சியாளர்கள் வரிசை மதுரை நிருவாக அலுவலகக் குறிப்பிலிருந்து எடுத்துத் தரப்பட்டுள்ளது.

கோயிலின் பரப்பை விளக்கும் வரைபடம் ஒன்றும், கோயிலில் அமைந்திருக்கும் குடைவரைகளின் இருப்பிடத்தை விளக்கும் வரைபடம் ஒன்றும், திருச்சிராப்பள்ளி, திருப்பரங் குன்றம், தென்பரங்குன்றம் ஆகிய மூன்று பாண்டியர் காலக் குடைவரைகளை விளக்கும் வரைபடம் ஒன்றும் தரப்பட் டுள்ளன.

கோயில் அமைப்பு, சிற்பங்கள், திருவுருவங்கள், திருவிழா நிகழ்ச்சிகள் ஆகியவற்றைக் காட்டும் நிழற்படங்கள் தரப் பட்டுள்ளன.

இவ்வாய்வுக்குத் தொடர்பான இலக்கியங்கள், ஆய்வு நூல்கள், ஆய்வேடுகள், பேட்டிகள் போன்றவை அடங்கிய துணை நூற்பட்டியல் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது.

# திருக்கோயில் அமைப்பு

## இருப்பிடம்

தமிழ்நாட்டில் சிறப்புப் பெற்ற முருகன் கோயில்களுள் திருப்பரங்குன்றம் ஒன்றாகும். இதனைச் சங்க காலப் புலவர்கள், இடைக் காலப் புலவர்கள், பிற்காலப் புலவர்கள், நாட்டுப் புற மக்கள் ஆகியோர் போற்றிப் பாடியுள்ளனர். மதுரைக்குத் தென்மேற்கே ஐந்துகல் தொலைவில் அமைந்துள்ள திருப்பரங்குன்றம் கடல் மட்டத்திற்கு மேல் 1050 அடி உயரத்தில் உள்ளது.[1] குன்றத்தின் உயரம் முந்நூறு அடியாகும். சுற்றளவு ஒன்றரைக்கல் தொலைவுடையதாய் அமைந்துள்ளது. மாநில ஆட்சிப் பரப்பில் மதுரை மாவட்டத்தில் மதுரைத் தெற்கு வட்டத்தின் கீழ் திருப்பரங்குன்ற ஊராட்சி ஒன்றியத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

திருப்பரங்குன்றம் மதுரைக்கு மேற்கில் அமைந்துள்ளதாகச் சங்க இலக்கியம் மூலம் தெரிய வருகிறது.[2] திருவிளையாடல் புராணமும் பாண்டியன் அமைத்த கூடல், கிழக்கில் திருப் பூவணத்தையும் மேற்கில் திருப்பரங்குன்றத்தையும் நோக்கிய படி இருந்தது என்று கூறுகிறது. ஆனால் இன்று, இன்றைய மதுரை நகருக்குத் தென்மேற்குத் திசையில் இக்குன்றம் அமைந்து காணப்படுகிறது. இக்குன்றத்திற்குத் தண்பரங் குன்று, தென்பரங்குன்றம், திருப்பரங்கிரி, சத்தியகிரி, கந்த மாதனம், கந்தமலை, திருப்பரங்குன்றம், ஸ்கந்தர்மலை, சிக்கந் தர்மலை என்று பல பெயர்கள் வழங்கி வந்துள்ளன. இதில் 'தென்பரங்குன்றம்' என்ற பெயர் இக்குன்றம் மதுரைக்குத் தெற்கில் இருப்பதால் வழங்கி வருகிறது என்பர்.[3] 'தென்' என்பதற்கு 'அழகு' என்னும் பொருள் கொண்டு 'அழகிய பரங் குன்றம்' என்பதால் இப்பெயர் பெற்றது என்ற ஒரு கருத்தும் உண்டு. அருணகிரிநாதர் தம் திருப்புகழ்ப் பாக்களில் தென்பரங் குன்றம், திருப்பரங்குன்றம், திருப்பரங்கிரி எனப் பல பெயர் களில் பாடியுள்ளார். இன்றைய திருப்பரங்குன்றத்தின் (மலை

1. Census of India - Vol. IX., Page 107.
2. அகநானூறு, 149.
3. திருமுருக கிருபானந்த வாரியார், திருப்புகழ் விரிவுரை, ப. 14.

யின்) பின் பகுதியில் (தெற்குப் பகுதியில்) 'தென்பரங்குன்றம்' என்ற பெயரில் குடைவரைக் கோயில் ஒன்று மத்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் ஆட்சியில் உள்ளது.[4] ஆகவே 'தென்பரங்குன்றம்' என்ற பெயர் மதுரைக்குத் தெற்கில் உள்ளதால் பெற்ற பெயர் என்பது பொருத்தமாகத் தெரியவில்லை. காலந்தோறும் மதுரை வளர்ந்த வளர்ச்சிக்கேற்ப இக்குன்றத்திற்குத் திசை சுட்டப்பட்டுள்ளது. அதனால் அவ்வக் காலங்களில் மதுரை வளர்ந்த வளர்ச்சியை வைத்துப் பார்க்கும் பொழுது இங்குச் சுட்டப்பட்டுள்ள திசைகள் முரண்பாடுடையனவாகத் தெரியவில்லை.

இக்குன்றில் வடக்கு நோக்கிய குடைவரைக் (கட்டிடக்) கோயில் ஒன்றும், தெற்கு நோக்கிய குடைவரைக் கோயில் ஒன்றும் ஆக இரண்டு குடைவரைக் கோயில்களும், பௌத்த—சமணக் குகைத் தளங்களும், குன்றின் உச்சியில் முகமதியர் வழிபடும் சிக்கந்தர் தர்கா என்னும் தர்காவும், குன்றின் தென்மேற்கு உச்சியில் காசி விசுவநாதர் கோயிலும் உள்ளன. காசி விசுவநாதர் கோயிலின் எதிரே மலையுச்சியில் அழகிய சுனையொன்றிருக்கிறது. இதனைக் காசிச்சுனை என்பர். இச்சுனையின் ஆழப் பகுதியில் குன்றில் புடைப்புச் சிற்பங்களாகத் தெய்வத் திருவுருவங்கள் காணப்படுகின்றன.

இக்குன்றிலுள்ள இரண்டு குடைவரைக் கோயில்களுள் இன்று வழிபாட்டில் இருக்கும் வடக்கு நோக்கிய கோயில் கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் பாண்டியன் பராந்தக நெடுஞ்சடையனின் ஆறாவது ஆட்சியாண்டில் அவனுடைய சாமந்த பீமனாகிய சாத்தன் கணபதி என்பவனால் தோற்றுவிக்கப்பட்டது.[5] இக்கோயில் முருகனின் சிறந்த தலமாகப் பண்டை இலக்கியங்கள் கூறியதற்கேற்பச் சிறப்புடன் திகழ்கின்றது. ஆனால் பண்டை இலக்கியங்களின் காலத்தில் எடுக்கப்பட்ட முருகன் கோயில் இன்றில்லை.[6]

இன்று வழிபாட்டில் உள்ள குடைவரைக் கோயிலில் காணப்படும் கிரந்தக் கல்வெட்டு, இக்கோயில் சிவபெருமானுக்காகத் தோற்றுவிக்கப்பட்டதாகவும், இதில் துர்க்கைக்கும், சேட்டைக்கும் கோயில் அமைக்கப்பட்டதாகவும் கூறுகிறது.

---

4. வரலாற்றுப் பகுதியில் இது பற்றி விளக்கப்பட்டுள்ளது.
5. A.R.E. 37 of 1908; S.I.I. Vol. XIV, P. 3
6. வரலாற்றுப் பகுதியில் இது பற்றி விளக்கப்பட்டுள்ளது.

எனவே இக்கோயில் அன்று சிவபெருமானுக்காகவே ஏற்படுத்தப் பட்டது என்பது தெரிய வருகிறது. இக்கோயில் பாண்டியர் காலக் குடைவரைக் கோயில்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. இது திருமால், முருகன், துர்க்கை, கணபதி, சிவன் ஆகிய ஐந்து கடவுளர்க்கும் எடுக்கப்பட்ட கோயில் அமைப்பில் இன்று விளங்கி வரக் காண்கிறோம், இங்குள்ள எட்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டில் திருமால், முருகன், கணபதி ஆகிய கடவுளர் பற்றிய குறிப்புகள் இல்லை.[7]

இன்று வழிபாட்டிலுள்ள வடக்கு நோக்கிய குடைவரைக் கோயிலில் பழமையான குடைவரையாகப் பத்துக் கருவறைகள் உள்ளன. இவை முறையே சேட்டை, கசலெட்சுமி, சப்த மாதர்கள், பவளக் கனிவாய்ப் பெருமாள், சுப்பிரமணியர், துர்க்கை, விநாயகர், சத்தியகிரீஸ்வரர், பிரம்மா, அன்னபூரணி என்ற பெயர்களில் இன்று காணப்படுகின்றன. (வரைபடம் காண்க. இக்குடைவரை அமைப்பையொட்டி பிற்காலப் பாண்டி யர்களாலும், நாயக்க அரசர்களாலும் மண்டபங்கள் வரிசை வரிசையாகக் கட்டப் பெற்று இன்று இக்கோயில் குடைவரைக் கட்டிடக் கோயிலாகத் திகழ்கிறது. இக்கோயில் (குடைவரை+ கட்டிடம்) ஆகம அடிப்படையில் கட்டப்பட்டதன்று. இது மலைக்கோயில் ஆனதால் இங்குப் பிரகாரங்கள் இல்லை. பிரகாரங்கட்குப் பதிலாக மண்டபங்கள் உள்ளன. ஆகம முறைக்கு ஏற்றவாறு அமையாத கோயில்களே மிகப் பழமை யான கோயில்கள். இங்கே ஆகம அடிப்படையில் பூசைகள் ஏற்பட்ட பின்னர் கொடிமரம், வாகனங்கள் ஏற்படுத்தப்பட் டுள்ளன.[8] இக்கோயிலின் தொடக்கக் காலத்தில் மண்ட பங்கள் கட்டப்படாமல் குடைவரை அமைப்பில் இருந்த கருவறைகளில் தெய்வ உருக்கள் செதுக்கப்பட்டுப் பூசை செய்யப் பெற்று வந்தன. அப்பொழுது பனைமரத்தால் கட்டப் பெற்ற படிகளில் சென்று வழிபாடு செய்து வந்தனர்.[9] ''அக்காலக் கோயில்கள் அளவில் மிகவும் சிறியன. வழிபாட்டி டங்களாக மட்டும் விளங்கின. பின்னர் இவை இசை, நடனம், நாடகம், கல்வி என்பனவற்றை வளர்க்குமிடங்களாக வளர்ந் தன. கோயில்களுக்குப் பொருள் வருவாய், நிலதானம் என்பன

---

7. வரலாற்றுப் பகுதியில் இதுபற்றி விளக்கப்பட்டுள்ளது.
8. தகவல் : வை. கணபதிஸ்தபதி, கள ஆய்வு
 நாள் : 30-6-82
9. தகவல் : ரா. பிச்சைப்பட்டர் (முதல் ஸ்தானீசம்).
 கள ஆய்வு நாள் : 28-4-82

மிகுந்தன. சிற்பம், ஓவியம் முதலிய கலைகள் கோயிற் கட்டிடங்களிலே பேணப்பட்டன''.[10] இக்கோயிலில் பின்னர் ஆட்சியாளர்கள் மாற, மாற அவர்களின் விருப்பத்திற்கேற்ப மண்டபங்கள் கட்டப்பட்டு, கட்டிடக் கலை அமைப்பு வளர்ச்சியடைந்து வந்துள்ளது.

## கோயிற் பகுதிகள்

கோயிலின் அமைப்பை விளக்கும் இவ்வியலில் கோயிற் பகுதிகளாக (Temple Complex) கோயிலின் சந்நிதித் தெருவில் உள்ள மயில் மண்டபம் தொடங்கி கோயில் கருவறை வரை உள்ள பகுதிகள் விளக்கப்படுகின்றன.

## மயில் மண்டபம்

கோயிலின் முக்கியமான பகுதிகள் மண்டபங்கள். இவை பத்து/பதினோராம் நூற்றாண்டுகளில் பெரிய அளவில் கட்டப்பட்டன. ஒற்றைக்கால் மண்டபம், பதினாறுகால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் என்று மண்டபங்கள் பலவகையின. கல்வியையும், கலையையும் வளர்க்கும் நோக்குடன் இவை கட்டப்பட்டன. திருவிழாக்களில் இறையுருவங்கள் காட்சி கொடுக்க இம்மண்டபங்கள் பயன்படுகின்றன.[11] நந்திக்கெனத் தனி மண்டபம், மயிலுக்கெனத் தனி மண்டபம் அமைக்கும் வழக்கம் சோழர் காலத்திலேயே ஏற்பட்டு விட்டது.[12] இங்கு இக்கோயிலின் சந்நிதித் தெருவில் முதலில் மயில் மண்டபம் அமைந்துள்ளது. இது நான்கு தூண்களையுடைதாய் சிறிய மண்டபமாய் விளங்குகிறது. இதன் நடுவே திருக்கோயிலை நோக்கியபடி மயிலின் உருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. இம்மண்டபமும், மயில் உருவமும் நாயக்க அரசர்களின் கலைப்பாணியையுடையன. இது பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கருதலாம்.

## பதினாறுகால் மண்டபம்

மயில் மண்டபத்திலிருந்து தெற்கு நோக்கிச் சென்றால் முதலில் உள்ளது பதினாறுகால் மண்டபம். இதில் பதினாறு

10. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமயவரலாறு, ப. 13.
11. சோமலெ., தமிழகத் திருக்கோயில்கள் வரலாறு, ப 81.
12. தகவல் : வை. கணபதிஸ்தபதி, கள ஆய்வு நாள் : 20.6.92

பெரிய தூண்கள் உள்ளன. இதில் உள்ள முதற்றூணில் திருமலை நாயக்கரின் சிற்பம் நித்திய அஞ்சலிக் கோலத்தில் கிழக்கு நோக்கியதாய் அமைந்துள்ளது. இம்மண்டபம் திருவிழாக் காலத்தில் பெரிதும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தற்பொழுது போக்குவரத்து வசதி கருதி, மண்டபத்திற்கு அருகில் அகலப் பாதை அமைக்கப்பட்டு விட்டதால், இம்மண்டபம் பயன்பாடில்லாமல் இருக்கிறது. இம்மண்டபத்தில் நடந்த நிகழ்ச்சிகள் தற்பொழுது மண்டபத்தின் வெளியே முன்பகுதியில் நடைபெறுகின்றன. இம் மண்டபமும் நாயக்க அரசர்களின் கலைப்பாணியுடையதாகக் காணப்படுகிறது.

## ஆஸ்தான மண்டபம்

பதினாறுகால் மண்டபத்திலிருந்து சில நூறுஅடிகள் தெற்கு நோக்கிச் சென்றால் கோயிலின் முன் மண்டபத்தை அடையலாம். இதற்கு ஆஸ்தான மண்டபம் என்ற பெயர் வழங்கி வருகிறது. ஆஸ்தான மண்டபம் என்பது அரசன் கொலு வீற்றிருக்கும் மண்டபம், இதற்குக் கொலுமண்டபம் என்ற பெயரும் உண்டு. அரசனின் கொலுமண்டபம் என்ற பெயர் பின்னர் கோயில்களில் இறையுருவங்கள் காட்சி கொடுக்கும் மண்டபங்களுக்குப் பெயராக ஆஸ்தான மண்டபம் என்று வழங்கி வந்துள்ளது. இம்மண்டபத்தின் நுழைவாயிலில் பத்துப் பெரிய தூண்கள் காணப்படுகின்றன. நுழைவாயிலின் இருபுறத்தே இரண்டிரண்டாக நான்கு குதிரை வீரர்களும், குதிரைகளும், யாளிகளும் அமைந்துள்ளன. நாயக்கர் காலத்துப் போர் வீரர்களை இத்தூண் சிற்பங்கள் தாங்கியுள்ளன. இம்மண்டபத்தின் மேற்பகுதியில் சுதைச் சிற்பங்களாக முருகன், துர்க்கை, நர்த்தன விநாயகர் ஆகியோர் உருவங்கள் உள்ளன.

இம்மண்டபம் 116 அடி நீளமும், 94 அடி அகலமும், 30 அடி உயரமும் கொண்டு விளங்குகிறது. இங்கு 48 தூண்கள் உள்ளன. இத்தூண்கள் அனைத்திலும் நாயக்கர்காலச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதில் சில இன்றும் வழிபாட்டில் உள்ளன. இங்கு துவாரபாலகர்கள், மகிடாசுரமர்த்தனி, நர்த்தன கணபதி, திருமால், அரசி மங்கம்மாள், மன்னர் விசயரங்க சொக்கநாதர், முருகன்-தெய்வயானை திருமணத் திருக்கோலம், ஆடல்வல்லான், கோதண்டராமர், ஆதிசேடன், ஊர்த்துவத்தாண்டவர், பத்திரகாளி, கருப்பண்ணசாமி ஆகிய சிற்பங்கள் உள்ளன. இம் மண்டப அமைப்பு, இங்குள்ள தூண் சிற்பங்களின் அமைப்பு ஆகியவைகள் மதுரையிலுள்ள மண்டப அமைப்புக்களைப் பின்

பற்றியே அமைந்துள்ளன. ஆகவே இம்மண்டபம் மதுரை மண்ட பங்கள் தோன்றிய சமகாலத்தில் தோன்றியிருக்க வேண்டும்.

தூண் சிற்பங்களுள் கருப்பண்ண சுவாமியின் சிற்பம் உள்ள தூண் மட்டும் சிறு கோயிலாகக் கட்டப்பட்டுள்ளது. இக்கோயில் ஆஸ்தான மண்டபத்தின் வலப்புறத்தில் அமைந்துள்ளது. கருப்பண்ண சுவாமி வலக்கையில் அரிவாளும், இடக்கையில் தண்டமும் ஏந்தியவராய் நின்ற கோலத்தில், முறுக்கிய மீசை யுடனும் தலையில் கொண்டையுடனும் காணப்படுகிறார். கருப் பண்ண சுவாமி வழிபாடு மக்கள் மத்தியில் பெருவழக்குப் பெற்றி ருந்தது. ஆகவே முருகனை வழிபடுமுன் கருப்பண்ண சுவாமியை வழிபட்டுச் செல்ல வேண்டும் என்ற ஒரு மரபு இங்குக் காணப் படுகிறது. இது ஒரு சமரச முயற்சி போல இரு வழிபாடுகளையும் இணைத்துக் கொண்டு போவது போல (Unification in worship) அமைந்துள்ளது.

இம்மண்டபத்தின் நடுப்பகுதியில் அமைந்துள்ள தூணில் முருகன்-தெய்வயானை திருமணக் கோலம் அமைந்துள்ளது. இந்திரன் நீர் வார்த்துக் கொடுப்பதும், நான்முகன் தீ வளர்ப் பதும் ஒரே தூணில் அமைந்துள்ளன. இச்சிற்பத்தின் கீழ்ப் பகுதியில்,

''தெய்வானை நாச்சியார் (கல்யாண)ம்''

என்ற நாயக்கர் காலக் கல்வெட்டு உள்ளது. இத்தூணுக்கு எதி ரேயுள்ள தூணில் அரசி மங்கம்மாளும், விசயரங்க சொக்கநாத நாயக்கரும், இத்திருமணக்காட்சியை வணங்கும் சிற்பம் நித்திய அஞ்சலிக் கோலத்தில் அமைக்கப்பட்டுள்ளன. ''ராணி மங்கம்மா ளின் உருவச்சிற்பம் மதுரையில் உள்ள நகரா மண்டபத்தில் உள்ளதைப் போன்றே இங்கும் காணப்படுகிறது. இச்சிற்பத்தை வைத்தே இம்மண்டபம் இவரால் எடுக்கப்பட்டிருக்க வேண்டு மென ஊகிக்கமுடிகிறது'',[13] இவை தவிர இம்மண்டபத்தில் புராண, இதிகாசக் காட்சிகளை விளக்கும் தூண் சிற்பங்களும் நிறைய உள்ளன.

மண்டபத்தின் விதானப்பகுதியில் புடைப்புச் சிற்பங்களும், கட்டச் சிற்பங்களும் உள்ளன. ''இம்மண்டபம் அரசர்கள் காலத்தில் வீரர்கள் தங்குவதற்குரிய ஓய்வு இல்லமாகவும்''[14] தற் பொழுது பக்தர்கள் தங்குமிடமாகவும், கோயில் கடைகள் அமைந்துள்ள இடமாகவும் விளங்குகின்றன.

---

13. செ. போசு, திருப்பரங்குன்றம், ப. 103,
14. மேலது, ப. 103.

## இராஜகோபுர வாயில்

ஆஸ்தான மண்டபத்திற்கு அடுத்துள்ளது கோபுர வாயில். இக்கோபுரம் சுமார் 120 அடி உயரமுள்ளது. இக்கோபுரத்தை வீரப்ப நாயக்கர் சக ஆண்டு 1505-இல் கட்டி முடித்தார். கோபுரத்தின் கீழ்ப்பகுதி கருங்கல்லால் ஆக்கப்பட்டுள்ளது. இது ஏழு நிலைகளையுடையது. "இராஜ கோபுரத்தின் வாயில்கள் பொதுவாக ஒற்றைப்படை எண்ணில் அமைந்திருக்கும். மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று என அதில் அமைந்துள்ள வாயில்கள் ஒன்றன் மேல் ஒன்றாகப் பெருகிக் கொண்டே போகும். ஏழு வாயில்கள் உள்ள இடத்து இவை ஐம்பொறிகள், மனம், புத்தி ஆகிய ஏழையும் குறிக்கின்றன என்றும், இங்ஙனம் நம்முடைய உடல் அமைப்பில் உள்ள வெவ்வேறு தத்துவங்களுக்குக் கோபுர வாயில்கள் சின்னங்களாக அமைந்திருக்கின்றன என்றும் விளக்கம் தருவர்.[15] கோபுர நுழைவில் இரண்டு கொடிப் பெண்கள், இரு நாயக்க அரசர்கள் ஆகியோர் சிற்பங்கள் காணப்படுகின்றன. கோபுர வாயிலின் நடுவே கீழ்த்திசை நோக்கிக் கோபுர விநாயகர் சிலை காணப்படுகிறது. இக்கோபுரத்தையும், திருமதிலையும் முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கரின் (1564-1572) மகனான வீரப்ப நாயக்கர் (1572-1595) கி. பி. 1583-இல் கட்டினார் என்பதை இங்குள்ள கல்வெட்டுக் குறிக்கிறது.[16] கோபுர வாயிலின் மேற்குத் திசையில் யானைகட்டும் தறி அமைந்துள்ளது.

## திருக்கல்யாண மண்டபம்

கோபுர வாயிலைக் கடந்து சென்றால் திருக்கல்யாண மண்டபம் அமைந்துள்ளது. இதற்குத் திருவாச்சி மண்டபம், குதிரைப்படி மண்டபம் என்ற பெயர்கள் வழங்குகின்றன. மண்டபத்தின் நடுவில் பெரிய திருவாச்சி இருப்பதால் திருவாச்சி மண்டபம் என்றழைக்கப்படுகிறது. மண்டபத்தின் முன்புறம் ஏறும் படிகளின் இரு பக்கங்களிலும் தேர் இழுக்கும் பாவனையில் இரு குதிரைகள் உள்ளன. தேரின் இரு சக்கரங்களும் கல்லால் வடிக்கப்பட்டுள்ளன. இரண்டு குதிரைகள் தேரை இழுத்துக் கொண்டு செல்வது போல இம்மண்டபம் அமைக்கப் பட்டுள்ளது, "யாகைக் கோயில் (நகரும் தெய்வங்கள்) போன்ற அமைப்புகளில் தேர் போன்ற அமைப்பும் குதிரைகள், யானைகள் இழுத்து வருவது போன்ற அமைப்பும் உண்டு.

---

15. சுவாமி சித்பவானந்தர், கடவுளின் வடிவங்கள், ப. 163
16. ARE 262 & 263 of 1942.

இதுபோன்ற அமைப்பு தாராசுரம், திருநாகேச்சுரம், கும்ப கோணம் (சாரங்கபாணி கோயில்) இவற்றில் காண முடிகிறது.[17] இவ்வமைப்புக் காரணமாக இம்மண்டபத்திற்குக் குதிரைப்படி மண்டபம் என்ற பெயரும் வழங்கி வருகிறது.

இம்மண்டபத்திலுள்ள தூண் சிற்பங்களில் பெரும்பாலான சிற்பங்கள் திருவிளையாடற் புராணக் காட்சிகளை விளக்குவன வாக உள்ளன. முருகன் தெய்வயானைத் திருமணக் கோலம், ஊர்த்துவத் தாண்டவம், காளிங்க நர்த்தனர், பன்றிக் குட்டி களுக்குப் பாலூட்டும் கோலம், ரதிமன்மதன், ஆதிசேடன், திரிபுராந்தகர், நரசிங்கப் பெருமாள் ஆகிய சிற்பங்கள் குறிப் பிடத்தக்கவை. முருகன் தெய்வயானை திருமணக் கோலம் இக்கோயிலின் ஆஸ்தான மண்டபத்திலும், இம்மண்டபத்திலும் மட்டுமே உள்ளது. வேறு எங்கும் இல்லை. இங்கு ஊஞ்சல் திருவிழா, மட்டையடி உற்சவம், திருக்கல்யாணம் போன்ற திருவிழாக்கள் நடைபெறுகின்றன. இம்மண்டபம் திருவிழாக் காலங்களில் சிவகங்கை சமஸ்தானம், இராமநாதபுர சமஸ் தானம், குயவர்கள் ஆகியவர்கள் நடத்தும் உற்சவங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது. ஐப்பசி மாதக் கந்தர் சட்டி விழாவில், சட்டி நோன்பு நோற்கும் பக்தர்கள் வந்து தங்கிப் பாடு கிடக்கும் பெரு விரதத்திற்கு இம்மண்டபம் பயன்படுத்தப்படுகிறது. திருமுறை ஓதுவார்களின் அன்றாடத் தேவாரத் திருப்புகழ் பாராயணம் இம்மண்டபத்தில் நடைபெறுகிறது. மேலும் இம்மண்டபம் தற்பொழுது திருவிளக்கு வழிபாடு, சொற் பொழிவுகள், இசையரங்குகள் இவற்றிற்கும் பயன்படுத்தப் பட்டு வருகின்றது. இம்மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் வசந்த மண்டபம், ஒடுக்க மண்டபம், தீர்த்தக்குளம் (லெட்சுமி தீர்த்தம்) ஆகியவை அமைந்துள்ளன. மேற்பகுதியில் மடைப் பள்ளி மண்டபமும், சன்னியாசிக் கிணறு தீர்த்தத்திற்குச் செல்லும்வழியும் உள்ளன. இவ்வழியும் மடைப்பள்ளி மண்டப மும் இம்மண்டபத்தை இதற்கடுத்துள்ள கம்பத்தடி மண்டபத் துடன் இணைக்கின்றன. இவ்வழி திருவிழாக் காலங்களில் இறைவன் திருவீதியுலா வருவதற்கு மட்டும் பயன்படுத்தப் படுகிறது.

**வசந்த மண்டபம்**

இம்மண்டபம் திருக்கல்யாண மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் தீர்த்தக்குளம் செல்லும் வழியில் வடக்கு நோக்கி அமைந்

17. தகவல்: வை. கணபதி ஸ்தபதி, கள ஆய்வு நாள்: 30.6.82.

துள்ளது. இது வசந்த ராயர் மண்டபம் என்றும் அழைக்கப்படு கிறது. நான்கு கால் மண்டபமான இதில் நடுவே பீடம் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது. "இம்மண்டபத்தில் உள்ள இரண்டு உருவங்களில் ஒருவர் முத்தம்பல முதலியாராக இருக்கக் கூடும் என உறுதி செய்யப்பட்டுள்ளது."[18] வைகாசி மாதம் நடை பெறும் வசந்த உற்சவமான பத்து நாள் திருவிழாவிற்கு இம்மண்டபம் பயன்படுத்தப்படுகிறது. வசந்த உற்சவம் முத்தம் பல முதலியார் கட்டளையாகக் கோயிலிலிருந்து நடைபெற்று வருகிறது, இம்மண்டபத்தைச் சுற்றி முன்பு நந்தவனம் இருந்த தால் இதற்கு நந்தவனம் என்ற பெயரும் வழங்குகிறது. "இம்மண்டபத்தின் பின்புறத்தில் குன்றை ஒட்டி நெடு நாளைய கல்லித்தி மரம் ஒன்றுள்ளது. இம்மரந்தான் இக்கோயிலின் தலவிருட்சம் என்பர்."[19]

### ஒடுக்க மண்டபம்

வசந்த மண்டபத்திற்கு நேர் எதிரே அமைந்துள்ள மண்டபம் ஒடுக்க மண்டபம். இஃது இன்று ஆயிரவைசிய காசுக் காரச் செட்டியார்களின் வெள்ளியம்பல வகையறா மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. பங்குனி மாதம் நடைபெறும் முருகனின் திருக்கல்யாண உற்சவத்தின் போது இம்மண்ட பத்தில் திருக்கல்யாண ஊஞ்சல் மண்டகப்படி நடைபெற்று வருகிறது. "ஒடுக்க மண்டபம் என்பது முன்பு நாயக்க அரசி யர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்ட மண்டபம்."[20] தற்பொழுது திருவிழாக்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

### தீர்த்தக்குளம்

இதற்கு ஸ்ரீ தடாகம், இலட்சுமி தீர்த்தம், திருக்குளம் என்று பல பெயர்கள் வழங்குகின்றன. இக்குளத்தையொட்டி அமைந் துள்ள மண்டபம் திருக்குளம் விபூதி மடம் என்று அழைக்கப் படுகிறது. இங்கு விநாயகர், கருப்பணசாமி, நாகர் சிலை ஆகியவை உள்ளன. இத்தீர்த்தம் இக்கோயிலின் சிறப்பான தீர்த்தங்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது, ஸ்ரீ தடாகம் என்ற இத்திருக்குளத்தைப் பராந்தக நெடுஞ்சடையனின் சாமந்த

18. செ. போசு, மு. நூ., ப. 98.
19. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 2.8.81.
20. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 25.1.82.

பூமனாகிய சாத்தன் கணபதி என்பவன் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் திருத்துவித்ததாக இங்குள்ள அவனது வட்டெழுத்துக் கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது. "ஸ்ரீ தடாகம் என்பது சமணர்களுக்குரியது. இக்கோயில் முன்பு சமணக் கோயிலாக இருந்து சைவக் கோயிலாக மாற்றம் பெற்ற பொழுது 'ஸ்ரீ தடாகம்' திருத்துவிக்கப்பட்டிருக்கிறது. பின்னர் இஃது இலட்சுமி தீர்த்தம் என்றும் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பர்."[21] இக்கருத்து இன்றும் ஆய்வறிஞர்களிடம் கருத்து முரண்பாட்டுடன் நிலவி வருகிறது.

## மடைப்பள்ளி மண்டபம்

இது திருக்கல்யாண மண்டபத்தின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. இங்கு விநாயகர், இலிங்கம், முருகன் தேவியருடன் அமர்ந்த கோலம், நந்தி ஆகிய சிற்பங்கள் அமைந்துள்ளன. இங்குள்ள சிற்பங்களுள் திக்கு விசய அம்மன் (மீனாட்சி) என்ற அம்மன் சிலை மூன்று தனங்களுடன் அமைந்த கோலம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இம்மண்டபத்தில் மூன்று மடைப்பள்ளிகள் தனித்தனியே இருப்பதால் இதற்கு மடைப்பள்ளி மண்டபம் என்ற பெயர் வழங்குகிறது. இங்கு தேவியுடன் அமர்ந்த கோலத்தில் உள்ள வல்லப விநாயகர் சிலை பத்துக் கரங்களுடன் இடப்புற முன்கரத்தில் அம்மனைத் தழுவியபடி அமைந்துள்ளது. இது வல்லப விநாயகர் என்ற சிலைக்குரிய இலக்கணங்களுடன் சிறப்பாக அமைந்துள்ளது.[22]

## சன்னியாசிக் கிணறு

இது மடைப்பள்ளி மண்டபத்திற்கு மேற்கே அமைந்துள்ளது. இதற்கு சன்னியாசித் தீர்த்தம், சன்னியாசிக்குளம் என்ற பெயர்கள் வழங்குகின்றன. இத்தீர்த்தம் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் பாடப் பெற்ற சிறப்புப் பெற்றது. இக்கிணற்றின் தீர்த்தமே அபிடேகத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. ஐப்பசி மாதம் கந்தசட்டித் திருவிழாவின் போது கந்த சட்டி விரதம் இருக்கும் ஆயிரக்கணக்கான மக்கள் இத்தீர்த்தத்தை மட்டும் ஆறு நாட்கள் உண்டு நோன்பு இருக்கிறார்கள். "இத்தீர்த்தத்திற்கு நோய் நீக்கும் ஆற்றல் அதிகம் உள்ளதால் நோயுற்றோர் இங்கு வந்து தங்கி இத்தீர்த்தத்தை பருகி நோன்பு

---

21. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 25.1.82
22. ச. தண்டபாணி தேசிகர், கணபதி, ப. 112.

இருப்பது வழக்கமாக உள்ளது'' என்பர்.[23] "இது நோய் நீக்கும் ஆற்றல் மிக்கதாக இருப்பதால், இது மதுரைக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கு விற்கப்பட்டதாகவும்'' கூறுவர்.[24] இப்பொழுது இக்கிணற்றுக்குச் செல்லும் வழி குப்பை கூளங்கள் போடப்பட்டு தூய்மையற்றுக் காணப்படுகிறது.

கம்பத்தடி மண்டபம்

திருக்கல்யாண மண்டபத்திற்கு அடுத்து அமைந்துள்ளது கம்பத்தடி மண்டபம். இம்மண்டப நடுவில் கொடிக் கம்பம் அமைந்துள்ளதால் இம்மண்டபத்திற்கு இப்பெயர் ஏற்பட்டுள்ளது. கொடிக்கம்பம் செப்புத் தகட்டால் வேயப்பட்டுத் தங்க முலாம் பூசப்பட்டுள்ளது. இத்திருப்பணி செய்தவர் திருமலைநாயக்கர். இக்கொடிக்கம்பத்தில் வடக்கில் விநாயகரும், தெற்கில்மயில் மீதமர்ந்த ஆறுமுகசாமியும்,கிழக்கில்பன்றி,கத்தி, சூரியன், சந்திரன், மரம் ஆகிய சிற்பங்களும், மேற்கில் சூரியன், சந்திரன், நந்தி ஆகியவையும் உள்ளன. நாயக்க அரசர்களின் கொடிகளில் காணப்படும் பன்றி, கத்தி, சூரியன், சந்திரன், மரம் ஆகிய உருவங்கள் இக் கொடிக்கம்பத்தில் காணப்படுகின்றன. கொடிக் கம்பத்திற்குப் பின்னர்ப் பலிபீடம் அமைந்துள்ளது. பலிபீடத்திற்குப் பின்புறம் கருவறையை நோக்கிப் பெரிய நந்தியும், அதன் வலப்புறம் பெருச்சாளியும், இடப்புறம் மயிலும் உள்ளன. நந்தியின் உருவம் கருவறையில் உள்ள துர்க்கையை நோக்கி நேராய் அமைந்துள்ளது. "துர்க்கை சந்நிதியில் நந்தியை அமைக்கும் வழக்கம் முற்காலத்தது என்றும், நந்தி தேவர் துர்க்கையை சிவசொரூபிணியாய் நித்திய அஞ்சலி செய்வதாய் அமைப்பது வழக்கம் என்றும் கூறுவர்."[25] பழைய தேவி சந்நிதிகள் சிலவற்றில் இன்றும் காளை வாகனத்தையே காண முடிகின்றன. இந்நந்தி அங்குறையும் தேவி சிவசொரூபிணி என்பதைக் காட்டுவதே. தேவி வழிபாடு நிகழ்த்தும் போதும் 'சிவபதிவிரதையே நம' என வணங்குவதும்,சிவனருளாக விளங்குபவளே சக்தி என்பதை நன்குணர்த்தும். இங்குச் சிவனுக்கு வேறாகத் தேவிக்கு முதன்மை தந்து வழிபடும் வழக்கமில்லை. தேவியின் திருமுன்பு நந்திவாகனத்துக்கு வேறாகச் சிம்ம

23. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 2.8.81
24. B. S. Baliga, Madurai District Gazeeteer p.405.
25. தகவல் : ச. தண்டபாணி தேசிகர், கள ஆய்வு நாள் : 3-7-82.

வாகனத்தைப் பிரதிட்டை செய்துள்ள கோவில்கள், சைவ மரபில் ஒரு புதிய வளர்ச்சி என்றுதான் கூறவேண்டும்.[26] இம் மண்டபத்தில் நான்கு யாளித் தூண்கள் அமைந்துள்ளன. இரு நாயக்க அரசர்களின் பெரிய உருவச் சிலைகள் சந்நிதியை நோக்கி நித்திய அஞ்சலி செய்யும் கோலத்தில் இரண்டு தூண்கள் அமைந்துள்ளன.

உற்சவமூர்த்திகளான முருகன், தெய்வயானையை எழுந்தருளச் செய்யும் மண்டபம் ஒன்றும் இங்கு இருக்கிறது. இதனைச் 'சேத்தி' என்று கூறுகிறார்கள். திருவிழாக் காலங்களில் திருவுலாத் திருமேனிகள் இங்கு வைத்து அலங்காரம் செய்யப்படுகின்றன. நந்திதேவருக்கு வலப்புறத்தில் மடைப்பள்ளி செல்லும் வழியில் ஒரு சிறிய கல்மண்டபம் உள்ளது. இதற்கு 'அபிடேகக் குறடு'[27] என்ற பெயர் வழங்குகிறது. வைகாசி விசாகத் திருவிழாவின் போது ஆறுமுகசாமி மண்டபத்திலிருந்து உற்சவர் ஆறுமுகசாமியைக் கொண்டு வந்து இக்குறட்டில் வைத்து அபிடேகம் செய்கிறார்கள். இதில் ஆயிரக்கணக்கான பாற்குடங்களையும், பன்னீர், சந்தனம், விபூதி, பஞ்சாமிர்தம் ஆகிய மணப் பொருட்களையும் பழங்களையும் கொண்டு அபிடேகம் நடைபெறுவதால் இதற்கு 'அபிடேகக் குறடு' என்ற பெயர் வழங்கி வருகிறது.

நந்திதேவருக்கு எதிரே இரு பக்கத்திலும் வேதவியாசர், பராசரர் ஆகிய இரு முனிவர்களின் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. திருப்பரங்கிரித் தலபுராணத்தில் குறிக்கப்படும் இம் முனிவர்களின் உருவங்கள் பிற்காலத்தில் அமைக்கப்பட்டதாகக் கருதலாம். கம்பத்தடி மண்டபத்திலிருந்து மகாமண்டபம் செல்லும் வழியில் இரு பக்கங்களிலும் இம்மலையைக் காவல்புரியும் காவல் தெய்வங்களான அண்டாபரணருக்கும், உக்கிரமூர்த்திக்கும் குடைவிக்கப்பட்ட சிற்பங்கள் (நிழற்படம் காண்க) மிகப் பெரிய அளவில் அமைந்துள்ளன. இப்பூதங்களை இணைத்து நக்கீரர் கதை இங்கு வழங்குகிறது.

அண்டாபரணருக்கு அருகே அனுக்ஞை விநாயகர் சிலையும், பிரதோச நந்திகேசுவரர் (அதிகார நந்தி), பிரதோச அம்மன், இரட்டை விநாயகர் சிலைகளும் அமைந்துள்ளன. கம்பத்தடி மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் உள்ள படிகள் கம்பத்தடி

---

26. ப. அருணாசலம், சைவசமயம் (ஓர் அறிமுகம்), ப. 79.
27. அபிடேகம் செய்யப்படுகிற மேடைக்கு 'அபிடேகக் குறடு' என்ற பெயர் வழங்குகிறது.

மண்டபத்தை ஆறுமுகசாமி மண்டபத்துடன் இணைக்கின்றன. இவ்வாசற்படிகளின் ஓரத்தில் கம்பத்தடி மண்டப மூலையில் சிறிய நுழைவாயில் ஒன்று உள்ளது. இந்நுழைவாயிலின் உள்ளே சுமார் 100 அடி நீளமுள்ள இருட்டான சுரங்கப்பாதை வழியில் சென்றால், அங்குச் சேட்டாதேவியின் குடைவரைச் சிற்பத்தைக் காணலாம். இச்சிற்பம் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் சாத்தன் கணபதியின் மனைவியான நக்கன் கொற்றி என்பவளால் செய்யப்பட்டது. இதை இன்று மூதேவி கோயில் என்று அழைக்கிறார்கள். இன்று இது வழிபாடற்ற நிலையில், பேணுவாரற்றுக் காணப்படுகிறது. "இக்கருவறை, கோயில்களில் மறைவான இடங்களில்தான் அமைக்கப்பட வேண்டும். இங்கு இம்முறைப்படி அமைக்கப்பட்டுள்ளது என்பர்". 28 "சேஷ்டாதேவி வழிபாடு கி.பி. ஏழாம் நூற்றாண் டில் பெருகி வந்துள்ளது. அதற்குத் திருப்பரங்குன்றத்தில் உள்ள இருமொழிக் கல்வெட்டைச் சான்றாகக் கூறலாம் என்பர். 29

இங்குள்ள சேட்டாதேவி இரண்டு கால்களையும் தொங்க விட்டு அமர்ந்த கோலத்தில் இருக்கையின் மீது உள்ளாள். இவளது வலக்கரம் தாமரை மலரையும், இடக்கரம் தன் இடது புறமுள்ள தன் மகளின் வலது தொடையிலும் வைத்த நிலையில் காணப்படுகிறது. கச்சணியாத பருத்த மார்பையும், குண்டலங் களை உடைய காதுகளையும் காணமுடிகிறது. இவருக்கு வலது புறத்தில் எருமைத்தலையையுடைய இவருடைய மகன் இடது காலை மடக்கி வலது காலைத் தொங்கவிட்டு அதே இருக்கை யில் அமர்ந்துள்ளான். இரண்டு கரங்களில் வலது கரம் மட்டும் தண்டத்தைப் பிடித்த நிலையில் உள்ளது. இவளது இடது புறத்தில் இவளுடைய மகள் அமர்ந்துள்ளாள். இரண்டு கரங் களில் வலது கரத்தில் மட்டும் மலரை ஏந்தியுள்ளாள். இவளுடைய மார்பில் கச்சணியப்பட்டுள்ளது. இச்சிற்பங்கள் புடைப்புச் சிற்பமாகச் செய்யப்பட்டுள்ளன.

**மகாமண்டபம்**

கம்பத்தடி மண்டபத்திற்கு அடுத்துள்ள மண்டபம் மகா மண்டபம் எனப்படுகிறது. இம்மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் கசலெட்சுமியின் கருவறை அமைந்துள்ளது. குடை

---

28. K. G. Krishnan, Studies in South Indian History and Epigraphy, p.16.
29. Ibid., p. 15.

வரைச் சிற்பமான திருமகள் தாமரைமலர் மீது இரு கால்களையும் தொங்கவிட்டு அமர்ந்துள்ளாள். இரண்டு கரங்களில் வலது கரத்தில் மலரைக் கொண்டும், இடது கரத்தைத் தொடையில் வைத்தும் காணப்படுகிறாள். தலையில் கரண்ட மகுடம், காதுகளில் பத்திர குண்டலங்கள், கழுத்தில் கண்டாவளி என்னும் பதக்கம், கைகளில் வளையல்கள், மார்பில் கச்சின் மேல் ஆடை அணிகலன் ஆகியவற்றுடன் விளங்குகிறாள். திருமகளின் இருபுறமும் இரு யானைகள் குடங்களில் நீரைக்கொண்டு அபிடேகம் செய்கின்றன. சாமரம் வீசும் பெண்கள் இருவரும் இருபுறத்திலும் உள்ளனர். திருமகளின் கால்களுக்கு அருகில் இரு பணிப் பெண்கள் அமர்ந்த நிலையில் உள்ளனர். இருபுறமும் இரண்டு குள்ளப் பூதங்கள் தலையில் குடங்களைச் சுமந்து கொண்டு நிற்கின்றன. வலது புறம் சூரியனும், இடதுபுறம் சந்திரனும் நிற்கின்றனர். இவ்வழகிய சிற்பம் உள்ள கருவறை இன்று வழிபாடற்ற நிலையில், கோயில் நிருவாகத்தினரின் கருவூல அறையாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. பாண்டியர் காலத்து அரிய குடைவரைச் சிற்பமான இவ்வுருவம் இன்று பாழடைந்த நிலையில் உள்ளது. இக்கருவறைக்கு மேற்புறம் ஒரு சிறிய குகையுள்ளது. இக்குகையில் சப்தமாதர் எழுவரின் உருவங்கள் அழகிய குடைவரைச் சிற்பமாக உள்ளன. "சப்தமாதர்களின் உருவச் சிலைகள் நாற்கரங்களை உடையனவாய் வடக்கு நோக்கியனவாய் அமைக்கப்பட வேண்டும் என்பர்".30 இங்கு இம்முறைப்படி வடக்கு நோக்கியனவாய் அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் இச்சிலைகள் அனைத்தும் சிதைக்கப்பட்டு உள்ளன. இக்குகையும் நிருவாகத்தினரால் கருவூலமாகவே பயன்படுத்தப்படுகிறது.

மகாமண்டபத்தில் தென்மேற்கு மூலையில் குடைவரைச் சிற்பமாக ஆதிபுவனேசுவரி என்ற தாய்த்தெய்வத்தின் உருவம் அமைக்கப்பட்டுள்ளது. தாமரை மலரில் வலது காலை மடக்கி, இடது காலைத் தொங்கவிட்டு அமர்ந்துள்ளாள். நான்கு கரங்களில் மேலிரு கரங்கள் பாசாங்குசத்தையும், கீழிரு கரங்களில் வலக்கரம் அபய முத்திரையைக் காட்டியும் இடக்கரம் இடது தொடையில் வைத்தும் அமைந்துள்ளன. தலையில் நீண்ட மகுடம், காதுகளில் மகுர குண்டலங்கள், கைகளில் வளையல்கள் ஆகியவற்றை அணிந்துள்ளாள். தேவியின் இருபுறமும் நான்கு

---

30. T. A. Gopinatha Rao, Elements of Hindu Iconography, p. 22.

பணிப்பெண்கள் சாமரம் வீச, நான்கு முனிவர்கள் கீழே அமர்ந்துள்ளனர். வலப்புறம் இருவர் நின்ற நிலையிலும், இடப்புறம் இருவர் வணங்கிய நிலையிலும் உள்ளனர். யாழ் வாசிக்கும் ஒருவரும், புல்லாங்குழல் ஊதும் ஒருவரும், கத்தியும் கேடயமும் தாங்கிய ஒருவரும் உள்ளனர். ''கேடயத்தில் மீன் இலச்சினை பொறிக்கப்பட்டுள்ளதால், கத்தி, கேடயம் தாங்கிய உருவம் பாண்டிய மன்னனுடையதாக இருக்கலாம்'' என்பர்.[31] ''இக்கருவறைத் தெய்வமே கி. பி. எட்டாம் நூற்றாண்டில் சாத்தன் கணபதியின் மனைவியான நக்கன் கொற்றியால் அமைக்கப்பட்ட துர்க்காதேவி'' என்று கருதுகின்றனர்.[32] இக்கருவறைத் தெய்வம் அன்னபூரணி என்று திருக்கோயில் தேவஸ்தானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோயில் தலபுராணத்தில் துர்க்கா தேவி பற்றிய பாடலும், ஆதிபுவனேசுவரி பற்றிய பாடலும் இடம் பெற்றுள்ளன.[33] ஆனால் அன்னபூரணி பற்றிய பாடல் எதுவும் இல்லை. இங்குள்ள இவ்வுருவமும் அன்னபூரணி பற்றிச் சிற்ப நூல்கள் கூறும் இலக்கணப்படி அமையவில்லை.[34] ஆகவே இப்பெயர் தவறாகத் தேவஸ்தானத்தினரால் குறிப்பிடப்பட்டுள்ளது. நக்கன் கொற்றியால் அமைக்கப்பட்ட துர்க்காதேவி அர்த்தமண்டபத்தின் நடுவில் உள்ள கருவறையில் அமைந்துள்ளது. இக்கோயில் தலபுராணமும் இத்துர்க்கா தேவியின் சங்கு சக்கரதாரியான கோலத்தையும், மகிடாசுரனைச் சங்கரித்து, சிரத்திலே மிதித்து நின்ற சிலம்பணிந்த பாதத்தையும் பாடுகிறது. துர்க்காதேவியின் உருவம் பாசாங்குசத்துடன் அபய முத்திரை காட்டி, அமர்ந்த கோலத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே நக்கன் கொற்றியால் அமைக்கப்பட்ட துர்க்கை இன்று அர்த்தமண்டபத்தில் வழிபாட்டில் உள்ள துர்க்கையே என்றும், இதுவே இக்கோயில் தலபுராணம் சிறப்பிக்கும் துர்க்கா தேவி என்றும் கருத இடமுள்ளது. மகாமண்டபத்தில் தேவியரும், முனிவர்களும், மன்னனும், மக்களும் புடைசூழ அமர்ந்துள்ள தேவி ஆதிபுவனேசுவரி என்று தலப்புராணத்தில் குறிக்கப்படும் தாய்த்தெய்வமேயாகும். இது நக்கன் கொற்றியால் அமைக்கப்பட்ட துர்க்கை உருவம் அன்றென்றும், கசலெட்சுமி சிற்பம் அமைக்கப்பட்ட காலத்தில் உருவானதென்றும் கூறலாம்.

---

31. செ. போசு, மு.நூ., ப. 76.
32. மேலது., ப. 75.
33. திருப்பரங்கிரிப் புராணம், ப. 6.
34. T.A. Gopinatha Rao, Op.cit., p. 370.

ஆதிபுவனேசுவரிக்கு வலப்புறத்தில் இருட்டுக் கொட்டகை என்றழைக்கப்படும் ஓர் இருட்டறையில் மூன்று தலைகளையுடைய ஒரு சிற்பம் இடக்காலை மடக்கி, வலக்காலைப் பின்புறம் நீட்டிய நிலையிலும், வலது கரத்தைத் தொடை மீது வைத்த கோலத்திலும் அமைக்கப்பட்டுள்ளது. இதைச் சுற்றிலும் எட்டுப் பூதகணங்கள் பல்வேறு ஆயுதங்களைக் கரங்களில் கொண்டு நிற்கின்றனர். இச்சிற்பம் அர்த்த மண்டபத்திலுள்ள சிவனின் கருவறைக்கு நேரே அடிப்பகுதியில் அமைந்துள்ளது. இச்சிற்பம் தற்பொழுது சிதைந்த நிலையில் சிவபெருமானின் அபிடேக நீரைத் தலையில் வாங்கி வாய்வழியே விடுவதுபோன்று அமைந்துள்ளது (நிழற்படம் காண்க). இச்சிற்பத்தை நான்முகன் என்று கருதுகின்றனர்.[35] இதில் மூன்று தலைகள் இருப்பதைத்தவிர இச்சிற்பத்தை நான்முகன் என்று குறிப்பதற்கு வேறு எந்தக் குறிப்பும் இல்லை. இச்சிற்பத்தின் கால்கள் மடக்கி, நீட்டியுள்ள கோலத்தையும், பூதகணங்கள் புடைசூழ நிற்கின்ற கோலத்தையும், இது சிவபெருமானின் கருவறைக்கு நேர்கீழே அமைக்கப்பட்டுள்ள முறையையும் பார்க்கின்றபொழுது இஃது இராவணனின் கயிலையங்கிரிக் காட்சியை நினைவுபடுத்துகிறது. ஆகவே இச்சிற்பத்தை நான்முகன் என்று கூறுவதைவிட இராவணன் என்று கூறுவது பொருத்தமுடையதாகத் தெரிகிறது.

இம்மண்டபத்தின் மேற்குப்பகுதியில் அம்மனுக்காக எடுக்கப்பட்ட தனிக்கோயில் ஒன்றுள்ளது. இங்கு கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் பிற்காலப் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் 'திருக்காமக் கோட்டத்து ஆளுடைய நாச்சியார்' என்ற பெயரில் இஃது அமைக்கப்பட்டது. இக்கோயிலின் சுவர்களில் கி. பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுக்கள் உள்ளன. கருவறை சதுர வடிவில் அமைந்துள்ளது. கருவறைக்கு வடக்கே பள்ளியறை ஒன்று அமைந்துள்ளது. திருக்காமக் கோட்டத்து ஆளுடையநாச்சியார் என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்ற தனியம்மன், தலபுராணத்தில் ஆவுடை நாயகி என்றும், தற்பொழுது கோவர்த்தனாம்பிகை என்றும் வழங்கப்படுகிறது. மகாமண்டபத்தின் வடபுறச் சுவரையொட்டி தெற்கு நோக்கியதாய் ஆடல்வல்லான் சிலையும், ஆலமர்கடவுள் சிலையும் அமைக்கப்பட்டுள்ளன. ஆலமர் கடவுளுக்கு அருகே நவவீரர்களான வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன், வீரமகேசன், வீரபுரந்தரன், வீரராக்ஷசன், வீரமார்த்தாண்டன்,

---

35. செ. போசு. மு. ஙா., ப. 78.

வீரராந்தகன், வீரதீரன் ஆகியோர் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. இச்சிலைகள் பிற்காலத்தில் வைக்கப்பட்டுள்ளனவாகும்.

## ஆறுமுகசாமி மண்டபம்

இம்மண்டபம் மகாமண்டபத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது. இதற்குச் சண்முகர் மண்டபம் என்ற பெயரும் வழங்குகிறது. இம்மண்டபம் மகாமண்டபத்தையும், கம்பத்தடி மண்டபத்தையும் இணைக்கிறது. இவ்வழி, ஆறுமுகரைத் திருவுலாவிற்கு வெளியே கொண்டுவருவதற்குஅமைக்கப்பட்டுள்ளது. ஆறுமுகசாமி மண்டபத்தின் மையப்பகுதியில் ஆறுமுகசாமியின் உத்சவ உருவம் வைக்கப்பட்டுள்ளது. இம்மேடைப்பகுதி சுற்றிலும் கண்ணாடிச் சுவர்களால் ஆக்கப்பட்டு ஆறுமுகசாமியின் ஆறுமுகங்களும் தெரியும்படி அமைக்கப்பட்டுள்ளது. மேடையின் வலப்புறத்தில் அருணகிரிநாதர் சிலை அமைக்கப்பட்டுள்ளது. இம்மண்டபத்தில் வடமேற்கில் செந்திலாதிபர் சந்நிதி உள்ளது. ''திருச்செந்தூரில் செந்திலாண்டவன் என்ற திருக்கோலமாக ஒரு திருமுகமும் அபயம், வரதம், பூ, செபமாலை இவற்றை ஏந்திய நான்கு திருக்கரங்களையும் கொண்டு கிழக்கு நோக்கிக் காட்சி வழங்குகிறார்''.36 இங்கு திருச்செந்தூர் முருகனின் கோலத்தைப் போன்றசிலை கிழக்கு நோக்கியதாய் அமைக்கப்பட்டுள்ளது. இச்சந்நிதிக்கு அருகில் இடப்புறத்தில் சனீசுவரன் சிலை உள்ளது. வலப்புறத்தில் ஐந்து இலிங்கங்களும் (பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்) ஐந்து அம்மன் சிலைகளும்உள்ளன. சனீசுவரருக்கு அருகில் சுரதேவர் சிலை உள்ளது. இம்மண்டபத்தில், கிழக்குப் பகுதியில் இலிங்கமும், நந்தியும், விநாயகரும், நாகரும், நால்வரும், அறுபத்து மூவரும் அமைக்கப்பட்டுள்ளனர். இக்கோயிலில் நவக்கிரகங்களின் சிலைகள் இல்லை. சனீசுவரர் சிலை மட்டும் வழிபாட்டில் உள்ளது. இங்குள்ள ஆறுமுகரின் சிலை வைகாசி விசாகத்தன்று மட்டும் இங்கிருந்து படியிறக்கப்பட்டுக் கம்பத்தடி மண்டபத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு, அங்குள்ள அபிடேகக் குறடில் அபிடேகம் செய்யப்பட்டு, கோயிலுக்குள் திருவுலா முடித்து, மீண்டும் மண்டபம் சேர்க்கப்படுகிறது. இம்மண்டபத்தில் 'சண்முகார்ச்சனை' எனப்படும் ஆறுமுக வழிபாடு நடைபெறுவது குறிப்பிடத் தக்கது. இம்மண்டபத்துத் தூண்கள் இரண்டில் நாயக்க அரசர்கள் இருவரின் நித்திய அஞ்சலிக்கோலம் அழகுற அமைந்துள்ளது.

---

36. ச. தண்டபாணி தேசிகர், முருகன், ப 136.

அர்த்த மண்டபம்

மகாமண்டபத்திற்கு அடுத்து அமைந்துள்ள உள்மண்டபம் அர்த்த மண்டபம் எனப்படும். இம்மண்டபத்திற்கு வடக்கு நோக்கிய வாயில் ஒன்றும், கிழக்கு, மேற்கு நோக்கிய வாயில்கள் இரண்டும் ஆக மூன்று நுழைவாயில்கள் உள்ளன. இம்மண்டபத்தின் தெற்குப் பகுதியில் இடமிருந்து வலமாகத் திருமால், முருகன், துர்க்கை, கணபதி, சிவபெருமான் ஆகிய ஐந்து கடவுளர்க்கும் ஐந்து குடைவரைகள் கருவறைகளாக அமைந்துள்ளன. இம்மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் அமைந்துள்ள திருமால் கருவறையின் வெளிப்புறச் சுவரில் புடைப்புச் சிற்பமாக நரசிங்கமூர்த்தி, வைகுண்டநாதர், பூவராக மூர்த்தி ஆகியோரின் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இப்புடைப்புச் சிற்பங்கள் மூன்றும் மாடங்களுக்குள் இருப்பது போன்று செய்யப்பட்டுள்ளன; மிகநுண்ணிய சிற்பச் சிறப்புடன் எடுக்கப்பட்டுள்ளன. "படிமங்களின் முன்பகுதி உறுப்புகள் மட்டும் இயற்றப்பட்டுப் பின் உறுப்புகள் புலப்படுத்தப்படாமல் அமையும் படிமங்கள் சித்ரார்த்தம் (பாதியுருவம்) என்று சொல்லப்படும். சுவர்களில் சுதையினால் உருவத்தின் முன்பகுதிகள் மட்டும் அவ்வவற்றுக்குரிய அளவுகளில் அமைக்கப்படுகின்றன."37

அர்த்த மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் அமைந்துள்ள சிவபெருமானின் கருவறையின் வெளிப்புறச் சுவரில் ஆடல்வல்லானின் சதுரத் தாண்டவக் கோலமும், குழல் ஊதும் குள்ளப்பூதமும், குடமுழா இசைக்கும் நந்தியும், நடனத்தைக் கண்டு களிக்கும் தேவியின் நின்றகோலத்தோற்றமும், புடைப்புச் சிற்பங்களாகக் காட்டப்பட்டுள்ளன. சிவபெருமானின் சதுரத் தாண்டவத்தைக் கண்டு களிக்கும் சப்த மாதர்களின் சிற்பங்கள் இரண்டு மட்டும் வெளியே தெரிகின்றன. மற்றவை இம்மண்டபத்தையொட்டிப் பிற்காலத்தில் கட்டப்பட்ட சுவரால் (கருவூல அறைச்சாவிகள், முத்திரைகள் வைக்கும் இடம்) மறைக்கப்பட்டு விட்டன. இச்சுவர்கள் அகற்றப்பட்டால் மண்டபத்துச் சுவர்ச் சிற்பங்களின் சிறப்பை அறியமுடியும். சிவபெருமான் கருவறைக்கு அருகே இடப்பக்கத்தில் குள்ளப்பூதத்தின் மீது இடக் காலை ஊன்றிய நிலையில் கங்காதரமூர்த்தியின் கோலம் அமைந்துள்ளது. இது மாடச்சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் எதிர்த்திசையில் திருமால் கருவறையின் வலப்

37. வை. கணபதி ஸ்தபதி, சிற்பச் செந்நூல், ப. 8.

பக்கத்தில் புள்ளின் வாய் கிண்டும் கண்ணனின் கோலமும், அதற்கு மேல் நின்ற கோலத்தில் வலதுகை விரல்களை மார்புக் கருகில் வைத்துக் கொண்டு இடதுகையைத் தொடை மீது வைத்துள்ள முறையில் கண்ணன் சிற்பமும் அமைக்கப் பட்டுள்ளன. கால்களில் தண்டையும், இடது தோளில் அரவமும் காணப்படுகின்றன. இச்சிற்பத்தினைப் பற்றித் தெளிவாக அறிந்துகொள்ள நிழற்படத்தில் காட்டியுள்ள சிற்பம் துணை செய்கிறது.

**கருவறைச் சிற்பங்கள்**

இங்கு ஐந்து கருவறைகள் உள்ளன. முதலில் திருமால் கரு வறை மேற்கு நோக்கியதாயும், முருகன், துர்க்கை, கணபதி கருவறைகள் வடக்கு நோக்கியவையாயும், சிவன் கருவறை கிழக்கு நோக்கியதாயும் அமைக்கப்பட்டுள்ளன(வரைபடம் எண் 1). இங்கு இறையுருவங்கள் சுதைச் சிற்பங்களாக அமைக்கப்பட் டுள்ளன. "இவற்றைக் கடுசர்க்கரைப் படிமம்" என்பர். புற்று மண், எருதுக்கொம்புமண், யானைத்தந்தமண், தங்கம்,வெள்ளி, இளநீர்ச்சாறு இவைகளைக் கொண்டு அமைக்கப்படும். இவற் றுக்கு மேல் புனுகுதான் சார்த்துகின்றனர். மற்ற அபிடேகங்கள் செய்வதில்லை. பிரான்மலையிலுள்ள கல்யாண சுந்தர மூர்த்தி, சீர்காழியிலுள்ள தோணியப்பர், திருநாங்கூர் பெருமாள் ஆகிய இறையுருவங்கள் இவ்வகையைச் சார்ந்தவை" என்பர்.[38] "சர்க் கரை என்ற சொல்லானது மணல், சுக்கான்தூள், உணவுப் பொருளான சர்க்கரை ஆகியவற்றைக் குறிப்பிடும் பொதுச் சொல் ஆகும். இங்குக் கடுசர்க்கரை என்பது கடின மான சுக்கான் கற்களைப் பொடித்துக் கிடைக்கும் சிறு கற்களா கும். சுக்கான் பொடியினை மண்ணோடு கலந்து பக்குவமான சாந்து தயாரித்து அதைக் கொண்டு படிமம் அமைக்கப்படுவ தால் கடுசர்க்கரைப் படிமம் எனப் பெயர் பெறலாயிற்று. கடுசர்க்கரையினைக் கண்டசர்க்கரை எனப் பண்டைச் சிற்பி கள் கூறுவர்".[39] "மனித உடலுக்கு எலும்புக்கூடு எங்ஙனம் வலுவூட்டுகிறதோ அங்ஙனமே கடுசர்க்கரைப் படிமத்திற்கு, மரத்தாலான சூலம் வலுவூட்டுகிறது. மரத்தால் கை, கால், முதுகு, தொடை ஆகிய முக்கிய சூலங்களைச் செய்தல் வேண் டும். சூலம் என்ற சொல் தண்டு, கொடி, கரு என்ற பொருள் களைக் குறிக்கும். கருநிகர் மரக்கோல்களைச் சூலம் என்று

---

38. தகவல் : மதுரை எஸ். மாரியப்ப ஸ்தபதி, கள ஆய்வு நாள் : 22-10-82.

39. வை. கணபதி ஸ்தபதி, மு. நூ., ப. 177.

சொல்வது சிற்பத்துறை வழக்கு. மரத்தால் சூலம் அமைப்ப தற்கு மாற்றாகக் கல்லாலும் சூலங்கள் அமைப்பதுண்டு. முன்னையதைத் தாருசூலம் என்றும், பின்னையதைச் சிலாசூலம் என்றும் சொல்வர்". [40] "முதலில் மரத்தால் சிலை செய்து (தாருசூலம்) அதன்மீது சுதை செய்யும் வழக்கமும் கல்லால் சிலை செய்து (சிலா சூலம்) அதன்மீது சுதை செய்யும் வழக்கமும் பழைய மரபை சார்ந்தவையாகும். இது மகேந்திரவர்மப் பல்லவன் (கி. பி. 590-630) காலத்தைச் சார்ந்தது. இம்முறைக்குச் சூலஸ்தாபனம் என்பர். இதனைப் பெரும்பாலும் வைணவக் கோயில்களில் காணலாம். இக்கோயில்களில் அபிடேகம் கிடையாது. [41] "சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டிருக்கும் ஸ்ரீ ரங்கம், ஸ்ரீ அநந்தசயநம் என்னும் கோயில்களின் மூலவிக்கிரங்கள் சுதையுருவங்களில் இன்றும் காணப்படுதலே பண்டைக் காலத்தில் தெய்வ வடிவங்கள் சுதையினால் இயற்றப்பட்டனவென்பதனை உறுதிப்படுத்தற்கு உற்ற சான்றுகளாக அமைகின்றன". [42] இங்கு ஐந்து கருவறைகளிலுள்ள புடைப்புச் சிற்பங்கள் அனைத்தும் கடுசர்க்கரைப்படிமங்களாக அமைக்கப்பட்டுள்ளன. இப் படிமங்கட்கு அபிடேகம் செய்வதில்லை; மாறாகப் புனுகு மட்டும் சார்த்தப்படுகிறது.

### திருமால் கருவறை

இது அர்த்த மண்டபத்தில் இடமிருந்து வலமாக முதலில் அமைந்துள்ளது. இது சதுர வடிவில் அமைந்துள்ளது. இங்குத் திருமால் இடக்காலை மடக்கி, வலக்காலைத் தாமரைப் பீடத்தின் மீது வைத்து அமர்ந்த கோலத்தில் மேற்கு நோக்கிக் காணப்படுகிறார். தலையில் கிரீடம் அணிந்துள்ளார். காப்பு அணிந்த நான்கு கரங்களில் மேலிரு கரங்களில் சக்கரமும், சங்கும் கொண்டும், கீழ் வலக்கரத்தில் அபயமுத்திரை காட்டியும், கீழ் இடக்கரத்தை தொடை மீது வைத்தும் காணப்படுகிறார். வலப்புறம் மதங்கமா முனிவரும், இடப்புறம் ஸ்ரீ தேவியும் கால்களை மடக்கி அமர்ந்த நிலையில் உள்ளனர். திருமாலின் இருபுறமும் கந்தருவர் இருவர் சாமரம் வீச, மேற்புறத்தில் வானவர் இருவர் பூமாரி பெய்வது போல் அமைக்கப்பட்டுள்ளது. இத்திருமாலைப் பவளக்கனிவாய்ப் பெருமாள் என்று தலபுராணம்

---

40. வை. கணபதி ஸ்தபதி, மு. நூ. ப. 178.
41. தகவல் : வை. கணபதி ஸ்தபதி, கள ஆய்வு நாள் : 30-6-82.
42. க. நவரத்தினம், தென்னிந்திய சிற்ப வடிவங்கள் ப. 45.

பாடுகிறது. திருமங்கையாழ்வார் இமயக் குன்றினை "பனியே பரங்குன்றின் மேய பவளத்திரளே" (பெரியதிருமொழி-ஏழாம் பத்து-7-1-6) என்று பாடியுள்ளார். இத்தொடரை வைத்து இங்குள்ள பெருமாளுக்கு பனைக்கனிவாய்ப் பெருமாள்" என்று திருநாமம் சூட்டியதாகக் கூறுவர்." 43

முருகன் கருவறை

இது திருமால் கருவறைக்கு இடப்புறத்தில் வடக்கு நோக்கியமைந்துள்ளது. முருகன் இடது காலை மடக்கி, வலது காலைத் தரையில் தொங்கவிட்டுப் பீடத்தில் அமர்ந்த கோலத்தில் (சுகாசனமாக) வலக்கரம் அபயமுத்திரையுடனும், இடக்கரம் தொடையில் வைத்த கோலத்துடனும், பின்னிரு கரங்களும் முறையே வச்சிரவேல், சக்திவேல் இரண்டையும் தாங்கிய கோலத்துடனும் அமர்ந்துள்ளார். "பரங்குன்றில் உறைதலும் அலைவாயில் சேறலும், ஆவினன்குடியில் அசைதலும், ஏரகத்து உறைதலும் குன்று தோறும் விளையாடலும் முருகன் செய்யும் செயல் வகையென முருகாற்றுப்படை மொழிகின்றது. உறைதற்கு இரண்டிடம் பிற செயல்கட்கு முறையே ஒவ்வோரிடமும் கூறப்படுகின்றன. அசைதல் என்பதற்கு உரைகாரர்கள் இருத்தல் என்றே உரை கூறுகின்றனர். எனினும் முருகாற்றுப்படை கூறுவதையே கொண்டால் உறையுமிடம் பரங்குன்றம், ஏரகம் என்ற இரண்டுமேயாம். உறையுமிடத்துப் பரங்குன்றில் 'அமர்ந்துறைவன்' என்றும், ஏரகத்தில் பெரிதுவந்து உறைவன் என்றும் நக்கீரர் சிறப்பித்துக் கூறுவது குறிக்கத்தக்கது''.44

முருகனின் வலப்பக்கம் ஆண் சிற்பம் ஒன்று மண்டியிட்ட கோலத்துடனும், இடப்பக்கம் பெண் சிற்பம் ஒன்று மண்டியிட்டமர்ந்த கோலத்துடனும் அமைந்துள்ளன. முருகனுக்கு மேலே சூரியனும், சந்திரனும் காட்டப்பட்டுள்ளனர். அவர்களின் பக்கங்களில் காயத்திரி, சாவித்திரி, சித்த வித்தியாதரன், கலைமகள், நான்முகன், இந்திரன் ஆகியோர் உருவங்கள் உள்ளன. கால்களுக்கு அடியில் யானை, மயில், ஆடு, அண்டாபரணரும், உக்கிரமூர்த்தியும் ஆகிய இரு பூத கணங்கள் ஆகியவை உள்ளன. தெய்வயானையின் திருமணம் திருப்பரங்

43. தகவல்: இரா. அரங்கராசன், கள ஆய்வு
நாள்: 5.5.84.
44. சு. துரைசாமிப்பிள்ளை, 'திருமுருகாற்றுப்படை, 'பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்', ப. 58.

குன்றில் நடந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன.[45] ஆனால் இங்குள்ள மூலவர் சிலை திருமணக் கோலத்துடன் அமைக்கப் படவில்லை. நாயக்கர்கள் காலத்தில் இக்கோயில் திருப்பணி செய்யப்பட்ட பொழுது தெய்வயானைத் திருமணக்கோலம் ஆஸ்தான மண்டபத்திலும், திருக்கல்யாண மண்டபத்திலும் தூணில் சிற்பங்களாகக் காட்டப்பட்டுள்ளன. முருகனின் வலப் பக்கம் உள்ள சிற்பம் நாரதர் என்றும், இடப்பக்கம் உள்ள சிற்பம் தெய்வயானை என்றும் இங்கு வழங்கப்படுகிறது.

டி. ஏ. கோபிநாதராவ் சேட்டாதேவியைப் பற்றி விளக்கு மிடத்தில்[46] திருப்பரங்குன்றம் கோயிலில் முருகனுக்கென்று தனிக்கருவறையோ, தனிச்சிலையோ இல்லையென்றும், இன்று ஆயிரக்கணக்கான பக்தர்கள் முருகன் என எண்ணி வணங்கும் சிலை சேட்டாதேவியின் சிலை என்றும் கூறுகிறார். முருகனின் வலப்பக்கத்தில் நந்திகேசுவரன் என்று கூறப்படுகிற சிலை மாட் டுத் தலையையுடைய சேட்டையின் மகனேயாகும். முருகனின் இடப்பக்கத்தில் தெய்வயானை என்று கூறப்படுகிற சிலை சேட் டையின் மகளேயாகும். சேட்டையின் காசுக்கொடி சேவற் கொடியாக மாற்றப் பட்டுள்ளது. இங்கு முருகனுக்கு ஆறு முகங்கள் இல்லை; இரு மனைவியர் இல்லை; மயில் வாகனம் இல்லை. சேட்டையின் சிலை முருகன் சிலையாக மாற்றப்பட் டுள்ளது என்பதற்கு அவர்கூறும் மற்றைய காரணங்கள் இவை.

தினமணி நாளிதழில் "தெள்ளாற்றில் ஒன்பதாம் நூற் றாண்டு ஜேட்டா தேவி" என்ற பகுதியில், "மதுரை திருப் பரங்குன்றம் கோயிலில் உள்ள சுப்பிரமணியர் சேட்டா தேவி யின் திருவுருவே என்று பல அறிஞர்களும் ஆய்ந்துள்ளனர்"[47] என்ற கருத்து வெளியாகியுள்ளது.

திருமணக் கோலத்துடன் சிலையமைக்கும் பொழுது ஒத்த அளவுடன்தான் அமைத்திருப்பர். ஆனால் இங்கு முருகன் அழகாய் அமர்ந்த கோலத்தில் இருக்க, மற்ற இருபுறமுள்ள சிலைகளும் சிறியதாய் வணங்கும் கோலத்தில் அமர்ந்திருப்

45. கந்தபுராணம் - தெய்வயானை திருமணப்படலம், திருப்பரங்கிரிப்புராணம்.
46. T. A. Gopinatha Rao, Op.cit., Vol.I. part II pp. 390-395.
47. தினமணி நாளிதழ் - தினமணி சுடர், நாள்: 3.1.82.

யதைப் பார்க்கும் பொழுது இது திருமணக் கோலமாய்த் தென்படவில்லை. ஆகவே இது ஐயத்திற்கு இடமளிக்கிறது என்பர்.[48]

இக்கருத்தின் வன்மை மென்மைகளைப் பார்ப்பதற்கு முன் தமிழ்நாட்டில் சேட்டையின் நிலையினைத் தெரிந்து கொள்வது இயைபுடையது.

**தமிழ் நாட்டில் சேட்டை வழிபாடு**

'சேட்டா' என்றால் மூத்தவள் என்பது பொருள். இஃது இன்றும் வழக்கில் பிராமண சமூகத்தில் வழங்கி வருகிறது. மூத்ததேவி என்றும், மூதேவி என்றும் உரைப்பர். இவள் பாற் கடலில் திருமகளுக்கு முன்பாகப் பிறந்தவள். எனவே இவளை இந்திரைக்கு மூத்தாள், திருவின் முன்னர்ச் செழுங் கடற் பிறந்தாள், திருவினுக்கு மூத்தாள், சேட்டை, சேட்டையள், தவ்வை, முதியள், மூதணங்கு என்றெல்லாம் நிகண்டுகள் சுட்டியுரைக்கின்றன. இவள் ஒற்றைச் சடையையுடையவள். அதனால் ஏகவேணி, ஒற்றையோதிக் கற்றையாள் என்று குறிப்பிடப்படுகிறாள். மூதேவியின் வாகனம் கழுதையாகும். கழுதையூர்தி, வாலேபமூர் பெற்றியள் என்னும் பெயர்களும் நிகண்டுகளில் காணப்படுகின்றன. இவள் தாங்கியிருக்கும் கொடி காசுக் கொடியாகும். இதனைக் குறிப்பிடும் வகையில் காக்கைக் கொடியாள், காகமுயர்த்தாள் என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. மூதேவியை ஊறு விளைவிக்கும் இயல்புடையள் என்பர். கெடலணங்கு, கேட்டை, கேடி, முகடி, என்றிவ்வாறு காணும் பெயர்கள் எல்லாம் இத்தேவியால் விளையும் சீர் கேட்டையும், தொல்லைகளையும் விளக்கும் தன்மையன.[49] தவ்வை (167), முகடி (736, 936) என்னும் பெயர்களால் மூதேவியைத் திருவள்ளுவர் சுட்டியுள்ளார். தொண்டரடிப் பொடியாழ்வார் தம் திருமாலையில்.

"சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே" என்று வருந்திப் பாடுகிறார் (திருமாலை, பாடல் எண். 10).

இவ்வாறு இலக்கியங்களில் இகழ்ந்துரைக்கப்பட்ட சேட்டை வழிபாடு, "தமிழகத்தில் கி. பி எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் பாண்டியர்கள், முத்திரையர்கள் பகுதியில் பெரு

48. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 25.1.82.
49. பிங்கலநிகண்டு - தெய்வப் பெயர்கள்.

வழக்குப் பெற்றிருந்தது''.[50] இக்காலக் கட்டத்தில்தான் திருப்பரங்குன்றத்திலும் சேட்டைக்குக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. ''கால வளர்ச்சியில் இளையவள் வந்தபின் மூத்தவளுக்கு மதிப்பில்லை என்பது போலக் கண்ணன் வழிபாடு வந்த பிறகு பலராமன் வழிபாடு மறைந்தது. வள்ளியை வழிபடுவது போலத் தெய்வயானையை வழிபடுவதில்லை. ஆகவே திருமகள் வந்த பிறகு மூத்தவளாகிய சேட்டை வழிபாடு தமிழ் நாட்டில் மறைந்து விட்டது எனலாம். மேலும் வடஇந்தியக் கடவுளர்கள் தென்னிந்தியக் கடவுளர்கள் என்ற நிலையில் பலராமன், பாமா ருக்மணி, தெய்வயானை, சேட்டை ஆகியோர் பெருவழக்குப் பெறாமலிருந்திருக்கக்கூடும்'' என்பர்.[51]

திருப்பரங்குன்றத்தில் கம்பத்தடி மண்டபத்தில் குகையினுள் வழிபாடற்ற நிலையில் சேட்டையின் சிலை, மகன், மகள் இருவரும் இருபுறமிருக்க அமர்ந்த கோலத்தில் இன்றும் காணப்படுகிறது. பெரும்பாலான சேட்டைச் சிலைகள் இரண்டு கால்களையும் தரையில் ஊன்றிய நிலையில் அமர்ந்த கோலத்தில் உள்ளது. ஆனால் திருப்பரங்குன்ற முருகன் சிலை வலக்காலை மட்டும் தரையில் ஊன்றியமர்ந்த கோலத்தில் உள்ளது. தெள்ளாற்றில் உள்ள சேட்டா தேவியின் சிலை இடக்காலை மட்டும் தரையில் ஊன்றியமர்ந்த நிலையில் உள்ளது. வலக்காலை மட்டும் தரையில் ஊன்றியமர்ந்த நிலையில் சேட்டா தேவியின் சிலை யாண்டும் இருப்பதாகத் தெரியவில்லை.

''முருகனின் ஆரம்ப காலத் தோற்றம் இக்கோயிலில் உள்ள கோலமாகும் (அமர்ந்த கோலம், நான்கு கரம்). பின்னர் வளர்ச்சி பெற்ற நிலையில் ஆறுமுகமும், பன்னிரண்டு கரமும், மயில் மீது அமர்ந்த நிலையும், நின்ற கோலமும் வரத் தொடங்கின. இதுபோன்ற கோலம் இன்னும் பழமையான கோயில்களில் காணப்படுகிறது. யானைதான் முருகனின் முதல் வாகனம். இது திருப்பரங்குன்றத்திலுள்ள மூலவர்க்குக்கீழே காட்டப்பட்டுள்ளது'' என்பர்.[52]

முருகனுக்கு ஆறுமுகங்களும், இருமனைவியரும், அருகே மயிலும் கட்டாயமாக இருக்க வேண்டும் என்ற நியதியில்லை.

50. K. R. Srinivasan, Cave temples of pallavas, p. 64.
51. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு
நாள்: 25.1.82.
52. தகவல்: வை. கணபதி ஸ்தபதி, கள ஆய்வு
நாள்: 30.6.82.

பல முருகன் கோயில்களில் முருகன் தனித்து நிற்பதும், ஒரு முகம் இரு கரங்கள் அல்லது நான்கு கரங்களுடன் இருப்பதும் இன்றும் நாம் காணமுடிகிறவை.

சூரியன், சந்திரன் வந்து வணங்குவது போன்ற அமைப்பு பரங்குன்றத்திலுள்ள முருகன் கருவறையில் காணப்படுகிறது. இவ்வாறு வானவர்கள் வந்து வணங்கும் மரபில் சேட்டைக்குச் சிலை இருப்பதை எங்கும் காணமுடியவில்லை. இங்குள்ள முருகன் சிலைக்குக் கீழே முருகனின் மற்ற இரண்டு வாகனங் களான யானையும், ஆட்டுக்கடாவும் சிற்பமாக அமைந்துள்ளன. இந்நிலையில் இன்றுள்ள சிலை முருகன் சிலையே என்பதில் ஐயம் இல்லை.

டி. ஏ. கோபிநாதராவ் அவர்களின் கருத்துப்படி முருகன் சிலையை சேட்டைச் சிலையென்று கொண்டால் இக்குன்றில் இரண்டு சேட்டைச் சிலைகள் இருப்பதாகவும், ஒரே கோயிலில் ஒரே பரிவார மூர்த்தத்தை இரண்டு இடத்தில் குடையப்பெற்று வழிபட்டதாகவும் எண்ண வேண்டியுள்ளது. ''கோபிநாதராவ் அவர்கள், கல்வெட்டுக் குறிப்பை வைத்து உண்மையான சேட்டைச் சிலை இருக்குமிடத்தை அறியாநிலையில் பீடத்தில் அமர்ந்த கோலத்திலுள்ள முருகன் சிலையைச் சேட்டையென்று நினைத்திருக்கக்கூடும் என எண்ண வேண்டியுள்ளது''[53] என்பர்.

''பரிபாடல் பத்தொன்பதாம் பாடலால் (நப்பண்ணனார்) வள்ளிநாயகி திருமணம்தான் திருப்பரங்குன்றில் நடைபெற்ற தாக இருக்க வேண்டும்'' என்பர். [54]

''மூவருடன் நால்வரென மணிவாசகர்க்குப் பெரிய புராணத்தே இடங்கிடைக்காவிடினும், பிற்காலத்தே நடரா சரின் பக்கத்தே வீற்றிருக்கும் பெருமை அவர்க்கே கிடைத்தது. அதுபோல் முருகன் பக்கத்தே நிலைக்கும் பேறு நக்கீரருக்குக் கிடைத்தது'' என்பர்.[55] உ. வே. சாமிநாதையர் அவர்களும் முருகனுக்கு அருகேயுள்ள சிலை நக்கீரர் என்றே கூறுவர். [56]

---

53. தகவல்: வே. வேதாசலம், தொல்பொருள் ஆய்வுத் துறை, கள ஆய்வு நாள்: 8.1.82.
54. தகவல்: குடந்தை. வி. சுந்தரேசனார், கள ஆய்வு நாள் 7.3.81.
55. மு. கோவிந்தசாமி, நக்கீரர், ப. 17.
56. உ. வே. சாமிநாதையர், திருவிளையாடற்புராண முன்னுரை, ப.9.

இங்கு, திருவிழாவில் முருகனுடன் நக்கீரரே இடம் பெறுகிறார். நக்கீரருக்கு இங்கு உற்சவமூர்த்தி (செப்புச்சிலை) உள்ளது; நாரதருக்கு இல்லை. ஆகவே முருகனுக்கு வலப்பக்கம் உள்ள சிலை நாரதர் என்பதைவிட நக்கீரர் என்று கூறுவதே பொருத்த முடையதாகத் தெரிகிறது. முருகனுக்கு இடப்பக்கம் உள்ள சிலை, தற்பொழுது 'தெய்வயானை' என்றே தலபுராணம், மற்றுமுள்ள பிற்கால இலக்கியங்கள் ஆகியவற்றால் நிறுவப்பட்டு வந்துள்ளது.

புராண மரபுப்படி இம்முருகனின் ஆற்றலை, செயலை வைத்து இதற்குச் சகத்திரான்ம பரிபாலன மூர்த்தி, தேவ சேனாபதிமூர்த்தி, பராசரகுமாரோபதேச மூர்த்தி, நடன நாத மூர்த்தி என்று பெயர்கள் வழங்கப்படுகின்றன.[57] ஒரு பட்டினத்தில் அல்லது சிறு கிராமத்தில் முருகனை வடிக்கும் பொழுது பன்னிரண்டு கைகளுள்ளவராகவும், மலையின் அடி வாரத்திலுள்ள சிற்றூரில் நான்கு கைகளுள்ளவராகவும், கிராமத்திலும், காட்டிலும் இரண்டு கைகளுள்ளவராகவும் வடிக்கவேண்டும்''[58] இங்குள்ள முருகன் சிலை நான்கு கைகள் உள்ளவராக வடிக்கப்பட்டுள்ளது. இது சோமாஸ்கந்தர் வடிவத் திலுள்ள சிவபெருமானின் அமர்ந்த கோலம் போன்று இருக்கிறது. ''ஈசனே யவன் ஆடலால் மதலையாயினன்'' (திருவிளையாடற்புராணம்) என்ற பாடலடிகள் இங்கு பொருந்திக் காணப்படுகின்றன. இங்கு ஈசனும், முருகனும் ஒருவரே யாவர். ஆகவே இங்குள்ள முருகன் ''ஞானஸ்கந்தன்'' என்பர்.[59]

இக்கருவறைச் சிற்பங்கள் திருமணக் கோலத்தில் அமைக்கப் படவில்லையென்றாலும் பின்னர் வந்த புராணக்கதைகள் இத் தலத்திற்குத் திருமணச் சிறப்பை ஏற்றிச் சொல்ல, நக்கீரரை நாரதர் என்று மாற்றிக் கூறியுள்ளனர் எனக் கருத வேண்டி யுள்ளது. மேலே காட்டிய கருத்துக்களின் அடிப்படையில் நோக் கும் பொழுது திருப்பரங்குன்றில் உள்ள சிலை முருகன் சிலையே என்றும், அதன் வலப்பக்கம் உள்ள சிலை நக்கீரர் சிலையே என்றும் கூறப் போதிய சான்றுகள் உள்ளன. இன்னும் சான்று

---

57. நா. கதிரைவேற்பிள்ளை, சுப்பிரமணிய பராக்கிரமம், பக். 201, 399, 405, 489.
58. சிற்பரத்தினம், ப. 179.
59. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 28.10.82.

களும், மெய்ம்மைகளும் கிடைக்கப் பெறுமாயின், இச்சிலை அமைந்த காலத்தையும், அக்கால வழிபட்டு நிலைகளையும், வைத்து முருகனின் இடப்பக்கம் அமர்ந்துள்ள சிலையை நாம் அறுதியிட்டுக் கூற முடியும்.

**துர்க்கை கருவறை**

இக்கருவறை, முருகன் கருவறைக்கு இடப்பக்கத்தில் அர்த்த மண்டபத்தின் மையப்பகுதியில் நேராக அமைந்துள்ளது. குடைவரையின் மையப்பகுதியில் அமைந்துள்ளதால் இக்குடைவரைக் கோயில் துர்க்கைக் கோயில் போன்றே எண்ணத் தோன்றுகிறது. துர்க்கை மகிடாசுரன் தலையின் (எருமைத் தலையின்) மீது நின்ற கோலத்தில் காணப்படுகிறாள். நான்கு கரங்களில் மேலிரு கரங்கள் சக்கரமும், சங்கும் தாங்கியுள்ளன; கீழிரு கரங்கள் அபய முத்திரை, கடகமுத்திரையில் அமைந்துள்ளன; அருகே முனிவரும், பணிப்பெண் ஒருத்தியும், தேவகணங்களும் காணப்படுகின்றனர். ''துர்க்கையினைச் சிவதுர்க்கை, விஷ்ணு துர்க்கை எனவும் பாகுபடுத்துவர். சிவதுர்க்கையின் இடக்கையில் மானும், வலக்கையில் மழுவும் இருக்கும். விஷ்ணு துர்க்கையின் இடக்கையில் சங்கும், வலக்கையில் சக்கரமும் இருக்கும். சில சிவன் கோவில்களில் விஷ்ணு துர்க்கையும் இருப்பதுண்டு''.[60] இங்குள்ள துர்க்கையின் வலது கையில் உள்ள சக்கரம் பிரயோக நிலையில் உள்ளது. ''துர்க்கையின் பிற வடிவங்களாக உயிர்களை ஆக்கலுக்கு மகாகாளியும், அழித்தலுக்கு மகாமாரியும், செல்வம் கொடுத்தலுக்கு இலக்குமியும், செல்வம் அழித்தலுக்கு அலக்குமியும் (சேட்டாதேவி) சொல்லப்பட்டுள்ளனர்.[61] இங்கு மக்கள், முனிவர்கள் புடைசூழ வீற்றிருக்கும் ஆதிபுவனேசுவரியும், பிரயோகச் சக்கரம் வலக்கையில் கொண்ட துர்க்கையும், கசலெட்சுமியும், சேட்டாதேவியும் ஆகிய நான்கும் குடைவரைச் சிற்பமாகக் காட்டப்பட்டுள்ளன. ஆக்கல், அழித்தல், கொடுத்தல், கெடுத்தல் என்ற நான்கு குணங்களுக்கும் நான்கு வடிவங்களாக இங்கு இவை ஏற்படுத்தப்பட்டுள்ளன என்று கூற இவை இடம் அளிக்கின்றன.

60. இரா. சீனிவாசன், சக்தி வழிபாடு, ப. 54.
61. T. A. Gopinatha Rao, op.cit., Vol.I, p. 335.

### கற்பக விநாயகர் கருவறை

இது துர்க்கை கருவறைக்கு இடப்பக்கத்தில் அமைந்துள்ளது. நான்கு கரங்களில் பின்னிரு கரங்கள் இரண்டும் ஒரே கரும்பைத் தலைக்குப் பின்புறமாகப் பிடித்துள்ளன. கீழ் வலக்கரத்தில் கனியுளது. இடக்கரத்தைத் தொடை மீது வைத்துள்ளார். தலையில் கரண்ட மகுடமும், தும்பிக்கையில் மணியும், கழுத்தில் உருத்திராட்ச மாலை, காசு மாலை, மலர் மாலை ஆகிய மூன்று மாலையும் அமைய இவர் காட்சி தருகிறார். மேலே சூரியன், சந்திரன் வந்து வணங்க, அருகே கந்தருவர் சாமரம் வீசுகின்றனர். பூதகணங்கள் இசைக்கருவிகளை இசைத்துக் கொண்டும், கனிகளைச் சுமந்து கொண்டும் வரும் கோலத்தில் அமைக்கப் பட்டுள்ளன. கீழே இடப்பக்கம் அனுமன் தன் இடக்கையால் சஞ்சீவி பருவதத்தைத் தாங்கிவரும்கோலமும் அமைக்கப்பட்டுள்ளது. நினைத்ததைக் கொடுக்கும் கற்பகமரம் போல் அடியவர்கள் நினைத்ததைக் கொடுக்கும் ஆற்றல் கொண்டவர் என்பதாகக் கற்பக விநாயகர் என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.[62] ''மணவிழாக் கோலத்தில் முருகன் இங்கே கோயில் கொண்டு இருப்பதால் விநாயகர் கனியும் கரும்பும் கரங்களிலேந்தி மண விருந்தினைச் சுவைக்கின்ற காட்சியைக் காணமுடிகிறது'' என்பர்.[63] இக்கருவறையில் முன்பு நர்த்தனக் கோலத்தில் விநாயகர் சிலை இருந்ததென்றும், அதனால் தான் ஆஸ்தான மண்டபத்தின் இடது தூணிலும், ஆஸ்தான மண்டப முகப்பின் மேற்பகுதியிலும் நர்த்தனகோலம் உள்ளதென்றும், பின்னர் இது அமர்ந்த கோலமாக மாறியிருக்க வேண்டும் என்றும் கூறுவர்.[64]

### சிவபெருமான் கருவறை

கற்பக விநாயகர் கருவறைக்கு இடப்பக்கத்தில் கிழக்கு நோக்கியமைந்து இது காணப்படுகிறது. இக்கருவறை நீள் சதுர வடிவமானது. இறைவன் 'பரங்கிரிநாதர்' என்று அழைக்கப்படு

62. தகவல்: ச. தண்டபாணி தேசிகர், கள ஆய்வு
    நாள்: 8.7.82.
63. சோம லெ., மதுரை மாவட்டம், ப. 265.
64. தகவல்: எஸ். ஆறுமுகம், முன்னாள் நிருவாக அதிகாரி,
    திருப்பரங்குன்றம் கோயில், கள ஆய்வு
    நாள்: 28.7.80. (இத்தகவல் சில பெரியவர்கள் சொல்லக்கேட்ட செய்தி என்று கூறினார்).

கிறார். வடமொழிக் கல்வெட்டு 'பரமசிகரிணி' என்றும், வட மொழித் தலபுராணம் (ஸத்தியகிரி மகாத்மியம்) 'ஸத்தியகிரீ சுவரர்' என்றும் கூறுகின்றன, தமிழ்க் கல்வெட்டுக்கள் 'திருப் பரங்குன்றமுடைய நாயனார்' என்று கூறுகின்றன. கருவறை யில் உள்ளே இலிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. இங்கு இலிங்கத்திற்கு மட்டுமே அபிடேகங்கள் நடைபெறுகின்றன. இலிங்கத்தின் பின்புறமுள்ள சுவரில் சோமாசுக்கந்தரின் உருவம் மிகப்பெரிய சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. பல்லவர்களின் கோயில்களில் காணப்படும் சிற்பங்களைவிட இக்கருவறைச் சிற்பம் மிகப்பெரிய அளவில் அமைந்துள்ளது. சிவபெருமான் இடதுகாலை மடக்கி, வலது காலைத் தாமரை மீது வைத்தும், நான்கு கரங்களில் பின்னிரு கரங்களில் மானும் மழுவும் தாங்கி யும், முன்னிரு கரங்களில் ஒன்றில் அபயமுத்திரையுடனும் பிறி தொன்றைத் தொடையில் வைத்த கோலத்துடனும் காணப்படு கிறார். தேவி வலது காலை மடக்கி, இடது காலைத் தொங்க விட்டு, வலது தொடையில் குகனை அமர்த்திக் கொண்டுள்ளார். வலக்கரத்தில் மலரை வைத்துக் கொண்டும், இடக்கரத்தைத் தரையில் ஊன்றியும் அமர்ந்துள்ளார். குகன் இடது காலை மடக்கி வலது காலைச் சிவனின் தொடை மீது வைத்துள்ளார். வலது கரத்தில் தாமரை மலரைக் கொண்டும், இடது கரத்தை மடி மீது வைத்தும் காணப்படுகிறார்.

கருவறைகளுடன் இணைந்த அர்த்த மண்டபத் திருப்பணி செய்தவர் திருமலை நாயக்கர் என்பர். திருமலை நாயக்கர் திருப்பணி செய்த கோயில்களில் அவர் சிலையை நித்திய அஞ்ச லிக் கோலத்துடனும், அவர்தம் தேவியருடன் இணைத்தும் அமைப்பது வழக்கம். இங்கு அர்த்த மண்டபத்தில் முருகன் கரு வறைக்கு எதிரே தூண் சிற்பமாகத் திருமலை நாயக்கர், அவர் தம் தேவியர் சிலைகள், அவர் தம்பி முத்தியாலு நாயக்கர் சிலை ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன.

**தொகுப்புரை**

இக்கோயிலின் அமைப்பு, கருவறையில் குடைவரை அமைப் பிலிருந்து கட்டிடக் கோயில் அமைப்பாக காலங்காலமாக வளர்ச்சி பெற்று மயில் மண்டபம் வரை வளர்ந்து வந்துள்ளது. பாண்டியர்களின் கட்டிடக் கலைப்பாணியும், நாயக்க அரசர் களின் கலைப்பாணியும் இக்கோயிலில் பெருமளவு நிறைந்துள் ளன. இக்கோயில் அமைந்துள்ள குன்றின் வரலாற்றைப் பார்க் கும்பொழுது, இங்கு பௌத்த-சமண, சமயங்களின் செல்வாக்

கும், சைவ சமயத்தின் செல்வாக்கும் காலங்காலமாக வளர்ந்தும், மாறியும் வந்துள்ளமை தெரியவருகின்றது. தொடக்கக் காலத்தில் சமணசமயத்திற்கு இடமளித்த இக்கோயில், பின்னர் சைவ வைணவப் பொதுமையோடு கூடிய பலதெய்வ வணக்கமுடைய கோயிலாகவும் இருந்துள்ளது. அதிலும் சேட்டைக்கும், துர்க்கைக்கும் சிறப்பு இடமிருந்த நிலைமையையும் காண முடிகிறது. பின்னர் இது ஒரு தெய்வ வணக்கமுள்ள கோயிலாக மாறிய காலகட்டத்தில் சிவனுக்கு முதன்மையும், சிறப்பிடமும் கிடைத்துள்ளது. இக் காலகட்டத்தில் இக்குன்றின் தென்புறத்தில் சிவனுக்கெனத் தனிக் கோயிலாகத் தென்பரங்குன்றம் தோன்றியதை அறியமுடிகிறது. பின்னர் முருக வணக்கம் தனி வணக்கமாக மாறிய காலத்தில் இங்குள்ள முருகன், விநாயகர் வடிவங்கள் அதிகமாகச் சுதை வடிவங்களாக இடம் பெற்றுள்ளன. மக்களின் விருப்பத்திற்கேற்ப, இறை ஈடுபாட்டிற்கேற்ப இறைவணக்கங்கள் (Popularity of God) மாறியுள்ளன. இங்கு முருக வணக்கம் தனி வணக்கமாக மாறி இது முருகன் கோயில் என்ற நிலை வந்தபின்னர்தான், இக்கோயில் மண்டபங்களுடன் கூடிய முழுமைபெற்ற கட்டிடக் கோயிலாக வளர்ச்சி பெற்றுள்ளது.

இக்குன்று காலங்காலமாக மக்கள் நம்பிக்கையின் சின்னமாக (Symbol of Hope) இருந்துள்ளது. ஆகவே மக்கள் நம்பிக்கைக்கு ஏற்ப வழிபாடுகள் மாறி மாறி அமைந்துள்ளன. இன்றும் இசுலாமியர்களின் தர்கா குன்றின் மேலும், இந்துக்களின் கோயில்கள் குன்று முழுவதும் இருந்து இது மக்கள் நம்பிக்கையின் சின்னமாகவே இருந்து வருகிறது. காலந்தோறும் வழிபாடு (Concept) மாறிக் கொண்டிருந்தாலும் நம்பிக்கையின் சின்னம் என்ற எண்ணம் மாறவில்லை. கலை வரலாற்றில் சிலைகள் பற்றிய சர்ச்சையிருந்தாலும் மக்கள் இதில் கவனம் செலுத்தவில்லை; உள்ளேயிருக்கும் ஆற்றலையே எண்ணினார்கள். ஆகவேதான் கோயிலைச் சுற்றிப் பல சிறு கோயில்கள், தெய்வங்கள் இருந்தாலும், கோயிலுக்குள்ளேயே முருகன், சிவன் என்று இரு சிறப்புப்பெற்ற தெய்வங்கள் இருந்தாலும், மக்கள் எண்ணியிருந்த ஆற்றல் இங்கு அவர்களின் தொடர்ந்த ஈடுபாட்டைக் (sustained interest) கட்டுப்படுத்தவில்லை. தமிழக மக்களின் வாழ்விலும் வரலாற்றிலும் இக்கோயில் கொண்டிருந்த பங்கை இக்கோயிலின் அமைப்பு, வளர்ச்சியில் இருந்து அறிந்து கொள்ள இயலுகிறது.

# இலக்கியங்களில் திருப்பரங்குன்றம்

பழந்தமிழ் இலக்கியங்களில் முருகன் கோயில் கொண்டிருந்த கோட்டங்கள்[1] பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இதில் மதுரைக்கு அணித்தாயுள்ள தண்பரங்குன்றமும் ஒன்றாகும். இக்கோயில் பற்றி இன்று வரை எழுந்துள்ள இலக்கியங்கள் நான்கு பெரும் பிரிவுகளுக்குள் அடக்கப்பட்டு இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன. அவை சங்ககால இலக்கியங்கள், பக்திக் கால இலக்கியங்கள், இடைக்காலச் சமய இலக்கியங்கள், பிற்காலப் புராணச் சிற்றிலக்கியங்கள் என்ற தலைப்புகளில் அமைவன.

**சங்ககால இலக்கியங்களில் திருப்பரங்குன்றம்**

சங்க இலக்கியங்களான அகநானூறு, பரிபாடல். கலித்தொகை, மதுரைக்காஞ்சி, திருமுருகாற்றுப்படை ஆகியவற்றில் திருப்பரங்குன்றம் பற்றிக் குறிக்கப்படுகின்ற செய்திகள் இங்கு விளக்கப்படுகின்றன. அகநானூற்றில், மதுரை மருதனிள நாகனாரும் (அகம், 59). எருக்காட்டூர்த் தாயங்கண்ணனாரும் (அகம், 149) பரங்குன்றம் பற்றிப் பாடியுள்ளனர். மருதனிள நாகனார், பரங்குன்றின் சோலைகள் நிறைந்த காட்சிகளையும் சுனைவளம் மிக்க காட்சிகளையும் பாடி, அங்கு இயற்கையோடு இயைந்த தண்பரங்குன்றில் முருகன் உறைகின்றான் என்றும், இத்தண்பரங்குன்றம் இதற்கு முன் அந்துவன் பாடிய சிறப்பைப் பெற்றது என்றும் இதன் பழமையைக் கூறி முடிக்கிறார். இப்பரங்குன்றில் மயிற்கொடியை உயர்த்திக் குறிஞ்சி நிலமக்கள் முருகனுக்கு விழா எடுக்கும் சிறப்பை,

''கொடி நுடங்கு மறுகிற் கூடற்குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
ஒடியா விழலின் நெடியோன் குன்றம்''

1. S.I.I. Vo.XII, 48; S.I.I. Vol.XII, 51

என்ற எருக்காட்டூர்த் தாயங்கண்ணனாரின் பாடல் மூலம் அறிய முடிகிறது. இப்பாடல்களில் பழங்காலத்தில் பரங்குன்றின் இயற்கை வளமும், சோலைகளும், சுனைகளும் மிக்கிருந்த காட்சிகளும் சுட்டப்படுகின்றன.

பரிபாடல்

பரிபாடலின் இருபத்திரண்டு பாடல்களில் எட்டுப் பாடல்கள் செவ்வேள் பற்றியன. கடுவனிளவெயினனார் (ஐந்தாம் பாடல்), நல்லந்துவனார் (எட்டாம் பாடல்), குன்றம்பூதனார் (ஒன்பது, பதினெட்டாம் பாடல்கள்), கேசவனார் (பதினான்காம் பாடல்), நல்லழிசியார் (பதினேழாம் பாடல்), நப்பண்ணனார் (பத்தொன்பதாம் பாடல்), நல்லச்சுதனார் (இருபத்தியொன்றாம் பாடல்) ஆகியோர் பாடிய செவ்வேள் பற்றிய பாடல்களில் பரங்குன்றம் பேசப்பட்டுள்ளது. நல்லந்துவனாரின் வையை பற்றிய ஆறாம் பாடலிலும் பரங்குன்றம் பேசப்படுகிறது. எல்லாப் பாடல்களிலும் பரங்குன்றத்தின் இயற்கை வளமும், அருவியோசையும், வண்டின் ஒலியும், பறவைகளின் ஆரவாரமும், குயில்களின் கூவலும், மயில்களின் ஆடலும் பேசப்படுகின்றன. "பரிபாடலின் திருமாலைப் பற்றிய பாடல்கள் போலன்றிச் செவ்வேளைக் குறித்த எட்டுப் பாடல்களும் புணர்தல், ஊடல் போன்ற இன்பக் குறிப்புக்களைத் தொகுத்துச் சுவைபடச் சொல்கின்றன. முருகன் குறிஞ்சிக் கிழவன் என்ற தமிழ்க் கொள்கையை மறவாமல் செவ்வேளைப் பாடிய எட்டுப் புலவர்களும் காதற் செய்திகளை மடுத்துள்ளனர்" என்பர் வ. சுப. மாணிக்கம்.[2] கடுவனிளவெயினனார் பரிபாடலில் ஐந்தாம் பாடலில் முருகனை,

"நீயே, வரம்பிற்றின் வுலக மாதலிற்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை
சிறப்பினுள் உயர்பாகலும்
பிறப்பினுள் இழிபாகலும்
ஏனோர்நின் வலத்தினதே" (பரி.,5:17-21)

என்று பாடுகிறார். "இப்பாடலடிகள் குமரக் கடவுளின் எல்லையின்மையையும் தனக்குவமையில்லாத் தன்மையையும் வெளிப்படுத்தி ஏனையோரினும் மேம்பட்ட அவனது தலைமையைப் புலப்படுத்துகின்றன. 'அரும பெறல் மரபிற் பெரும பெயர்

2. A. Velupillai, Epigraphical Evidences for Tamil Studies, P. 61.

முருக' எனவும், 'பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள்' எனவும், 'நின்னொடு புரையுநர் இல்லாப் புலமையோய்' எனவும் வரும் முருகாற்றுப் படையின் அடிகள் பரிபாடற் கருத்தை வலுப்படுத்துவனவாகும். இதனால் தமிழகச் சமய வரலாற்றில் சிவன் மகனாகவும், திருமாலின் மருமகனாகவும் உறவு பெறும் சிறுகுமரன் முழுமுதற் கடவுளாக, எல்லோரும் வழிபடும் தெய்வமாக ஒரு காலத்தில் உயர்நிலை பெற்ற அருமையை அறிகின்றோம். அதனால் மறுமை வாழ்விற்கும் இம்மை வாழ்விற்கும் வேண்டுவார்க்கு வேண்டுவனவெல்லாம் வழங்கும் தெய்வம் என்ற பெருநம்பிக்கை பரிபாடற் காலத்துப் பொதுவாகத் தமிழகத்தும், குறிப்பாகப் பாண்டி நாட்டிலும் பரவலாயிற்று.

சிவன், திருமால், வாலியோன் முருகன் என்ற கடவுளர் எல்லாம் ஒத்த பொது நிலையில் வைத்துப் பாராட்டுப் பெறுவதைப் புறநானூறு முதலான தொகை நூல்கள் காட்டுகின்றன. பின்னர் வளர்ந்த, தெய்வத் தலைமைப் பூசலில் திருமாலும் செவ்வேளும் முதன்மையிடம் பெறுவதைக் காண்கிறோம். இவ்விருவருள்ளும் தலைமையிடத்தை முந்திப் பற்றிக் கொண்டவன் குமரக் கடவுள் என்று சமய வரலாறு புலப்படுத்துகின்றது.

> "மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
> புண்மிசைக் கொடியோனும் புங்கல வூர்வோனும்
> மலர்மிசை முதல்வனும்" (பரி., 8:1-3)

என்ற பரிபாடலில் திருமால், சிவன் முதலான எல்லாத் தேவர்களும் ஒருங்கு கூடி முருகப் பெருமானைக் கண்டு வணங்கத் திருப்பரங்குன்றம் வந்து தங்கினர் என்பதால் தெளிய முடிகிறது. இதனால் திருப்பரங்குன்றம் இமயக் குன்றத்தை நிகர்த்ததாம். அயன், அரி, அரன் மூவரையும் தலைவராகச் செய்த முழுத் தலைமை பெற்றவன் முருகனே என்று முருகாற்றுப் படையும் பகர்கின்றது (முருகு., 162). பரிபாடலும் முருகாறும் ஒன்றுபட்டாற் போலப் "பெரும் பெயர் முருக" எனச் செவ்வேளை மீமிசைச் சொல்லால் வீறுபெற விளிக்கின்றன என்பர்.3

சங்க காலத்தில் தமிழர்கள் தங்களுக்குள் உண்டாகின்ற சிறு குடும்பச் சண்டைகளுக்காக முருகன் மேல் ஆணையிடுவார்கள். வேலின் மேல், மயிலின் மேல், கோழியின் மேல்,

3. சு. வித்தியானந்தன். தமிழர் சால்பு. ப. 127.

குன்றின் மேல் ஆணையிடுவதும் உண்டு. அதைக் கண்டு அஞ்சிய அவனுக்கு வேண்டியவர்கள், இப்படி முருகன் மேல் ஆணையிடாதே, அவனோடு தொடர்புடைய பொருள்கள் மீது ஆணையிடாதே என்று வேண்டிக் கொள்வது வழக்கம். தங்களால் அன்பு செய்யப்படும் பொருள்களிற் சிறந்தவன் முருகன்; முருகன் மேல் பொய்யாணையிட்டால் தமக்குப் பெருந்தீங்கு விளையும் என்ற எதிர்நோக்கு எல்லோருக்கும் இருந்தது. இதை நல்லந்துவனாரின் (ஆறு, எட்டாம்) பாடல்கள் காட்டுகின்றன. இதனால் முருகன் மீது அனைவருக்கும் எத்துணை அச்சங் கலந்த நம்பிக்கை இருந்திருக்கிறது என்பது புலனாகின்றது.

குன்றம்பூதனார் முருகக் கடவுளுக்கு இரண்டு பாட்டுக்கள் (ஒன்பது, பதினெட்டு) பாடியுள்ளார். திருப்பரங்குன்றத்தைப் பாடியிருத்தல் பற்றி இவருக்குக் குன்றம் என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது போலும் என்பர்.[4] இவருடைய ஒன்பதாம் பாடலில்,

> ''கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
> நயத்தகு மரபின் வியத்தகு குமர'' (பரி., 9:81-82)

என்றபடி, இல்லற நெறியில் வந்த மனைவியரின் ஊடலுரிமைக்கு நயந்து பணிபவன் முருகன் என்று காண்கிறோம். குமரன் என்ற சொல் பரிபாடலில் வரும் இடம் இதுவொன்றே. செவ்வேள், முருகன் என்ற பிற பெயர்களை ஆளாமல் காதலுக்குரிய குமரப் பருவம் காட்டும் குமரன் என்ற பெயரை ஊடற் செய்தியில் குன்றம்பூதனார் ஆண்டிருப்பது அவர்தம் இலக்கிய நுட்பத்தைப் புலப்படுத்தும் என்பர்.[5] இப்பாடலில் வள்ளியும், தெய்வயானையும் போரிட்டுக் கொள்வதாகவும், தெய்வயானையின்பாற் செல்லாதே என முருகனுடைய கைகளைக் கட்டி, மாலையைக் கோலாகக் கொண்டு வள்ளி புடைத்ததாகவும் கூறுகிறார். தெய்வயானையின் மயிலும், வள்ளியின் மயிலும் பகைத்து எதிர்த்தன; கிளிகளும் பகைத்தன; இருவர் வண்டுகளும் பொருதின; இருவர் தோழிகளும் போரிட்டனர் என்றும், இறுதியில் வள்ளி வெற்றி பெற்றாள் என்றும் கூறுகிறார் ஆசிரியர். இப்பாடலின் உட்பொருளை ஆய்ந்தறிந்த தமிழ் வெ. சுவலபில், ''இச்சண்டை தமிழர்மகளும், இம்மண்ணுக்

4. சா. கணேசன், 'அப்பர் தேவாரத்தில் ஆலயங்கள்'. திருக்கோயில் திங்களிதழ், டிசம். 1973—ப. 117.
5. K. R. Srinivasan, Temples of South India, P. 16.

குரியவருமான வள்ளிக்கும், வெளியிலிருந்து வந்த, வேற்று மண்ணைச் சேர்ந்த தெய்வயானைக்கும் நடந்தது. இது இரு வேறு பண்பாட்டிற்குமிடையே நடந்த ஒன்றைக் காட்டுகிறது. இம்மண்ணுக்குரியதும், ஆரியர்களுக்கு முந்தியதான ஒரு மரபிற்கும், வேற்று மண்ணிலிருந்து வந்த வடமொழி மரபிற்கும் இடையே நடந்ததைக் காட்டுகிறது. களவிற்கும் கற்பிற்கும், காதலுக்கும் காமத்திற்கும் இடையே நடந்த ஒன்றை இது காட்டுகிறது. இதில் உண்மைக் காதல் வாழ்வு வெற்றி பெற்றதாகக் காட்டப்பட்டுள்ளது'' என்பர்.[6] பரிபாடலில் முருக வணக்கம் பற்றி ஆய்ந்தறிந்த நா. வானமாமலை, மக்கள் வாழ்ந்த காலத்தையும், வழிபட்ட தெய்வத்தையும், ஆறு வகையாகப் பகுத்துக் கூறுவர் (பின்வரும் இயலில் இவ்விளக்கப் பட்டியல் தரப்பட்டுள்ளது). பெரிய இனக்குழுக் கூட்டமைப்புக்களாக மக்கள் வாழ்ந்த காலத்தில், தெய்வத்தைக் காதலுக்குரிய தாய், போருக்குரியதாய் வரம்தரு தெய்வமாய் வணங்கினர். இக்காலக் கட்டத்தில் தோன்றிய பாடல்களே பரிபாடல்கள் என்பர்.[7] சூரனை வென்றதால் போர்க் கடவுளாகக் கருதப்பட்ட முருகனிடம் போரில் வெற்றியை வேண்டி அரசரும் வீரரும் வழிபடுகின்றனர். முருகனுடைய போர்ப் படைகளை பலவாறாகப் புகழ்கின்றனர். அவனுடைய வெற்றி தமக்கும் ஆக வேண்டுமென்ற உள்ளக் குறிப்பை வெளியிடுகின்றனர். வீரனை வணங்கி அவன் போர்ப் படைகளைப் புகழ்ந்து பாடினால் தமக்கும் வீரவுணர்வு வரும்; போரில் வெற்றி கிட்டும் என்று வீரர்கள் நம்பினார்கள். இந்நம்பிக்கையின் காரணமாகப் பாண்டியமன்னன் (புலமான் வழுதி) திருப்பரங்குன்றத்திற்குப் போய் முருகனை வழிபட்டான். இதை நப்பண்ணனாரின் பாடல் (பரி. பத்தொன்பது) கூறுகிறது. "அரசன் வழிபடும் கோயிலான பிறகு, இது செல்வம் கொழிக்கும் நிறுவனமாயிற்று. மாத விழாக்களும், ஆண்டு விழாக்களும் மிகுதியும் நடைபெற்றன. செல்வர்களும், கல்வியிற் சிறந்தோரும் வீரர்களும் கோயிலுக்கு சென்று வழிபட்டனர். அவர்கள் தங்கள் தங்கள் துறைகளில் வெற்றி பெற முருகனை வேண்டினர். முருகன் கோயிலின் மண்டபத்தில், அரசவையிற் போலவே பல

6. K. R. Shinivasan, Temples of South India, p.9
7. K. A. N. Sastry, History of India, P. 55,
மேற்கோள் : மா. இராசமாணிக்கனார் தமிழ் மொழி இலக்கிய வரலாறு ப. 106.

போட்டிகள் நடைபெற்றன''.[8] நப்பண்ணனார் இப்பாடலில் 'திருப்பரங்குன்றம்' முருகன் வள்ளியை மணந்த இடம் என்றும், முருகன் வானுலகத்தில் தெய்வயானையை மணந்ததற்கு மாறாக அவ்வுலகத்தில் இத்தலத்தில் வள்ளியை மணந்தான் என்றும் குறிப்பிடுவதாக உரையாசிரியர்கள் சுட்டுவர். (கந்த புராணம் தெய்வயானை திருமணம் இங்கு நடந்ததாகக் கூறும்). இவர் பாடற் கருத்து முருக வழிபாட்டில் பண்பாட்டுக் கலப்பு ஏற்படுவதற்கு முன் இருந்த நிலையைச் சுட்டுகிறது எனக் கருதலாம்.

சங்க காலத்தில் சிற்பக் கலையும், ஓவியக் கலையும் வளர்ச்சியுற்றிருந்தன. கோயில்களையும், அரசரின் மாளிகைகளையும் மண்டபங்களையும் சிற்பநூல் வல்லுநர் நாள் குறித்து, நாழிகை பார்த்து, நேரறி கயிறிட்டுத் திசைகளையும், அத்திசைகளிலுள்ள தெய்வங்களையும் நோக்கி வகுத்தனர்.[9] இவ்வாறு சிற்பமும் ஓவியமும் சிறப்புற்றிருந்த பொழுது திருப்பரங்குன்றத்தில் எழுதெழில் அம்பலம் (பரி., 18:27-28), எழுத்து நிலை மண்டபம் (பரி., 19:46-53) போன்றவை இருந்துள்ளன. இங்குத் தீட்டப்பட்ட ஓவியங்களை மக்கள் கண்டு களித்தனர். சிலர் துருவ சக்கரத்தைப் பொருந்தி வரும் ஞாயிறு முதலான கோள்களின் நிலைமைகளை விளக்கும் ஓவியத்தைக் கண்டு மகிழ்ந்தனர். இதனால் சங்க காலத்து ஓவியக் கலைக்குப் பரங்குன்றம் சான்றாக அமைந்திருந்தமை தெளிவாகிறது. அக்கால மக்களின் வழிபாட்டில், வேண்டுதல்களில், நம்பிக்கையில் இருந்த இயற்கையுணர்வுகளைப் (பரி., 8 : 103-108) பரிபாடல் மூலம் தெளிவாக அறிந்து கொள்ள முடிகிறது.[10]

### கலித் தொகை

கலித்தொகையில் மருதக்கலியில் ஒரு பாடலும்(93), பாலைக்கலியில் ஒரு பாடலும் (27), பரங்குன்றை வெளிப்படையாகப் பெயர் சுட்டியுரைக்காமல், 'வெல்வேலான் குன்று' என்று குறிப்பாகச் சுட்டுகிறது.[11] இப்பாடல்கள் இரண்டும் முருகனின் போர் வெற்றிச் சிறப்பைக் குறிப்பனவாய் அமைந்துள்ளன. கலித்தொகையில் மதுரையும், மதுரையைச் சார்ந்த பிற இடங்

---

8. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப. 222.
9. மேலது ப. 223
10. சிலப்பதிகாரம், 9: 11.
11. சு. வித்தியானந்தன், மு. நூ. ப. 132.

களுமே இடம்பெறக் காணலாம். சேர, சோழ, நாட்டு நகர்கள் இடம்பெறவில்லை. பாண்டிய நாட்டுத் தலைநகரான மதுரை, கூடல், மதுரை என்ற பல பெயர்களில் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளது. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரைக்கு அணிசெய்யும் வையையாறு கலித்தொகையில் பல பாடல்களில் பேசப்பட்டுள்ளது; மதுரைக்கு அருகில் உள்ள பரங்குன்றம் சுட்டப்பட்டுள்ளது. ஆகவே இங்கே வென்வேலான் குன்று என்பதைப் பரங்குன்று என்று உரையாசிரியர்கள் கொண்டது பொருத்தமாகத் தெரிகிறது.

**மதுரைக்காஞ்சி**

பத்துப்பாட்டினுள் ஒன்றான மதுரைக்காஞ்சியில் ஆசிரியர் மாங்குடி மருதனார் பரங்குன்றின் இயற்கை வளத்தைப் பத்து அடிகளில் அழகுற விளக்குகிறார். திருப்பரங்குன்றில் எப்பொழுதும் மழை பொழிந்து கொண்டிருப்பதால் அது குளிர்ந்து தண்பரங்குன்றாய்த் திகழ்கிறது என்றும், மருதஞ் சான்ற பகுதியாய்ப் பாடலும் ஆடலும் சான்ற பகுதியாய்த் திகழ்கிறது என்றும் கூறுகிறார்.

**திருமுறுகாற்றுப்படை**

திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் வாழ்ந்த காலம் செந்தமிழ் நாடும் மொழியும் சிறப்புடன் வாழ்ந்த கடைச்சங்ககாலம். சங்ககால நக்கீரரையும் உரையாசிரியர் நக்கீரரையுமே ஒருவரெனக் கொண்டு கி. பி. முதலிரண்டு நூற்றாண்டுகளே கடைச்சங்க காலம் என்பது பலர் ஆய்ந்து கண்ட முடிவு. கடைச்சங்கம் சில நூற்றாண்டுக் காலம் வரை தொடர்ந்து நடைபெற்றமையின் கடைச்சங்கப் புலவர்களில் யார் யார் எந்த எந்த நூற்றாண்டைச் சார்ந்தவர் என வரையறுக்க இயலாது. ஆனாலும் நக்கீரரது செய்யுளமைப்பு, தெய்வங்கள் குறித்த தனி நூலாக்கம்,சொல்லாட்சி இவற்றைக் கொண்டு இவர்இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[12] இவர் காலம் தோராயமாக இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி எனலாம். நக்கீரர் பாடியனவாக அகத்திலும் புறத்திலுமாக முப்பத்தேழு பாடல்கள் உள்ளன. அவற்றுள் அகம் பற்றியன அகநாநூற்றில் பதினேழு பாடல்களும், குறுந்தொகையுள் எட்டும், நற்றிணையுள் ஏழும்

12. அ. சீனிவாசன், கலித்தொகை திறனாய்வு (அறிஞர் பட்ட ஆய்வேடு), பக். 7—8.

ஆக முப்பத்திரண்டு பாடல்கள். புறம் பற்றியன மூன்று பாடல்கள்; ஏனையநெடுநல்வாடையும் திருமுருகாற்றுப்படையும்இவையொழிய நக்கீரர் குமரவேள் மீது பாடியனவாகப் பத்து வெண்பாக்கள் உள்ளன. இவையனைத்துமாகச் சங்ககால நக்கீரர் செய்தவை நாற்பத்தேழு பாடல்கள் என்பர் ச. தண்டபாணி தேசிகர்.[13] மதுரையாசிரியரான நக்கீரருக்கு மதுரையின்பாலுள்ள சோலைமலையும், மேற்பாலுள்ள பரங்குன்றமும் முன் எண்ணத்தக்கவையாயின. அதனால்இரண்டனையும் ஒருங்கென்னப் பாடல் முழுவதையுமே ஒரு தொடராக்கிப் பழமுதிர் சோலை மலைகிழவோன் இங்கெல்லாம் இருப்பான்; கருணையே வடிவானவன்; வேண்டியவெல்லாங் கொடுப்பான் என்கின்றார். இது நூல் நுதலிய அடிக்கருத்து.

தமிழகத்து மக்கள் தொன்றுதொட்டு இறைவனை மனமுருகி வழிபடும் மாண்பினர். கற்பன கற்றுத் தேர்ந்த அறிஞர்கள் செய்த வழிபாட்டு முறை ஒன்று, தந்தொழிலையன்றிப் பிறவற்றைக் கல்லாத மக்கள் தங்கள் சமுதாய வாழ்க்கையோடு ஒட்டி வழிபட்ட முறை ஒன்று, ஆக இருமுறைகள் உள. அவற்றுள் கற்றறிந்தோர் வழிபாட்டுமுறை விதிமுறைப் பூசனை எனப்படும். இவை இரண்டனையும் நக்கீரர் தமது ஆற்றுப்படையிற் குறிக்கின்றார். பூசை செய்வதெல்லாம் அன்பைப் பெருக்கி அறிவைப் பெறுதற்கே. "கிரியை எனமருவும் யாவையும் ஞானங் கிடைத்தற்கு வாயில்." ஆகவே பூசையின் பெரும் பயன் அன்பு சுரக்கச் செய்வதே. அன்பு சுரந்து அதனாலேயே பூசை நிகழுமானால் அது எந்த விதிகளையும் கட்டுப்பாடுகளையும் வேண்டாது. அவரவர்களும் தம் மனத்தெழுந்த அன்பின் மீதுயர்ச்சியினால் இறைவற்குகந்த செயல் எவை என்று எண்ணுகிறார்களோ அவைகளைச் செய்வர். இறைவன் மிகமிக இரங்கி அவர்களுக்கே விரைவில் அருள் செய்வான். அன்பு நெறிப் பூசையைக் குறமகள் செய்வதாக வைத்துக் காட்டுகிறார் நக்கீரர். குறமகள் வேத ஆகமங்களை ஓதியவளல்லள்; பூசை விதிகளையும் அறிந்தவள் அல்லள்; அன்பு மேலீட்டால் தங்கள் குலவழக்கப்படி வழிபடுகின்றாள், குலவழக்கே விதியாகிறது என்பர்.[14]

திருமுருகாற்றுப்படை "உலகம் உவப்ப" என்று பரங்குன்றில் தொடங்கி பழமுதிர் சோலைமலை கிழவோனே

13. ச. தண்டபாணி தேசிகர், நக்கீரர், பக் 41—45.
14. மேலது, பக். 120—121.

என்பது வரை முந்நூற்றுப் பதினேழு அடிகளைக் கொண்டதாய் அமைந்துள்ளது. இதில் திருப்பரங்குன்றம் பற்றிய செய்திகள் எழுபத்தேழு அடிகளில் அமைந்துள்ளது. இதில் முருகனின் உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள், செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை, உருள்பூந்தண்டார் புரளும் மார்பு ஆகிய வற்றைப் பாதாதிகேச வருணனையாகப் பாடியுள்ளார். முருகனுக்கு ஒருத்தி ஆடிய துணங்கைக் கூத்தை இப்பகுதியில் கூறுகிறார். மந்தியும் அறியா மரன்பயிலடுக்கமான திருப்பரங் குன்றம், திருவீற்றிருந்த தீதுதீர் நியமித்து மாடமலமறுகிற் கடற் குடதிசையில் இருந்த சிறப்பைக் காட்டி, அவன் தண்ணருளைக் கூறுகிறார்.[15] திருப்பரங்குன்றத்தின் இயற்கையை வருணிக்கும் இடத்தில் அவரையும் அறியாமல் அவரனுபவம் அவருரையாகவே அமைந்துவிட்டது (முருகு., 72-77). அல்லிமலரில் தேனுண்ண வந்த வண்டு, தாமரையில் வந்து சிறைப்பட்டு விட்டது; தாமரையில் துஞ்சியது; வைகறையில் சூரியன் ஒளி கண்டு விரிந்த தாமரையிலிருந்து எழுந்து ஒளித்துக் கொண்டு சென்றது என்று தாம் சிறைப்பட்ட தையும், திருமுருகாற்றுப்படை பாடியதையும், ஆற்றுப்படை பாடுவதற்கு முதற்சொல்லாக 'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு' என்று சூரியனைக் கொண்டு தொடங்கியதையும் இங்கு உள்ளுறை உவமமாகக் கூறுகிறார். திருப்பரங்குன்றமே இவருக்கு முருகனுடைய திருவருட்காட்சியும் சிவஞானப்பேறும் தந்து, சிறைவீடு செய்த தலமாதலின் முதலிலே அங்கிருந்து அனுபவத்தையும் குழைத்துத் தருகிறார் என்பர்.[16]

திருமுருகாற்றுப்படையில் 'திருச்சீரலைவாய்' என்ற பகுதியில் ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளும் உடைய முருகனின் திருவுருவம் கூறப்படுகிறது. இவனே சிவனின் மகனும் போர்க்கடவுளுமான சூரியக் கற்பனையிலெழுந்த கார்த்திகேயன்.[17] சேயோனைச் சிவனொடு தொடர்பு படுத்தி யதில் வெற்றியடைந்த நிலையில்தான், 'ஆல்கெழு கடவுள் புதல்வ' என்ற தொடர் தோன்றுகிறது. தாய்க்கடவுளின் வழிபாடு பரவியிருந்த நிலையில், அந்தப் பல தெய்வங்களையும் ஒன்றுபடுத்தி அந்தத்தாயின் மகனாக முருகனைக் காண்கின்ற

15. திருமுருகாற்றுப்படை, ஆறுமுகநாவலர் (புத்துரை).
16. தகவல்: ச. தண்டபாணி தேசிகர், கள ஆய்வு நாள்: 18-8-81.
17. க. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 135.

காட்சியையே 'மலைமகள் மகனே!'' 'கொற்றவை சிறுவ!', 'பழையோள் குழவி!' எனவரும் தொடர்களில் காண்கிறோம் என்பர், தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.[18] சங்ககாலத்தின் பிற்பகுதியில் முருகன் சிவனின் மகனான கந்தனொடு ஒன்று படுத்தப் படுகின்றான். திருமுருகாற்றுப்படையின் இறுதிப் பகுதியிலும் முருகன் ஆரியக் கடவுளான சுப்பிரமணியனோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகின்றான். அவன் ஆலமர்ந்த கடவுளின் மகன், வானோர் தானைத்தலைவன், அந்தணர் வெறுக்கை, மங்கையர் கணவன், மதவலி என்ற பெயரை உடையவன். அவனுடைய கொடி மயிலாகும். திராவிடக் கடவுளான முருகன் மலைநிலத்துத் தெய்வம்; கொற்றவையின் மகன்; சேவற் கொடியோன், மேற்கூறிய பகுதிகளில் அவன் உமையின் மகனும் மயிற்கொடியோனுமாகிய கார்த்திகேயனுடன் ஒன்றுபடுத்தப்படுகின்றான். தமிழ் மக்கள் முருகனை மலைத்தெய்வமாகக் கண்டார்கள். ஆரியர் உருத்திரனை மலைத்தெய்வமாகக் கண்டனர். தைத்திரிய ஆரண்யகத்தில் சுப்பிரமணியன் என்ற பெயர் காணப்படுகின்றது. எனினும் வேதசங்கிதை காலத்தில் அவனுடைய வழிபாடு வழக்கில் இருந்ததாகத் தெரியவில்லை. தைத்திரிய ஆரண்யகத்தில் அக்கினியும் வாயுவும் சுப்பிரமணியன் என்ற பெயர் கொண்ட இந்திரன் மெய்க்காப்பாளர் எனப்படுகின்றனர். இதிகாசங்களில் கார்த்திகேயன் அல்லது சுப்பிரமணியனுடைய பிறப்பைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அந்நூல்களில் அவன் சிவன் அல்லது அக்கினியின் மகன் என்று குறிக்கப்படுகின்றான், எனவே, வடநாட்டில் சுப்பிரமணிய வழிபாடுஉருத்திர வழிபாட்டிலிருந்து தோன்றி இருக்கலாம் எனத்தோன்றுகிறது. தமிழ் நாட்டில் சிவவழிபாடு பெருவழக்குப் பெற முருக வழிபாடு குறைவதாயிற்று. முருகனுடைய இடத்தை ஆரியக் கடவுளாகிய கந்தன் கொண்டனன். பத்துப்பாட்டு எழுந்த காலத்திலே முருகன் மக்களின் தெய்வமாக இருந்தனன். அவன் வழிபாடு பெருவழக்குற்றிருந்தது. அக்காலப் பகுதிக்குப் பின்னர் சிவன், திருமால் ஆகிய இருகடவுளருடைய வழிபாடுகளும் சிறப்புற்றன.[19]

18. தெ. பொ. மீனாட்சி சுந்தரன், பத்துப்பாட்டு ஆய்வு (புறம்), ப. 37.

19. சு. வித்தியானந்தன், மு. நூ., பக். 138—139.

**முதற்படைவீடு**

முருகப்பெருமானுக்கு ஆறுபடை வீடுகள் உண்டு என்பது இன்று வழங்கும் நம்பிக்கை. அக்கருத்திற்குப் பிறப்பிடமே திருமுருகாற்றுப்படையாகும். மேற்போக்காகப் பார்க்கும் போது திருமுருகாற்றுப்படையை ஆறு பகுதிகளாகக் கொள்ளுமாறு அவர் பாடியுள்ளார் என்பது போல் தோன்றும் அதனால் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவி நன்குடி, திருஏரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்ற ஆறுபடை வீடுகளில் முருகன் தங்கியிருப்பதாக நக்கீரர் பாடியுள்ளார் என்று கூறும் மரபும் ஏற்படலாயிற்று. நுணுகி நோக்கினால் இந்த ஆறிடங்களிலேயேன்றிக் காடு, கா, துருத்தி முதலியவற்றிலும் அவன் உறைபவன் என்பது புலப்படுதலால், ஆறுபடைவீடுகளில் மட்டுமே அவன் தங்குவான் என்று கூறும் மரபு, சிறப்புக் கருதி ஏற்பட்டதென்பது தெளிவாகும். ஆற்றுப் படுத்தல் என்ற பொருளில் ஆற்றுப்படை என்பது நூலுக்குப் பெயராயிற்றென்ற இலக்கணத்தை உரை இல்லாத காரணத்தால் அதனை ஆறுபடைவீடு என்று கொண்டு திருப்பரங்குன்றம் முதலாக ஆறு சிறப்பான இடங்களாக நக்கீரர் குறித்திருத்தலை மட்டும் வைத்துக்கொண்டு, அவற்றை ஆறுபடைவீடுகள் என்று அவர் கூறும் கூற்றுப் பொருந்தா தென்பதை எளிதில் உணரலாம் என்பர் மொ.அ. துரை அரங்கசாமி. 20

வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் படை வீட்டில் முதலாவது திருச்செந்தூரேயென்று காரணம் காட்டுவர். முருகப்பெருமான் திருச்செந்தூரில் முதலில் வந்து தங்கி, வீரவாகுத் தேவரைச் சூரனிடம் தூதனுப்பினர்; போரில் வென்றனர்; அதன் காரணமாகத் திருப்பரங்கிரியில் தெய்வ யானையார் திருமணம் நடந்தது. நக்கீரர் குகையிலடைபட்டுத் துதித்தபோது முருகன் வேலால் மலைக்குகையையும், கற்கிமுகி என்ற பேயையும் அழித்தனன். எனவே நக்கீரர் தமக்கருள் செய்த திருப்பரங்கிரியை முதலிற் கூறினர். ஆகவே முதலா வதாகத் தங்கிய இடம் திருச்செந்தூரே எனக்கூறுவர். 21

முருகப்பெருமான் சூரசம்காரம் செய்தற் பொருட்டுப் படை வீடு (பாசறை) அமைத்துத் தங்கிய இடம் திருச்செந்தூர்.

20. மொ. அ. துரை அரங்கசாமி அன்புநெறியே தமிழர் நெறி, ப. 166.
21. கையெழுத்துப்படி: தி. செ. முருகதாச சுவாமிகள், திருவாமாத்தூர்.

ஆகவே படைவீடு என்ற பெயர் திருச்செந்தூருக்கு மட்டுமே பொருந்தும் என்பர் க. வெள்ளைவாரணர்.22

செலவுநயக்கும் முதுவாயிரவலனுக்கு வழிகூறும் வகையான், முருகன் திருப்பரங்குன்றில் இருப்பான்; அஃதல்லாமலும் திருச்சீரலைவாயில் இருப்பான்; மலைகள் தோறும் இருப்பான் என்றனர். இதனைப் பின்னோர் ஆறுபடைவீடு, ஆறுபதிகள் என்றெல்லாம் மொழியத் தொடங்கினர். முருகனுக்குத் தாயார் கார்த்திகை மாதர் அறுவர்; தோற்றம் ஆறு தீப்பொறிகளாக; வளர்ந்த இடம் ஆறு தாமரைமலர்களில்; ஆறுமுகங்கள்; அவனுக்குரிய மந்திரம் ஆறெழுத்து; அவனுக்குரிய யந்திரம் அறுகோணம் உடையது என்றெல்லாம் ஆறாக அமைவதில் ஒரியைபுண்மையின் தலங்களையும் ஆறாகக் கொண்டனரோ என்றெண்ணத் தோன்றுகின்றதேயன்றி இந்த ஆறு இடங்கள்தான் முருகன் எழுந்தருளியுள்ள இடங்கள் என்று முடிவு கட்டியதாகாது. முடிவு செய்யின் எங்கும் நிறைந்துள்ள கடவுளுக்கு ஓரிடங் கற்பித்தலாய்க் குற்றமாய் முடியும். ஆகவே ஆறு படைவீடுகள் என்பன நிலையாகவும், அவ்வப்போதும் படைத்துக்கொள்ளப் பெறும் கோயில்களைக் குறிப்பன எனலாம். நக்கீரர் திருப்பரங்குன்றம் முதலாக நிலையான ஐந்து இடங்களையும்; 'குன்றுதொறாடல்' என்று நிலையாகவும், அவ்வப்போதும் உள்ள இடங்களையும்; யாறுங்குளனும் வேறு பல் வைப்பும், முதலாக அவ்வப்போது படைக்கப் பெறும் இடங்களையும் கூறுவாராயினர். ஆகவே முருகாற்றுப்படை முருகன் எழுந்தருளியுள்ள இடங்களைச் சுட்டிச் சொன்ன ஒரு பாடலே; ஆறுபடைவீடுகளைப் பற்றிச் சொல்ல வந்த பாடலாகாது. படைவீடு என்றால் போருக்குச் செல்வார் படைகளுடன் தங்குவதற்காக அமைத்துக் கொள்ளும் படைவீடு. தொன்று தொட்டதன்றிப் புதிதாகப் படைக்கப் பெற்ற வீடு என்றெல்லாம் பொருள்படும்.

போருக்குச் செல்வார் தங்குவதற்குப் படைத்த வீடும், சென்று மீண்டார் தங்குவதற்குப் படைத்த இடமும் படைவீடாகலாம். இம்முறையில் இப்பாட்டில் வந்துள்ள திருச்சீரலைவாய் ஒன்றே போர்மேற் செல்வார் தங்கிய படைவீடு. பரங்குன்று வென்று மீண்டார்க்காகச் சமைக்கப்பெற்ற வீடு. ஏனைய தலங்கள் முருகனுக்காகப் படைக்கப்பட்ட வீடுகளே.

22. தகவல்: க. வெள்ளைவாரணனார், களஆய்வு நாள்: 19-7-80.

அன்றியும் துறவி தங்கிய இடம் மடமாதல் போலவும், இராமன் தங்கிய இடம் அயோத்தியாதல் போலவும், பெரிய வீரனும் சேனைத் தலைவனுமான முருகன் தங்கிய இடங்கள் யாவும் படைவீடுகளாயின எனவும் கூறலாம். ஆகவே திருமுருகாற்றுப்படை அமைப்புமுறை ஆறுபடைவீடு என்றதற்குத் துணையாகாது.

பிற சங்க இலக்கியங்களிலும் பரங்குன்று, திருச்சீரலைவாய், அறுகோட்டியானைப் பொதினி, சோலையொடு தொடர் மொழி மாலிருங்குன்றம் முதலான இடங்கள் படைவீடு என்ற பெயரான் வழங்கப்பெறவில்லை.

அருணகிரிநாதரும், 'அறுபதிகளில் அமர்வோனே' 'அறுதிருப்பதிதனில்' என்பதனால் அறுபதி என வழங்குகின்றாரேயன்றிப் படைவீடு என வழங்கவில்லை. கந்த புராண ஆசிரியரும் ஊர்ப்பெயரளவிலேயே அமைகின்றார். குமரகுருபரரும் 'ஆறு திருப்பதி கண்டு' என்கின்றார். ஆகவே படைவீடு என்ற பெயர் எக்காலத்துத் தோன்றியது என அறியக்கூடவில்லையாயினும் பெரும்பான்மையாக மக்களிடையே வழங்கியதாயிற்று.[23]

சிலப்பதிகாரத்திலேயே முருகன் திருவுருவை வைத்து வழிபடுவதற்கு மாறாக வேலை வைத்து வழிபடும் வழக்கம் உண்மையை, கனாத்திறம் உரைத்த காதையில் மாலதி என்னும் பார்ப்பன் மரித்த குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டு உயிர்ப்பிச்சை கேட்டு ஒவ்வொரு கோயிலாகச் சென்ற போது, 'வேற்கோட்டம்' சென்றாள் என்று கூறப்படுவதால் அறியலாம். வேலிற்கெனத் தனித்துக் கோட்டம் அமைந்திருந்தமையினைச் சிலப்பதிகாரம் கட்டுதலால், 'வேல் வழிபாடு' தமிழகத்தில் நிலவி வந்தமையினை உணரலாம். முருகக் கடவுளின் கோயிலில் பழங்காலத்தில் முருகன் உருவம் வைக்கப் படாமல் முருகனைக் குறிக்கும் அடையாளமாக வேலாயுதம் வைத்து வழிபடப்பட்டது என்றும்,[24] பொதுவாகப் படைவீடு என்பதனைப் பகையைப் போக்க முருகன் படையோடு தங்கியிருக்கும் இடமென நாம் கூறினாலும் உண்மையில் 'படைவீடு' என்பது வேல் இருக்கும் இடம் என்பதைக் குறிக்க வந்ததாகவே தோன்றுகிறது[25] என்றும் அறிஞர்கள் கருதுவர். இக்கருத்துக்கள்

---

23. ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., பக். 109—110
24. மயிலை. சீனி. வேங்கடசாமி, நுண்கலைகள், ப. 20
25. ப. அருணாசலம், 'முருகன் வழிபாடு, வேலும் மயிலும்', தமிழ் ஒளி, இதழ் 11, 1973—74, ப. 3.

முருக வழிபாட்டின் தொன்மையைக் காட்டுவதுடன், முருக வணக்கத்திற்குரிய உருவ வழிபாட்டில் வேலே தொன்மையும் முதன்மையும் பெறுதலையும், அதன் இருப்பிடமே 'படை வீடாய்' அமைந்ததையும் காட்டுகிறது. ஆகவே இன்று வழக்கில் முதற்படைவீடு என்று வழங்கும் பொருள் தவறானது என்பது இதன் மூலம் அறியமுடிகிறது.

''முகம் என்னுஞ் சொல்லிற்கு இடம் என்னும் பொருளுண் மையால், முருகனின் ஆறுபடைவீடுகளும் ஆறுமுகம் என்னப் பட்டன. அதனால் முருகனுக்கு ஆறுமுகம் (அடையடுத்த இடவாகு பெயர்), ஆறுமுகன் என்னும் பெயர்கள் தோன்றின. வடவர் இதையறியாது ஆறுமுகம் என்பதை ஷண்முக என்று மொழி பெயர்த்து, ஆரல் (கார்த்திகை) மாதர் அறுவர் பெற்ற பிள்ளையென்று பகுத்தறிவிற்குப் பொருந்தாத ஒரு கதையைக் கட்டி, ஆரியக்கருவே தோன்றுவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகட்குமுன், குமரிநாட்டில் முதன்முதலாகத் தோன்றிய குறிஞ்சிநிலத் தனித்தமிழ்த் தெய்வமாகிய முருகனை ஆரியத் தெய்வமாகக் காட்டிக் கார்த்திகேய (ஆரலன்), சரவணபவ (-bhava) (நாணற்காடன்), சுப்ரமண்ய (Subrahmanya) (பிராமணர்க்கு நல்லான்) முதலிய பெயர்களைத் தோற்றி விட்டனர். தமிழரும் அக்கதையை இன்றும் நம்பிக் கொண்டிருக் கின்றனர் என்பர் ஞா. தேவநேயப் பாவாணர். [26]

### பக்திக்கால இலக்கியங்கள்

பக்திக்கால இலக்கியங்கள் என்ற இப்பகுதியில் தேவார மூவரின் தேவாரப் பாடல்களில் இடம்பெறும் திருப்பரங்குன்றம் பற்றிய செய்திகள் மட்டும் விளக்கப்படுகின்றன.

### மூவர் தேவாரம்

தேவார காலத்தில் திருப்பரங்குன்றம் பாண்டிய நாட்டுப் பாடல் பெற்ற பதினான்கு சைவத் தலங்களுள் ஒன்றாக மாறியது. [27] இக்காலகட்டத்தில் சிவனே இங்கு முழுமுதற்

26. ஞா. தேவநேயப் பாவாணர், தமிழிலக்கிய வரலாறு ப. 66.
27. ''பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி
யருங்குன்றம் பேராந்தை யானை—இருங்குன்றம்
என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டு மோ பிறவித் தீங்கு'' (பெருந்தொகை)

தெய்வமாகப் போற்றப்பட்டான். இத்தலத்தை தேவார மூவரும் பாடியுள்ளனர். இதில் திருநாவுக்கரசர் பரங்குன்றைப் பற்றித் தனிப் பதிகமாகப் பாடியது கிடைக்கவில்லையென் றாலும், அவர் வைப்புத் தலமாகப் பாடிய பாடல் ஒன்று கிடைத் துள்ளது. திருவிடை மருதூர் திருத்தாண்டகத்தில், நாவுக்கரசர் சிவபெருமானை,

"பண்குணத்தார் பாடலோடாட லோவாப்
பரங்குன்றம் மேய பரமர் போலும்"

என்று பாடிச் சிறப்பிக்கிறார். 28 திருஞானசம்பந்தர் மதுரையை வழிபட்டுப் பிற தலங்களையும் வழிபடத் திருவுளங் கொண்டு நெடுமாறனும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் உடன்போக, திருப்பரங்குன்றை அடைந்து ஆறணிந்தார் அடிகளைப் போற்றி, "நீடலர் சோதி" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார். இப்பதிகத்தில் பரங்குன்றின் இயற்கை வருணனையும், பரமனே இங்குக் கன்றாய் அமைந்துள்ள சிறப்பையும் பாடி, சிவபெருமானின் உமையொரு பாகனான கோலத்தை ஐந்து பாடல்களிலும், ஆடல்வல்லான் கோலத்தை இரு பாடல் களிலும், ஆலமர் கடவுளான கோலத்தை ஒரு பாடலிலும் பாடியுள்ளார். 29 கி.பி. 570 முதல் 655வரையுள்ள காலமே தேவார முதல்வர்களாகிய அப்பர், சம்பந்தர் காலமென்பர். 30

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாண்டிநாட்டிலுள்ள திருவால வாய் முதலிய தலங்களை வழிபட்ட பின்னர், சேரமான் பெருமாள் நாயனாருடனும் சோழ அரசனுடனும் திருப்பூவணம், திருவாப்பனூர், திருவேடகம் முதலிய தலங்களை இறைஞ்சித் திருப்பரங்குன்றத்தை அடைந்து 'கோத்திட்டையும் கோவலும்' என்றெடுத்துப் பதிகம் பாடினார். இதில் சிவபெருமானின் உமையொரு பாகமான கோலமும், ஆடல்வல்லான் கோலமும் சிறப்புடன் பாடப்பட்டுள்ளன. 31 இதில் 'கோத்திட்டை'

28. திருநரவுக்கரசு சுவாமிகள், ஆறாம் திருமுறை, ப. 125.
29. திருஞானசம்பந்தர் சுவாமிகள், முதல் திருமுறை, பக். 431-433
30. கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு (இரண்டாம் பாகம்), ப 279.
31. சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஏழாம், திருமுறை, பக். 13—23.

என்பது இன்று வழங்கும் கொத்தட்டை என்னும் ஊரையும், கோவல் என்பது கோவலூரரையும் குறிக்கும் என்பர். 32 இப் பதிகம் முடியுடை வேந்தர் மூவரின் முன்னேயும் மொழியப் பட்ட சிறப்புடையது. இச்செய்தியைப் பெரியபுராணத்தில் கழறிற்றறிவார் நாயனார் புராணம் தெளிவாக மூன்று பாடல்களில் விளக்குகிறது. 33 இறைவன் பணிசெய்தலையும், இறைவனுக்கும், உயிர்களுக்கும் உள்ள பெருமை, சிறுமை களையும், இறைவனைப் பழிப்பதுபோலப் புகழ்வதன்மூலம் இப்பதிகம் விளக்குகிறது. இதில் 'பரங்குன்றமேய பரமன்'' என்று சிவபெருமானைச் சுந்தரர் குறிப்பிடுகிறார்; முருகனை யாண்டும் குறிப்பிடவில்லை.

### இடைக்காலச் சமய இலக்கியங்கள்

இப்பகுதியில் திருக்கோவையார், கல்லாடம், பெரிய புராணம், கந்தபுராணம், திருவிளையாடற்புராணம், அருண கிரிநாதர் பாடல்கள், கந்தபுராணச் சுருக்கம் ஆகியவற்றில் கூறப்படும் திருப்பரங்குன்றம் பற்றிய செய்திகள் விளக்கப்படு கின்றன. இவ்விலக்கியங்கள் தேவார காலத்திற்குப் பிற்பட்டன வாய், பிற்காலப் புராணங்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவை களின் காலத்திற்கு முற்பட்டனவாய் அமைந்துள்ளமையாலும், சைவசமயம் என்ற அடிப்படையில் அமைந்துள்ளமையாலும், இவை இடைக்காலச் சமய இலக்கியங்கள் என்ற பிரிவின்கீழ் விளக்கப்படுகின்றன.

### திருக்கோவையார்

பன்னிரு திருமுறையில் எட்டாந் திருமுறையாக அமைந் துள்ளது மாணிக்கவாசகரின் திருக்கோவையார். இவருடைய காலம் பற்றி ஆய்வறிஞர்களிடையே இன்னும் முடிந்த முடிவான கருத்து இல்லை. ஆகவே பன்னிரு திருமுறைப் பகுப்பை வைத்து இங்கு இக்காலப்பகுதியில் விளக்கப்படுகிறது. திருக் கோவையாரில் மாணிக்கவாசகர் இருபத்தொரு தலங்களின் பெயர்களைக் குறிப்பிடுவர். அவற்றுள் திருப்பரங்குன்றத்தைப் பற்றி ஐந்து பாடல்களில் பாடுகிறார். இதில் பரங்குன்றம் சோலைகள் மிக்கதாய், அருவிகள் பாய்வதாய், நெல்லும், நீரும்

32. தகவல்: ச. தண்டபாணி தேசிகர், கள ஆய்வு நாள்: 18.12.82
33. திருத்தொண்டர் புராணம், பக். 602-603

மிக்கதாய் விளங்குகிறது என்றும் பறவையினங்கள் வந்துதங்கும் அழகுடையதாய் விளங்குகிறது என்றும் கூறுவர். இப்பாடல்கள் பரங்குன்றில் இயற்கை வளத்தையும், இங்கு இறைவன் (சிவன்) குடிகொண்டுள்ள சிறப்பையும் இப்பாடல்கள் உணர்த்து கின்றன. இதில் நூற்றி எழுபத்தெட்டாம் பாடல் முருகவேள் இங்குக் கோயில் கொண்டுள்ள தன்மையைக் கூறுகிறது. தேவார கால இலக்கியத்திற்குப் பின்னர் முருகன் பற்றிய குறிப்பு இப்பாடலில்தான் கிடைக்கிறது.

### பெரியபுராணம்

திருத்தொண்டர் புராணத்தில் சேரமான் பெருமாள் நாய னாரான கழறிற்றறிவாரின் புராணத்தைப் பாடவந்த சேக் கிழார், கழறிற்றறிவார், சுந்தரமூர்த்தி சுவாமிகளுடனும், சோழ,பாண்டிய அரசர்களுடனும் இங்கு வந்து,சிவபெருமானை வழிபட்ட செய்தியைக் குறிப்பிடுகிறார். இதில் 'பரமர் திருப் பரங்குன்றம்' என்றும், 'சங்கரனார் திருப்பரங்குன்றம்' என்றும் இக்கோயிலில் சிவபெருமானுக்கு முதலிடம் இருந்ததைச் சுட்டு கிறார். இவர் காலத்தில் முருகவழிபாடு மறுமலர்ச்சி பெறத் தொடங்கியிருந்தாலும், இவர் திருத்தொண்டத் தொகையை யும், திருத்தொண்டர் திருவந்தாதியையும் பின்பற்றிப் பாடி யுள்ளதால் இவர்காலச் சமயநிலையை நாம் உறுதியாக எடுத் துக்கொள்ள முடியாது. இவர் காலத்துக்குப் பின்னர் முருக வழி பாடு சிறப்புப்பெறத் தொடங்கிய நிலையைப் பின்னரும் இலக்கி யங்கள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

### கல்லாடம்

கல்லாடர் என்ற பெயரில் சங்ககாலப் புலவர் ஒருவரும், சமயகாலப் புலவர் ஒருவரும், இலக்கண உரையாசிரியர் ஒருவரு மாக மூவர் உள்ளனர். இதில் சமயகாலப் புலவரான கல்லா டர் இயற்றிய நூறு பாடல்களே கல்லாடம் எனப்படுகிறது. இவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பிற்பட்டவராயும், பெரும் பற்றப்புலியூர் நம்பிக்கு முற்பட்டவராயும் கருதப்படுவர். இவர் தமது நூலில் திருப்பரங்குன்றம் மதுரையை ஒட்டியுள்ளமை யான், மதுரை குன்றத்தால் அணி செய்யப்படுகின்றது என்று கூறுவர். இருபத்தைந்துக்கும் அதிகமான பாடல்களில் பரங்குன் றம் பற்றிய குறிப்புகள் வந்துள்ளன. முருகன் சேவற்கொடியை யும், மயிலூர்தியையும் உடையவன் என்றும், வள்ளி தெய்வயா

'ணையோடு கூடியிருப்பவன் என்றும் ஆசிரியர் பல பாடல்களில் குறிப்பிடுகிறார். 34

பரங்குன்றில் முருகனை இருதேவியர் உடனான தெய்வத் திருக்கோலமாகக் காணும் மரபு இதுவரை வந்துள்ள இலக்கியங்களில் காணக் கிடைக்கவில்லை. கல்லாடத்தில் தான் இருதேவியர் உடனான தெய்வத் திருக்கோலமாகப் புனையப் பட்டுள்ளது. இக்கோயிலில் இன்றும் இதுபோன்ற தெய்வத் திருமேனிகள் இல்லை. கோயிலின் பின்புறத்தே (தென்புறத்தே) அமைந்துள்ள தென்பரங்குன்றக் குடைவரைக் கோயிலில் இரு தேவியர் உடனான முருகனின் நின்ற திருக்கோலம் தெய்வத் திருமேனியாகச் செதுக்கப்பட்டுள்ளது. ஆகவே கல்லாடத்தில் குறிப்பிடப்படும் முருகன் தென்பரங்குன்றத்தில் இடம்பெற்றுள்ள முருகனே என்று எண்ண வேண்டியுள்ளது. இது கல்லாடரின் காலத்தைக் கணிப்பதற்குத் துணைசெய்யும் என்று கருதுவர். 35

**கந்தபுராணம்**

பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் எழுந்ததாகக் கருதப்படும் கந்தபுராணம், ஒருவகையில் பல்லவர்காலப் பக்தியியக்கத்தின் விளைவு எனலாம். சைவ தோத்திரப் பாடல்களில் காணப்படும் புராணக்கதைகள் பல இந்நூலில் இடம்பெறுகின்றன. இந்நூல் கம்பராமாயணத்திற்குப் போட்டியாக எழுந்தது என ஒரு கதையுண்டு. கதையமைப்பு, கதைப்போக்கு என்பவற்றில் இரண்டு நூல்களுக்கும் ஓரளவு ஒற்றுமையுண்டு. கந்த புராணம் ஒருவகையிற் சைவ சித்தாந்தத்தின் விளக்கமாகும். கதையிடையில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் நிறையக் காணப்படுகின்றன. ஈழ நாட்டிலுள்ள முருகன் கோயில்களுள் கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பங்கு கந்தசுவாமி கோயில் என்று பெயர் தாங்கியுள்ளன. கந்தசுவாமி என்ற பெயர் பிரபலம் பெறுவதற்குக் கந்தபுராணம் உதவியிருக்க வேண்டும். 36

தொல்காப்பியர் கூறுகின்ற சேயோன், முருகனாக மட்டும் இல்லாமல் தாய்க் கடவுளின் வழிபாடாக வளர்ந்த பல கதைகளையெல்லாம் ஒன்றுசேர்த்து, அத்தாய்க் கடவுளின் பிள்ளை

34. கல்லாடம் (கழக வெளியீடு), பக். 24-704.
35. செ. போசு, திருப்பரங்குன்றம், ப. 42.
36. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 175.

யாக மட்டும் வளர்ந்ததன்றி, அத் தாய்க் கடவுள் சிவனின் மனைவியான போது, சிவனின் பிள்ளையாகவும், பிற குழந்தைத் தெய்வங்களின் வேற்றுப் பெயராகவும் வளர்ந்ததைக் காண்கிறோம். இந்த வளர்ச்சியின் முதிர்ச்சியே கந்தபுராணக் கதையாகும். கச்சியப்பர் கந்தபுராணம் எழுதிய வண்ணம் அதனுடைய எதிரொலிகள் கந்த புராணத்தில் வளர்ந்திருத்தல் வேண்டும் என்பர்.[37] சங்க காலத்தில் ஓங்கிப் பரந்திருந்த முருக வழிபாடு நாயன்மார் காலத்தில் சற்றுக் குறையத் தொடங்கியது. களப்பிரர் ஆட்சிக்குப் பின்னர்ச் சைவ சமயம் புத்துயிர் பெற்று வளர்ந்தது. நாயன்மார் காலத்தில் சிவவழிபாடே சிறப்பிடம் பெற்றிருந்தது. சிவனைத் தலைவனாகக் கொண்ட சைவக் கடவுளர் குடும்பத்தில் சிவனுக்கு மாறாக நிலையில் முருகனுக்கு முதன்மை கொடுத்து முருக வழிபாட்டை மீண்டும் உயர்த்திய பெருமை கச்சியப்பருக்கே உரியது. திருமுறைகள் சிவனுக்கும், ஆழ்வார்களின் பாசுரங்கள் திருமாலுக்கும் முதன்மை தருதல் போல் அருணகிரிநாதரின் திருப்புகழ் முருகனுக்கு முதன்மையளித்தல் நாமறிந்த செய்தி. அருணகிரிநாதரின் நெறியினைப் பின்பற்றி முருகனடியார் பலர் (குமரகுருபரர், தண்டபாணி சுவாமிகள், இராமலிங்க அடிகள், பாம்பனடிகள் போன்றோர்) முருகனை முழுமுதற் பொருளாகக் கொண்டு தமிழ்ப் பாக்களால் போற்றியுள்ளனர். திருமுருகாற்றுப்படை, பரிபாடற் காலங்களில் முருகனுக்கிருந்த முதன்மையினை மீண்டும் சைவ நெறிக்கு மாறின்றி நிறுவிக் காட்டியதால் திருமுறைகள் போன்று முருகனுக்கெனத் தனித்த நூல்கள் பிற்காலத்தில் பெருகக் கச்சியப்பரின் கந்தபுராணம் ஊற்றமாய்த் திகழ்தலைக் காண்கிறோம்.[38] கந்தபுராணம் உற்பத்திக்காண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்த காண்டம், தேவகாண்டம், தட்சகாண்டம் என்ற ஆறு காண்டங்களையும், நூற்றி முப்பத்தைந்து படலங்களையும், பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தைந்து செய்யுட்களையும் உடையது. வடமொழியில் உள்ள சிவசங்கர சங்கிதையின் ஒரு பகுதியில் கூறப்படும் ஸ்கந்தனின் வரலாற்றை அது தமிழில் தருகிறது என்பர். இன்றைய ஆய்வாளர்கள் முருகன் வள்ளி கதை தமிழகத்ததுவே என்றும், அதில் வடமொழிப் புராணக் கலப்பும்

37. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், மு. நூ., ப. 34.
38. ந. இராமலிங்கம், கந்தபுராண ஆராய்ச்சி (அறிஞர் பட்ட ஆய்வேடு), பக். 73, 288

உண்டென்றும் கூறுவர். ஆறுமுகக் கடவுளின் பிறப்பும் சிறப்பும் சூரபன்மாவுடன் போரிட்டு வென்றமையும் வள்ளி தெய்வ யானை திருமணங்களும் இந்நூலில் மிக விரிவாகப் பேசப்படு கின்றன. இது சோழர் காலம் ஏற்றமுற்றிருந்த போது சைவ சமயந்தழைத் தோங்கிய காலத்தில் அச்சமயவுண்மைகள் பல துலங்குமாறு எழுதப்பட்டது என்பர்.39

கந்தபுராணத்துள் சுரம்புகுபடலம், திருப்பரங்குன்றுசேர் படலம், தெய்வயானையம்மை திருமணப்படலம் ஆகிய மூன்று படலங்கள் திருப்பரங்குன்றத்தைச் சுட்டுகின்றன. சுரம்புகு படலத்தில் முருகக் கடவுள் கொடுமையான பாலைவனத்தில் சென்று கொண்டிருக்கையில், முருகனின் சிறப்பால் பாலைவனம் வெம்மை நீங்கிய சோலையாய் மாறியது. அப்பொழுது அங்குத் (திருப்பரங்குன்றிலே) தவம் செய்து கொண்டிருந்த பராசர முனிவரின் குமாரர்களாகிய தத்தர், அநந்தர், நந்தி, சதுர்முகர், சக்கிரபாணி, மாலி என்னும் அறுவரும் ஞான நோக்கினால் அறிந்து குமரக் கடவுளை எதிர்கொண்டு வணங்கித் துதித்து, ''தேவதேவரே! அடியவர்களாகிய எங்களுக்குத் திருவருள் செய்க'' என்று வேண்டி நின்றார்கள். அது கேட்டு முருகப் பெருமான் பராசர முனிவருடைய புதல்வர்களை நோக்கி, ''நீங்கள் நம்மோடு வாருங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளி னார். அவர்கள் அறுவரும், ''எம்பெருமானே! உம்மைச் சரண டைந்தோம்'' என்று வணங்கிப் பின்செல்ல முருகப் பெருமான் சுரத்தினைக் கடந்து சென்றார். அப்பொழுது தேவேந்திரன் பராசர முனிவரின் கோபத்தால், இந்த முனி குமாரர்கள் பெற்ற சாபத்தையும், சாப விமோசனத்தையும் கூறி நின்றான். இவ்வாறு திருப்பரங்குன்றம் கோயில் தீர்த்தம் பராசர முனி குமாரர்களுக்கு சாப விமோசனம் அளித்த சிறப்பை இப்படலம் சுட்டுகிறது. திருப்பரங்குன்று சேர் படலத்தில், முருகப் பெரு மான் சிவபூசை முடித்த பின்பு தேவர்கள், முனிவர்கள் முதலிய அனைவரும் புடைசூழத் திருச்செந்தூரை விட்டுப் புறப் பட்டார். திருமால் முதலான தேவர்கள் அவரவர்கள் வாகனங் களில் புறப்பட்டனர். அனைவரும் மதுரைக்கு மேல்பாலுள்ள திருப்பரங்குன்றத்தை அடைந்தனர். அங்கு தவஞ் செய்து கொண்டிருந்த பராசர முனிவரின் குமாரர்கள் ஆறு பேரும்

39. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, பக். 260.
40. கந்தபுராணம், சுரம்புகு படலம், (19-40)

முருகனை வணங்கி இந்த இடம் மிகச் சிறந்தது, 'தேவரீர் இங்கேயே எழுந்தருள வேண்டும், என வேண்டிக் கொண்டனர். முருகன் அவர்கள் வேண்டுகோட்கிணங்கி நகரமும், வாவியும், கோயிலும் அமைக்கும் வண்ணம் தேவதச்சனுக்கு ஆணை தந்தனர். தேவதச்சன் அவ்வாறே அமைத்தான். முருகக்கடவுள் தேவர்கள் அனைவரும் மருங்கில்வர, சிற்சபையில் அமைக்கப் பெற்ற திவ்விய சிம்மாசனத்தில் எழுந்தருளியிருந்தார் என்று முருகன் திருப்பரங்குன்றம் சேர்ந்ததையும் அங்குத் தேவதச்ச னால் முருகன் ஆணைப்படி கோயில் அமைக்கப்பட்ட வரலாற் றையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். இங்குப் பராபர முனிவரின் குமாரர்களுக்கு முன்னொரு காலத்துச் சிவபெருமான் அளித்த வாக்கின்படி முருகன் ஞானோபதேசம் செய்தருளினர் என்று குறிப்பிடுகிறார்.[41] இதனால் இத்தலத்தில் முருகனுக்கு சகத்தி ரான்ம பரிபாலன மூர்த்தி என்ற பெயர் வழங்குவதாகச் சுப்பிர மணிய பராக்கிரமம் கூறுகிறது. தெய்வயானை திருமணப் படலத்தில், இந்திரன் தன் நன்றியைக் காணிக்கையாக்கு முகமாகத் தன் மகள் தெய்வயானையை முருகனுக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணித் தன் மனைவியையும், மகளையும் வர வழைக்கிறான். ஆறுமுகக் கடவுள் திருமணத்திற்கு இணங்கு கிறார்; திருமண ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. இங்கு முசுகுந்தச் சக்கரவர்த்தியின் வரலாற்றை ஆசிரியர் குறிப்பிடு கிறார். பின்னர் முசுகுந்தச் சக்கரவர்த்தி முருகனின் திருமணச் செய்தி கேட்டு மகிழ்ந்து, திருமணத்திற்குப் புறப்பட்டு வருகி றான். தெய்வயானையை மணவழகு படுத்துகிறார்கள். முருகக் கடவுள் திருமணச் சாலைக்கு எழுந்தருளுகிறார். உமாதேவி யோடு சிவபெருமான் திருமணத்திற்கு எழுந்தருளுகிறார். செந்தாமரை மலரில் அமர்ந்துள்ள நான்முகன் மங்கல நாணை முருகன் திருக்கரத்தில் கொடுக்க, முருகன் அதை வாங்கித் தெய்வயானையம்மையின் அழகிய கண்டத்திலணிந்து, திருமுடி யிலொரு நல்ல மலர் மாலையைச் சூட்டி திருமணம் முடித்தான் என்று முருகன் தெய்வயானை திருமண நிகழ்ச்சிகள் சுவைபடச் சொல்லப்பட்டுள்ளன.[42] கந்தபுராணத்தில் முருகனை ஆசிரியர் 'பரன்' என்று பலவிடங்களில் குறிப்பிடுகிறார். ஆறுமுகப் பரன், பரஞ்சுடர், பரஞ்சுடர் உருவமாம் விமலன், பரஞ்சுடர்

41. கந்தபுராணம், திருப்பரங்குன்று சேர் படலம், 22-34
42. கந்தபுராணம், தெய்வயானையம்மை திருமணப் படலம், 1-247

உருவாய் நின்றான், மேற்படு பண்ணவன், பரத்தின் மேதகு பண்ணவன், பரம்பொருள் நாயகம், பரமாவோன்[43] பண்ணவன் என்று கூறப்பட்டுள்ளது. இஃது இக்கோயிலுக்குப் பரன்+குன்றம்=பரங்குன்றம் என்ற முறையில் பெயர் அமைந்துள்ளது என்று கூற இடமளிக்கிறது.

**திருவிளையாடற் புராணங்கள்**

செல்லி நகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி இயற்றிய ஒன்றும், பரஞ்சோதி முனிவர் இயற்றிய ஒன்றும், ஆக இரண்டு திருவிளையாடற் புராணங்கள் உள்ளன. பெரும் பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவிளையாடற் புராணம், 'பழைய திருவிளையாடல்' 'வேம்பத்தூரர் திருவிளையாடற் புராணம்', 'திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்' என்று பல பெயர்களில் குறிப்பிடப்படுகிறது. உத்தரமகா புராணமென்னும் வடமொழி நூலின் பகுதியான 'சாரசமுச்சயம்' என்பதிலிருந்து மொழி பெயர்த்து எழுதப்பட்டது என்பர். இந்நூலுள் ஆயிரத்து எழுநூற்று ஐம்பத்து மூன்று செய்யுட்கள் உள்ளன. பரஞ்சோதி முனிவரியற்றிய திருவிளையாடற் புராணத்தில் காணப் பெறாத அரிய செய்திகள் பல இத்திருவிளையாடற் புராணத்தில் காணப்படுகின்றன.

மலயத்துவசன் மலைக்கொடி மன்னனென்றும் கூறப்படுகிறான். பங்குனி உத்திரத்தில் தடாதகைப் பிராட்டியாருக்குத் திருமணம் நிகழ்ந்தது. முருகக்கடவுள் பக்கத்திலிருந்து திருமணத்தைச் செய்வித்தனர். திருநந்தி தேவரே குண்டோதரராக வந்தனர். சிவபெருமானது கட்டளைப்படி குண்டோதரனார் பல குளங்களை உண்டாக்கினார். அக்குளங்களுள் காவணமுள்ள வாவியைத் தன்பாற் பெற்ற ஊர் காவண நல்லூரென்று கூறப்படும் ஒரு வாவிக் கரையில், சடங்குக் கந்தர் எழுந்தருளியிருக்கின்றனர். அவர் திருப்பரங்குன்றத்துக் கோயில் கொண்டெழுந்தருளிய ஸ்ரீ கல்யாண சுப்பிரமணியக் கடவுளேயென்று சொல்லுகின்றனர்.

உக்கிரகுலத்துப் பிறந்த பாண்டியன் ஒருவன் இந்திரன் பூட்டிய ஆரத்தைத் திருப்பரங்குன்றத்தில் வைத்தனன். திருப்பரங்குன்றம் முருகக்கடவுள் முதலியோராற் பூசிக்கப்பெற்றது. நக்கீரர் பிரம்மராக்கதத்தால், அங்குள்ள குகையில் அடைக்கப்

43. ந. இராமலிங்கம், கந்தபுராண ஆராய்ச்சி (அறிஞர் பட்ட ஆய்வேடு), பக் 37-38.

பட்டுத் திருமுகாற்றுப்படையைப் பாட, அதைக் கேட்ட முருகக் கடவுள், அவரை விடுவித்து, 'நம்மைக் கிழவனென்றனையே' என்ன நக்கீரர், "குன்றமெறிந்தாம் என்னும் வெண்பாவால் துதிப்ப, அதிலுள்ள என்றுமிளையாய் என்பதைக் கேட்டு மகிழ்ந்து 'திருமுகாற்றுப்படையைப் படிப்பவர்கள் வேண்டிய வரத்தைக் கொடுப்போம். நீ மதுரைக்குச் செல்வாயாக' என்றருளிச் செய்தனர்.'[44] இச்செய்திகள் திருப்பரங்குன்றம் கோயில் தொடர்பாகத் திருவாலவாயுடையார் திருவிளை யாடற் புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இச்செய்தி களை வைத்து இங்குள்ள முருகனுக்குச் 'சடங்குக்கந்தர்'. 'சடங்கு மைந்தன்', 'கல்யாண சுப்பிரமணியர்' போன்ற பெயர் களைச் சுப்பிரமணிய பராக்கிரமம் பின்னர் வகைப்படுத்திக் கூறுகிறது.

பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற்புராணம் ஸ்ரீ ஹாலாச்ய மகாத்மியம் என்னும் வடமொழி நூலைத் தழுவியது என்பர். இது மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவால வாய்க் காண்டம் என்ற மூன்று காண்டங்களையும் கொண்டது. இதில் பாண்டியனால் அமைக்கப்பட்ட கூடல்மாநகரம் கிழக்கே திருப்பூவனத்தையும், மேற்கே திருப்பரங்குன்றத்தையும் கொண் டிருந்தது என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.[45]

### அருணகிரிநாதர் பாடல்கள்

கந்தபுராணத்தின் காலத்தைப் பற்றிக் கருத்து வேறுபாடு காணப்படுகிற போதிலும் அருணகிரிநாதர், முகமதியர் ஆட்சி தமிழ் நாட்டில் முடிவடைந்து விசயநகர ஆட்சி ஏற்பட்டபோது வாழ்ந்தவர் என்பதில் கருத்துவேறுபாடில்லை. அருணாகிரிநாதர் முருகனைப் பற்றிப் பத்திமைப் பாடல்கள் பல பாடியுள்ளார். அக்காலச் சூழ்நிலையில் தமிழ்ச் சைவர் முருகப்பெருமானின் வீரச்செயல்களை நினைவு கூர்ந்தவர் எனலாம்.[46] அருணகிரி நாதர் கந்தரலங்காரம்,கந்தர் அனுபூதி, திருவகுப்பு,கந்தரந்தாதி' திருப்புகழ், வேல்விருத்தம், உடற்கூற்று வண்ணம் ஆகிய பாடல்கள் பாடியுள்ளார். திருப்பரங்குன்றத்தின் மீது இவர்

44. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், பக். 227-228. (உ.வே.சா. 'குறிப்புரை' பக். 34-38)
45. திருவிளையாடற்புராணம் - பரஞ்சோதி முனிவர்
46. ஆ. வேலுப்பிள்ளை, . மு.நூ., ப. 177.

பாடியதாகப் பதினாறு திருப்புகழ்ப் பாடல்களும், 'திருப்பரங்கிரி வகுப்பு, ஒன்றும், கந்தரந்தாதியில் சில குறிப்புகளும் கிடைக்கின்றன. இவருடைய திருப்புகழ்ப் பாக்களில் திருப்பரங்குன்றமும், தென்பரங்குன்றமும் குறிக்கப்பட்டுள்ளன. இவர் பாடற் செய்திகளால் இவர் காலத்தில் இரு கோயில்களும் வழிபாட்டில் இருந்திருக்க வேண்டும் என்பதும், இவர் காலத்திற்குப் பின்னர் தான் 'தென்பரங்குன்றம்' வழிபாடற்ற நிலையை எய்திருக்க வேண்டும் என்றும், எண்ணவேண்டியுள்ளது.[47] இவருடைய திருப்பரங்கிரி வகுப்புப் பாடலில், திருவடிப் பெருமையும், அடியார் பெருமையையும் கூறி, வேற்சிறப்பைப் புகழ்ந்து பாடி, பரமனின் குமரனே, பராசரர் குமாரர் அறுவரும் விஞ்சையரும் தொழுது வணங்கும் பரங்கிரி முருகேசனே! என்று வேலையடி முடிக்கிறார்.[48] கந்தரந்தாதியில் இரு பாடல்களில் பரங்குன்றம் பெயர் மட்டும் இடம் பெற்றுள்ளது.[49]

### கந்தபுராணச் சுருக்கம்

சம்பந்த சரணாலயரின் கந்தபுராணச் சுருக்கத்தில் உற்பத்திக் காண்டம், தேவ காண்டம் ஆகிய இரு காண்டத்திலும் முருகப் பெருமானின் அவதாரச் சிறப்பு, திருப்பரங்குன்றம் வந்து கோயில் கொண்டு அருளிய சிறப்பு, பராசர முனிவரின் குமாரர்களுக்கு அருள்பாலித்தமை, தெய்வயானையம்மை திருமணம் முடித்த சிறப்பு ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. இது முழுமையும் கந்தபுராணத்தைப் பின்பற்றி அமைந்துள்ளது. இதுபோலக் காசிவாசி. சி. செந்திநாதையரின் கந்தபுராண நவநீதத்திலும் திருப்பரங்குன்றம் ஒரு பாடலில் பேசப் பட்டுள்ளது.[50]

### பிற்காலப் புராணச் சிற்றிலக்கியங்கள்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பாடல்களும், நிரம்பவழகிய தேசிகரின் திருப்பரங்கிரிப் புராணமும்,

47. திருப்புகழ், திருமுருக கிருபானந்தவாரியார் உரை.
48. முருகவேள் பன்னிரு திருமுறை தொகுதி-6, பக். 308-314
49. கந்தரந்தாதி, தணிகைமணி, வ. சு. செங்கல்வராய பிள்ளை உரை, பக். 56, 66.
50. சம்பந்த சரணாலயர், கந்தபுராணச் சுருக்கம், பா. 16, 38, 102, 242-249.

மற்றுமுள்ள சிற்றிலக்கியங்களும் திருப்பரங்குன்றம் பற்றிக் குறிக்கும் செய்திகள் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன. வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் கி. பி. 1839 முதல் 1898 வரை வாழ்ந்தவர். அருணகிரிநாதரே வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளாக அவதரித்தார் என்று கூறுவர். இதற்கு இவருடைய பாடல் ஒன்றில்,

''வல்லைவந்து அன்பரைக் காக்கும் செல்வேற்கை
வரதனைக்கண்டு
எல்லையில்லாக் களிப்பாய் மடிமீதில் இருக்குமென்னைத்
தொல்லை அருணகிரிதான் என்றன்னவன்
சொன்னதுண்மை
இல்லையென் றாற்குமுக்கென்று வெங்கோடை
இடிவிழுமே''

என்று சான்று கிடைக்கிறது. இவர் திருப்பரங்குன்றம் முருகன் மீது 'முருகன் பதிகம்' என்ற தலைப்பில் ஐம்பத்திரண்டு பாடல்களையும், 'படைவீட்டுப் பதிகம்' என்ற தலைப்பில் பதின்மூன்று பாடல்களையும், 'படைவீட்டுத் திருப்புகழ்' என்ற தலைப்பில் ஒரு பாடலையும் பாடியுள்ளார். இதில் திருச்செந் தூரே முதற்படைவீடு என்று கூறுகிறார். திருப்பரங்குன்றத் திலுள்ள சன்னியாசிக் கிணற்றுத் தீர்த்தத்தைப் பற்றிப் பாடி யுள்ளார். இவருக்கு முருகன் அடியெடுத்துக் கொடுக்கப் பாடிய தாகக் கூறுவர். 51

திருப்பரங்குன்றத்துக் கோயிலுக்கான தலபுராணத்தைப் பாடியவர் நிரம்பவழகிய தேசிகர். இது திருப்பரங்கிரிப் புராணம் என்றழைக்கப்படுகிறது. விசயநகர, நாயக்கர் காலத்தில் தமிழிலே தலபுராணங்கள் பல தோன்றின. முகமதியர் படை யெடுப்பினால் கோயில்கள் அழியும் நிலை தோன்றியதால், கோயில்களின் பெருமைகளை எடுத்துக்கூறிக் கோயில்களுக்கு ஆதரவாக மக்களைத் திரட்ட வேண்டிய தேவை அக்காலத்தில

51. தகவல்: தி. செ. முருகதாச சுவாமிகள், கௌமார மடாலயம், திருவாமாத்தூர் (கையெழுத்துப் படிகள்)

தகவல்: ந. சொக்கலிங்கம், விரிவுரையாளர், அஞ்சல் வழிக் கல்வித்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

நிலவியது. இறைவனடியார்களின் வரம்பு கடந்த கற்பனையில், தலபுராணக் கதைகள் தோன்றின. விண்ணுலகிலும் மண்ணுலகிலும் கைலாசத்திலும் நடந்த சம்பவங்கள் பலவற்றைக் கண்டவர்கள் போல இந்நூலாசிரியர்கள் பாடிச் சென்றனர். விசய நகர நாயக்கர் காலத்தில் தலபுராணங்களுக்கான தேவை ஏற்பட்டபோது கதைப் பொருளுக்காகப் பரமன், இந்திரன், திருமால் முதலியோர் பொருட்டாக சிவன் நிகழ்த்திய அருட்செயல்கள் இடம்பெற்றுள்ளன.[52] தலபுராணங்கள் கோயிலைப் பற்றி எழுந்தவையாதலால் கோயிலுள்ள பல தெய்வ வடிவங்களையும் கதை வடிவாக விளக்குகின்றன. தலபுராணத்தின் முக்கிய நோக்கம் சமயத்தைச் சாதாரண மக்களிடம் பரப்ப வேண்டும் என்பதாகும். சாதாரண மக்களுக்குத் தத்துவக் கருத்தையோ அல்லது நீதி போதனைகளையோ கூறினால் அவர்கள் எளிதில் புரிந்துகொள்ளும் இயல்பில்லாதவர்களாக இருந்தனர்; அதைக் கதைகளுடன் பொதிந்து கொடுத்தால் அவர்கள் மனம் எளிதில் புரிந்து கொள்வதாக இருந்தது. ஆகையால் தத்துவக் கருத்துக்களைக் கதைகளின் மூலம் சொல்லிச் சாதாரண மக்களிடம் சமயத்தைப் பரப்பினர். தலபுராணம் சீரும் சிறப்புமாக எழுந்தது கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த உமாபதி சிவாச்சாரியார் செய்த கோயிற்புராணம் பாடியபோது எனலாம். அளவில் சிறியதாக இருப்பினும் தல புராணங்களுக்கெல்லாம் வித்திட்ட இந்நூல் பாட்டிலும், நயத்திலும், கொள்கையின் உயர்விலும், விரைந்து செல்லும் கதைப் போக்கிலும் மிகச்சிறந்து விளங்குகிறது.[53]

நிரம்பவழகிய தேசிகரின் திருப்பரங்கிரிப் புராணம் பாயிரச் சுருக்கம், குமரன் உபதேசச் சுருக்கம், குமரன் தவசுச் சுருக்கம், தலவிசேடச் சுருக்கம், அரிச்சந்திரச் சுருக்கம், திருவிழாச் சுருக்கம், நக்கீரச் சுருக்கம், சூரசங்காரச் சுருக்கம், திருக்கலியாணச் சுருக்கம் என்று ஒன்பது சுருக்கங்களையும், ஐந்நூற்று இருபத்தாறு செய்யுட்களையும் கொண்டு விளங்குகிறது.

ஒருகாலம் திருக்கயிலாயத்தில் சிவபெருமான் பஞ்சாக்கர மந்திரத்தை உமாதேவியார்க்கு உபதேசித்தருளினார். அப்பொழுது அன்னையின் மடிமீதமர்ந்த குமாரக்கடவுள் அதனை

52. ஆ. வேலுப்பிள்ளை, மு. நூ., ப. 175.

53. வே. கிருட்டிணசாமி, தமிழில் தலபுராண இலக்கியம், ப. 13.

ஒளிந்திருந்து கேட்க நேர்ந்தது. குருமுகமாக அன்றி அங்ஙனம் மந்திரப் பொருளை மறையினிற் கோடல் குற்றமுடைத் தாகலான் அவ்வுண்மையை உலகினுக்குணர்த்துதற் பொருட்டு அவர் பரங்குன்றீசரை வழிபட்டு அப்பாவத்தின் நீங்கினார். அது நிற்க.

சிபிச்சக்கரவர்த்தி பூதானஞ் செய்கின்ற காலத்து அதனைப் பெறுதற்குரிய அந்தணரொருவர் குறைபட்டமை கண்டு, அளவிலாத் துயரமெய்தி நின்றான். அப்பொழுது பரங்கிரிப் பெருமாள் ஓர் அந்தணர் வடிவுடன் தானமேற்று அவனுக்கு அருள்புரிந்தனர்.

அன்றியும், நான்முகக் கடவுள் நாமகளை மணம் புரிந்து கொண்டு, அப்பரங்குன்றில் தானே பிரம தீர்த்தத்தையும் உண் டாக்கினார். சாபவாசத்தால் குட்டமுற்ற அரசன் ஒருவன் ஆங்குப் பிரம கவமென்னும் தீர்த்தத்தில் படிந்து பிணி நீங்கிய வனானான். அரிச்சந்திரன் சத்திய கவத்துள் நீராடி முருகக் கடவுளுக்குத் தேர், திருவிழா இயற்றி அவரருளாற் சத்திய வாக் குடன் முத்தியும் பெற்றவன். அவையேயன்றி மற்றொரு சமயம் அக்கடவுள் தமிழர் பெருமானாம் நக்கீரதேவரைத் திருமுருகாற் றுப்படை பாடச்செய்து அவரைச் சிறையிலின்றும் விடுவித்தருளி னார். சூரசம்காரம் செய்த பின்னர் அக் குமரப்பிரானார் திருப் பரங்கிரியிலே தங்கித் தெய்வயானையம்மையைத் திருமணம் புரிந்து தம்மை வணங்கினார்க்கெல்லாம் கிட்ட சத்தியளித்து மணக்கோலத்துடனேயே எஞ்ஞான்றும் துதித்தருளுகின்றனர்[54] மேலும் இத்தலத்தில் சத்தியகூவம், புத்திரகூவம், சரவணப் பொய்கை போன்ற தீர்த்தங்களைச் சிவபெருமானும், முருகனும் படைத்தனர் என்று இப்புராணம் கூறுகிறது.

இதற்குப் பின்னர் 'ஸத்யகிரி மஹாத்மியம்' என்னும் வட மொழித் தலபுராணம் (கிரந்தமூலம்) ஒன்றும் திருப்பரங்குன்றம் கோயிலுக்கு ஏற்பட்டுள்ளது. ஓலைச் சுவடியாக இருந்த இந் நூலை ஆர். துரைசாமி நாயுடுகாரு என்பவரால் 1931-இல் புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் 'திருப்பரங்கிரிப் புராணக் கதையை' அப்படியே வடமொழியில் தருவது போல அமைந்துள்ளது. இதில் திருப்பரங்குன்றத்தில் பெயரைக் கூற வந்த விடத்தில் மகாபுண்யமாயுள்ளதிருதயுகத்தில் 'ஸத்யாத்திரி" எனவும், த்ரேதாயுகத்தில் 'அஸ்மந்தகவனம்' எனவும், த்வாபர

54. நாராயண அய்யங்கார், திருப்பரங்கிரிப் புராணம் முன்னுரை.

யுகத்தில் 'பராசலம்' எனவும், இக்கலியுகத்தில் 'கமாரபுரம்' எனவும், இந்த க்ஷேத்ரத்திற்குப் பெயர் வழங்கப்படுகின்றது. ஆயினும் ''ஸத்யகிரி'' என்னும் பெயரால் நான்கு யுகங்களிலும் புகழப்படுகின்றது'' என்று குறிப்பிடுகிறது.[55] இக்கோயிலில் துர்க்கையின் கருவறை மையமாக அமைந்திருப்பதற்குக் காரணம் இங்குச் சிவபெருமான் அருளால் துர்க்கை மகிடாசுரனைச் சம்காரம் செய்தாள் என்று காரணம் காட்டுகிறார். நக்கீரர் வரலாறு தமிழ்த் தல புராணத்தில் உள்ளது போல இங்கும் அமைந்துள்ளது. மேலும் இந்நூல், ஸ்வாதுபுட்கரினி (சரவணப் பொய்கை) ஸத்யதீர்த்தம், பாதாள கங்கை, புத்ர தீர்த்தம், புட்பமார்தவ தீர்த்தம், வைத்ய சாரம், ஹிமமார்தவ தீர்த்தம், க்ஷீர குண்டம், ப்ரஹ்ம தீர்த்தம், பாண்டவ தீர்த்தம். கல்யாண தீர்த்தம், மண்டல தீர்த்தம், ஸித்த தீர்த்தம் என்று பதிமூன்று தீர்த்தங்களைக் குறிப்பிடுகிறதுகௌதம மகிரிஷியால் உபதேசிக்கப்பட்ட அரிச்சந்திரன் விஸ்வகர்மாவை வரவழைத்து ஐந்து மண்டபங்களுடன் கூடியதாய், படிக்கட்டு வரிசைகள், திருமதில்கள், கோபுரங்கள் ஆகியவை யுடன் கூடிய ஓர் ஆலயத்தைக் கட்டினான் என்றும், அழகானபெரிய இரதத்தைச் செய்வித்து ஆதிசைவத்விசர்களின் உதவியால் ரதோத்ஸ்வம் நடத்தினான் என்றும் கூறுகிறது.[56] இந்நூல்தமிழில் தலபுராணம் ஏற்பட்ட பின்னர், பின்னர் வந்துள்ள கோயில் வளர்ச்சி, திருவிழாக்கள் இவைகளையெல்லாம் வைத்துப் பிற்காலத்தில் வடமொழி வாணரால் எழுதப்பட்டுள்ளது என்று கருதலாம்.

சிற்றிலக்கியங்கள் வரிசையில் பிற்காலத்தில் நிறைய இலக்கியங்கள் திருப்பரங்குன்றின் மீது பாடப்பட்டுள்ளன. அதில் மாலை வகையைச் சேர்ந்த இலக்கியங்களாகப் பதினொரு நூல்களும், தாய்மகளேசலாக ஒரு நூலும், பிள்ளைத் தமிழாக ஒரு நூலும், தாலாட்டு இலக்கியமாக ஒரு நூலும், தோத்திர நூலாக மூன்று நூல்களும், கவச இலக்கியமாக ஒரு நூலும் காவடிச் சிந்தாகப் பத்து நூல்களும், அந்தாதி இலக்கியமாக நான்கு நூல்களும், பதிகங்களாகப் பதினொரு நூல்களும், பசனைக் கீர்த்தனை துதிகளாக நான்கு நூல்களும், ஆனந்தக் களிப்பு இல்க்கியமாக ஒரு நூலும், அலங்கார இலக்கியமாக ஒரு நூலும், கோவை இலக்கியமாக மூன்று நூல்களும், அநுபூதி

55. ஸத்யகிரி மஹாத்மியம், ப. 50.
56. மேலது, பக். 130-135

இலக்கியமாக ஒரு நூலும், திருவாயிரம் இலக்கியமாக ஒரு நூலும், குறவஞ்சி இலக்கியமாக ஒரு நூலும், கலம்பக இலக்கியமாக ஒரு நூலும், சிலேடை வெண்பாக்களாக ஒரு நூலும், தல வரலாறாக ஒரு நூலும், தல ஆராய்ச்சிக் குறிப்பாக ஒரு நூலும் இங்குக் குறிப்பிடத்தக்கன.57 இச்சிற்றிலக்கியங்கள் இங்குள்ள இறைவனின் உருவம் சுவையாய், சுண்ணச்சாந்தாய் அமைந்துள்ளமையையும், இவ்விறைவனின் ஆற்றலையும் சிறப்பையும் நன்கு விளக்குகின்றன.58 நோன்பு நோற்றல், நோய் நீக்கம் வேண்டுதல், முருகன் கைவேற் சிறப்பு, அபிடேகச் சிறப்பு ஆகியவற்றை விரித்துப் பேசுகின்றன.

இலக்கியங்களில் திருப்பரங்குன்றம் இடம் பெற்றுள்ளமையை ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் பொழுது, சங்க கால இலக்கியங்களில் பழந்தமிழர் வழிபாடான வேல் வழிபாடு இருந்தமையையும், வேற் கோட்டம் இருந்தமையையும், அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களில் முருகன் பின்னர்த் தனிப் பெருந் தெய்வமாக வளர்வதற்கான முன்னோடிக் குறிப்புகள் இருந்துள்ளன என்ற உண்மை தெளிவாகிறது. இதில் பரிபாடல் மட்டும் முருகனுக்கு இரு தேவியர் உள்ளமையைக் காட்டுகிறது. தெய்வயானை பற்றிய கருத்துக்கள் வடமொழியிலும். தமிழ் மொழியிலும் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பின்னரே தோன்றுகின்றன. இவ்வாறு பரிபாடல் தெய்வயானையைக் குறிப்பிடுவது அறிஞர்களிடையே பரிபாடலின் காலத்தைப் பற்றிய ஐயத்தைக் கிளப்ப ஏதுவாகிறது. பக்திக் கால இலக்கியங்களான தேவாரத்தில் திருப்பரங்குன்றத்து முருகன் பற்றிய குறிப்புக்கள் ஏதும் இல்லை. தேவார காலத்தில் முருகன் வழிபாடு இரண்டாம் நிலையையடைந்து, சிவ வழிபாடே பெருவழக்குப் பெற்றுள்ளது. மேலும் சிவனைப் பாட வந்த தேவார மூவர்கள் முருகனையோ, மற்ற தெய்வங்களையோ முழுமுதற் கடவுளாகப் பாடுவதில்லை. அவ்வாறு பாடும்படி நேரிட்டால் சிவனோடு உறவு நிலைத் தொடர்புபடுத்தித்தான் பாடியுள்ளனர். திருச்செந்தூர் பற்றிய தேவாரப் பாடல்கள் முருகனோடு தொடர்புபடுத்திப் பாடுகின்றன. ஆனால் திருப் பரங்குன்றத்து முருகனோடு தொடர்புபடுத்திப் பாடவில்லை. ஆகவே அக்காலத்தில் இக்கோயில் முழுமையான சிவன் கோயிலாகவே விளங்கி வந்ததெனலாம். இந்நிலை இன்று வரை பூசை

57. பிற்சேர்க்கை எண். 1இல் விபரங்கள் தரப்பட்டுள்ளன.
58. மு.ரா. அருணாசலக்கவிராயர், பரங்கிரி மும்மணிக் கோவை, 18. பரங்கிரிப் பாமாலை, 96.

நிலையில் தொடர்ந்து வருகிறது. திருச்செந்தூர் அன்று முதல் இன்று வரை முருகன் தலமாகவே நின்று நிலவி வருகிறது. ஆகவே தேவார ஆசிரியர்கள் அங்கு சிவனை முருகனோடு உறவு நிலைத் தொடர்புபடுத்திப் பாடியுள்ளனர் என்று எண்ண இந்து இடமளிக்கிறது.

இடைக்காலச் சமய இலக்கியங்களின் காலத்தில் திருக்கோவையார், பெரிய புராணம், கல்லாடம் போன்றவை திருப்பரங்குன்றக் கோயிலைச் சிவன் கோயிலாகவே போற்றிப் பாடியுள்ளன. இதில் கல்லாடம் பரங்குன்றில் உள்ள முருகனை இரு தேவியர் உடனான தெய்வத் திருக்கோலமாகப் பாடுகிறது. இது பரிபாடல் மரபு பற்றியும் புராண மரபு பற்றியும் பாடப்பட்ட மரபே என எண்ண வேண்டியுள்ளது. கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், அருணகிரிநாதர் பாடல்கள் ஆகியவை சிவன், முருகன் இருவருக்குமான இரு தெய்வ வழிபாடு இணைந்து சிறந்த காலத்தில் தோன்றியவை. இதில் கந்தபுராணம் முருக வழிபாட்டின் மறுமலர்ச்சியைத் தோற்றம் பெற வைக்க முயன்றுள்ளது. அருணகிரிநாதர் இம்முயற்சிக்குத் தம் உழைப்பை நல்கி முருக வழிபாட்டைத் தமிழ்நாட்டில் சிறந்த உயரிய நிலைக்குக் கொண்டு வந்துள்ளார். பிற்காலப் புராணச் சிற்றிலக்கியங்கள் போன்றவை முன்னையோர் நெறியைப் பற்றியும், புராண மரபைப் பின்பற்றியும் தோன்றியுள்ளன. இதில் தலபுராண காலத்தில் இக்கோயிலுக்கு எழுந்த தலபுராணம், மற்றைய எல்லாத் தலபுராணங்களைப் போன்றும் மரபு மாறாமல் பாடப்பட்டுள்ளது. இவை வரலாற்றுக்குத் துணைசெய்யவில்லையென்றாலும், புராண மரபைப் பின்பற்றிச் சிறந்து விளங்குகின்றன.

இலக்கிய மரபுகளில் இத்தலம் முருகனுக்குரிய தலமாகவும், முருகனைத் தலைமைத் தெய்வமாகவும் போற்றப்படினும் இன்றைய பூசை மரபு பழைய சிவன் கோயில் மரபையே பின்பற்றி வருவதைப் பார்க்கும் போது, இரு மரபுகளும் இணை மரபுகளாகவே பின்பற்றப்பட்டு வந்துள்ளமை விளங்குகிறது. மேலும் முருகனைத் தனித் தெய்வமாக்கும் முயற்சி இலக்கியப் புலவர்களின் முயற்சியாகவே உள்ளது. பூசை மரபில் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை என்று தெரிகிறது. இருப்பினும் இன்றைய வழிபாட்டு மரபில் மக்கள் முருகனைத் தனித் தெய்வமாகவே வழிபடும் முறை உள்ளது. சிவனுக்குத் தலைமையிடம் தரும் மரபு இன்றைய நிலையில் மக்களிடையே இல்லை என்பதும் தெளிவாகிறது.

# வரலாற்றில் திருப்பரங்குன்றம்

தமிழக வரலாறு சங்ககாலம் தொட்டு இன்றுவரை பலவித மாற்றங்களைத் தன்பாற் கொண்டு காலத்திற்கேற்ப மாறிமாறி வளர்ந்து வந்துள்ளது. இவ்வாறு காலத்திற்குக் காலம் ஏற்பட்டு வந்துள்ள மாற்றங்களை ஓரளவு படம் பிடித்துக் காட்டுவதாகத் திருப்பரங்குன்றத்து வரலாற்றுச் செய்திகள் அமைந்துள்ளன. தமிழகச் சமய, அரசியல் வரலாற்றிற்கும் திருப்பரங்குன்ற வரலாற்றிற்கும் உள்ள தொடர்பு, திருப்பரங்குன்றம் மலையும் கோயிலும் வரலாற்றுக்குத் துணை செய்யும் தடயங்களாக விளங்குதல் போன்ற செய்திகள் இவ்வியலில் ஆய்வு செய்யப்படுகின்றன.

**சங்ககாலம்** ( பழந்தமிழர் காலம்)

பண்டைத் தமிழர் காலமான சங்க காலத்தில் திருப்பரங்குன்றத்தின் வரலாற்று மூலங்களை அறிந்து கொள்ளப் பெரிதும் இலக்கியத்தையே நாட வேண்டியுளது. சங்க இலக்கியமான அகநானூற்றில் பரங்குன்றின் இயற்கைவளம், முருகன் குடி கொண்டுள்ள சிறப்பு ஆகியவை இரு பாடல்களில் பேசப் பட்டுள்ளன. மதுரை மருதவிள நாகனார் தாம் பாடிய பாடலில் (அகம் : 59) தமக்கு முன்னர் தண்பரங்குன்றத்து அந்துவன் பாடிய சிறப்பையுடைய நெடு வரை என்று குறிப்பிடுகிறார். எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்ற மற்றொரு புலவரும் தம் பாடலில் (அகம் : 149) 'கொடி நுடங்கு மறுகிற் கூடல்' குடதிசையிலிருந்த நெடியோன் குன்றம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவை தவிர மதுரைக்காஞ்சி, பரிபாடல், கலித்தொகை திருமுருகாற்றுப்படை ஆகிய இலக்கியங்களும் சங்க காலத்திலிருந்த முருகன் கோயில் பற்றிப் பேசுகின்றன. அகநானூற்றில் குறிப்பிடப்பட்ட அந்துவன் என்ற பெயரும், அகநானூற்றில் இடம் பெற்றுள்ள 149-ஆம் பாடல் பாடிய தாயங்கண்ணனாரது 'எருக்காட்டூர்' என்ற ஊர்ப் பெயரும் இங்குக் கிடைத்துள்ள தொன்மையான கல்வெட்டான பிராமிக்கல்வெட்டில் காணப்

படுகின்றன.[1] இக்கல்வெட்டின் காலம் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. கே. வி. சுப்பிரமணிய அய்யர் இக்கல்வெட்டின் காலம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டு என்றும், டி. வி. மகாலிங்கம் கி. பி. முதல் நூற்றாண்டு என்றும், ஐராவதம் மகாதேவன் கி. பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகள் என்றும் கூறுவர். இக்கூற்றுக்களின் அடிப்படையில் இக்கல்வெட்டின் காலம் சங்க காலமே என்பதைத் துணிந்து கூறலாம் என்பர் ஆ. வேலுப்பிள்ளை.[2] எனவே இப்பாடல்கள் கூறும் தண்பரங்குன்றில் முருகன் கோயில் இருந்தது என்ற கருத்திற்குத் தொன்மையான கல்வெட்டுச் சான்றும் துணை செய்கின்றது.

**தண்பரங்குன்றத்து முருகன் கோயில்**

சங்க காலப் பகுதியில் உருவ வழிபாடு இருந்ததாகத் தெரியவில்லை. எனினும் மன்றங்களில் மக்கள் வணக்கத்திற்காகக் கற்கள் நிறுவப்பட்டன.[3] இறைவனின் ஆயுதங்களை ஊன்றி வழிபட்ட மக்கள் அவற்றை மரநிழலில் வைத்து வழிபட்டனர். மரநிழல், கொடிக்கூடம், காவணம், குடில், மண்தளி, சுடுமண் தளி, மரப்பலகைகளால் அமைத்த அம்பலம், குடைவரை, ஒற்றைக் கற்றளி, கற்கோயில் என்று அவை பிற்காலத்தில் படிப்படியாய் வளர்ந்துள்ளன.[4] இதில் குடைவரை, ஒற்றைக் கற்றளி, கற்கோயில் ஆகிய மூன்றையும் தவிர ஏனையவை சங்க காலத்தில் இருந்து மறைந்த கோயில்கள் எனலாம். இவ்வாறு கோயில்கள் ஏற்படுவதற்கு முன்பு பொதியில், மன்றம், முற்றம் போன்ற இடங்கள் அக்கால மக்களின் வழிபாட்டிடங்களாக இருந்துள்ளன.[5] இவ்விடங்களில் மரங்கள் நடப்பட்டு மரத்தை வழிபடும் வழக்கமும் இருந்துள்ளது. மரவழிபாடு மிகவும் தொன்மையானது. அதன் காலம் ஹரப்பா நாகரிகத்தைச் சேர்ந்த காலமாகும். அக்காலத்தில் முருகனுக்குரிய மரமாகக் கடம்ப மரம் வழிபடப்பட்டு வந்துள்ளது.[6] குறிஞ்சி

1. S. I. I. Vo.XII, 48; S. I. I. Vol. XII, 51
2. A. Velupillai, Epigraphical Evidences for Tamil Studies, P 61
3. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 127.
4. சா. கணேசன், 'அப்பர் தேவாரத்தில் ஆலயங்கள்', திருக்கோயில் திங்களிதழ், டிசம். 1973-ப. 117
5. K. R. Srinivasan, Temples of South India, P. 16.
6. Ibid., P. 8.

நிலக் கடவுளான முருகன் அல்லது வேலன். வேலைப் போர்க் கருவியாகவும் சேவலைக் கொடியாகவும் கொண்டவன். கி. மு. நாலாயிரத்துக்கு முற்பட்ட ஆதிச்சநல்லூர் நாகரிகத்தைச் சேர்ந்த பொருள்களில் இரும்பு வேல்களும், பித்தளையாற் செய்யப்பட்ட சேவல்களும் கிடைத்துள்ளன. இவை முருக வழிபாடு மிகப் பழைய காலத்திலிருந்தே தென்னாட்டவர்க்குரிய தென்பதை மெய்ப்பிக்கின்றன.[7] "முருக வழிபாடு தென்னிந்தியாவுக்குச் சிறப்பாக உரியது என்பதுகூட ஒரு வகையில் உபசார வழக்கே. முருக வழிபாடு தமிழ்நாட்டுக்கு மட்டுமே சிறப்பாக உரியதென்றும் கூறலாம். தமிழ்நாட்டுக்கு வெளியிலும் தமிழரல்லாதாரும் முருகனையும் வழிபடுகின்றனரென்று எடுத்துக் காட்டலாமேயொழிய, அவர்களுக்கு முருகனே முதன்மையான தெய்வமென்று சுட்டிக்காட்ட முடியாது" என்பர்.[8] திருமுருகாற்றுப்படை சுட்டும் முருகன் கோவில்களான படை வீடுகளுள் பல பாண்டிய நாட்டைச் சேர்ந்தவையாக உள்ளன. எனவே சங்க காலத்தில் பாண்டிய நாட்டில் முருகவழிபாடு சிறப்புற்றிருந்திருக்க வேண்டும்.[9] இவ்வாறு சிறப்புற்றிருந்த முருகனுக்கெனத் தனிக்கோட்டம் அமைக்கும் வழக்கமும் அக்காலத்தில் இருந்துள்ளது. வருத்துதலையுடைய முருகன் கோயில் எனும் பொருள்பட "அணங்குடை முருகன் கோட்டம்" (புறம் : 299) என்றும், முருகன் கோயில் கொண்டுள்ள செந்திலம்பதி "வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்" (புறம் : 55) என்றும் முருகன் கோயில்களைப் பற்றி இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. முருகனின் படையான வேலுக்கென எடுத்த "வேற்கோட்டம்" என்று புகாரில் இருந்ததை இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.[10] எனவே தண்பரங்குன்றில் இலக்கியங்கள் கூறும் முருகன் கோட்டம் சங்க காலத்தில் சிறப்புற்றிருந்தது என அறிய முடிகிறது.

பரிபாடலில் எட்டுப்பாடல்கள் தண்பரங்குன்றின் இயற்கை வளம், கைபுனைந்தியற்றாக் கவின் பெருவனப்பு, மால்முருகன் இக்குன்றின் மிசைக் கடம்ப மரத்தடியில் கடிநகரில் கோயில்

7. K. A. N. Sastry, History of India, P.55
மேற்கோள்: மா. இராசமாணிக்கனார் தமிழ்மொழி இலக்கிய வரலாறு ப. 106
8. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு ப. 222.
9. மேலது ப. 223.
10. சிலப்பதிகாரம், 9:11.

கொண்டெழுந்தருளியிருந்த சிறப்பு, இங்கிருந்த எழுதெழில் அம்பலம், எழுத்து நிலை மண்டபம் போன்ற செய்திகளைக் குறிப்பிடுகின்றன. திருமுருகாற்றுப்படை, 'மாடம்மலி மறுகின் கடற்குடவயின்' இருந்த குன்று பற்றியும், 'மறுகில் கற்பின் வாணுதல் கணவன்' பற்றியும், 'தண்தார் புரளும் மார்பினன்' பற்றியும், சூரரமகளிரின் இயல்பு, பேய் மகளின் துணங்கைக் கூத்துப் பற்றியும் விரித்துப் பேசுகிறது. "திருமுருகாற்றுப்படை காலத்தாற் சங்க நூல்களுக்குப் பிந்தியதாயினும், இதிற் பல இடங்களில் திராவிடத் தெய்வமாகிய முருகனின் இயல்புகள் கூறப்படுவதால் இவ்வியல்புகளையும் ஈண்டு நோக்குதல் பொருத்தம் உடைத்து...'திருப்பரங்குன்றம்' என்ற பகுதியிலே தமிழ்க் கடவுளாகிய முருகனுக்குத் தமிழ் முறையிலே பேய் மகள் ஒருத்தி ஆடிய துணங்கைக் கூத்து சித்தரிக்கப்படுகின்றது."11

இலக்கியங்களின் அடிப்படையில், பண்டைக் காலத்தில் பரங்குன்று எழிலைப் பாலைமரங்கள் (பரி : 21) அடர்ந்த சோலையாகவும், அருவிகள் பாய்கின்ற வளமார்ந்த மலையாகவும், முருகனின் இருப்பிடமாகவும், மன்னனும் மக்களும் வந்து வழிபடும் கோயிலாகவும், நாட்டுப்புற வழிபாடுகளும், விழாக்களும் நிறைந்து விளங்கிய குன்றமாகவும் விளங்கியுள்ளது, என்று கருத இடமுள்ளது. மக்கள் இம்மலையை நோக்கிச் சூளுறைத்தல், சொல்லிச் சூளுறைத்தல், எண்ணிச் சூளுறைத்தல் போன்ற செயல்களை அக்காலத்தில் கொண்டிருந்தனர். ஆகவே இங்கிருந்த முருகன் கோயில் மக்கள் மனத்தில் ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றுத் திகழ்ந்திருக்கிறது. இவ்வாறு மக்கள் மனத்திலும், இலக்கியத்திலும் பண்டைத் தமிழர் வரலாற்றிலும் சிறப்பான இடத்தைப் பெற்ற பண்டைய முருகன் கோயில் இன்றில்லை. பரங்குன்றும் இயற்கை அழகோடு விளங்கவில்லை. மரங்களையிழந்த வெற்றுப்பாறையாகக் காட்சியளிக்கிறது. காலவெள்ளத்தில் அழிந்துபட்ட கோயில்களுள் இதுவும் ஒன்றாக இருக்கக்கூடும். சங்க காலத்திற்கும் இடைக்காலப் பாண்டியர் காலத்திற்கும் இடையில் இருந்த வேற்றரசுக்கால (களப்பிரர்) ஆட்சியினால்திராவிட சமயக் கோயிலான முருகன் கோயில் அழிந்து பட்டிருக்கக் கூடும். "களப்பிரராட்சிக் காலத்திற் சமணமும் பௌத்தமுமே சக்தி வாய்ந்து விளங்கின. இந்தியாவில் இராசஸ்தானம், குசராத்து, மகாராட்டிரம், கருநாடகம், தமிழ்நாடு என்னும்

11. சு. வித்தியானந்தன், மு. நூ,; ப. 132.

பகுதிகளில் சமணம் செல்வாக்குடன் விளங்கியது. தமிழ்நாட்டுக்கு வட எல்லையில் அமைந்த ஆந்திர நாட்டில் பௌத்தம் செல்வாக்குப் பெற்றிருந்தது தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த காஞ்சிபுரம் தமிழ்நாட்டுப் பௌத்தமதப் பிரசாரத்துக்கு மத்திய இடமாக விளங்கியது''.[12] சங்ககால மக்களின் சமயவாழ்விலே சமண பௌத்தரின் செல்வாக்கு மிகவும் குறைவாகவே இருந்தது. மலையிலே தங்கள் இருக்கைக்காக இடம்தேடி அலைந்த சமண முனிவர்கள் முருகன் கோயிலினைத் தங்கள் இருக்கைகளாக ஆக்கிக்கொண்டு, சிறுகச்சிறுக மலைக்கு வரும் மக்களின் மனப்பாங்கினை மாற்றித் தங்கள் சமயக் கருத்துக்களைப் பரப்பி இருக்கக்கூடும்.[13] ஆனால் பண்டைக்கோயிலின் இருப்பிடம் பற்றிய சான்றாதாரங்கள் எதுவும் இன்றுவரை கிடைக்கவில்லை.

### பௌத்த சமணர்களின் குகைகள்

இங்குக் குன்றின் மேற்குத் திசையில், செங்குத்தான பாறையில் ஒரு குகையும், அவற்றுள் ஆறு கற்படுக்கைகளும் உள்ளன. இங்குப் பிராமி எழுத்துக்களால் எழுதப்பட்ட கல்வெட்டு ஒன்று உள்ளது.[14] இக்குகைக்குப் பஞ்ச பாண்டவர் குகை என்றும், பஞ்சபாண்டவர் படுக்கையென்றும் பஞ்சபாண்டவர் மலையென்றும் பெயர்கள் வழங்கி வருகின்றன. இம்மலையுச்சியில் சிக்கந்தர் தர்காவிற்கு மேற்கே ஒரு குகையுள்ளது. இக்குகையிலும் கிழக்கு மேற்காகக் குறுகிய ஐந்து படுக்கைகள் செதுக்கப்பட்டுள்ளன. இக்கற்படுக்கைகளின் அமைப்பு முதலியவை இலங்கைத் தீவில் பௌத்தத் துறவிகள் தங்குவதற்காகப் பண்டைக் காலத்தில் அமைக்கப்பட்ட குகையிலுள்ள படுக்கைகள் முதலியவற்றின் அமைப்பை ஒத்திருக்கின்றன. பௌத்தத் துறவிகள் ஊருக்குள் வசிக்கக் கூடாது என்பது அம்மதக் கொள்கையாதலால், அவர்கள் வசிப்பதற்காக மலைப் பாறைகளில் குகைகள் அமைப்பது பண்டைக் காலத்து வழக்கம். இலங்கையிலும் பாண்டி நாட்டிலும் காணப்படும் இந்தக் குகைகளின் அமைப்பைக் கொண்டு இவை பௌத்தத் துறவிகள் தங்குவதற்காக அமைக்கப்பட்டவை என்றும், இப்பாண்டி நாட்டுக் குகைகளில் காணப்படும் எழுத்துக்களைக் கொண்டு (இவை அசோகர் காலத்துக்

---

12. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 43.
13. சோமலெ..மதுரை மாவட்டம், ப. 267.
14. ARE 333 of 1908

கல்வெட்டுச் சாசனங்களில் காணப்படும் பிராமி எழுத்தை ஒத்திருப்பதால் இவை கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்'' என்றும் கூறுவர்.[15] ''கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலங்களில் தமிழ்நாட்டிலே எழுதப்பட்ட சாசனங்கள் பிராமி எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. இவற்றை எழுதியவர்கள் பெரும்பாலும் பௌத்தர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. பாண்டி நாட்டிலே அழகர்மலை, கழுகுமலை, நாகமலை, சித்தர்மலை, திருப்பரங்குன்றம், கொங்கர் புளியங்குளம், கீழைவளவு, முத்துப்பட்டி, அரித்தாப்பட்டி, கருங்காலக்குடி; விரிச்சியூர், மருகால்தலை, குன்னக்குடி, திருச்சி ஜில்லா கருவூர் தாலுகாவில் உள்ள ஆறுநாட்டார் மலை முதலிய இடங்களில் உள்ள பாண்டவமலை என்று அழைக்கப்படும் குன்றுகளில் உள்ள குகைகளில் பிராமி எழுத்துக்கள் காணப்படுகின்றன. இச்சாசனங்கள் தமிழ் மொழியில் இருந்தும், எழுத்துக்கள் பிராமி எழுத்தாக உள்ளன''.[16] ''தமிழ்நாட்டிலே ஆங்காங்கு காணப்படுகின்ற பஞ்ச பாண்டவமலை அல்லது பாண்டவக்குன்று என்பனவற்றில் பெரும்பாலான, பண்டைக் காலத்திலே பௌத்த பிக்குகள் வசித்து வந்த மலைகள் என்பதை விளக்குவனவாம். தமிழ்நாட்டில் மட்டுமன்று ஆந்திர நாட்டிலும் இத்தகைய பாண்டவர் குன்றுகள் உள்ளன. ஆதியில் பௌத்த பிக்குகள் வசித்து வந்த இக்குகைகள் பௌத்த மதம் செல்வாக்கிழந்த பிறகு சமணர்களால் கைப்பற்றப்பட்டு, இவைகளில் சமணத்துறவிகள் வசித்து வந்தார்கள். பிற்காலத்திலே சமணசமயமும் வீழ்ச்சியடைந்த பிறகு இக்குன்றுகள் 'இந்து' சமயத்தினரால் கைப்பற்றப்பட்டு இந்துக்கோயில்களாக மாற்றப்பட்டன. இந்துக்கள் இக்குகைகளைக் கைப்பற்றிய பிறகு இக்குகைகளில் பாரதக் கதையில் கூறப்படுகிற பஞ்ச பாண்டவர் வனவாசம் செய்த காலத்தில் தங்கி வசித்ததாகக் கதைகள் கற்பிக்கப்பட்டு இன்றளவும் பாமரர்களால் நம்பப்பட்டு வருகின்றன. பண்டவமலை அல்லது பண்டவக்குன்று என்பது பழைய பெயர். பிற்காலத்தில் இப்பெயருடன் பஞ்சம் என்னும் அடைமொழி சேர்த்துப் பஞ்சபாண்டவமலை என்று வழங்கப்படுகின்றது.[17]

---

15. மயிலை.சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப, 26
16. மேலது, ப. 87
17. மேலது ப. 65

இங்குள்ள இரு குகைகளில் முதல் குகை 56 அடி நீளமும் 20 அடி அகலமும் உள்ளது (நிழற்படம் காண்க). குகைவாயிலில் மேலேயிருந்து மழைநீர் குகைக்குள்ளே விழாமல் பக்கங்களில் வழிந்து போகும்படி குழைவான தூம்புகள் செதுக்கப்பட்டுள்ளன. குகைக்கு அருகில் குளிர்ந்த நீருள்ள சுனை இருக்கின்றது. குகையினுள் பாறைகளைச் சமப்படுத்தி வழவழப்பாக்கி அமைந்துள்ள கற்படுக்கைகள் உள்ளன. கற்படுக்கைகள் உள்ள ஒரு திண்ணை ஐந்து அடி நீளமும், ஒன்றே முக்காலடி உயரமும் உள்ளது. மற்றொரு திண்ணை ஆறு அடி நீளமும், மூன்று அடி உயரமும் உள்ளது. இக் கற்படுக்கைகளின் தலையணைப் பக்கமாகப் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன இக்கல்வெட்டு 1908-ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டது. இக்கல்வெட்டு ஒரே வரியாக முப்பத்தொரு எழுத்துக்களை கொண்டுள்ளது. இதைக்கிருட்டிண சாத்திரி,

எரு கோ(ட்டூர) இஜம் குடும (பிக) குபோலா லயனா
ச (ஏ) ய தா ஆயசா யனாளை டுச் (சா) தனா

எருகோட்டூர என்பது எருகோட்டூர். குடும்பிகன் என்பது இல் வாழவோனைச் சுட்டுகிறது என்பர். கே.வி. சுப்பிரமணிய அய்யர்.

எரு கோட்டூர் ஈழகுடும்பிகன் போலாலையன் செய்தா
ஆய்ச்சுடன் நெடு சாதன

எருகோட்டூர் என்பது ஊரின் பெயர். அகநானூற்றில் தாயங் கண்ணனார் செய்யுளும் சேர்க்கப்பட்டுள்ளது. இவருடைய ஊர் எருக்கோட்டூர். இழம் என்பது ஈழம், செய்தா என்பது செய் தான் என்னுஞ்சொல். ஈழத்தைச் சேர்ந்தவனும் எருக்கோட்டூரில் வசித்தவனுமான போலாலையன் செய்வித்தான். ஆமச்சயன நெடுஞ்சாத்தன் செய்தான் என்பது பொருள் என்று கூறுவர். சி. நாராயணராவ். இந்த எழுத்துக்களைப் பிராகிருதமாகப் படித்து, அதைச் சமஸ்கிருதமாக மாற்றி இலங்கையில் வசிப்பவரும் எருக்காட்டூர் வாசிகருமான போலல நகரத்தார் சைத்தியங்களை நிறுவினார்கள் என்று பொருள் கூறுவர், ஐ. மகாதேவன்.

'எருகாட்டூர் ஈழ குடும்பிகன் பொலாலையன் செய்தா
ஆய் சயன் நெடு சாதன்'

இலங்கையிலிருந்து வந்து எருகாட்டூர் பொலாலையன் இதைக் கொடுத்தான். ஆம், சயன், நெடு சாதன் ஆகியவர்கள் இதைச் செய்தார்கள் என்று கூறுவர்.[18]

டி.வி. மகாலிங்கம்,

> 'எருகோட்டூர் ஈழ-குடும்பிகன் போலாலையன் செய்த ஆய்-சயன-நெடு-சாதன(ம்)'

''இதன் கடைச் சொல்லாகிய சாதன என்பது தியானம் என்னும் பொருள் உள்ள சமஸ்கிருதச் சொல். நெடு என்பது நீண்ட, ஆழ்ந்த என்னும் பொருள் உள்ளது. நெடு சாதன என்பதன் பொருள் ஆழ்ந்த தியானம் என்பது. சயன என்பது படுக்கை. 'ஆய்னை' என்பது உறங்கும் இடம் என்று பிங்கலந்தை நிகண்டு கூறுகிறது. 'ஆய்' என்னுஞ்சொல் தாலாட்டுப் பாட்டிலும் வரு கிறது. 'லொல் லொல் லொல் லொல் ஆயி' என்னும் தாலாட்டுப் பாட்டில் 'ஆயி' என்பது தூங்கு என்னும் பொருள் கொண்டது. எனவே ஆய்-சயன-நெடு சாதன(ம்)' என்பதன் பொருள், தூங்கு வதற்கும் ஆழ்ந்த தியானம் செய்வதற்கும் அமைக்கப்பட்ட படுக்கை என்பது. ''இலங்கை (ஈழம்) யிலிருந்து வந்து எருகோட்டூரில் வசிக்கிற குடும்பிகனான போலாலையன் உறங் குவதற்கும் ஆழ்ந்த தியானம் செய்வதற்கும் அமைத்தான் என்பது இதன் கருத்து. அகநானூற்றில் 149, 319, 357-ஆம் செய்யுட்களைப் பாடிய தாயங்கண்ணனார் எருக்கோட்டூரைச் சேர்ந்தவர்'' என்று கூறுகிறார்.

மயிலை. சீனி. வேங்கடசாமி தம் நூலில், ''இந்த வாக்கி யத்தை எழுதியவர் சரியாகத் தமிழ் படிக்காதவர் என்பதையும், பேச்சுத் தமிழில் இதை எழுதியுள்ளார் என்பதையும் இந்த வாக்கிய அமைப்பினால் அறிகிறோம்.

> **எருகாடூர் இழ குடும்பிகன் பொலாலையன்**
> செய்தா ஆய் சயன் நெடு சாதன்

பெரிய எழுத்து தனிவாக்கியம். சிறிய எழுத்து தனிவாக்கியம் என்று தெரிகிறது. எருகாட்டூர் ஈழக்குடும்பிகன் (வாணிகன்) பொலாலையன் இந்த குகையை முனிவர்களுக்குத் தானஞ் செய் தான். குகையின் கற்படுக்கைகளைச் செய்து அமைத்தவன் ஆய்ச் சயன் நெடுஞ்சாத்தன் என்பது இவ்வாக்கியங்களின் கருத்து. ஈழ என்பது இழ என்று தவறாக எழுதப்பட்டுள்ளது.

---

18. மயிலை, சீனி வேங்கடசாமி, சங்ககாலத்துப் பிராமி கல்வெட்டெழுத்துக்கள், பக். 124—129

சங்க காலத்திலும் தமிழ்நாட்டவர் ஈழநாட்டுக்குப் போய் வாணிகம் செய்து வந்தனர். அவர்கள் குடும்பினர் என்று கூறப் பட்டனர். ஈழத்துப் பூதன் தேவனார் பாண்டி நாட்டிலிருந்து ஈழஞ் சென்றவர். அவர் பாடியவை சங்கச் செய்யுள்களில் தொகுக்கப்பட்டுள்ளன. எருகாட்டூர் ஈழகுடும்பிகன் பொலா லையன் என்பவன் (குகையையும் கற்படுக்கைகளையும் திண்ணை களையும் செய்வித்தான்) என்று வாக்கியம் முடியவேண்டும். செய்வித்தான் என்னும் வினைச்சொல் விடுபட்டுள்ளது. இரண் டாவது வாக்கியத்தில் செய்தா என்றிருக்கிறது. இது செய்தான் என்று இருக்க வேண்டும் 'ன்' விடுபட்டுள்ளது. ஆய் சயன் நெடு சாதன் என்பது செய்தவனுடைய பெயர். இப்பெயரில் நெடு சாதன் என்பதும் தவறாக எழுதப்பட்டுள்ளது. சாதன் என்பதில் 'த்த' என்னும் தகரம் இரட்டித்து சாத்தன் என்னும் பெயர் சங்ககாலத்தில் பரவலாக வழங்கி வந்தது. நெடுஞ்சாத்தன் என்னும் பெயரும் வழங்கி வந்தது.[20] மயிலை, சீனி. வேங்கட சாமி பல அறிஞர்களின் கருத்தையும் உளங்கொண்டு இக்கல் வெட்டிற்கு மேற்கண்டவாறு மிகத் தெளிவாகப் பொருள் கண்டுள்ளார். இவர் கூறும் கருத்தே ஏற்புடையதாய்த் தெரிகிறது.

இக்குன்றின் வடசரிவில் உள்ள குகையில் பன்னிரெண்டு எழுத்துக்களைக் கொண்ட பிராமிக் கல்வெட்டு உள்ளது. இது 1951-52ஆம் ஆண்டில் அரசினரால் பதிவு செய்யப்பட்டுள்ளது.[21]

'அந்துவன் கொடுபிதவன்'

என்பது இதன் வாக்கியம். ஐ. மகாதேவன், டி.வி. மகாலிங்கம் ஆகிய இருவரும் இவ்வாறே இதைப் படித்துள்ளனர். அந்துவன் என்பான் இதனைக் கொடுக்கும்படி செய்தவன் என்பர் மகா தேவன். ஆனால் கொடுப்பித்தவன் என்பதற்கு கொட்டுப்பித்த வன்-கொட்டி/கொத்திக் கொடுக்கும்படி செய்தவன் என்றே பொருள் கோடல் வேண்டும் (பார்க்க: மகாதேவன்: மாங்குளம் வரி 5; திருவாதவூர் 7, வரி 1:)என்பர்.[22] இக்கல்வெட்டில் வரும்

---

19. T.V. Mahalingam, Early South Indian Palaeography, PP.251—255.
20. மயிலை சீனி வேங்கடசாமி, சங்ககாலத்துப் பிராமி கல்வெட்டெழுத்துக்கள், பக். 124—129.
21. ARE 142 of 1951—52.
22. முத்துக்கோனார், திருப்பரங்குன்றம் (கையெழுத்துப் படி).

அந்துவன் என்னும் பெயர் பரிபாடலில் சில பாடல்களைப் பாடியவரான ஆசிரியர் நல்லந்துவனாரை நினைவூட்டும் அகநானூற்றில் மருதனிளநாகனார் ''தண்பரங்குன்றத்து அந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை'' (அகம்:, 59) என்று திருப்பரங்குன்றைக் குறிப்பிடுகின்றார். சங்ககாலத்தில் அந்துவன் என்ற பெயர் பெருவழக்காயிருந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலம் தெரிந்து கொள்கிறோம். எனவே சங்ககாலத்தை ஒட்டிய பௌத்த சமணர்களின் காலத்தில் இப்பெயர் இக்கல்வெட்டில் இடம்பெற்றிருப்பது இயல்பு. ''இக்கல்வெட்டில் கூறப்படுகிற அந்துவன் நல்லந்துவனாராக இருக்கக்கூடும் அல்லது அவருடைய முன்னோரான ஓர் அந்துவனாக இருக்கக்கூடும். சங்க காலத்தில் மக்களிடையே மதக்காழ்ப்பும் மதப்பூசல்களும் இல்லை. சங்க காலத்தில் சமயப்பகைமை மிகமிகச் சொற்பம். சங்ககாலத்துக்குப் பிறகுதான் மதப்பூசல்கள் தமிழகத்தில் தாண்டவம் ஆடின. சங்ககாலத்தில் எல்லாச் சமயத்தாரும் ஒன்றுபட்டு வாழ்ந்தனர். நல்லந்துவனாரே பரங்குன்றத்துக் குகையைத் தானஞ் செய்தவராக இருக்கலாம்.[23] எனவே சமயக் காழ்ப்பு இல்லாத பழந்தமிழரின் சமுதாயத்தில் பௌத்தர்கட்கு அந்துவன் என்பவர் செய்துள்ள செயல் அக்காலச் சமுதாயத்தின் சமயநிலையை நமக்குக் காட்டுவதாய் அமைந்துள்ளன.

### சமணர்களுக்குரிய மலை

பத்திரபாகு முனிவர் காலத்திலேதான் சமணசமயம் தமிழ் நாட்டிற்கு வந்தது என்பர். பத்திரபாகு முனிவர் கி. மு. 317 முதல் கி. மு. 297 வரையில் சமண சமயத் தலைவராக இருந்தவர். பத்திரபாகு முனிவரின் சீடராகிய வைசாக முனிவரால் தமிழ்நாட்டிலே சமண சமயம் பரவச் செய்யப்பட்டது.[24] தமிழ்நாட்டிற்குச் சமணர் வந்த போது பொது மக்களிடையில் பிரதேசவாரியான திராவிட வழிபாட்டு முறைகளும் நகரங்களில் வைதீக சமயமும் செல்வாக்குப் பெற்றிருந்தன.[25] சமண சமயம் பயிர்த்தொழிலை மிகச் சிறந்த தொழில் என்று போற்றியது. பயிர்த்தொழில் செய்யும் வேளாளரும், வாணிகம் செய்யும் வணிகரும் ஏனைய தொழிலாளரும் இந்த மதத்தை மேற்கொண்டிருந்தனர். எந்நாட்டிலும் எக்காலத்திலும்

23. மயிலை.சீனி. வேங்கடசாமி, சங்ககாலத்துப் பிராமி கல்வெட்டெழுத்துக்கள், ப. 131.
24. மயிலை.சீனி. வேங்கடசாமி சமணமும் தமிழும் ப. 34.
25. பூ. வேலுப்பிள்ளை, தமிழர் சமண வரலாறு, ப. 40

பொருளாதாரத் துறையில் செழிப்புற்றுச் சிறப்பும் பெற்றிருப்பவர் வணிகரும் விவசாயிகளும் ஆவர். இவர்கள் சமண சமயத்தைச் சேர்ந்திருந்தபடியால் ஏனைய மக்களும் இச் சமயத்தைத் தழுவுவாராயிர். சேர, சோழ, பாண்டிய பல்லவ அரசர்களில் பலர் சமண சமயத்தைச் சேர்ந்திருந்தனர். இவர்களால் சமண சமயத்திற்கு ஆதரவும் செல்வாக்கும் ஏற்பட்டன.[26] மதுரையில் சமணப்பள்ளி இருந்தது. 'அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளி' என்று இக்கோயிலைச் சிலம்பு (14: 12) குறிப்பிடுகிறது. மதுரைச் சமணப்பள்ளியைப் பற்றி மதுரைக் காஞ்சியும் (வரி 475-487) கூறுகிறது. இயேசு பிறப்பதற்கு முன்னரே சமணர் மதுரை நகர்க்கு வந்தனர் என்றும், கூடல் என்னும் பெயருக்கு மாறாக மதுரை என்னும் பெயரைச் சமணரே இட்டனர் என்றும் கூறுவர்.[27] சமணர்களுக்குரிய சிறந்த மலைகள் எட்டு என்பதை,

> ''பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி
> யருங்குன்றம் பேராந்தை யானை-இருங்குன்றம்
> என்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப எல்லார்க்குச்
> சென்றெட்டு மோபிறவித் தீங்கு''

என்ற பாடல் குறிப்பிடுகிறது.[28] மதுரையைச் சுற்றி எட்டு மலைகள் இருந்ததாகவும், இவ்வெட்டு மலைகளிலுமே எண்ணாயிரம் சமணர்கள் இருந்தனர் என்றும் குறிப்பிடுவர். பெரிய புராணம் சமணர்கள் கழுவேறியதை, 'எண்பெருங் குன்றத்து எண்ணாயிரவரும் ஏறினார்கள்' என்று குறிப்பிடுகிறது. சமணர்களுக்குரிய எண்பெருங்குன்றத்தில் பரங்குன்றும் ஒன்றாக முதலில் கூறப்படுகிறது.

பரங்குன்று முதலில் பௌத்தர்களுக்குரிய மலையாக இருந்தது. அங்குள்ள குகைக் கல்வெட்டுக்களும் (பிராமி) பௌத்தர்களுடையதாகவே தெரிகின்றன. பௌத்த சமய வீழ்ச்சிக்குப் பிறகு அம்மலையும் குகைகளும் சமணர்களுக்குரியதாக மாறிவிட்டன. அக்குகைகளில் பின்னர் வந்த சமண முனிவர்கள் தம் சமய முதல்வர்களான தீர்த்தங்கரர் சிலைகளை அக்குகையின் மேற்புறத்தில் செதுக்கியுள்ளனர்.

26. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும். ப.52
27. சோமலெ., மு. நூ., ப. 45
28. பெருந்தொகை, கடவுள் வாழ்த்தியல், பாட்டு எண். 183.

என்பர்.[29] "பௌத்த மத வீழ்ச்சிக்குப் பிறகு சமண மதம் செல்வாக்குப் பெற்றது. பெற்றதும் தனது கொள்கைக்கும் வளர்ச்சிக்கும் பெருந்தடையாயிருந்த பௌத்தத்தை முன்னை விடக் கடுமையாகத் தாக்கி, அதை நிலைகுலையச் செய்து விட்டது. பௌத்தக் கோயில்கள் சமணக் கோயில்களாக மாற்றப்பட்டன. பௌத்த பிட்சுக்கள் வசித்த மலைக்குகைகள், சமணக் குகைகளாக மாற்றப்பட்டன.[30]

திருப்பரங்குன்றத்தின் மலையுச்சியில் காசி விசுவநாதர் கோயிலுக்கு முன் உள்ள பெரிய பாறையில் சமணச் சிற்பங்கள் உள்ளன. பாறையின் மீது பாகுபலியின் உருவமும், பார்சுவ நாதரின் உருவமும், புடைப்புச் சிற்பங்களாகக் காட்டப் பட்டுள்ளன. காசி விசுவநாதர் கோயிலுக்குள் சுனையருகே புடைப்புச் சிற்பமாக இருந்த சமணச் சிற்பங்கள் அழிக்கப் பட்டுள்ளன. மலையின் தெற்குப்பகுதியில் (தென்பரங்குன்றில்) ஒரு பெரிய சமணச் சிற்பம் பிற்காலத்தில் பைரவராக மாற்றம் பெற்றிருக்கிறது (நிழற்படம் காண்க). மலையின் வடமேற்கில் பழனியாண்டவர் கோயிலுக்குப் பின்புறம் சிறிய சுனையும் அதற்கருகில் மகாவீரர், பார்சுவநாதர் சிற்பங்களும் உள்ளன. இச்சிற்பங்களுக்கு அடியில் இச்சிற்பங்களை அமைத் தவர்களின் பெயர்கள் வட்டெழுத்தில் பொறிக்கப் பட்டுள்ளன, வெண்டி நாட்டுக்குறண்டி என்ற ஊரிலிருந்த சமணப்பள்ளியிலிருந்து வந்த மாணவர் ஒருவரின் பெயர் ஒரு சிலையின் அடியில் பொறிக்கப்பட்டுள்ளது. மற்றொரு சிலையின் அடியில் பலதேவன் என்ற சமணத்துறவி ஒருவரின் பெயர் குறிப் பிடப்பட்டுள்ளது.[31] இவை 9,10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வையாக இருக்கலாம். இங்குள்ள சிற்பங்களைப் பார்சுவநாதர், சுபார்சுவநாதர் உருவங்கள் எனக் குறிப்பிடுவர்.[32] கி. பி. ஆறாம் நூற்றாண்டு அளவில் சமணத் துறவிகள் மக்களிடையே பெருஞ் சிறப்புப் பெற்றனர். அந்தக் காலகட்டத்தில்தான் மலைகளில் சமணத் தீர்த்தங்கரர்களின் சிலைகளை அமைத்து வழிபடும் வழக்கம் ஏற்பட்டுள்ளது.[33] கி. பி. ஐந்தாம்

---

29. தகவல்: ஒய். சுப்பராயலு, கள ஆய்வு நாள்: 25-5-1981
30. மயிலை. சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும் ப. 35
31. செ. போசு, திருப்பரங்குன்றம், ப. 128
32. P.B. Desai, Jainism in South India, P. 56.
33. K. G. Krishnan, Studies in South Indian History and Epigraphy, P.107

நூற்றாண்டு முதல் ஏழாம் நூற்றாண்டு வரை சமணர்கள் பெருஞ்சிறப்புடன் தமிழகத்தில் விளங்கினர்.[34] சங்ககால மக்கள் சமய வாழ்விலே சமண பௌத்தரின் செல்வாக்கு மிகவும் குறைவாகவே இருந்ததென்பது தெளிவு. அவர் செல் வாக்குச் சிறிது சிறிதாகப் பெருகி, ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் உச்சநிலையை அடைந்தது.[35] இவ்வாறு சமண சமயம் உச்ச நிலையில் இருந்த காலத்தில்தான் பரங்குன்றின் மலையுச்சியிலும், தென்பரங்குன்றிலும் சமணச் சிற்பங்கள் செதுக்கப்பட்டு வழிபடப்பட்டு வந்துள்ளன. ஏழாம் நூற்றாண் டின் பிற்பகுதியில் வைதீக சமயத்தின் மறுமலர்ச்சியாலும், சமயக் குரவர்கள் நடத்திய சமயப்புரட்சியினாலும் இங்கிருந்த சமண சிற்பங்களும் கோயில்களும் வழிபாடிழந்து அழிக்கப் பட்டும், திருத்தியமைக்கப்பட்டும் மாறியமையத் தொடங்கின. எனினும் திருப்பரங்குன்றில் சமண சமயம் ஏழாம் நூற்றாண் டோடு முற்றும் அழிந்து விடவில்லை. ஒன்பது, பத்தாம் நூற் றாண்டு வரையில் இருந்து பின்னர் மறைந்துள்ளது. சமணர் களின் எண்பெருங்குன்றத்தில் ஒன்றாயிருந்த பரங்குன்றம், திரு ஞானசம்பந்தர் காலத்தில் பாண்டியநாட்டுத் தேவாரப் பாடல் பெற்ற பாண்டி பதினான்கு தலங்களுள் ஒன்றாக மாறியது.[36] தனியுடைமையை அடிப்படையாகக் கொண்டு சைவமும் வைணவமும் செழித்தோங்கியபடியால்தான் உடைமைகளுக்கு எதிராக இருந்த சமண பௌத்த சமயங்களுடன் மோதின. சமண, பௌத்த சமயங்களில் அழிவுக்கான காரணங்களை ஆய்ந்தறிந்த க. கைலாசபதி தம் நூலில், அக்காலச் சமய இயக்கங்களை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார். "ஓயாத போர், கொள்ளை, மரணம், கட்டுப்பாடற்ற ஆண் பெண் உறவு, மிதமிஞ்சிய மது, மாமிச ஊண் முதலியவற்றின் இருப் பிடமான புராதனத் தமிழகம், சமணம், பௌத்தம் ஆகியன

34. T. V. Veerasami, 'The Social and Cultural life of the Tamil, South Indian Culture and Tourism, A. V. Jeyachandran, (Ed.)P.94.
35. சு. வித்தியானந்தன், மு. நூ. ப. 171.
36. "கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெல்வேலி இராமேசம்—ஆடானை
தென்பரங்குன்றம் சுழியல் தென்திருப்புத்தூர் கானை
வன்கொடுங்குன்றம் பூவணம்"
(பெருந்தொகை, கடவுள் வாழ்த்தியல் பாட்டு எண். 872).

கொண்டுவந்த சாந்தம், சமாதானம், ஒழுக்கம், பெண் வெறுப்பு, அறநெறி, கட்டுப்பாடு, புலால், மது வெறுப்பு, பொருளாசை வெறுப்பு முதலிய பண்புகளைத் தொடக்கத்தில் இலகுவாகவும் விருப்பத்துடனும் ஏற்றது. காலத்தின் தேவையை வந்த சமயங்கள் நிறைவேற்றின. எனினும் இதே துறவறச் சமயங்கள் ஒழுங்கு, ஒழுக்கம் என்னும் அடிப்படையில் மன்னருக்கு ஆதரவு அளித்துத் தமது பள்ளிகள், விகாரைகள் முதலியவற்றிற்காகப் பெரும் அளவில் பொருளும் நிலமும் சேர்த்தபோது, தமது முற்போக்கையிழந்த போது அது தமிழக மக்களுக்குச் ''சுமை''யாக மாறியது. பள்ளிகள் பெரிய நிலவுடைமை நிறுவனங்களாக மாறின. சமணத்தையும் பௌத்தத்தையும் சிறப்பாக ஆதரித்தவர் அக்காலத் தமிழக வணிக வர்க்கத்தினர். ஏனெனில் பலம் வாய்ந்த அரசாட்சியில் பொருளீட்டி வாணிபஞ் செய்யும் வாய்ப்பு இருந்தது. அதே சமயத்தில் கொல்லாமையையும் கடைப்பிடிக்க முடிந்தது. நிதிக் குப்பை நிறைந்த செல்வர் சமணத்தை ஆதரிப்பதைச் சிலப்பதிகாரம் காட்டும். சமண பௌத்தப் பள்ளிகள் பெரும் நிலவுடைமை நிறுவனங்களாகிச் செல்வாக்குப் பெற்றிருந்ததைப் பல்லவ அரசன் மகேந்திரவர்மன் எழுதிய அங்கத நாடக நூலாகிய ''மத்த விலாசப் பிரகசனம்'' என்னும் நூல் மூலம் அறியலாம். தமது செல்வாக்கினால் அவர்கள் (சமண பௌத்தர்) நீதிபரிபாலனத்திற்கூடத் தலையிட்டனர் எனத் தெரிகிறது.[37] சமண பௌத்த சமயங்களின் அரசியல் தலையீடும், பேராசையும் பின்னர் இந்து சமயம் என்ற பெயரில் வந்த வைதீக சமயத்தின் மறுமலர்ச்சியால் தமிழ்நாட்டில் அழிந்து ஒழிந்து இச்சமயங்கள் தமிழ்நாட்டில் இல்லாமல் போயின. தமிழ்நாட்டுச் சமய வரலாற்றில் ஏற்பட்ட இந்நிலையைப் பரங்குன்றத்திலும் காணமுடிகிறது.

**இந்து சமயம் (வைதீக சமய மறுமலர்ச்சி)**

பண்டைக் காலத்தில் வட நாட்டினின்று சமணம், பௌத்தம், வைதீகம் முதலிய மதங்கள் தமிழ்நாட்டிற்கு வருவதற்கு முன்னரே, தமிழர் 'திராவிட' மதத்தைக் கொண்டிருந்தனர். அந்தத் திராவிட மதம் என்பது முருகன், கொற்றவை, சிவன், திருமால் முதலிய தெய்வங்களை வணங்கும் வழிபாடு

37. க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 31-32.

ஆகும். அக்காலத்து வைதிகப் பிராமணர் தம் வேள்விகளில் ஆடு, மாடுகளைக் கொன்று வந்தது போலவே அந்தக்காலத்துத் தமிழரும் முருகன், கொற்றவை முதலிய தெய்வங்களுக்கு ஆடு கோழிகளைப் பலியிட்டு வணங்கி வந்தனர். உயிர்ப் பலியிடு வதைப் பொறுத்தவரையில் திராவிட மதமும் வைதிக மதமும் ஒற்றுமை கொண்டிருந்தன. குறுகிய நோக்கமும், குறுகிய கொள்கையும் உடைய வடநாட்டு வைதிகமதம், தென்னாட்டில் செல்வாக்கின்றி ஒதுக்கப்பட்டிருந்தது. ஒதுக்கப்பட்டுக் கிடந்த இந்த மதம் பௌத்த சமண மதங்களைப் போலச் செல்வாக்குப் பெற முயன்றது. இவ்விரண்டு மதங்களையும் அடக்கி ஒடுக்கத் தமிழர் வழிபட்டு வரும் திராவிட மதத்துடன் வைதிக மதம் கலந்து கொண்டு பொதுமக்களின் ஆதரவைப்பெற முற்பட்டது. திராவிட வைதிகத் தொடர்பை உறுதிப்படுத்திக் கொள்ளும் பொருட்டு, திராவிடத் தெய்வங்களுக்கும் வைதிகத் தெய்வங் களுக்கும் புதிய தொடர்புகளையும் உறவுகளையும் கற்பித்துக் கொண்டது. தமிழ் முருகனுக்கு சுப்பிரமணியன், கந்தன் முதலான புதுப் பெயர்களைச் சூட்டி, வள்ளி என்னும் ஒரு தமிழ் மனைவி யோடிருந்த அத்தெய்வத்திற்குத் தெய்வயானை என்னும் ஆரிய வைதிகப் பெண்ணொருத்தியை இரண்டாம் மனைவியாகக் கொடுத்து ஆரிய திராவிடத் தொடர்பை உறுதிப்படுத்திக் கொண்டது. சிவன் என்னும் திராவிடத் தெய்வம் உருத்திரன் என்ற வைதிகத் தெய்வத்துடன் பொருத்தப்பெற்று இரண்டும் ஒன்றே என்று கற்பிக்கப்பட்டது. 'சிசன தேவர்' என்று வைதிகப் பார்ப்பனரால் ஆதிகாலத்தில் இருந்துரைக்கப்பட்ட சிவலிங்க உருவம், திராவிட வைதிக உறவின் பிறகு உயர்ந்த தெய்வமாக வைதிக மதத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. கொற்றவையைச் சிவனுடைய மனைவியாக்கி விட்டனர். (ஆனால் மலையாள நாட்டில் கொற்றவையை (காளியை)ச் சிவனுடைய மனைவியாக்க உடன்படாமல், இன்றும் சிவனுடைய தங்கையாகவே கருதி வருகின்றனர்). கொற்றவை, காளி, துர்க்கை இவர்களெல்லாம் பார்வதியின் வெவ்வேறு அம்சங்கள் என்று கற்பிக்கப்பட்டன. பார்வதிக்கும் சிவனுக்கும் ஆறுமுகன் மகனாகப் பிறந்தான் என்றும் மற்றும் பல கதைகளும் கற்பிக்கப்பட்டன. மாயோனாகிய திருமால் என்னும் திராவிட தெய்வத்துடன் வைதிகத் தெய்வங்களாகிய விஷ்ணு, சூரியன் இவைகள் பொருத்தப்பெற்றுப் புதிய தொடர்புகளும், கதை களும் கற்பிக்கப்பட்டன. இந்திரன், சந்திரன், பலதேவன், சூரியன் முதலிய சில தெய்வங்கள் மறைக்கப்பட்டு மறக்கப்

பட்டன. விநாயகர் (பிள்ளையார்) முதலிய புதிய தெய்வங்கள் புதிதாகக் கற்பிக்கப்பட்டன. இவைகளுக்கு ஏற்றமுறையில் புதிது புதிதாகப் புராணங்கள் கற்பித்து எழுதப்பட்டன. இவ்வா றெல்லாம் திராவிட மதமும், வைதீக மதமும் ஒன்றோடொன்று கலக்கப் பெற்று வைதீகமும் இல்லாததாய், திராவிடமும் அல்லாததாய் இரண்டும் கலந்ததொரு புதிய மதமாக மாறிற்று. இவ்வாறு தோன்றிய மதம்தான் இந்து மதம். இவ்வாறு புதிய உருவம் அடைந்த 'இந்து' மதத்திற்கு நாட்டிலே சிறிது செல் வாக்கு ஏற்படத் தொடங்கியது. ஏனென்றால் பெருந்தொகை யினரான திராவிடக் கொள்கையுடைய தமிழரும் சிறுதொகை யினரான வைதீகக் கொள்கையுடைய பிராமணரும் இந்தப்புதிய இந்து மதத்தில் சேர்ந்திருந்தனர். ஆயினும் புதிய 'இந்து' மதம் அதிக செல்வாக்குப் பெறவில்லை. பின்னர் 'இந்து' மதத்தில் பக்தி இயக்கம் தோன்றியது. இந்த பக்தி இயக்கம்தான் இந்து மதத்திற்கு புத்துயிரையும் புதிய ஆற்றலையும் பெருஞ்செல்வாக் கையும் தந்தது என்பர்.[38] "இந்துமத வளர்ச்சியிற் குறிப்பிடக் கூடிய ஒன்று யாதெனில், அது பிற மத நம்பிக்கைகளையோ வழிபாட்டு முறைகளையோ கண்டனஞ்செய்து முற்றாக ஒதுக் காமையாகும். இயன்றவரையில் பிறமதக் கடவுளரோடும் வழிபாட்டு முறைகளோடும் தன் கடவுளரையும் வழிபாட்டு முறைகளையும் இணைத்துச் சிறிது சிறிதாகத் தன் செல்வாக்கை நிலைநாட்டல் இந்து மத வரலாற்றில் பன்முறை நடந்தது. இந்து மதத்தில் புராணக் கதைகளும் கடவுளரும் கடவுளர் மூர்த் தங்களும் நிறைய இருப்பதற்கு இதுவும் ஒரு காரணம் என்பர்.[39] பல்லவர் காலத்திற்கு முன்பு வைதீகநெறி தமிழ் நாட்டிற் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்ததெனக் கொள் வதற்கு வரலாற்றில் இடமில்லை. வைதீக சமயம் பழந்தமிழர் சமயத்தோடு சேர்ந்திருந்ததனால், வைதீக சமயமே மறுமலர்ச்சி பெறுவதாகக் கொள்ள முடிந்தது. எனவே பல்லவர்காலச் சமய மறுமலர்ச்சியில், பழந்தமிழர் சமயம் வென்றது, வைதீக சமயம் வென்றது, பௌராணிக சமயம் வென்றது எனப் பலவாறு கூறலாம். வைதீக சமயம் பழந்தமிழர் சமயம், பௌராணிக சமயம் என்ற மூன்றும் கலந்த நிலையில் உருவான பக்தி

---

38. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 57-60.
39. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 96.

மார்க்கமே பல்லவர் காலத்தில், சமண பௌத்தங்களை வென்று வாகை சூடியுள்ளது.[40] தமிழ்நாட்டின் வடபகுதியில் பல்லவர்களும், தென்பகுதியில் முதல் பாண்டியப் பேரரசர்களும் களப்பிரர் என்ற வேற்றரசு ஆட்சியை ஒழித்ததோடு, இந்து சமயம் என்ற வைதீக சமய மறுமலர்ச்சிக்கு உயிர் ஊட்டினர். இக்காலகட்டத்தில் மதுரைப் பகுதியைப் பற்றி அறிந்துகொள்ள முதல் பாண்டியப் பேரரசின் வரலாறு துணை செய்கின்றது.

**முதல் பாண்டியப் பேரரசுக் காலம்** (கி.பி. 550 முதல் 950 வரை)

சங்ககாலப் பாண்டிய அரசிற்குப் பிறகு வேற்றரசு ஆட்சி (களப்பிரர்) தமிழகத்தில் நடந்தது. அதன் பின்னர்த் தோன்றிய பாண்டியப் பேரரசு முதல் பாண்டியப் பேரரசு என்று குறிக்கப்படுகிறது. இக்காலத்தில்தான் திருஞானசம்பந்தர் இங்கு வந்து இங்குள்ள சிவன் கோயிலைப் பாடியுள்ளார். கி. பி. 570 முதல் 655 வரையுள்ள காலமே தேவார முதல்வராகிய அப்பர், சம்பந்தர் காலமென்று கூறுவர்.[41] எனவே கி. பி. ஆறு, ஏழாம் நூற்றாண்டளவில் திருப்பரங்குன்றம் சிவன் கோயிலாக மாற்றம் பெற்று அப்பர், சம்பந்தரால் பாடப்பெற்ற தேவாரத் திருப்பதியாகியது. இது பின்னர் பாண்டி நாட்டுப் பாடல் பெற்ற தேவாரத் திருப்பதிகள் பதினான்கனுள் ஒன்றாகச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. 'தேவாரப் பாடல் பெற்ற திருப்பதிகளின் சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தால், அப்பதிகளில் அக்காலத்தில் பௌத்தரும், சமணரும் குடியிருந்ததையும், பௌத்த சமணப் பள்ளிகளும் அங்கிருந்ததையும் அறியலாம் என்பர்.[42] இக்கருத்து தேவாரப் பாடல் பெற்ற திருப்பரங்குன்றத்துக்கு மிகவும் ஏற்புடையதாகவுள்ளது. "தற்பொழுதுள்ள குடைவரைக்கோயில் (சிவன் கோயில்) எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது. திருஞானசம்பந்தர் ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். ஆகவே அவர் இக்குடைவரைக் கோயில் ஏற்படுவதற்கு முன் இருந்த ஒரு சிவன் கோயிலைத்தான்

---

40. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 97
41. கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு, ப. 279.
42. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 66.

பாடியிருக்க வேண்டும். திருஞானசம்பந்தர் காலத்தில் பாண்டிய நாட்டில் குடைவரைக் கோயில் இருந்ததாகக் கூற இயல வில்லை'' என்பர்.[43] திருப்பரங்குன்றத்தின் வடதிசையில் இன்றுள்ள குடைவரைக்கோயில் முதலாம் பாண்டியப் பேரரசில் வந்த பாண்டியனால் ஏற்படுத்தப்பட்டது. வேற்றரசை வென்று அடக்கிய கடுங்கோன் பாண்டியன் வழியில் வந்த ஏழாவது அரசனான நெடுஞ்சடையன் பராந்தகனால் (765-790) கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்டது. சைவப் பற்றுடைய பாண்டியர் மரபிலே அவன் பரம வைணவனாக விளங்கினான். அவனை,

> ''பரம வைஷ்ணவன் தானாகி நின்றிலங்கு
> மணிநீன்முடி நிலமன்னவன்''

என்று சீவரமங்கலச் செப்பேடுகள் கூறுகின்றன. அவனே பெரியாழ்வாரால் ஆட்கொள்ளப்பட்டவன். பெரியாழ்வார் காலத்தைச் சேர்ந்தவன். ''பல்லவர்கள் தமிழகத்தின் வட பகுதியை ஆண்டபோது, பாண்டியர்கள் தென்பகுதியை ஆண்டனர். இவர்களும் ஏராளமான மலைகளைக் குடை வித்து மண்டபக் கோயில்களை எழுப்பியுள்ளனர். இவர்களது கோயில்கள் திருமெய்யம், திருக்குன்றக்குடி, மலையடிப்பட்டி, குன்னாண்டார் கோயில், குடுமியாமலை, கழுகுமலை, திருப்பரங்குன்றம், ஆனைமலை, திருமால்புரம் முதலிய ஊர்களில் காணப்படுகின்றன,[44]

திருப்பரங்குன்றத்தில் வடக்கு நோக்கிய குடைவரைக் கோயிலில் கணபதி கோயில் நிலையில் ஒரு வடமொழி கிரந்தக் கல்வெட்டும், துர்க்கை கோயில் நிலைக்கருகில் ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டும் காணப்படுகின்றன. இவை யிரண்டும் இக்குடைவரைக் கோயில்கள் அமைக்கப் பெற்ற வரலாற்றைக் கூறுவன.

வடமொழிக் கிரந்தக் கல்வெட்டு கலியாண்டு 3874, தை அரசனது ஆறாம் ஆட்சியாண்டைக் குறிக்கிறது. சாமந்த பீமன் என்பான் சம்பு (சிவன்) கடவுளுக்குக் கோயில் கட்டியதைக் குறிக்கிறது. இச்சாமந்த பீமன் ஒரு 'வைத்திய முக்யன்' என்றும் கூறப்பட்டுள்ளது. துர்க்கை கோயிலின்

43. தகவல்: கே. ஜி. கிருட்டிணன், மைசூர், கள ஆய்வு நாள்: 4.6.83.
44. இரா. நாகசாமி, தமிழகக் கோயிற்கலைகள், ப. 57

நிலைப் பக்கமுள்ள வட்டெழுத்துத் தமிழ்க் கல்வெட்டு, கோமாறஞ்சடையனின் (நெடுஞ்சடையன் பராந்தகன்) ஆறாம் ஆட்சி ஆண்டிற்குரியது.[45] கோமாறஞ்சடையனது மகாசாமந்தன் ஆகிய கரவந்தபுர ஆதிவாசி வைத்தியன் பாண்டி அமிர்தமங்கலவரையனான சாத்தன் கணபதி என்பவன் திருக்கோயிலையும், ஸ்ரீ தடாகத்தையும் இதனுள் அறமுள்ளதையும், திருத்துவித்தான். அவனது தர்மபத்தினியாகிய நக்கன்கொற்றி என்பவளால் செய்யப்பட்டது துர்காதேவி கோயிலும், சேட்டை கோயிலும் என்று கூறுகிறது.

வட்டெழுத்துத் தமிழ்க்கல்வெட்டுக் குறித்து எவ்வித ஐயமும் இல்லை. வடமொழிக்கிரந்தக் கல்வெட்டு பற்றிச் சில ஐயங்கள் தோன்றியுள்ளன. முன்னால் இதை வாசித்தவர். "பரமசிகரினில் தான் குடைவித்த சிவன் கோயிலில் சாமந்தன் ப்மா என்பவன் கணபதி உருவச்சிலையை எழுந்தருள் வித்தான்"[46] என்று பொருள் கூறினர். இக்கல்வெட்டு மீண்டுமொருமுறை வாசிக்கப்பெற்றுப் பொருள் விளக்கப் பட்டுள்ளது.[47] புதிய விளக்கத்தின்படி, இவ்விரண்டு கல்வெட்டுக்களும் சாத்தன்கணபதி என்பானொருவன் செய்த ஒரே காரியத்தைத்தான் குறிக்கிறது என்பது தெரியவருகிறது. இவ்விளக்கத்தில் கணபதி கோயிலை யார் செய்தது என்ற செய்தியைக் காண்பதற்கில்லை. "இவ்விரு கல்வெட்டுக்கும் இருவேறு காலங்களில் இரு வேறு ஆட்கள் செய்த திருப்பணியைக் குறிக்கிறது. ஆகவே இவையிரண்டும் இருவேறு மொழிகளில் வெட்டப்பட்டுள்ளன" என்பர்.[48] "இவ்விரு கல்வெட்டுகளும் ஒரே காலத்தவை, ஒருவனால் (சாத்தன் கணபதி) வெளியிடப்பட்டவை. இக்கல்வெட்டுகளின்படி சம்புகோயில் (சிவன்) துர்க்கை, சேட்டை கோயில், ஸ்ரீ தடாகம் ஏற்படுத்தப்பட்டது தெரிகிறது. இக்கோயில் சிவன் கோயில் தான். மூலவர் கிழக்கு நோக்கியே உள்ளது. துர்க்கை எப்பொழுதும் வடக்கு நோக்கியே இருக்கும். அதுபோல இங்கும் துர்க்கை வடக்கு நோக்கியுள்ளது. திருமால் மேற்கிலோ, மேற்கு நோக்கியோ இருப்பது வழக்கம். இங்கு மேற்கு

45. S. I. I. Vol. XIV, No.3.
46. ARE 143 of 1951-52.
47. Epigraphica Indica, Vol. XXXVI, No. 15.
48. முத்துக்கோனார், மதுரை வரலாற்றுக்கழகம் (கையெழுத்துப்படி), ப. 6.

நோக்கி அமைந்துள்ளது. திருமால், கணபதி, முருகன் உருவங்கள் பிறகு ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் இவைகள் யாரால், எக்காலத்தில் ஏற்படுத்தப்பட்டவை என்பதற்குச் சான்றுகள் கிடைக்கவில்லை'' என்பர்.[49]

இங்குள்ள வட்டெழுத்துத் தமிழ்க் கல்வெட்டில், ''சாத்தன் கணபதி திருத்துவித்தது திருக்கோயிலும், ஸ்ரீ தடாகமும்'' என்ற தொடர் காணப்படுகிறது. இதிலுள்ள 'திருத்துவித்த' என்ற சொல் இங்குப் பலவித ஐயங்களை கிளப்பியது. ''இந்து சமய எழுச்சிக்காலத்தில் இருவேறு வகைகளில் கோயில்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒன்று முன்புள்ள சமணக் கோயில்களைச் சைவக் கோயில்களாகவோ வைணவ கோயிலாகவோ மாற்றி யமைப்பது; இரண்டு சமணக் கோயில்கள் உள்ள மலைகளிலே சைவ, வைணவக் கோயில்களைப் புதிதாக ஏற்படுத்துவதாகும். மலையடிக் குறிச்சிக் கோயிலை முதல் வகைக்கு உதாரணமாகக் கூறலாம். ஏனெனில் இங்குள்ள 'திருத்துவித்த' என்ற சொல் remodelled, of 'converted' என்ற பொருளைத் தரக் கூடியது என்பர்.[50] இக்கருத்தை அப்படியே ஏற்றுக் கொண்ட ஆ. வேலுப்பிள்ளை 'திருத்துவித்த' என்ற சொல்லுக்கு 'remodelled' 'corrected' 'reformed', 'converted' என்று பல பொருள்கள் உண்டு. கல்வெட்டுக்களில் மாற்றம் பற்றிக் குறிப்பிடும் பொழுது, 'திருத்துவித்த', 'புதுக்கி' போன்ற சொற்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆகவே திருப்பரங் குன்றம் கோயில் சமணக் கோயிலாக இருந்து மாற்றம் பெற்ற கோயிலேயாகும் என்பர்.[51]

''இங்குள்ள வடமொழி கிரந்தக் கல்வெட்டில் U(t) Kiryya'' என்ற சொல் வந்துள்ளது. இதன் பொருள் 'கல்லைச் செதுக்கி' என்பதாகும். அதனால் வட்டெழுத்துத் தமிழ்க்கல்வெட்டில் வந்துள்ள 'திருத்துவித்த' என்பது 'பாறையைத் திருத்திச் செய்யப்பட்டது' என்பதுதான் பொருளேயன்றி, remodelled' 'converted என்பது பொருளல்ல என்று கே. ஆர். சீனிவாசன், ஆ. வேலுப்பிள்ளை ஆகியோரின்

49. தகவல்: கே. ஜி. கிருட்டிணன், மைசூர், கள ஆய்வு நாள் 4.6.83.
50. K. R. Srinivasan, Malaiyadi K. Kurichi Pandya cave temple and inscriptions (14 pages typed copy).
51. A. Veluppillai, Epigraphical Evidences for Tamil Studies, pp. 136-137.

கருத்தை மறுக்கிறார். கே. ஜி. கிருட்டிணன். ஆகவே இது சமணக் கோயிலாக இருந்து மாற்றம்பெற்ற கோயில் அல்ல, சிவனுக்காகவே புதிதாக ஏற்படுத்தப்பட்டது என்பது இவர் கருத்து.[52] காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயில் முன்பு சமணக் கோயிலாக இருந்தும் தாராசுரம் கோயில் முன்பு பௌத்தக் கோயிலாக இருந்தும் மாற்றம் பெற்றுள்ளன. திருப்பருத்திக்குன்றம் (சமணக் கோயில்) சைவக் கோயில் போன்ற அமைப்பையே உடையது. இதுபோலச் சமணக் கோயில்கள் சைவ, வைணவக் கோயில்களாகவும், சைவக் கோயில்கள் சமணக் கோயில்களாகவும் முன்பு மாற்றம் பெற்றுள்ளன. ஆகவே திருப்பரங்குன்றத்திலும் இது போன்ற மாற்றம் ஏற்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை என்பர்.[53]

இவ்விரு கல்வெட்டுச் செய்திகளின்படி பார்க்கும்பொழுது இம்மன்னன் காலத்திற்கு முன்பே இங்குக் கோயில் இருந்தது தெரிய வருகிறது. அது சமணக் கோயிலா அல்லது சைவக் கோயிலா என்பது தெளிவாகத் தெரியவில்லை. இம்மன்னனின் மாசாமந்தனான சாத்தன் கணபதி என்பவன் முன்பிருந்த திருக் கோயிலுக்குத் திருப்பணி புரிந்து திருக்குளத்தை திருத்தி அமைத்து அறச்செயல்களை ஒழுங்குபடுத்தினான் என்று கொள்வது பொருத்தமாக உள்ளது. இவனுடைய மனைவி நக்கன்கொற்றி என்பாள் துர்க்கைக்கும், சேட்டைக்கும் வெவ்வேறு கோயில் அமைத்தாள் என்பதில் யாருக்கும் ஐயமில்லை. சாத்தன்கணபதி திருப்பரங்குன்றத்தில் சிவபிரானுக்குக் கோயில் அமைத்துத் தன் வேந்தனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் கடவுள் மங்கலஞ் செய்தான் என்பர் தி. வை. சதாசிவபண்டாரத்தார்.[54] இவன்தான் முதன்முதலில் இங்குக் கோயில் அமைத்தான் என்பதற்குச் சான்றுகள் கல்வெட்டில் தெளிவாக இல்லை. முன்பிருந்த கோயிலைத் திருத்தியமைத்தான் என்பதே பொருத்தமாகக் காணப்படுகிறது. இக்கல்வெட்டுகள் பற்றி அறிஞர்களிடையே மேற்கண்ட இருவேறு கருத்துக்களும் நிலவி வருகின்றன. இன்னும் சான்று களும், மெய்ம்மைகளும் கிடைத்தாலொழிய இவ்வரலாற்றைத்

52. தகவல்: கே. ஜி. கிருட்டிணன், மைசூர், கள ஆய்வு நாள்: 4-6-83
53. தகவல்: வை. கணபதி ஸ்தபதி, கள ஆய்வு நாள்: 30.6.82
54. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் பாண்டியர் வரலாறு, ப. 54.

தெளிவாக அறுதியிட்டுச் சொல்ல இயலாது. இக்குடைவரைக் கோயில் பாண்டியர்களின் குடைவரைக் கோயிலான திருச்சிராப் பள்ளிக் குடைவரைக் கோயில் போன்ற அமைப்பில் உருவாக்கப் பட்டுள்ளது என்பர். 55 (வரைபடம் எண். 4). இக்கல் வெட்டுக்கள் இரண்டும் வரலாற்றுச் சிறப்புமிக்கவை. தொடக்க காலப் பாண்டியர் கல்வெட்டுக்களில் தேதியுடன் கூடிய முதல் கல்வெட்டு ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயில் கல்வெட்டு (ARE 453 of 1906) ஆகும். அது முதலாம் மாறஞ் சடையன் ஆன நெடுஞ்சடையன் பராந்தகனுடையது. இதில் கலியாண்டு 3871 (கி.பி. 770) குறிக்கப்பட்டுள்ளது. இதே மாறஞ் சடையனது ஆறாவது ஆட்சியாண்டிற்குச் சரியான கலியாண்டு 3874 (கி.பி. 773-774) கல்வெட்டுத்தான் சாத்தன் கணபதி வெளி யிட்டுள்ள திருப்பரங்குன்றக் கல்வெட்டு. இதிலிருந்து நெடுஞ் சடையன் பராந்தகன் ஆட்சித் தொடக்கம் கி.பி. 768 என்பதறியப்படுகிறது. எனவே தொடக்ககாலப் பாண்டியர் கால அளவு எல்லைக்கு ஆனைமலைக் கல்வெட்டைக் காட்டிலும் திருப்பரங்குன்றம் கல்வெட்டு அதிகச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. 56

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர் திருப்பரங்குன்றத்துச் சிவபெருமானைப் பாடியுள்ளார். ஆனால் முருகனைப் பாடவில்லை. எனவே சம்பந்தருக்குப் பின்னே முருகன் கோவில் உண்டாயிற்று என்று கூறலாம். பரிபாடலில் அம்முருகனைப் பற்றிய பாடல்கள் இருத்தலால் அப்பாடல் களின் காலம் ஏறத்தாழக் கி.பி. 700 எனலாம் என்பர்.57 திருப் பரங்குன்றம், புள்ளிருக்கு வேளூர் என்ற இரு ஊர்களும் தேவாரப் பாடல்கள் பெற்றுள்ளன. ஆனால் இவ்விரு ஊர் களிலும் தேவாரகாலத்தில் சுப்பிரமணியர் கோயில் இருந்ததாக கொள்வதற்கில்லை என்பர். 58 பரங்குன்று பற்றிப் பலபடப் பாடிய பரிபாடலில் முருகன் கோயில்தான் கூறப்பட்டுள்ளதே தவிர இக்கோயில் (சிவன் கோயில்) பற்றிய குறிப்புக்கள் இல்லை. இக்காலகட்டம் வரை வந்துள்ள கல்வெட்டுச் செய்தி களில் முருகன் பற்றிய குறிப்புக்கள் கிடைக்கவில்லை. ஆகவே

---

55. K. R. Srinivasan, Temples of South India, pp. 56-57
56. முத்துக்கோனார், திருப்பரங்குன்றம் (கையெழுத்துப் படி), ப. 4.
57. S. Vaiyapuri pillai, History of Tamil Language and Literature, p. 113.
58. H. Krishna Sastri, S.I I. Vol. II (introduction), p.36.

பரிபாடலின் காலத்தை இம்மன்னன் ஆட்சியாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் தோன்றியதாக இருக்கலாம் என்பர். [59] திருப்பரங்குன்றத்தில் சிவனைப் பாடிய சம்பந்தர் அங்குள்ள முருகனைப் பாடவில்லை என்பது இன்றுள்ள திருப்பதிகத்தின் வாயிலாகத் தெரிகிறது; அவர் பரங்குன்றத்தைப் பற்றிப் பாடிய ஒரே பதிகம்தான் கிடைத்துள்ளது. சம்பந்தர் பாடவில்லை என்பதனால், அவர்காலத்தில் திருப்பரங்குன்றத்தில் முருகன் கோயில் இல்லையென்று கூறுவது பொருந்தாது. ஏனெனில் அகநானூறு 59-ஆம் பாடலும், 149-ஆம் பாடலும், சங்க காலத்திலேயே திருப்பரங்குன்றத்தில் முருகன் கோயில் இருந்ததை மெய்ப்பிக்கின்றன. அன்றியும், கோயிலில் அக் காலத்தில் ஓய்வின்றி விழாக்கள் நடைபெற்றமையையும் இப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. எனவே திருப்பரங்குன்றத்தில் முருகன் கோயில் சங்க காலத்திலேயே இருந்தது என்பது தெளிவு. [60] மேலும் பரிபாடல், திருமுருகாற்றுப்படை கலித்தொகை, மதுரைக் காஞ்சி ஆகிய இலக்கியங்கள் சிறப்பித்துக் கூறுவதும் முன்பிருந்து அழிந்துபட்ட தொன்மையான முருகன் கோயிலைத்தான் என்று எண்ண வேண்டியுள்ளது.

கொற்றவையும், சேயோனும் (முருகன்) பழம் பெருந்தெய்வங்களாக இருந்தமையாற்றான் சிவவழிபாடு சிறப்புற்ற காலையில் கொற்றவை சிவனின் சக்தியான மலைமகளாகவும், முருகன் ஆலமர்ந்த கடவுளின் மகனாகவும் புதிய உறவுமுறையும், குலமுறையும் பெறுகின்றனர். தமிழ்நாட்டிலே சிவவழிபாடு பெருவழக்குப் பெற முருக வழிபாடு குறைவதாயிற்று. [61] இராசசிம்மப் பல்லவன் காஞ்சியில் எழுப்பிய கைலாசநாதர் கோயிலின் கருவறையில் பின்புறச்சுவரில் சோமாஸ் கந்தப் படிவம் உள்ளது. அது போல முதற்பாண்டியப் பேரரசில் வந்த பராந்தக நெடுஞ்சடையன் காலத்தில் தோன்றிய இக் கோயிலும் சிவன் கருவறையில் பின்புறச்சுவரில் சோமாஸ்கந்தப் படிவம் உள்ளது. ''பல்லவர்கள், சைவசமயத்தைத் தழுவி

59. K. G. Krishnan, Two Pandya inscriptions from Tirupparankundrum (Epi. Indica. Vol. XXXVI, pp.114-117)
60. மா. இராசமாணிக்கனார். தமிழ்மொழி இலக்கிய வரலாறு, பக். 230-231.
61. சு. வித்தியானந்தன், மு. நூ., ப. 124

யிருப்பினும் முருகனை முற்ற ஒதுக்காது, சோமாஸ்கந்த வடிவத்தில் போற்றி வந்தனர் என்றும் குறிப்பிட்ட சில அரசர்கள் முருக பக்தியுடைவர்களாய்த் திகழ்ந்தனர் என்றும், முருக, கார்த்திகேய வழிபாடு முழுமையாக இணைந்தது என்றும் அறியமுடிகிறது''. [62] பல்லவர், பாண்டியர் காலத்தில் முருக வழிபாடு, சிவ வழிபாட்டுடன் இணைந்த நிலைமையை இங்குள்ள சோமாஸ்கந்த வடிவங்கள் காட்டி நிற்கின்றன. இந்தக் காலகட்டத்தில்தான் இத்திருக்கோயில் தேவாரம் பெற்ற தலமாக மாறியுள்ளது. சோமாஸ்கந்த வடிவத்தையும், இங்குள்ள பரங்கிரி நாதரையும் பிற்காலப் பாண்டியக் கல்வெட்டுக்கள் திருப்பரங்குன்றமுடைய நாயனார் என்றும், திருப்பரங்குன்றமுடையார் என்றும் (பிற்சேர்க்கை எண். 3) குறிக்கின்றன.

மதுரையில் முதலாம் பாண்டியப் பேரரசுக்காலம் கி.பி. 950 வரை நடைபெற்றது. பின்னர் கி.பி. 950 முதல் 1190 வரை சோழராட்சியின் கீழ் பாண்டியநாடு இருந்துள்ளது. மூன்றாம் குலோத்துங்கனால் நாட்டைப்பெற்ற மாறவர்மன் விக்கிரம பாண்டியன் கி.பி. 1190 வரை பாண்டிய நாட்டை குலோத்துங் கனுக்குக் கட்டுப்பட்டு ஆண்டான். அதன்பிறகு முதல் சடைய வர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1190-1218) அதைப் பெற்றுத் தொடர்ந்து சோழ அரசுக்குக் கட்டுப்பட்டு ஆட்சி நடத்திக் கொண்டிருந்தான்.

### பிற்காலப் பாண்டியர் காலம் (இரண்டாம் பாண்டியப் பேரரசுக் காலம் - கி.பி. 1190 முதல் 1310 வரை)

மூன்றாம் குலோத்துங்கன் கொங்கு நாட்டுக் கருவூரைக் கைப்பற்றி அங்குச் 'சோழ கேரளன்' என்ற பெயருடன் விசயா பிசேகம் செய்தான். அதன்பிறகு தனக்குக் கீழிருந்த பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையிலும் விசயாபிசேகம் செய்து கொள்ள விரும்பினான். ஆனால் இதற்குக் குலசேகர பாண்டி யன் மறுத்துவிடவே கி. பி. 1202-இல் குலோத்துங்கன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, மதுரையில் புகுந்து அங் கிருந்த மண்டபங்களையும், மாளிகைகளையும் இடித்தான். தான் எண்ணியவாறே பாண்டியர் தலைநகரான மதுரையில் 'சோழ பாண்டியன்' 'திரிபுவனவீர தேவன்' என்ற பெயரில்

62 ந. இராமலிங்கம், கந்தபுராண ஆராய்ச்சி (அறிஞர் பட்ட ஆய்வேடு) ப 88

வீராபிசேகம் செய்து கொண்டான். இப்போரில் ஆறககுருடைய மகதேசன் பொன்பரப்பினான் ராசராச வான கோவரையன் கலந்து கொண்டிருக்கிறான். மூன்றாங் குலோத்துங்கன் இவ்வி சயாபிசேகத்திற்கும், வீராபிசேகத்திற்கும் முன்பு தனக்கு மது ரையை வெற்றி கொள்ள உதவிய பாணன் ஒருவனுக்குப் பாண் டியன் என்று பெயர் கொடுத்துப் பாண்டியர் பட்டத்தைச் சூட் டினான் என்று அவனது மெய்க்கீர்த்தியில் குறிப்பிடுகின்றான். பாண்டியனைப் பெயர் மாற்றி பாணனுக்குப்பட்டஞ் சூட்டிய இச்செயலைத் தன் படைத்தலைவனாக விளங்கிய இவ் இராச ராசவான கோவரையன் பொன்பரப்பினான் மகதைப் பெருமா ளைக் கொண்டே குலோத்துங்கன் நடத்தினான். இதனை இவ் வாணனைப் புகழ்ந்து கூறும் தொண்டை மண்டலச் சதகவுரைப் பாடல்ஒன்றும் தனிப்பாடல் ஒன்றும்(பெருந்தொகை எண்.1191) எடுத்துக் கூறுகின்றது. மூன்றாம் குலோத்துங்கன் இராசராச வான கோவரையன் பொன் பரப்பினான் மகதைப் பெருமா ளுக்கே பாண்டியன் பட்டத்தை அளித்திருக்க வேண்டும் என்ப தில் ஐயப்படத் தேவையில்லை. ஏனெனில் மேற்கண்ட அவ னைப் புகழ்ந்து பாடும் பாக்கள் இதனை உறுதிப்படுத்துவ தோடு பாண்டிய நாட்டில் பல இடங்களில் அவனைப் பற்றிய பாடல்கள் கல்வெட்டுகளாகப் பொறிக்கப்பட்டிருப்பதும் இதனை உறுதிப்படுத்துகின்றது. புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள குடுமியான்மலைப் பாடல்கள் இவன் பாண்டியனை வெற்றி கொண்டதைத் தெரிவிக்கின்றன. இவ்வாணன் பட்டஞ் சூட்டப் பட்ட மதுரைக்கருகிலுள்ள திருப்பரங்குன்றத்திலும் இதே போன்ற பாடல்கள் கல்வெட்டுக்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன (ARE 255 to 259 of 1942). இங்கேயுள்ள வடமொழிச் சுலோ கம் ஒன்றில் இவன் 'சகல வித்யா சக்ரவர்த்தி' என்று புகழ்ந்து கூறப்படுகின்றான். (ARE 247 of 1942). இப்பரங்குன்றில் பொறிக்கப்பட்டுள்ள சில தமிழ்ப் பாடல்களில் 'வீரப்பெரு மாள் மகதேசன்' என்ற பெயரில் இவன் குறிப்பிடப்படுகின் றான். திருப்பரங்குன்றில் காணப்படும் மற்றொருபாடல் இவ் வாணன் மதுரை, காஞ்சி, கருவூர் முதலிய ஊர்களை வென்ற தாகக் குறிப்பிடுகின்றது. இந்நிகழ்ச்சிகள் கி. பி. 1202-க்குச் சிறிது முந்திய காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும். இச்செய லைக் குலோத்துங்கன் தனக்கு மதுரையில் முடிசூடிக் கொள்ள மறுத்த பாண்டியனை இழிவுபடுத்தும் நோக்கத்தின் அடையாள

மாகவே செய்து முடித்தான் என்பர்.[63] இவ்வரலாற்று நிகழ்ச்சி களைப் பரங்குன்றத்தின் நுழைவாயிலில் பாடல் வடிவில் அமைந்துள்ள வாணாதிராயர் கல்வெட்டுக்களால் அறிய முடிகிறது.

பின்னர் சடையவர்மன் குலசேகர பாண்டியன் குலசேகர புரம் என்ற ஊருக்கு விதித்திருந்த வரியை நீக்கி, இக்கோயிலில் உள்ள சேத்திரபால பிள்ளையாருக்கு நிலத்தை நிவந்தமாக அளித்தான்.

பின்னர் கி. பி. 1216 முதல் 1238 முடிய மதுரை நகரில் ஆட்சி செய்தவன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன். இவன் காலத்தில் சோழநாட்டை மூன்றாம் இராசராச சோழன் ஆண்டு வந்தான். அவன் சோணாட்டைக் காக்கும் திறனற்றவ னாகையால் இருமுறை இவனால் படையெடுக்கப்பட்டுச் சோணாடு இவனால் திருப்பிக் கொடுக்கப்பட்டது. ஆகவே இவ ருடைய கல்வெட்டுக்கள் இவனைச் சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர், சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண் டிய தேவர் எனவும் கூறுகின்றன. இங்கு இவனுடைய 3,5,7,17 ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. 3, 5, 17 ஆட்சியாண் டுக் கல்வெட்டுச் செய்திகள் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளன. இவனது ஏழாம் ஆட்சியாண்டில் திருப்பரங்குன்றின் தென்பக் கத்திலுள்ள தென்பரங்குன்றம் குடைவரைக் கோயில் ஏற்படுத் தப்பட்டுள்ளது. இது முன்பு சமணக் கோயிலாக இருந்து மாற் றம் பெற்றுள்ளது என்பர் (நிழற்படம் காண்க). மாறவர்மன் சுந்தரபாண்டியன் தன்னுடைய ஏழாம் ஆட்சியாண்டில் திருப்ப ரங்குன்றத்தின் தென்பக்கத்தில், பிரசன்ன தேவர் என்பவர் வேண்ட, சுந்தரபாண்டிய ஈஸ்வரமுடையார் கோயில் என்னும் கோயிலை ஏற்படுத்தியுள்ளான் (ARE 49 of 1890). இக்கோயி லில் கிழக்கு நோக்கியமைந்துள்ள கருவறை சிவனுக்காக ஏற்ப டுத்தப்பட்டுள்ளது. அக்கருவறை பின்புறச் சுவரில் உமையொரு பாகனான சிவனின் அர்த்தநாரீஸ்வரக் கோலம் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது (நிழற்படம் காண்க). இதனால் இக்கோயில் இன்று உமையாண்டார் கோயில் என்று வழங்கப் படுகின்றது. இக்குடைவரைக் கோயிலின் மேற்குப்புறச் சுவரில் சிவனுடைய பெரிய மெய்க்கீர்த்தி உள்ளது: இதில் சிவனுடைய மனைவி 'உலக முழுதுடையாள்' என்பது தெரியவரு

63. வே. வேதாசலம், பாண்டியநாட்டில் வாணாதிராயர்கள் (கையெழுத்துப்படி)

கிறது. மேலும் இக்கோயில் திருப்படி மாற்றுச் செலவுகளுக்காக நிலங்கள் நிவந்தமாக அளிக்கப்பட்டுள்ளன. இக்கோயில் அமைப்பு பிற்சேர்க்கையில் (வரைபடம் எண். 4) தரப் பட்டுள்ளது.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்குப் பிறகு இரண் டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் ஆட்சிக்கு வந்து சில திங்கள்களே ஆட்சி செய்தான்.[64] பின்னர் இரண்டாம் மாறவர் மன் சுந்தரபாண்டியன் (1239-1251) ஆட்சிக்கு வந்தான். இங்கு இவனுடைய பத்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு உள்ளது. இது சிதைந்த நிலையில் உள்ளது. இது பிள்ளைப் பகவதி ஆழ் வார் பெயரால் இக்கோயிலில் அர்த்தசாம பூசைக்கு இவன் ஏற் படுத்திய அறக்கட்டளைபற்றிக் கூறுகின்றது. பின்னர் வந்த பாண்டிய அரசன், முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி. 1268-1311) இவனது 42-வது ஆட்சியாண்டில் (கி பி 1309) ஸ்ரீ வல்லபச் சதுர்வேதி மங்கலத்தாரால் திருக்காமக் கோட் டத்து ஆளுடைய நாச்சியாருக்கு நிலதானம் செய்யப்பட்டது. சேந்தப் பிள்ளை என்பவனால் திருக்காமக் கோட்டம் கோயில் கட்டப்பட்டது. பின்னர் கி. பி. 1310-இல் உலகுடைய நாய னார் என்பவரால் ஒரு வேலி நிலம் தானமாகக் கொடுக்கப் பட்டுள்ளது. (ARE 337, 338, 339 of 1918.) கல்வெட்டுக் களில் திருக்காமக் கோட்டத்து ஆவுடைய நாச்சியார் என்று குறிக்கப்பட்டது, தலபுராணத்தில் ஆவுடைய நாயகி யாக மாறியுள்ளது. பின்னர் மலையரசி என்ற பொருளில் கோவர்த்தனாம்பிகை என்று மாற்றம் பெற்றுள்ளது என்பர்.[65] அடுத்து மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் (கி.பி. 1268-1281) கல்வெட்டு ஒன்று உள்ளது. இது 'திருமலர் மாது' என்று தொடங்குகிறது. (ARE 252 of 1942). இதில் அரசன் நாட்டாற்றுப் போக்கில் உள்ள அள்ளியூரில் இருந்தபோது, மைத்துனன் விக்கிரம சோழ தேவன் வேண்டுகோளுக்கிணங்க, விக்கிரம பாண்டிய ஈஸ்வரமுடையார் என்னும் கோயில் கட்டப் பட்டு, புதுக்குளம் கிராமம் நிவந்தமாக அளிக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. இவை தவிரத் துண்டு துண்டான கல்வெட் டுக்கள் பல உள்ளன. இவைபற்றிப் பிற்சேர்க்கையில் (பிற் சேர்க்கை எண். 3) விளக்கம் கூறப்பட்டுள்ளது.

---

64. தி. வை. சதாசிவ பண்டாரத்தார். மு. நூ., ப. 123.
65. தகவல்: கோ. விசயவேணுகோபால். கள ஆய்வு நாள்: 13-7-83.

பிற்காலப் பாண்டியர் ஆட்சி கி.பி. 1310 வரை இங்கு நடந்து முடிந்தது. பின்னர் சுல்தான்களின் ஆட்சி கி. பி. 1310 முதல் 1378 வரை இங்கு நடைபெற்றது. சுல்தான்களின் ஆட்சியில் கடைசிச் சுல்தானாக வந்தவன் சுல்தான் அல்லாவுதீன் சிக்கந்தர் ஷா (கி.பி. 1368-1378). குமாரகம்பனர் கி.பி.1371இல் சம்புவராயர்களது உதவியுடன் மதுரைக்கு படையெடுத்துச் சென்று, அப்போது மதுரைச் சுல்தானாய் இருந்த முபாரக்ஷா (கி.பி. 1359-1368)வை வென்று மதுரை நாட்டைக் கைப்பற்றினார். எனினும் முபாரக்ஷாவின் பின்வந்தோர் மதுரை நாட்டின் ஒரு பகுதியைச் சிலகாலம் கி.பி. 1378 வரை ஆண்டு கொண்டு வந்தார்கள். நாணயங்களையும் வெளியிட்டு வந்தார்கள். இரண்டாம் ஹரிஹரர் (1376-1404) காலத்தில் தான் மதுரைச் சுல்தான் ஆட்சி அறவே ஒழிக்கப்பட்டது. இறுதியில் ஆண்ட அல்லாவூதீன் சிக்கந்தர்ஷா, தோற்றோடி யிருக்க வேண்டும் அல்லது கொல்லப்பட்டிருக்க வேண்டும்;[66] என்று அ. கி. பரந்தாமனார் கருதுகிறார். ஆயின் ஹுசைன் என்னும் வரலாற்றாசிரியர், திருப்பரங்குன்ற மலைமேலுள்ள குகையிலிருந்த சிக்கந்தர்ஷா கொல்லப்பட்டான் என்றும், அங்கேயே அவனுடைய சடலம் புதைக்கப்பட்டு அன்று முதல் அது மதுரையிலுள்ள முகமதிய மக்களால் வழிபாட்டுத் தலமாக மாறியது என்றும் குறிப்பிடுகிறார்.[67] கி. பி. 1378-இல் சுல்தான் களின் ஆட்சி முடிவுற்றதும் கி.பி. 1378 முதல் கி பி. 1533 வரை விசயநகரப் பேரரசின் ஆட்சி மதுரையில் நடைபெற்றது. சுல்தான்கள் ஆட்சியான பதினான்காம் நூற்றாண்டில் இந்து சமய வரலாற்றில் புதிய திருப்பம் ஏற்படத் தொடங்கியது. ''சங்க காலத்தில் தலைமையும் முழுமுதற்றன்மையும் பெற்று விளங்கிய முருகவழிபாடு நாயன்மார் காலத்தில் சற்றுத் தொய்வு அடைந்தது. களப்பிரர் ஆட்சிக்குப் பின்னர்ச் சைவ சமயம் புத்துயிர் பெற்று வளர்ந்து நாயன்மார் காலத்தில் இச்சமயம் சமண எதிர்ப்பு இயக்கமாக இயங்கியதால் சிவனே முழுமுதற்றன்மையும் தலைமையும் பெறவேண்டிய இன்றி யமையா நிலை ஏற்பட்டது. எனினும் சைவ உலகில் முருகன் முற்றிலும் புறக்கணிக்கப்படாமல் சிவனோடு இணைத்துப் போற்றப்பட்டு வந்தான். சோமாக்கந்த நிலையில் அவன்

---

66. அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்க வரலாறு ப. 52,

67. S. A. Q. Hussini, The History of the Pandya Country, PP. 109-111.

வழிபடப் பெற்றதுடன் முருக பக்தியுடைய அரசர்களால் சில தனிக் கோயில்களும் அவனுக்கு எழுந்தன. முன்னரேயுள்ள முருகன் திருக்கோயில்களுக்கு அரசர்கள் அவ்வப்பொழுது நிவந்தங்கள் அளித்தும் போற்றியுள்ளனர். கடல்கடந்தும் தமிழ்ப் பண்பாட்டை நிறுவிய இராசேந்திர சோழன் சிவனை வழிபட்டதோடன்றி முருகனைத் தன் அன்புக் கடவுளாகவும் கொண்டு ஒழுகியமையினைக் காண்கின்றோம். பல்லவர்காலப் பண்பாட்டுக் கலப்பினால் 'முருகன் கார்த்திகேயன்' ஆகிய இருவரின் புராணக் கூறுகளும் இணைந்து முருக வழிபாடு படிப் படியாக வளர்ந்து வருவதனை இதனால் உணருகின்றோம். சங்ககாலத்தில் முருகனுக்கிருந்த தலைமை திருமுறைக் காலத்தில் சிவனுக்கு ஏற்பட்டிருந்தாலும், பழங்குடி மக்களாகிய குறவர், வேடர் முதலியோர் வழிபாட்டில் முருகனது தலைமை குறையவில்லை யென்பதனைத் திருமுறைச் சான்றுகள் கொண்டே உணருகின்றோம். சேந்தனாரின் முருகனைக் குறித்த திருவிசைப்பாக்களும், நக்கீரரின் திருமுருகாற்றுப்படையும் திரு முறைகளில் இடம்பெற்றமை இச்சோழர் காலமே எனலாம். கல்லாடத்தில் முருகனைப் பற்றிய புராணக் கூறுகள் மிகுதியாக வளர்ச்சி பெற்றிருத்தலும் சைவ உலகில் முருகனுக்கு மீண்டும் தலைமை அரும்புதற்குரிய அடையாளமாகக் கருதலாம். இத்தகைய வரலாற்றுச் செய்திகளால் முருகவழிபாடு இடையறு வின்றித் தொடர்ந்து நிகழ்ந்து வந்தமையினைக் காண முடிகிறது.

பிறமதத்தினரின் தாக்குதலால் சைவக்கோயில்கள் தகர்க் கப்பட்ட பொழுது, முற்காலத்தில் (நாயன்மார் காலத்தில்) தான் அற்புதங்கள் நிகழ்த்தியதுடன், தன் அடியவர்களையும் அற்புதங்கள் நிகழ்த்தச் செய்து சைவ மக்களைக் காத்தருளிய சிவன், தன் புனிதக் கோயில்கள் பாழ்படுவதை பார்த்துக் கொண்டுள்ளனனே என்ற ஏக்க எண்ணம் சிவனை முதலாகக் கொண்ட சைவ உலகில் ஏற்பட்டிருக்கலாம். பேராற்றல் படைத்த இராசராசனைக் காட்டிலும் மேலும் உயர்ந்து பெரும் வெற்றியும், பெரும் புகழும் ஈட்டித் தந்து தமிழகத்தை உய்வித்த இராசேந்திரனை வரலாற்றுலகில் கண்டவர்கள் தமிழ் மக்கள். சைவசமய உலகில் இத்தருணத்தில் சிவகுமரனாம் முருகனை வழிபடுவதில் கருத்தைச் செலுத்தியிருக்கக் கூடும். சிவனிடமிருந்து தோன்றிய முருகனைச் சிவனுக்கு மாறாகா நிலையில் முழுமுதற் பொருளாகக் காணும் முயற்சி சோழர் காலத்தில் அரும்பியிருப்பினும் பதினான்காம் நூற்றாண்டிற் றான் மலர்ந்து மணம் பரப்பத் தொடங்கியது எனலாம்.

சிவனும் முருகனும் வேறல்லர் என்றகருத்தைப் பலவிடங்களிலும் வற்புறுத்திச் சென்று முருகனது தலைமையும், முழுமுதற்றன் மையும் வெளிப்படும் வண்ணம் கந்தபுராணத்தைப் படைத்து முருகவழிபாட்டில் மீண்டும் மறுமலர்ச்சி ஏற்படுத்திய பெருமை அக்காலத்தில் வாழ்ந்த கச்சியப்பருக்கு உரியது. சிவனை முழு முதற் பொருளாக ஏற்றுக் கொண்ட சைவவுலகில் முருகனை அந்நிலைக்கு மீண்டும் உயர்த்தும் அமைதிப் புரட்சிக்கு அடித் தளம் அமைக்கவும், பழந்தமிழகத்தில் நிலவிய வேல்வழி பாட்டை மீண்டும் நிறுவவும், புராணத்தைக் காப்பியச் சுவை யுடன் பெயர்த்துப் படைத்தவர் கச்சியப்பர். தமிழகத்திலுள்ள பல கோயில்கள் தோறும் சென்று பல்லாயிரக்கணக்கான திருப் புகழ்ப்பாக்களை இசை பொதுளப்பாடி முருக வழிபாட்டை உயர்த்திய அருணகிரிநாதர்க்கு அடித்தளம் அமைத்தும் தந்தவர் கச்சியப்பர் ஆவார்.68 கி.பி. பதினைந்தாம் நூற்றாண் டிலே முருக வழிபாட்டிலே ஒரு திடீர் மறுமலர்ச்சி தொடங்கு கிறது. பதினான்காம் நூற்றாண்டு இறுதி அல்லது பதினைந்தாம் நூற்றாண்டு தொடக்கமே அருணகிரிநாதர் காலமாகும். தமிழ் நாட்டு மன்னர்கள் கொடி கட்டிப் பறந்த காலங்களிலே மங்கி யிருந்த முருக வழிபாடு, தமிழ்நாடு பிறருக்கு அடிமைப்படத் தொடங்கியதும் ஏன் மறுமலர்ச்சியடைந்ததென்பது சிந்திக்க வேண்டியது. அருணகிரிநாதர் பதினாயிரம் திருப்புகழ் பாக்க ளைப் பாடியதுடன் முருகன் மேல் வேறுபல பிரபந்தங்களையும் பாடியுள்ளார். இவர் தனிமுருகன் கோவில்களை மட்டுமல்லாது. சிவன் கோவில் முதலியவற்றின் பிரகாரங்களில் இடம் பெற்ற முருகன் கோயில்களையும் பாடியுள்ளார். திருஞானசம்பந்தர், சுந்தரர் முதலியோர் ஈழநாட்டுச் சிவத்தலங்களைத் தேவார காலத்திற் பாடியதுபோல, அருணகிரிநாதரும் ஈழநாட்டு முருகன் கோவில்களைப் பாடியுள்ளார். சைவம், வைணவம், சாக்தம் என்று பிளவுபட்டிருந்த தமிழ் மக்களை முருக வழி பாட்டின் மூலம் ஒற்றுமைப்படுத்த அருணகிரிநாதர் முயன்றி ருக்கிறார். பல்லவர் கால நாயன்மார் முருக வழிபாட்டைச் சைவத்துடன் இணைக்க முயன்றது போல, அருணகிரிநாதர் முருக வழிபாட்டைச் சைவத்துடன் மட்டுமல்லாது, வைணவம், சாக்தம் என்பவற்றுடனும் இணைக்க முயன்றமைக்குச் சான்றுகள் கதிர்காமம், திருகோணமலை என்பன பற்றிய

68. நா. இராமலிங்கம், கந்தபுராண ஆராய்ச்சி (அறிஞர் பட்ட ஆய்வேடு) பக். 44, 81, 97-99.

திருப்புகழ்ப் பாக்களிலிருந்து தரப்படுகின்றன. முருகன் சிவபெருமானுடைய புதல்வன், திருமாலுடைய மருமகன், உமையின் புதல்வன், இலக்குமியின் மருமகன், வள்ளியின் கணவன் முதலிய கருத்துக்கள் கௌமாரம் என்ற முருக வழிபாட்டை முக்கியமான பிற இந்து சமயப் பிரிவு களோடு இணைக்க உதவியிருக்கும்.[69] இந்துசமய வரலாற்றில் ஏற்பட்ட இத்திருப்பத்தை அப்படியே படம்பிடித்துக்காட்டுவது போல திருப்பரங்குன்றக் கோயிலும், அங்கு நிகழும் வழிபாடு களும், விழாக்களும் அமைந்துள்ளன. இம்மாற்றம் விசயநகர ஆட்சிக்காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும்.

இங்குள்ள ஒரு கல்வெட்டு (ARE 244 of 1942) விசயநகர வேந்தர்களில் ஒரு பிரிவான ஆரவீடு படைத்தலைவர்களின் வமிசாவளியைத் தெரிவிக்கிறது. அய்யன சோமேந்தர நிருபதி, விமலாதித்தன், அவன் மகன் ராசநரேந்திரன் ஆகியோர் இக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றனர். பதினைந்தாம் நூற்றாண்டில் மகாபாரதத்தைத் தெலுங்கு மொழியில் மொழி பெயர்க்கச் செய்ததையும், கல்வெட்டின் இறுதிப் பகுதியில் சர்வல்ல சோமேஸ்வர நிருபதி, பின்னம்மா, கோனபேந்த்ர நிருபதி, விடவேஸ்வர, திம்மபூபல் ஆகிய விசயநகர அரசர்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. விசயநகரப் பேரரசுக் காலத்திற்குப் பின்னர் வருவது நாயக்கராட்சிக் காலம்.

**நாயக்கராட்சிக் காலம் (கி.பி. 1533 முதல் 1740 வரை)**

நாயக்கராட்சிக் காலத்தில் மதுரையின் மூன்றாவது அரசராக வந்த வீரப்பநாயக்கர் (கி.பி. 1572-1595) காலத்தில் இக்கோயிலுக்குக் கோபுரமும், திருமதிலும் எடுக்கப்பட்டுள்ளது (ARE 262 of 1942). இதே செய்தியை இங்குள்ள மற்றொரு தெலுங்கு மொழிக் கல்வெட்டும் தெரிவிக்கிறது (ARE 263 of 1942). இத்திருப்பணி கி.பி. 1583-இல் நடைபெற்றுள்ளது. மேலும் கச்சிப்பெருஞ்செல்வன் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற வீரப்ப நாயக்கரால் திருப்பரங்குன்றத்துக் கோபுரத்துக்குக் கிழக்கில் கல்மண்டபம் ஒன்றுகட்டி அதில் ஐங்கரனின் (கணபதி) உருவம் நாயக்கர் குல முதல்வரான விசுவநாத நாயக்கரின் நினைவாக நிறுவப்பட்டுள்ளது. இந்தக் கல்மண்டபம் இன்று சொக்கநாதர் கோயில் என்ற பெயரில் உள்ளது (குன்றைச் சூழ்ந்துள்ள கோயில்கள் இயலில் இது பற்றி விளக்கப்

69. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப. 226

பட்டுள்ளது). வீரப்ப நாயக்கருக்குப் பின்னர் இவர் வழியில் வந்த திருமலை நாயக்கரால் (கி. பி. 1623-1659) இக்கோயிலில் பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ''திருமலையையன் திருப் பரங்குன்றைத் திருப்பி வைத்தான்'' என்ற பழமொழி ஒன்று இங்குச் செவிவழிச் செய்தியாக வழங்கி வருகிறது. இதற்குத் தென்பரங்குன்றம் வழிபாடிழந்த நிலையில் திருப்பரங்குன்றில் வழிபாட்டிற்குரிய படிமங்கள் அமைத்து, மக்கள் வழிபாட்டைத் திசை திருப்பி வைத்தான் என்ற கருத்தை ஒருசாரார் கூறுகின் றனர். அடுத்துப் பழந்தமிழ்த் தெய்வமான முருகன் வழிபாடு பின்னர்ச் சிவவழிபாடு, துர்க்கை வழிபாடு போன்றவைகளால் இரண்டாவது நிலையை அடைந்தது. அதை மாற்றி முன் போல முருகன் வழிபாட்டிற்குரிய தலமாக மாற்றியமைத்தான் என்று மற்றொரு சாரார் கூறுகின்றனர். ஆனால் திருமலை நாயக்கர் வரலாற்றில் இந்த முக்கியமான நிகழ்ச்சி இடம்பெற வில்லை. அவர் மதுரைத் திருக்கோயிலைப் புதுப்பித்ததோடு, திருப்பரங்குன்றம், அழகர்கோயில், திருவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருவரங்கம் பெரியகோயில் முதலியவற்றில் திருப் பணிகள் செய்ததும், மதுரை, அழகர்கோயிலின் திருவிழாக்களை மாற்றியமைத்த நிகழ்ச்சியும் இடம்பெற்றுள்ளன.[70] திருப்பரங் குன்றில் சுப்பிரமணியசுவாமியின் கருவறை முன் மண்டபமும், தங்கமுலாம் பூசப்பட்ட கொடிக்கம்பமும் திருமலை நாயக்கரின் திருப்பணிகள் என்பர்.[71] திருமலைநாயக்கர், அவர்தம் தேவி யருடனான சிலைகள் இக்கோயிலின் அர்த்த மண்டபத்திலும், பதினாறு கால் மண்டபத்திலும், பழனியாண்டவர் கோயில் மண்டபத்திலும் உள்ளன. இக்கோயிலின் அர்த்த மண்டபத்தில் மற்றொரு தூணில் இவருடைய தம்பியான முத்து அழகிரி நாயக்கரின் சிலை உள்ளது. ஆனால் இவர் இக்கோயிலுக்குத் திருப்பணி செய்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் ஏதும் இல்லை. முத்து அழகிரி நாயக்கர் தம் முன்னோரின் நினைவாக இவர் சிலைகளை வைத்திருக்கலாம் என்ற ஒரு கருத்தும் உண்டு.[72]

அடுத்து நாயக்க அரசர்களில் ஒன்பதாவது அரசரான சொக்கநாத நாயக்கர் காலத்தில் (கி.பி.1659—1682) செஞ்சியை

70. அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்கர் வரலாறு ப. 203.
71. சோமலெ., மு. நூ., ப. 467.
72. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 13-7-83.

ஆண்ட வரதப்ப நாயக்கர் கி.பி. 1671-இல் சேதுஸ்நானம் செய்து விட்டுத் திரும்பும் போது முருகப் பெருமானுக்குத் தங்கப் பல்லக்கும், கார்த்திகைப் பௌர்ணமி நாளன்று திருவமுதுக்குத் தானமாக நிலமும் கொடுத்த செய்தியை இங்குள்ள இரு கல்வெட்டுக்கள் (ARE 860 & of 861 1917) தெரிவிக்கின்றன. இதில் செஞ்சியை ஆண்ட நாயக்க மன்னர்களின் வமிசாவளி வரிசைகொடுக்கப்பட்டுள்ளது, இக்கல்வெட்டு செஞ்சி நாயக்கர்களின் வமிச வரிசையைத் தெரிந்து கொள்ள மிகவும் துணை செய்கிறது.

சொக்கநாத நாயக்கரின் மனைவியான அரசி மங்கம்மாள் (கி.பி. 1689-1706) இக்கோயிலின் ஆஸ்தான மண்டபத் திருப்பணியைச் செய்துள்ளார். அரசி மங்கம்மாள் விசயரங்க சொக்கநாதர் ஆகிய இருவரின் சிலைகளும் நித்திய அஞ்சலிக் கோலத்தில் ஆஸ்தான மண்டபத்தில் உள்ளன. ஆனால் அரசி மங்கம்மாவின் திருப்பணி பற்றிய கல்வெட்டுக்கள் கிடைக்கவில்லை. மதுரையில் நாயக்கர்களின் ஆட்சி கி. பி. 1740-உடன் முடிவடைந்து விடுகிறது, பின்னர்க் கருநாடக நவாப்புகளின் ஆட்சிக் காலம் கி. பி. 1740 முதல் 1801 வரை மதுரையில் நடைபெறுகிறது.

**கருநாடக நவாப்புகளின் காலம் (கி. பி. 1740-1801)**

மதுரையில் கருநாடக நவாப்புகளின் ஆட்சி கி. பி, 1740 முதல் 1801 வரை நடைபெற்றது. அப்பொழுது கி. பி. 1793-இல் முகம்மதலி வாலாஜா ஆர்க்காட்டு நவாப் ஆக திருச்சிராப்பள்ளியிலிருந்து ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்தில் மதுரைச்சீமை அவர் மகன் நசிருள்மூல்க் என்பவன் பொறுப்பில் விடப்பட்டிருந்தது. அப்போது திவானாகக் கோபாலராயர் என்பவர் இருந்தார். அச்சமயத்தில் கர்னல் பேயர்டு என்பவன் 700 படை வீரர்களோடு திருப்பரங்குன்றத்தில் வந்து தங்கினான். படைவீரர் தங்குவதற்கு 40 சத்திரங்கள் ஒதுக்கப்பட்டன. நோயுற்றிருந்த படை வீரரைக் கோயிலுக்குள் தங்க வைக்கத் திட்டமிட்டான் கர்னல் பேயர்டு. இதனை ஊரார் ஒன்று திரண்டு முழுமூச்சாய் எதிர்த்தனர். அதன் எதிரொலிதான் வயிராலி முத்துக்கருப்பன் மகன் குட்டி கோயில் கோபுரத்திலிருந்து விழுந்து மாண்டது.[73] குட்டியின் குடும்பத்திற்கு இரத்தக் காணிக்கையாக நிலம் அளிக்கப்பட்டது. குட்டியின்

73. முத்துக்கோனார், திருப்பரங்குன்றம் (கையெழுத்துப் படி), ப. 14.

நினைவுச் சிலை கையில் வயிராலி ஆயுதத்துடன் திருப்பரங் குன்றத்தில் (தற்பொழுது தியாகராசர் குடியிருப்பு மனைகள் உள்ள இடத்தில்) உள்ளது. (பிற்சேர்க்கை எண். 3)

கருநாடக நவாப்புகளின் ஆட்சிக் காலத்திற்குப் பிறகு ஆங்கிலேயர் ஆட்சிக் காலமும் (கி. பி. 1801-1947) பின்னர் விடுதலை இந்தியாவின் ஆட்சிக் காலமும் வருகின்றன. ஆங்கி லேயர் ஆட்சிக்கால வரலாறும், விடுதலை இந்தியாவின் ஆட்சிக் கால வரலாற்றில் கோயில் ஆட்சியும் 'ஆட்சிமுறை' என்ற இயலில் தரப்பட்டுள்ளன.

மதுரை மாவட்டத்தில் அமைந்துள்ள திருப்பரங்குன்றக் கோயிலின் வரலாறு கீழ்க்காணும் வரலாற்றுக் காலப் பரப்பு களின் அடிப்படையில் செல்கின்றது.[74]

1. சங்க காலம் (பழந்தமிழர் காலம்) 3-ஆம் நூற்றாண்டு (கி. மு. 2-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை)

2. தமிழ் பிராமிக் கல்வெட்டுக் காலம்
   (கி. மு. 2-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 2ஆம் நூற்றாண்டு வரை)

3. களப்பிரர் காலம்
   (கி. பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 550 வரை)

4. முதல் பாண்டியப் பேரரசுக் காலம்
   (கி. பி. 550 முதல் கி. பி. 950 வரை)

5. சோழராட்சிக் காலம்
   (கி. பி. 950 முதல் கி. பி. 1190 வரை)

6. பிற்காலப் பாண்டியர் காலம்
   (இரண்டாம் பாண்டியப் பேரரசுக் காலம்)
   (கி. பி. 1190 முதல் கி. பி. 1310 வரை)

74. கே. வி. இராமன், பாண்டியர் வரலாறு. ஆர். தேவகுஞ்சரி, காலந்தோறும் மதுரை அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்கர் வரலாறு ஆகிய நூல்களின் அடிப்படையில் காலவரிசை எழுதப்பட்டுள்ளது.

7. சுல்தான்களின் ஆட்சிக் காலம்
(கி. பி. 1310 முதல் கி. பி. 1378 வரை)

8. விசயநகரப் பேரரசுக் காலம்
(கி. பி. 1378 முதல் கி. பி. 1533 வரை)

9. நாயக்கராட்சிக் காலம்
(கி. பி. 1533 முதல் கி. பி. 1740 வரை)

10. கருநாடக நவாப்புகளின் காலம்
(கி. பி. 1740 முதல் கி. பி. 1801 வரை)

11. ஆங்கிலேயர் ஆட்சிக் காலம்
(கி. பி. 1801 முதல் கி. பி. 1947 வரை)

12. விடுதலை இந்தியாவின் ஆட்சிக்காலம்
(கி. பி. 1947 முதல்)

இதில் தமிழ் பிராமிக் கல்வெட்டுக் காலத்திலும் சங்க இலக்கியக் காலத்திலும் இம்மலை பெரும்பாலும் சமணர்களோடு தொடர்புபட்ட மலையாகவே இருந்துள்ளது என்பதற்குப் போதிய கல்வெட்டுச் சான்றாதாரங்கள் உள்ளன.

அக்கால கட்டத்தில் தமிழர்களின் வழிபாடான வேல் வழிபாடும் முருகன் வழிபாடும் தம் ஏற்றம் குறையாமல் இருந்திருக்க வேண்டும். பின்னர் களப்பிரர் காலத்தில் பௌத்த சமணச் செல்வாக்கு அதிகம் பெருகியதால் வேல் வழிபாடு, முருகன் வழிபாடு ஆகியவற்றின் செல்வாக்குக் குறைந்திருக்க வேண்டும். பின்னர் முதல் பாண்டியப் பேரரசுக் காலம் முதல் பிற்காலப் பாண்டியர்கள், சுல்தான்கள் ஆட்சிக்காலம் வரை சிவ வழிபாடே சிறந்து வந்துள்ளதால், முருகன் வழிபாடு இரண்டாம் நிலையில் வைக்கப்பட்டு, பரிவார தெய்வங்களுள் ஒன்றாகவே கருதப்பட்டுள்ளது. விசயநகரப் பேரரசுக் காலத்தில் முருகன் வழிபாடு தனித்த வழிபாடாக ஏற்றம் பெற்று மலர்ச்சியடையத் தொடங்கியுள்ளது. இம்மறுமலர்ச்சி நாயக்கராட்சிக் காலத்தில் பெருவளர்ச்சி அடைந்து வந்துள்ளது. ஆகவே இலக்கியங்கள் புராண மரபையும் இலக்கிய மரபையும் வைத்துப் பாடினாலும், வழிபாட்டின் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை என்பதை இங்குள்ள கல்வெட்டுக்கள், வரலாற்றுச் சான்றுகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

இக்கோயிலின் வரலாற்றை ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் பொழுது இடையிடையே சில நூற்றாண்டுகளுக்கு எவ்விதச் சான்றுகளும் கிடைக்கவில்லை. கல்வெட்டுச் சான்றுகள் நூற்றாண்டு வரிசையில் துண்டு துண்டாகவே கிடைத்துள்ளன. ஆட்சியாளர்கள் ஒருவர் மீது ஒருவர் கொண்ட காழ்ப்புணர்ச்சியாலும், திருப்பணி செய்யுங் காலத்து வரலாற்றுச் சிறப்பு அறியாமல், வரலாற்றுத் தடயங்கள் மறைந்ததாலும் ஏற்பட்ட வரலாற்று இருட்டுகள் பல நம் தமிழ்நாட்டு வரலாற்றை வரிசையாக அறிந்து கொள்ள இயலாநிலையில் வைத்துள்ளன. தமிழ்நாட்டு வரலாற்றில் ஏற்பட்டுள்ள இருள் எப்படியோ, அப்படியே திருப்பரங்குன்றக் கோயில் வரலாற்றிலும் ஏற்பட்டுள்ளது.

# கோயில் ஆட்சிமுறை

கோயில் ஆட்சிமுறை என்ற இவ்வியலில் நாயக்கர்கள் காலத்திலிருந்த ஆட்சியமைப்புத் தொடங்கி இன்று தமிழ்நாடு அரசு அறநிலையத் துறை ஆட்சி வரையான செய்திகள் கிடைத்தவரை தொகுத்து விளக்கப்படுகின்றன. இவ்வரிசையில் சில காலங்களில் ஆட்சியாளர்கள் பெயர் வரிசை கிடைக்க வில்லை. கிடைத்த வரையிலான வரிசைமுறை பிற்சேர்க்கை யாகத் (எண். 7) தரப்பட்டுள்ளது.

**நாயக்கர்கள் காலம்**

கி. பி. 1529-இல் விசுவநாத நாயக்கரால் தொடங்கி வைக்கப் பெற்ற மதுரை நாயக்கராட்சி கி. பி. 1736 வரையில் மதுரையில் நடந்தது. கி. பி. 1736-இல் அரசி மீனாட்சி யுடன் மதுரை நாயக்கராட்சி முடிவடைந்தது. நாயக்கர்கள் காலத்தில் கோயில்களில் சில திருப்பணிகள் செய்யப் பெற்றன. சில கோயில்களுக்குப் புதிய விழாக்களும், பூசைகளும் ஏற்படத் தொடங்கியுள்ளன.[1] இவர்கள் காலத்தில்தான் கோயில்களை நிரு வகிக்க ஆறு நிருவாகத்தார் என்ற ஓர் அமைப்பு ஏற்பட்டிருக்க

மதுரை, அழகர்கோயில், திருப்பரங்குன்றம் ஆகிய கோயில் களுக்கு மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. திருப்பரங் குன்றம் கோயிலின் மண்டபங்கள் அனைத்தும் நாயக்கர் காலத்தவை. கோயிலுக்கு அருகேயுள்ள தெப்பத்திருவிழா நடைபெறும் திருக்குளம் நாயக்கர் காலத்தது. மலையை ஒட்டியமைந்துள்ள பழனியாண்டவர் கோயில் திருமலை நாயக்கரால் கட்டப்பட்டது. திருமலைநாயக்கர் காலத்தில் தான் மதுரைச் சித்திரைத் திருவிழாவை பெருவிழாவாகச் செய்யும் நோக்கத்தில், திருப்பரங்குன்றம், அழகர்கோயில், திருவாதவூர் ஆகிய ஊர்களின் தெய்வங்கள் மதுரைக்கு வரும்படியாகத் திருவிழாக்கள் மாற்றியமைக்கப் பட்டுள்ளன.

வேண்டும்.[2] இதில் முதல் நான்கு நிருவாகத்தார், நான்கு ஸ்தானிகம் எனப்பட்ட பட்டர்கள் (அபிடேகம், அரச்சனை, அலங்காரம், நித்தியப்படி பூசை, திருவிழாக்கள் வேலை) நியமிக்கப்பட்டார்கள். ஐந்தாம் நிருவாகம் ஆபரணம் பூட்டுதல் ஆறாம் நிருவாகம் கணக்கு என்ற வரிசையில் நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்குத் துணையாக நாட்டாண்மை ஒருவரும், காவல் ஆறுகரையைச் சேர்ந்த அறுவரும், வைராவி என்ற சேவுகர் ஒருவரும் இருந்துள்ளனர். இந்த அமைப்பு குறிப்பாக எந்தக் காலத்தில் ஏற்படுத்தப்பட்டது என்ற விவரம் தெரியவில்லை. ஆனால் இவர்களுக்கு மானியங்களாக அரசர்களால் நிலங்கள் விட்டுக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த அமைப்பு இன்றும் நடை முறையில் உள்ளது.

## ஆங்கிலேயர்கள் காலம்

கி.பி. 1736 முதல் கி.பி. 1801 வரை மதுரையில் மீண்டும் முகமதியர்கள் ஆட்சி நடந்தது. முகமதியர்கள் ஆட்சிக்காலத்தில் கி.பி. 1793-இல் கர்னல் பேயர்டு என்பவனால் திருப்பரங்குன்றக் கோயிலுக்கு அழிவு ஏற்படத் தொடங்கியபொழுது, அதைத் தடுத்து நிறுத்த ஆறு நிருவாகத்தாரும், நாட்டாண்மையும் காவல் ஆறுகரைப் பேரும் முயற்சி செய்து வயிராவி முத்துக்கருப்பன் மகன் குட்டி என்பவரைக் கோபுரத்திலேறி விழச்சொல்லிக் கோயிலைக் காத்துள்ளனர்.[3] எனவே முகமதியர் ஆட்சிக் காலத்தில் ஆட்சியைக் கவனித்துள்ள ஆறு நிருவாகத்தார் அமைப்பை இங்கு முதலில் எண்ண வேண்டியுள்ளது. பின்னர் 31.7.1801-ஆம் தேதி கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் ஆட்சி

2. கி.பி. 1736-இல் அரசி மீனாட்சியுடன் மதுரை நாயக்க ராட்சி முடிவடைந்து விடுகிறது. கி.பி. 1740 முதல் கி.பி. 1801 வரை கருநாடக நவாப்புகளின் ஆட்சி நடை பெறுகிறது. இக்காலகட்டத்தில் கி.பி. 1793-இல் இக்கோயிலைக் காக்க குட்டி என்பவர் கோபுரத்திலிருந்து விழுந்து இரத்தக் காணிக்கை செய்துள்ளார். இக்கல்வெட்டில்தான் முதன்முதலில் 'ஆறு நிருவாகத்தார்' என்ற அமைப்பைப் பற்றிய குறிப்புக் கிடைக்கிறது. ஆகவே இந்த 'ஆறு நிருவாகத்தார்' ஆட்சிமுறை இதற்கு முந்திய காலமான நாயக்கர்கள் காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும் என எண்ண வேண்டியுள்ளது.
3. பிற்சேர்க்கை எண். 3 - கல்வெட்டுக் குறிப்புக்கள்.

வந்ததும், மதுரைப் பகுதி சென்னை இராசதானியின் கீழ்க் கொண்டுவரப்பட்டது; கோயில் நிருவாகமும் அவர்களிடமே இருந்தது.[4]

1801 முதல் 1842 வரை ஆங்கிலேயர்களால் நியமிக்கப்பட்ட மாவட்ட ஆட்சியாளர்களான மிஸ்டர் தாமஸ் பாயர் ஹார்டின், மிஸ்டர் உரூசுபீட்டர், மிஸ்டர் பர்க்கார், மிஸ்டர் கிளார்க்கே, மிஸ்டர் ஹோலிலே லைவிஞ்சி ஆகியோர் இருந்து வந்துள்ளனர். இவர்களில் தாமஸ் பாயர் ஹார்டிஸ் என்பவரே கோயிலின் முதல் நிருவாகியாவார். கி. பி. 1842 வரை ஆங்கிலேயர்களால் கோயில் ஆட்சிமுறை செய்யப் பட்டு வந்துள்ளது. உரூசுபீட்டர் மதுரை மீனாட்சியம்மனிடம் ஈடுபாடுடையவராய்ப் பல நகைகளை அந்த அம்மனுக்கு வழங்கியுள்ளார். இவர் ஒரு சதை அங்கவடியையும் (Stirrups) வழங்கியுள்ளார் என்பர். இந்துக்கோயில்களின் நடைமுறையில் ஆங்கிலேயர்கள் தலையிடவில்லை என்பர்.[5]

1842 முதல் 1861 வரை மாவட்ட ஆட்சியாளர்களால் (ஆங்கிலேயர்களால்) நியமிக்கப்பட்ட மேலாளர்கள் ஆட்சி முறையைக் கவனித்து வந்துள்ளனர். இதில் சமுதாயத்தில் உயர்ந்தநிலை பெற்ற சமஸ்தானத்தின் திவான், மதுரை ஆதீனப் பண்டாரச் சன்னதி ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர். 1842-க்குப் பிறகுதான் ஆட்சிக் குழுவில் மதுரையாதீனம் இடம் பெறும் நிலை ஏற்பட்டுள்ளது. இதற்கு முன் இந்நிலையைக் காணமுடியவில்லை.

1863 முதல் 1890 வரை நியமனம் செய்யப்பட்ட குழுவினால் (கமிட்டியார்) ஆட்சிமுறை நடந்து வந்துள்ளது. இக் குழுவினர் பெயர்கள் கிடைக்கவில்லை. 1891 முதல் 1922 வரை, குழுவின ரால் நியமிக்கப்பட்ட மேலாளர்கள் ஆட்சிமுறையை நடத்தி வந்துள்ளனர். இம்மேலாளர்களின் பெயர்கள் 1898 முதல் 1922 வரைதான் கிடைத்துள்ளன. இக் காலகட்டத்தில் நாயுடு, அய்யர், செட்டியார், பிள்ளை, முதலியார் ஆகிய சாதிப் பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆட்சிப் பொறுப்பு ஏற்றுள்ளனர். ஆகவே 1898க்குப் பிறகு சாதியினர்க்குச் சிறப்பிடம் கொடுக்கும்

4. பிற்சேர்க்கை எண், 7
5. ச. சாம்பசிவன், மாநகர் மதுரை, ப. 89.
   சோமலெ., மதுரை மாவட்டம், ப. 33.

நிலை ஏற்பட்டுள்ளது. இதனால் அரசியல் செல்வாக்குப் பெற்ற சாதியினர் ஆட்சிக்குழுவில் இடம்பெற்றுள்ளனர்.

பின்னர் 1922 முதல் 1925 வரை நீதிமன்ற ஆணைப்படி முத்து.கரு.வெ. அழகப்ப செட்டியார் என்பவர் கோயில் ரிஸீவராக நியமிக்கப்பட்டுள்ளார். சாதியினர்கள் என்ற அடிப்படையில் ஆட்சிக்குழு அமைக்கத் தொடங்கியதும், சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு, ஆட்சிமுறை பற்றிய வழக்கு நீதிமன்றத்திற்குச் சென்றிருக்க வேண்டும். இதனால் நீதிமன்றம் தலையிட்டு ஒரு குறிப்பிட்ட சாதியைச் சேர்ந்த ஒருவரைக் கோயில் ரிஸிவராக நியமிக்கவேண்டிய நிலை ஏற்பட்டிருக்க வேண்டும் என எண்ண வேண்டியுள்ளது. நீதிமன்ற ஆணைப்படி 1925 முதல் 1937 வரை அறங்காவலர்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளனர். இது 1926 முதல் 1953 வரை, கோயிற்குழு (Temple Committee) என்ற பெயரில் இருந்து வந்துள்ளது. 1937 வரை இருந்து வந்துள்ள குழுவில் அய்யர், முதலியார், பண்டாரச் சன்னதி, பிள்ளை, நாயுடு ஆகியோர் தான் இடம் பெற்றுள்ளனர். இதில் செட்டியார் இடம்பெறவில்லை. 1937க்குப் பிறகு ஆதீனத்தை ஆட்சிக்குழுவில் பார்க்க முடியவில்லை.

### இந்துமத அறநிலையக்குழு

1937 முதல் 1951 வரை இந்துமத அறநிலையக்குழு ஆணையின்படி நிருவாக அதிகாரி ஒருவரையும், தருமகர்த்தாக் குழு ஐவரையும் கொண்டு ஆட்சிமுறை நடைபெற்ற வந்தது. இதற்கு ஆலோசனைக் குழு (Advisory Committe) என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது. இதில் நாயுடு, செட்டியார், அய்யர், கோனார் ஆகிய சாதிப் பிரிவைச் சேர்ந்தவர்கள் இடம்பெற்றுள்ளனர். இக்குழுவில்தான் முதன்முதலாக ஒரு கோனார் இடம்பெற்றுள்ளார். மதுரை, திருப்பரங்குன்றம், அழ்கர்கோயில் பகுதியில் பெரும்பாலும் கோனார்களும், தேவர்களும் அதிகமாக உள்ளதாலும் இங்கு நடைபெறும் திருவிழாக்களில் இவர்கள் அதிகப் பங்கேற்பதாலும், இக்குழுவில் ஒரு கோனார் இடம்பெற்றிருக்க வேண்டும்.

1951 முதல் இந்துமத அறநிலையக் குழுவின் தலைவரால் நியமனம் செய்யப்பட்ட தருமகர்த்தாக்குழு நிருவகித்துவரத் தொடங்கியது. இத் தருமகர்த்தாக் குழுவின் ஆட்சிக்காலம் 1971 வரை ஐந்தாண்டுகளாகவும், 1971-க்குப் பிறகு மூன்று ஆண்டுகளாகவும் மாற்றப்பட்டுள்ளது. 1951-இல்

நியமனம் செய்யப்பட்ட தருமகர்த்தாக்குழுவில் அய்யர், பிள்ளை, செட்டியார், இவர்களுடன் பிற்படுத்தப்பட்ட சாதியைச் சேர்ந்த ஒருவரும் இடம்பெற்றுள்ளார். காந்தியச் சிந்தனையாலும், நாடு சுதந்திரம் பெற்ற பிறகு அமைக்கப் பட்ட குழு என்பதாலும், பிற்படுத்தப்பட்ட ஒருவருக்கு இக்குழுவில் இடமளித்திருக்க வேண்டும். இதில் 1973-இல் நியமனம் செய்யப்பட்ட தருமகர்த்தாக் குழுவில் இசை வல்லுநர் (நாதசுவர வித்துவான்) ஒருவர் இடம் பெற்றிருக் கிறார். இது கலைக்குச் சிறப்பிடம் அளிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் ஏற்பட்டிருக்கலாம்.

1976-இல் தமிழ்நாடு அரசால் தருமகர்த்தாக் குழுக்கள் கலைக்கப்பட்டன. கோயில் ஆட்சி, நிருவாக அதிகாரியின் பொறுப்பிலேயே இருந்து வந்துள்ளது. நிருவாக அதிகாரியே தக்காராக (Fit Person) நியமிக்கப்பட்டுள்ளார். பின்னர் 1980-இல் புதிய அறங்காவலர் குழு நியமிக்கப்பட்டது. இதில் திருப்பரங்குன்றத்தைச் சார்ந்தவர்களும் இடம்பெற வேண்டும் என்ற எண்ணத்தால், திருப்பரங்குன்றத்திலிருந்து இருவரும், மதுரையிலிருந்து மூவரும் நியமிக்கப்படுவார்கள் என்று அரசு ஆணையிட்டது. இதன்படி 1980-இல் ஐவர் நியமிக்கப்பட்டார்கள். 1980-க்குப் பிறகு திருப்பரங்குன்றம் கோயிலை, மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலிருந்து பிரித்துத் தனிக்கோயிலாக (தனித் தேவஸ்தானமாக) மாற்ற வேண்டும் என்ற கோரிக்கை எழுந்தது. இக்கோரிக்கையின்படி திருப் பரங்குன்றத்தைத் தனித் தேவஸ்தானமாக 1981-இல் அரசு அறிவித்தது. இதற்கு ஆதரவும் எதிர்ப்பும் ஏற்பட்டு வழக்கு நீதிமன்றம் வரை சென்று, இவ்வாணை சிறிது காலம் நிறுத்தி வைக்கப்பட்டு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் நிருவாகத்தின் கீழே தொடர்ந்து இருந்து வந்தது. பின்னர் அரசிற்கும் எதிர்ப்பு தெரிவித்த மக்களுக்கும் உடன்பாடு ஏற்பட்டு திருப்பரங்குன்றம் தனித் தேவஸ்தானமாக மாறியது. 1983-இல் திருப்பரங்குன்றம் கோயில், மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலிருந்து பிரிந்தது. 1983 பிப்ரவரி மாதத் துடன் அறங்காவலர் குழுவின் ஆட்சிக்காலம் முடிந்ததும், 1983 முதல் பழைய அறங்காவலர் குழுவின் தலைவரே இரு கோயில்களுக்கும் தக்காராக இருந்து வந்துள்ளார். பின்னர் 1984-இல் திருப்பரங்குன்றம் கோயிலுக்குப் புதிய தக்காராக ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார்.

திருப்பரங்குன்றம் கோயில் மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானத்தில் அடங்கிய துணைக் கோயில்களுள் ஒன்றாக 1983 வரை இருந்துவந்த காலத்தில், மதுரை தேவஸ்தானத்திலிருந்து பேஷ்கார் ஒருவர் திருப்பரங்குன்றம் கோயிலுக்காக நியமிக்கப்பட்டு அவருடைய பொறுப்பில் இக்கோயில் இருந்து வந்துள்ளது. பின்னர் அயல்பணி முறையில் (Foreign Service) கண்காணிப்பாளர்கள் (Superintendent) நியமிக்கப்பட்டுள்ளனர்.

கண்காணிப்பாளர்கள் வரிசையில் இறுதியாகப் பணியாற்றிய திரு. ஆறுமுகம் என்பவர் அரசு ஆணைப்படி நிருவாக அதிகாரியாக உயர்த்தப்பட்டார். பின்னர் தேவஸ்தான வழக்கினால் கண்காணிப்பாளர் பதவியில் இருந்து மீண்டும் இவர் பணியாற்றினார். திருப்பரங்குன்றம் தனிக் கோயிலாக மாறிய பின்னர் திரு.உதயராஜ் என்பவர் நிருவாகஅதிகாரியாக நியமனம் செய்யப்பட்டார். அதுமுதல் இக்கோயில் தனி நிருவாக அதிகாரியின் ஆட்சியில் வந்தது. 6

## ஆட்சிமுறையமைப்பு

கோயில் ஆட்சிமுறை இந்து அறநிலையக் குழுவின்ஆட்சியில் இருந்து வந்துள்ளது. பின்னர் இது தமிழ்நாடு அரசு அறநிலைய ஆட்சித்துறை (Hindu Religious & Charitable Endowment Board) என்ற அமைப்பாய் பெயர் மாற்றம் பெற்றது. இவ்வமைப்பில் அறநிலைய ஆட்சித்துறை அமைச்சர் தலைவராவார். இது பின்வரும் வரிசையில் ஆட்சிப் பொறுப்பில் உள்ளது.

6. மதுரை மீனாட்சியம்மன் கோயில் அறங்காவலர்கள் பட்டியல் (தட்டச்சுப்படி)
   தகவல்: எஸ். பாலு (வயது 48), பேஷ்கார், மதுரை மீனாட்சியம்மன் கோயில், கள ஆய்வு நாள்: 27.11.82.
   தகவல்; திரு. பெருமாள் (வயது 47), எழுத்தர், கள ஆய்வு நாள்: 27.11.82.
   தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), திருப்பரங்குன்றம் கோயில், கள ஆய்வு நாள்: 30.11.82.




இக்கோயில் மதுரை மீனாட்சியம்மன் கோயிலின் துணைக் கோயிலாக இருந்தபோது மதுரை மீனாட்சியம்மன் கோயிலின் நிருவாக அதிகாரியே (துணை ஆணையர் நிலையிலுள்ளவர்) இதற்கும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுவந்துள்ளார். பின்னர் இது தனித் தேவஸ்தானமாக (தனிக் கோயிலாக) மாறிய பின்னர் ஒரு துணை ஆணையரின் கீழ்ப் பணியாற்றும் நிருவாக அதிகாரியின் பொறுப்பில் வந்துள்ளது.

கோயிலின் ஆட்சி முறையில் மூன்று வெவ்வேறு பிரிவுகள் உள்ளன. இதை மேலே காட்டப்பட்டுள்ள மூன்று பெரும் பிரிவுகள் விளக்குகின்றன. இதில் அரசும், அறங்காவலர் குழுவும் அதிகப் பொறுப்பு வாய்ந்தவையாகவும், அதிக அதிகாரங்கள் உடையனவாகவும் உள்ளன. ஆனால் நடைமுறை, ஆட்சி முறையைப் பார்க்கும்பொழுது கோயிலின் பூசை, வழிபாடு எல்லாம் மூன்றாம் பிரிவான ஸ்தானிகர்கள் கையில்தான்

உள்ளது. ஸ்தானிகர்களே இங்கு அரசர்கள் காலம் தொடங்கி இருந்துவரும் ஆறு நிருவாகத்தார்களில் முதல் நான்கு நிருவாகமாக இருந்து வருகின்றனர். கோயில் நாள் வழிபாடு, திருவிழாக்கள் முதலியவற்றில் இவர்களே முதல் மரியாதை பெறுபவர்கள். கோயில் திருவிழாக்களில் நடைபெறும் லீலைகளில் இவர்களே பெரும் பங்கு ஏற்பவர்கள். இக்கோயிலின் நகைகள், விலைமதிப்புள்ள பொருட்கள் இந்த ஆறு நிருவா கத்தார் சபையினரிடமே உள்ளது. இக்கோயிலை அரசும், அறங் காவலர் குழுவும் அருள்மிகு ஆண்டவர் சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் தேவஸ்தானம் என்று அறிவித்திருந்தாலும், இங்கு முதன்மைத் தெய்வமாய் விளங்குவது சிவன்தான். இங்கு ஸ்தானிகர்கள் சிவனை முழுமுதற் தெய்வமாக வைத்துத்தான் பூசைகள், வழிபாடுகள் செய்து வருகிறார்கள். ஆகவே இக்கோயிலின் சிறப்பான வழிபாடுகள், விழாக்கள் அனைத்தும் இவர்கள் பொறுப்பில்தான் உள்ளது. வழிபாடு, விழாக்கள் நடப்பதற்குச் செலவுகள் செய்வது, வருமானத்தை வாங்கிக் காத்து வகுத்துக் கொடுப்பது போன்ற செயல்கள் அனைத்தும் அரசின் நிருவாக அதிகாரியால் நடத்தப்படுகின்றன. ஆகவே மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது இக்கோயில் ஆட்சி முறையில் அரசு பெரும் பொறுப்பு வாய்ந்ததாகவும், ஆற்றல், அதிகாரம் மிக்கதாயும் தோன்றுகிறது. ஆனால் அதற்கு நிகரான பொறுப்பும், அதிகாரமும், ஆற்றலும் இங்கு ஸ்தானிகர்களிடம் இருப்பது வெளியே தெரியவில்லை. ஆகவே ஸ்தானிகர்கள் இங்கு ஒரு வெளித்தெரியாத ஆற்றல்மிக்க சக்தியாகத் (Invisible power) திகழ்கிறார்கள். அரசு என்றுமே ஒரு பொறுப்புமிக்க, ஆற்றல், அதிகாரம் மிக்க சக்தி (visible power) என்பது வெள்ளிடை மலை. இவ்விரண்டிற்கும் இடையே அரசினால் ஏற்படுத்தப்படும் 'அறங்காவலர் குழு' என்பது ஒரு பெரிய ஆற்றல் மிக்க சக்தி போலக் காணப்பட்டாலும், இதன் நடைமுறை ஆட்சிமுறைகளை ஆழ்ந்து நோக்கினால், இக்குழு வினால் எந்த நாள் வழிபாட்டையும், பூசை முறையையும், திருவிழாக்களையும் மாற்ற இயலாது என்பது புலப்படும். ஒரு கோயிலுக்கு இன்றியமையாத வழிபாடு, பூசைகள், விழாக்கள், அனைத்தும் ஸ்தானிகர்களிடம் இருப்பதும் புலப்படும். அறங் காவலர் குழு வருமானத்திற்கு வழி சொல்லவும், செலவிற்கு வழி சொல்லவும், மரியாதைகளைப் பெற்றுக்கொள்ளவும்தான் இயலுமேதவிர, அன்றாட நடைமுறை ஆட்சியில் வழிபாட்டில் எதையும் முழுக்க மாற்றவோ, குறைக்கவோ இயலாது.

இவ்வாறு கோயில் ஆட்சிமுறையில் மூன்று பெரும் பிரிவுகள் தனித்தனியே இயங்கி வருகின்றன. இப்பிரிவுகளில் அதிகாரமில்லாத பிரிவு தனக்கு அதிகாரம், ஆற்றலை வேண்டுகிற பொழுது, நிறுவ முற்படுகிற பொழுதுதான் கோயில் ஆட்சி முறையில் குழப்பங்கள் ஏற்படத் தொடங்குகின்றன. இன்றைய கோயில் ஆட்சி முறையில் வருமானமும், செலவுகளும்தாம் எல்லோருடைய கண்ணையும், கருத்தையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்துள்ளன.

வருமானத்தை வைத்துக் கோயில்கள் தரம் பிரிக்கப்படுகின்றன. (A grade, B grade, C grade) இவ்வாறு வருமான அடிப்படையில் கோயில்கள் பிரிக்கப்படுகின்ற பொழுது அறங்காவலர்கள் பதவிக்குப் போட்டியும், பூசல்களும் ஏற்பட இது வழி செய்கிறது. அப்பொழுது அங்கே கோயில்களில் அரசியல், கட்சிகள், செல்வர்கள் என்று பலர் இடம் பிடிக்க நினைப்பதால் உண்மையிலே தக்கவர்களாக இருப்பவர்கள் ஒதுங்க வேண்டியுள்ளது. அரசும் நீதிமன்றமும் இதில் அடிக்கடி தலையிட வேண்டிய கட்டாயமும் ஏற்படுகிறது. (வருமானமும் செலவினமும் ஒரு ஐந்து ஆண்டு காலத்திற்குள் எவ்வாறு வளர்ந்து வந்துள்ளன என்பது பிற்சேர்க்கையில் காட்டப்பட்டுள்ளது). வருமான அடிப்படையில் கோயில்களைத் தரம் பிரிப்பதால், வருமானம் அதிகமிருக்கும் கோயில்கள், மற்றைய கோயில்களிலிருந்து பிரிந்து செல்லவும், மற்றைய கோயில்களின் செலவினங்களை ஏற்றுக் கொள்வதற்கு எதிர்ப்புக்காட்டி வழக்குகள் தொடுக்கவும் இது இடமளிக்கிறது. ஆகவே கோயில் ஆட்சி முறையில் கோயில்களை வருமான அடிப்படையில் பிரிப்பதும், அரசியல் சார்பினராக அறங்காவலர்கள் நியமிப்பதும் தக்க முறையாகாது எனக் கருத வேண்டியுள்ளது.

# நாள் வழிபாடும் திருவிழாக்களும்

திருப்பரங்குன்றம் கோயிலில் நடைபெறும் நாள் வழிபாடும்; பன்னிரு மாதங்களிலும் நடக்கும் திருவிழாக்களும் இவ்வியலில் விளக்க முறையில் ஆய்வு செய்யப்படுகின்றன.

## நாள் வழிபாடு

சூரியன் உதிப்பதற்கு முன் தொடங்கி சூரியன் மறைந்த பின் நடப்பது வரை இங்கு நாள் வழிபாடு எனப்படுகிறது. பூசை கடவுளின் மனத்தைக் கனியவைக்கும் செயல். தொல்காப்பியத்துள்ளும், சங்க இலக்கியங்களிலும் வரும் வெறியாடல் என்பது பெண்ணுக்குப் பிடித்த பேய் நீங்கச் செய்யப் பெற்றது. பூசையுள் அன்பால் செய்யப்படும் பூசையும், ஆகம விதிப்படிச் செய்யப்படும் பூசையும் என இரு வகையுண்டு. அவற்றுள் அன்பால் செய்யப்படும் பூசைமுறை திருமுருகாற்றுப் படையுள் மிகச்சிறப்பாகக் குறிக்கப் பெற்றுள்ளது.[1] இங்கு ஆகம விதிப்பட்ட பூசை விளக்கப்படுகிறது. திருப்பரங்குன்றம் கோயில் கி.பி. எட்டாம் நூற்றாண்டு முதல் சிவன் கோயிலாக இருந்து வருவதால் இங்கு நடைபெறும் நாள் வழிபாடுகள் எல்லாம் சிவபெருமானுக்கே நடைபெறுகின்றன. முருகனைப் பரிவார தெய்வமாக வைத்துத்தான் இங்குப் பூசைகள் நிகழ்த்தப் பெறுகின்றன. திருவிழாக்கள் மட்டும் சிவன், முருகன் இருவருக்குமாகச் சேர்த்து நடத்தப் பெறுகின்றன. (இவை இவ்வியலின் பிற்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன). இங்கு அதிகாலையில் தொடங்கும் திருவனந்தல் பூசையிலிருந்து இரவு பள்ளியறைப் பூசை வரை எல்லாம் சிவபெருமானுக்கே நடைபெறுகின்றன. ''சிவாலயங்களில் நிகழும் கிரியைகள் (பூசைகள்) மூன்று வகையின. இவை நித்தியக் கிரியைகள், நைமித்திகக் கிரியைகள், காமியக் கிரியைகள் எனப் பெயர் பெறுவன. தினந்தோறும் நிகழும் கிரியைகள் நித்தியக் கிரியைகள், நிமித்தம் என்பது

1. ச. தண்டபாணிதேசிகர், முருகன், ப.9.

காரணம், எனவே, நைமித்திகக் கிரியைகள் காரணங்கொண்டு நிகழ்வன. பெரும்பேற்றினை அவாவிச் செய்யப்படுங் கிரியைகள் காமியக் கிரியைகள் எனப்படும்".2 சைவ ஆகமங்கள் ஒரு நாளில் எட்டு பூசைகள் நடப்பதை உத்தமோத்தமம் என்றும், பூசையே யில்லாமல் இருப்பதை அதமோ தமம் என்றும் கூறுகின்றன. அவை கீழ்வரும் முறையில் கூறப்பட்டுள்ளன.3

| | | |
|---|---|---|
| உத்தமோத்தமம் | ... | எட்டுக்கால வழிபாடு |
| உத்தமமத்திமம் | ... | ஏழு ,, |
| உத்தமாதமம் | ... | ஆறு ,, |
| மத்திமோத்தமம் | ... | ஐந்து ,, |
| மத்திமமத்திமம் | ... | நான்கு ,, |
| மத்திமாதமம் | ... | மூன்று ,, |
| அதமஉத்தமம் | ... | இரண்டு ,, |
| அதமமத்திமம் | ... | ஒருகால வழிபாடு |
| அதமோதமம் | ... | வழிபாடில்லா நிலை |

திருப்பரங்குன்றம் கோயிலில் உத்தமமோத்தமம் என்ற வகையில் எட்டுக்கால வழிபாடுகள் நிகழ்கின்றன. அவை :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திருவனந்தல் | ... | காலை | 5-30 மணி | ... | 6.00 மணி |
| விழாப்பூசை | ... | காலை | 7-30 மணி | ... | 8.00 மணி |
| காலசந்தி | ... | காலை | 8-00 மணி | ... | 8-30 மணி |
| திருக்காலசந்தி | ... | காலை | 10-45 மணி | ... | 11-00 மணி |
| உச்சிக்காலம் | ... | காலை | 11-30 மணி | ... | 12 00 மணி |
| சாயரட்சை | ... | மாலை | 5-30 மணி | ... | 6-00 மணி |
| அர்த்தசாமம் | ... | இரவு | 9-00 மணி | ... | 9-45 மணி |
| பள்ளியறை | ... | இரவு | 9-45 மணி | ... | 10-00 மணி |

**திருவனந்தல்**

கதிரவன் தோன்றுவதற்கு மூன்று நாழிகைக்கு முன் ஆசாரியன் விநாயகரைப் பூசித்துப் பள்ளியறை சென்று பாதுகையைப் பல்லக்கில் வைத்துத் திருக்கோயிலை வலமாக வந்து இறைவன் கருவறை அடைந்து பாதுகையிலுள்ள இறைவனை மூலவிக்ரகத்தில் எழுந்தருளப் பிரார்த்தித்துப் பூசைகள் செய்து, அம்மன், நடராசர் ஆகியோருக்குப் பூசை

2. கா. கைலாசநாதக் குருக்கள், சைவத் திருக்கோயிற் கிரியைநெறி, ப. 167.
3. தங்கபட்டர், தமிழகப்பண்பாடு (தட்டச்சுப்படி) பக். 1—2.

செய்து, கதிரவன் தோன்றுவதற்கு ஒரு நாழிகை முன் முடிப்பது திருவனந்தல் எனப்படும். இங்கும் திருக்காமக் கோட்டத்துக்கு அருகிலுள்ள பள்ளியறையிலிருந்து காலையில் இவ்விதமாக இறைவன் திருமலர்ப் பாதத்தை மூலவர் கருவறைக்கு எடுத்துச்சென்று திருவனந்தல் பூசை செய்யப்படுகிறது.

விழாப்பூசை

கதிரவன் தோன்றும்போது நடைபெறுவது, முதலில் சூரியனுக்குப் பூசை செய்து, பின்னர் விநாயகர்க்கும், அதனையடுத்து மூலத்தானத்து இலிங்கத்துக்கும், பின் சுற்றுத் தெய்வங்களுக்கும் பூசை செய்வர். இங்கு விநாயகர், சிவ பெருமான், அம்மன் (ஆவுடைய நாயகி), சூரியன் ஆகியோருக்கு மட்டும் இப்பூசை நடத்தப்படுகிறது. இது முத்தம்பல முதலியார் கட்டளையாகக் கோயிலிலிருந்து நடைபெற்று வருகிறது.

காலசந்தி

இது கதிரவன் தோன்றிய பின் செய்யப்படும் பூசை. விநாயகர் முதல் எல்லா இறையுருவங்களுக்கும் பூசை செய்யப் படும். இங்கும் இம்முறைப்படியே இப்பூசை நடைபெறுகிறது.

திருக்காலசந்தி

இது காலசந்தி பூசைக்குப் பிறகு நடைபெறுவது. கதிரவன் தோன்றியபின் ஏழரை நாழிகைகளுக்கு முன் இப்பூசை நிகழ்தல் வேண்டும். இங்குச் சூரியபூசை, விநாயகர் பூசை, மூலவர் களுக்கு அபிடேகம், துவாரபூசை ஆகியன நிகழும். பின்னர் மூல இலிங்கத்திற்கும், பரிவார தெய்வங்கள் அனைத்திற்கும் பூசை விரிவாக நிகழ்த்தப்படும். ஆவாகனம், அபிடேகம், அலங்காரம், தீபாராதனை அருச்சனை, தோத்திரம், நிருத்தியம் முதலியன பூசையின் அம்சங்கள். பூசையின் முடிவில், நித்தியாக்கினி கார்யமும், நித்திய பலியும் நடைபெறும். இங்கு இது காலை 10-45 முதல் 11-00 மணி வரை நடைபெறு கிறது. இதில் சிவபெருமான், அம்மன் (ஆவுடைய நாயகி) முருகன், துர்க்கை, கணபதி, திருமால் ஆகியோருக்குப் பூசைகள் நடைபெறுகின்றன.

உச்சிக்காலம்

இப்பூசை நண்பகலில் நிகழ்வது. அருச்சகர் நித்திய கடன்களை முடித்து, விநாயகரைப் பூசை செய்து, பூர்வாங்கக் கிரியைகளை முடித்து, ஸ்நபன பூசை செய்து, துவார பாலகர்களை வணங்கி உட்புகுந்து, மூலவரை ஆதாரசக்தி முதல் மானசாபிடேகம் வரை முறையாக அருச்சித்து, எண்ணெய்க் காப்பு முதல் ஸ்நபனம் ஈறாக அபிடேகம் செய்து, வஸ்திரம் மாலை முதலியவற்றால் அலங்கரித்து, ஆபரண பூசை வரையும் முடித்துத் தூபதீப ஆராதனைகளைச் செய்வர். பின்னர் நடேசர், சக்தி பூசைகள் நிகழும். இவ்வாறு பூசை நிறைவேறியதும் சிவ நிர்மாலியத்தைச் சண்டேசுவரரிடம் சமர்ப்பிப்பதுடன் உச்சிக்கால பூசை முடிவுறும். இங்கு இப்பூசை காலை 11-30 மணியிலிருந்து 12-00 மணிக்குள் நடைபெறுகிறது. சிவன், அம்மன் (ஆவுடைய நாயகி) விநாயகர், துர்க்கை, முருகன், திருமால், உத்சவ மூர்த்திகள் ஆகியோருக்கு இப்பூசை நடத்தப்படுகிறது. காலையில் திருவனந்தல் பூசைக்கு திறக்கப்பட்ட கோயிலின் திருக்கதவுகள் இப்பூசை முடிந்ததும் திருக்காப்பிடப்படுகின்றன. இவ்வுச்சிக்காலப் பூசைக்கு ஆயிர வைசிய காசுக்காரச் செட்டியார்கள் அறக்கட்டளை அமைத்துச் செய்து வருகிறார்கள். 4

சாயரட்சை

இப்பூசைக்கு சாயங்கால பூசை, மாலை சந்தி திருவந்திக் காப்பு, பிரதோஷகால பூசை என்று பெயர்களும் உண்டு. பிரதோஷம் இரவின் முகம் என நிகண்டு கூறும். எனவே, இரவின் தொடக்கமான மாலைப் பொழுதே பிரதோஷம் என்று பெறப்படுகின்றது. இப்பூசை சூரியன் மறைவதற்கு மூன்றே முக்கால் நாழிகைக்கு முன் நிகழ வேண்டும். கணேசனையும், நடேசரையும் மூலவரையும் சிவபெருமானுடைய ஏனைய மூர்த்தி பேதங்களையும், அம்மையையும், உரியவாறு பூசித்தல் இப்பூசையின் முக்கியக் கூறாகும். இங்கும் முன்னர்க் கூறியவாறு ஆவாகனம், அபிடேகம் முதலியன நிகழ்வது கவனிக்கத்தக்கது. இங்கு இம்முறைப்படி இப்பூசை மாலை 5-30 மணியிலிருந்து 6-00 மணிக்குள் நடைபெறுகிறது.

4. தகவல்: மதுரை எஸ். பாலசுப்பிரமணியன் செட்டியார் (வயது 57). கள ஆய்வு நாள்: 17-8-82.

**அர்த்தசாமமும் பள்ளியறையும்**

சாயரட்சை பூசை முடிந்து மூன்றே முக்கால் நாழிகையில் நடப்பது இரண்டாங்கால பூசை (இங்கு இரண்டாங்கால பூசை நடைபெறவில்லை). இரண்டாங்கால பூசையிலிருந்து மூன்றே முக்கால் நாழிகையில் நடப்பது அர்த்தசாமப் (அர்த்தயாம) பூசை. ''பூசை இரு வகைப்படும். அவை போகாங்கம், லயாங்கம் எனப்படும். போகாங்க பூசை உலக உற்பத்தி முறையை அறிவிப்பது. அது திருவனந்தலிலிருந்து உச்சிக் காலம் வரையில் உலக வளர்ச்சி முறையைக் காட்டும் பூசை. லயாங்க பூசை ஒன்றாதலை உறுப்பாக உடையது. அது திருவந்திக்காப்பிலிருந்து (சாயரட்சை) விரிந்த நிலையிலிருந்து ஒடுங்கிக் கொண்டு வந்து அர்த்தசாமத்தில் (அரையிருள் யாமத்தில்) சிவத்தோடு சக்தியை ஒடுக்கிச் செய்யும் வழிபாடு. இதில் மணியோசை, தாளம், கற்பூர ஆரத்தி எல்லாம் ஒன்றாய் ஒடுங்கி இருக்கும்''.5

அர்த்தயாம பூசையில் துவார பூசை கிடையாது. வாசனை கலந்த எண்ணெய் முதலிய அபிடேகப் பொருள்களால் இலிங்கத்திற்கு அபிடேகம் செய்து, பூமாலை முதலியவற்றால் அலங்கரித்து பஞ்சாவரண பூசை உட்பட முடித்து, நிவேதித்து, போக சக்தியைப் பூசித்து, பள்ளியறைக்கு ஏகுவதற்காக எழுந்தருளும் மூர்த்தியைச் சிவிகையிலுள்ள ஊஞ்சலில் ஏற்றி, பூசை முடித்து, வலமாகப் பள்ளியறையை அடைந்த பின், அங்கு மூர்த்தியை எழுந்தருளச் செய்து, அங்குள்ள பொற் கட்டிலின் மீது தேவியின் வலப் பக்கத்தில் இறைவனை எழுந்தருளச் செய்து இருவரையும் பூசித்தல் வேண்டும். நறுமணங்கமழும் மலர் மாலைகளால் இருவரையும் அலங்கரித்துப் பாற்பாயாசம், வடை முதலியவற்றை இறைவன் இறைவிக்கு நிவேதித்த பின்னர் ஏலம், இலவங்கம், சாதிபத்திரி, பச்சைக் கற்பூரம், பாக்கு முதலியவற்றுடன், இளந்தளிர் வெற்றிலைகளைச் சமர்ப்பித்துத் திரையிட்டு அருச்சகர் வெளியேறுவர். பின்னர் இறைவனைப் பள்ளி கொண்டருளும் படிவேண்டிநிற்கும் பாடல்களைப் பாடச் செய்து தாழ்ப்பாளிடுவர். இதன்பின் சண்டேசுவர பூசை இடம் பெறும். இது முடிந்ததும் பைரவரது ஆலயமடைந்து முறைப்படி பூசை நிகழ்த்தித் திறவுகோலை அவர் முன்னிலையில் வைத்துக் கோயில் பாதுகாப்பை அவரிடம் ஒப்பு

5. தகவல்: ச. தண்டபாணி தேசிகர், கள ஆய்வு நாள்: 12-10-81.

விப்பர்.[6] இங்கு அர்த்தசாமப் பூசையும், பள்ளியறைப் பூசையும் மேற்கூறிய முறையில் இரவு 9.00 மணியிலிருந்து 10.00 மணிக்குள் நடைபெறுகின்றன. பட்டர் ஒருவர் சொக்கர் பாதத்தைக் கையில் ஏந்திக் கொண்டுவந்து, கம்பத்தடி மண்டபத்தில் உள்ள பல்லக்கில் வைக்கிறார். கம்பத்தடி மண்டபத்தைச் சுற்றி கம்பளம் விரிக்கப்பட்டுள்ளது. பல்லக்கு கம்பத்தடி மண்டபத்தை மூன்று முறை வலம் வருகிறது. அப்பொழுது அர்த்தயாம அறக்கட்டளையாளர்களின் தீபாராதனைகள் வரிசையாக முடிந்து, தேவாரம் பாடி முடிந்ததும் சொக்கர் பாதம் கட்டியம் வர, சாமரை வீச, பள்ளியறை செல்கிறது. பள்ளியறையில் ஆராதனை நிவேதனம் முடிந்து, தேவாரமும், ஊஞ்சற்பாட்டும் (நாதஸ்வரம்) பாடப்பட்டு முடித்தவுடன் பள்ளியறை சாத்தப்படுகிறது. இறுதியில் சண்டேசுவரருக்கும், பைரவருக்கும் பூசைகள் முடிந்து, திருக்கோயில் திருக்காப்பிடப்படுகிறது.''[7] இங்கு ஒவ்வொரு பூசையின் போதும் மூலவர் இலிங்கத்திற்கும், ஆவுடைய நாயகிக்கும், முருகன் திருக்கை வேலிற்கும் மட்டும் தான் அபிடேகங்கள் செய்யப்படுகின்றன. மற்ற மூர்த்தங்களுக்குப் புனுகு, சாம்பிராணித் தைலம் ஆகியவைதான் பூசப்படுகின்றன.

இங்குள்ள விநாயகர், இலிங்கத்திற்குப் பின்னால் உள்ள சோமாஸ்கந்தர், துர்க்கை, பவளக்கனிவாய்ப் பெருமாள், நக்கீரர், தெய்வயானை, சூரியன், சந்திரன் ஆகியோருக்கு ஆண்டுதோறும் வைகாசி மாதம் புனர்பூச நட்சத்திரத்தன்று (கும்பாபிடேகம் நடந்த நாள்) சாம்பிராணித் தைலம் பூசப்படுகிறது. மகாமண்டபத்தில் உள்ள நடராசருக்கு மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தன்று சாம்பிராணித் தைலம் பூசப்படுகிறது. மூலவர் முருகனுக்கு மட்டும் சாம்பிராணித் தைலம் பூசுவதில்லை. மூலவர் முருகனுக்கு (நக்கீரர், தெய்வயானை, சூரிய சந்திரர் நீங்கலாக) வைகாசி மாதம் புனர்பூச நாளன்று புனுகுக் காப்பு பூசப்படுகிறது.[8]

இங்கு ஆதிகாலத்தில் மதுரை அருகேயுள்ள மாடக்குளம் என்ற ஊரிலிருந்து சிவாச்சாரியார் ஒருவர் தினமும் ஒற்றையடிப் பாதை வழியாக இங்கிருந்தகாட்டுக்குள் வந்து பனைமரத்தினால்

6. கா. கைலாசநாதக் குருக்கள், மு. நூ., பக். 167-172.
7. நாள் வழிபாடு, கள ஆய்வு நாள்: 16-3-83.
8. தகவல்: ஏ. நாராயணசாமி (முன்னாள் மணியம்), கள ஆய்வு நாள்: 27-11-82.

சாரம் கட்டி நித்திய வழிபாடு செய்ததாகக் கூறுவர்.[9] இன்றும் ஆதிசைவர் எனப்படும் சிவச்சாரியர்கள் மட்டுமே நித்திய வழிபாடு, விழாக்களை நடத்தி வருகின்றனர். வேறு எந்தச் சாதியினரும் பூசை, விழா இயற்ற அனுமதிக்கவில்லை.

இக்கோயிலின் நாள் வழிபாட்டில் இடம் பெறும் நாதசுவர மேளங்களின் இராகங்கள்;

திருக்கோயில் திறந்தவுடன் கொலு மேளம் இசைக்கப்படுகிறது. இதில் பூபாளம், வசந்தா, வலஜி, பிலகரி போன்ற உதயராகங்கள் இசைக்கப்படுகின்றன.

திருவனந்தல் பூசையில் பிலகரி ராகம் இசைக்கப்படுகிறது. திருமஞ்சனம் செய்யும் பொழுது கேதாரம் இசைக்கப்படுகிறது. விழாப்பூசை, காலசந்தி ஆகிய காலங்களில் தந்நியாசி இசைக் கப்படுகிறது. திருக்காலசந்தி பூசையில் சாவேரி, ஆரபி, தர்பார் ஆகிய இராகங்கள் இசைக்கப்படுகின்றன. உச்சிக்கால பூசையில் மத்தியமாவதி, மணிரங்கு, ஸ்ரீராகம் போன்ற இராகங்கள் இசைக்கப்படுகின்றன.

மாலையில் கோயில் திறந்தவுடன் கொலுமேளம். இதில் நாட்டைக்குறிஞ்சி, பூரி கல்யாணி ஆகிய இராகங்கள் இசைக்கப் படுகின்றன.

சாயரட்சை பூசையில் சங்கராபரணம், கல்யாணி, கரகரப் பிரியா ஆகிய இராகங்கள் இசைக்கப்படுகின்றன.

அர்த்தயாம பூசையில் தோடி, பைரவி, காம்போதி, சண்முகப்பிரியா, கீர்வாணி, சிம்மேந்திரமத்திமம், சகானா, கானடா ஆகிய இராகங்கள் இசைக்கப்படுகிறது.

பள்ளியறைப் பல்லக்கு உலா வரும் பொழுது, அர்த்தயாமப் பூசைக்கு இசைக்கும் இராகத்தில் ஏதாவதொன்று இசைத்து இறுதியில் திருப்புகழ் இசைக்கப்படுகின்றன.

பள்ளியறையில் ஊஞ்சல்பாட்டு, ஆனந்தபைரவி, பைரவி, சகானா, நீலாம்பரி ஆகிய இராகங்கள் இசைக்கப்படுகின்றன.[10]

9. தகவல்: ரா. பிச்சைப்பட்டர் (முதல் ஸ்தானிகர்), கள ஆய்வு நாள்: 18-12-82

10. தகவல்: கா. முத்தையாபிள்ளை (வயது 50), கள ஆய்வு நாள்: 18-12-82.

இக்கோயிலின் நாள் வழிபாட்டிற்கான மலர்கள், மலர் மாலைகள் இவைகளுக்காக இரண்டு நந்தவனங்கள் இருக்கின்றன. ஒன்று நாகப்ப செட்டியார் கட்டளை; மற்றொன்று சிவகங்கைக் கட்டளை. இவையிரண்டும் தற்பொழுது பயனளிக்கவில்லை. ஆகவே கோயிலுக்குத் தேவையான மலர்கள் விலைக்கு வாங்கப்படுகின்றன.11

இக்கோயிலின் நாள் வழிபாட்டில் ஒவ்வொரு காலத்திற்கும் தனித்தனிக் கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டுத் தனிதனித் மடைப்பள்ளிகளில் நைவேத்தியம் செய்யப்பட்டு இறைவனுக்குப் படைக்கப்படுகிறது. சுந்தரம் பரதேசி என்பவரால் அர்த்தயாமக் கட்டளை ஏற்படுத்தப்பட்டு ஒழுங்காக நடைபெற்று வருகிறது. மற்ற காலங்களில் இறைவனுக்கு உப்பில்லாத வெறும் சோற்றையே நைவேத்தியமாகப் படைப்பதாகப் பலர் வருந்துகிறார்கள்.12

முருகப்பெருமானை இங்குச் சிவபெருமானின் அம்சமாகவே கொண்டுள்ளதால் மற்றைய சிவன் கோயில்களில் உள்ளதைப் போன்றே இங்கும் காரண ஆகமத்திலும், காமிக ஆகமத்திலும் உள்ள வழிபாட்டு முறைகள் கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. ஐப்பசி மாதம் நடைபெறும் கந்தசட்டித் திருவிழாவின்போது மட்டும் குமார தந்திரத்தில் கூறப்பட்டுள்ள வழிபாட்டு முறைகள் மேற்கொள்ளப்படுவதாகக் கூறுகின்றனர்.13

### திருவிழாக்கள்

திருவிழாக்கள் உத்சவங்கள் என அழைக்கப்படும். உத்சவம் என்பது, உத்-சிருட்டி; ஸ-திதி வம்-சங்காரம். ஆகவே சிருட்டி முதலான முத்தொழிலைக் குறிப்பிடுவது என்பது பொருளாம்.14 திருவிழாவில் நான்கு பகுதிகள் உண்டு, அவை சிருட்டி செய்தல், தம்மை வெளிக்காட்டல், சுகத்தைக் கொடுத்தல், வந்து பார்த்

---

11. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்) கள ஆய்வு நாள்: 2-8-81
12. தகவல்: சொ.சுந்தரபட்டார் (மூன்றாவது ஸ்தானிகம்) கள ஆய்வு நாள்: 2-8-81.
13. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்) கள ஆய்வு நாள்: 2-8-81
14. ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., ப, 161.

தல் எனப்படும்.[15] திருவிழாவன்று அருள்பாலிக்க, இறைவன் விக்கிரகத்தில் சிறப்பாக முனைந்து நிற்கிறான் என்றும், தன்னிடத்திலிருந்தே தரிசனம் அளித்த இறைவன், வெளியே எழுந்தருளி வந்து தரிசனம் தருகின்றான் என்றும் கூறுவர்.[16]

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர்நல்விழாப் பொலிவு கண்டார்தல்
உண்மையாமெனில் உலகர்முன் வருகெனவுரைப்பர்"

(திருத்தொண்டர் புராணம் 1087)

என்று திருவிழாக்காண்டலைப் பிறவிப் பயனாகவே கூறுகிறது. திருத்தொண்டர் புராணம், இவ்விழாக்கள் மாதவிழா (மாகோத்சவம்), பெருவிழா (மகோத்சவம்), அன்பர் விழா (பக்தோத்சவம்) என அழைக்கப் பெறும். இவற்றுள் மகோத்சவம் 1,3,5,7,9,12 நாட்கள் என்ற நாள் எண்ணிக்கையில் கொண்டாடப் பெறுவதால் இது ஆறு வகைப்படும். இவை முறையே சினம், சாத்துவிகம், பௌதிகம், ஸ்ரீகரம், சௌக்யம், பைதிருகம் எனப் பெயர் பெறும். இவற்றுள் முதல் மூன்றும் கொடியேற்றாமல் இயற்ற வேண்டியன. இறுதி மூன்றும் கொடியேற்றிக் கொண்டாடத் தக்கவை என்பர். [17]

திருப்பரங்குன்றில் நடைபெறும் திருவிழாக்களை ஐந்து பிரிவாகப் பிரிக்கலாம்.

1. முருகனுக்கு மட்டும் உரிய திருவிழாக்கள் (வைகாசி வசந்த உத்சவம், ஆனி ஊஞ்சல் திருவிழா ஐப்பசி கந்த சட்டித் திருவிழா)
2. முருகனுக்கும் சிவனுக்குமுரிய திருவிழாக்கள் (கார்த்திகை, தை, பங்குனி)
3. சிவனுக்கு மட்டும் உரிய திருவிழாக்கள் (மார்கழி ஆருத்ரா தரிசனம், மாணிக்கவாசகர் உத்சவம்)

15. ஞானியார் அடிகள் நினைவு மலர் (சொற்பொழிவுத் தொகுப்பு), ப. 76
16. ப. அருணாசலம், சைவ சமயம் (ஓர் அறிமுகம்), ப. 82.
17. ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., ப. 162.

4. அம்மனுக்கு மட்டும் உரிய திருவிழாக்கள் (புரட்டாசி நவராத்திரி விழா, மாசி எண்ணெய்க் காப்பு)

5. திருமாலுக்கு மட்டும் உரிய திருவிழாக்கள் (மார்கழி வைகுண்ட ஏகாதசி) — விளக்கம் திருவிழா பற்றிய அட்டவணையில் தரப்பட்டுள்ளது.

இத்திருவிழாக்களில் முருகனுக்கும் சிவனுக்குமுரிய திருவிழாக்களில் மட்டும் கொடியேற்றம் (துவசாரோகணம்) செய்யப்படுகிறது. மற்ற திருவிழாக்களில் கொடியேற்றம் செய்யப்படுவதில்லை; காப்புக் கட்டுதல் (ரட்சாபந்தனம்) மட்டும் செய்யப்படுகிறது. ஏழு நாட்களுக்குட்பட்ட உத்சவம் ரட்சாபந்தவ உத்சவம் என்றும் ஆகமங்கள் கூறுகின்றன என்பர்.[18] ஆனால் இங்கு வைகாசி, ஆனி, புரட்டாசி ஆகிய மாதங்களில் நடைபெறும் திருவிழாக்கள் முறையே, பதினொன்று, பத்து, ஒன்பது நாட்கள் என்ற எண்ணிக்கையில், கொடியேற்றம் செய்யப்படாமல் காப்புக்கட்டு மட்டும் செய்யப் பட்டு நடைபெறுகிறது. "கொடியேற்றிச் செய்யப்படும் உத்சவங்கள் ஆரம்பகால முதல் இருந்து வருபவை. கொடியேற்றாமல் செய்யப்படும் உத்சவங்கள் அன்பர்கள், அரசர்கள், செல்வந்தர்கள் விருப்பத்திற்கிணங்க செய்யப்படும். இவைகட்கு கொடியேற்றுவதில்லை. இதற்கு பக்தோத்சவம், இராசரீக உத்சவம் என்று பெயர். இம்முறையில்தான் இங்கு இத்திருவிழாக்கள் நடைபெறுகின்றன" என்பர்.[19]

## கொடியும் கொடிமரமும்

நந்திக்குப் பின்னால் கொடிமரம் இடம்பெறும். அதில் நிகழும் கொடியேற்று நிகழ்ச்சியே துவசாரோகணம் எனப் படுவது. கொடிச்சீலையில் சிவனுக்கு உரிய அடையாளமான காளையும், அவனது சிறந்த படைக்கலமான சூலமும் இடம் பெறும். கொடியேற்றம் நிகழும் கோயிலை ஒட்டி இவை உரியவாறு வேறுபடுவன. விநாயகருக்கு உத்சவம் நிகழின் பெருச்சாளியும் அங்குசமும் இடம்பெறும். சுப்பிரமணி

18. த. தட்சிணாமூர்த்தி பட்டர், விழாக்கள், நோன்புகள் தமிழகப் பண்பாடு (தட்டச்சுப்படி), ப. 51
19. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு: 2-8-81

யருக்குக் கொடியேற்ற உத்சவம் நிகழின் மயிலும், சக்தியும் முறையே கொள்ளப்படுவன. கொடிச்சீலையில் இவ்விரண்டுடனும் கண்ணாடி, பூரணகும்பம் முதலிய எட்டு மங்கலப் பொருள்களும் இடம்பெறுவன.[20] முருகனுக்கு ஏற்றுங் கொடியில் வேலும், மயிலும், கோழியும் எழுதப்படலாம். அவற்றுள் வேலுக்கே முதன்மை அளிக்கப்பட வேண்டும். இவற்றினடியில் அட்டமங்கலப் பொருள்களும் எழுதப்படலாம் என்பர்.[21] ஆனால் இங்கு ஏற்றப்படும் கொடியில் முருகனின் வேல், மயில், கோழி எழுதப்படவில்லை; காளையும், சூரிய சந்திரர்களும்,அட்டமங்கலப் பொருள்களும் எழுதப்பட்டுள்ளன. இங்கே ஈசனுக்கே (சிவனுக்கு) பூசை என்பதால், திருவிழாவில் காளைக்கொடிதான் ஏற்றுவது உண்டு. திருவீதியுலாவும், தேருலாவும் முருகனுக்கு நடைபெறும். இங்குச் சோமசுந்தரக் கடவுளின் அம்சமாக சுப்பிரமணியர் இருப்பதால் இங்கு இருவரும் ஒருவரே. ஆகவேதான் காளைக்கொடி ஏற்றி முருகன் திருவிழா நடைபெறுகிறது.[22] திருவிழாவின் முதல் நாள் காலையில் இங்குக் கொடியேற்றம் நடக்கிறது. அப்பொழுது காளை உருவத்தை கொடியில் எழுதி அதற்குப் பூசைகள் செய்து கொடிமரத்தின் உச்சியில் கயிறும், புதிய துணியும் கொண்டு இக்கொடியை உயர்த்துகிறார்கள். ''இச்சமயத்தில் கூறப்படும் மந்திரங்கள், மக்கள் நன்றாக வாழ வேண்டுமென்றும், தத்துவங்கள் தோன்றும் முறை இன்னதென்றும் புலப்படுத்தும். காளையின் உருவம் தருமத்தின் உருவமாகவும், ஆன்மாவின் உருவமாகவும் கொள்வர். எனவே தருமத்தையும், ஆன்மாவையும் கீழ்நிலையினின்றும் மேல் நிலைக்கு உயர்த்தும் செயல் இஃது எனக் கருதப்படுகிறது. இங்குத் தினமும் பத்து நாள் வரை யாகசாலையில் யாகம் நடக்கும். இது திதிக்கு அறிகுறியாக நடக்கிறது. இது உயிர்ப் பலியில்லாத சுத்தமான யாகம்.[23]

திருப்பரங்குன்றைச் சுற்றி அவனியாபுரம், விளாச்சேரி, பழங்காநத்தம், மாடக்குளம், புதுக்குளம், பசுமலை, திருமங்

20. கா. கைலாசநாதர் குருக்கள், மு. நூ., ப. 251.
21. ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., ப. 162.
22. தகவல்: சொ.சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 2-8-81
23. கயப்பாக்கம், சோமசுந்தரம் செட்டியார், திருவிழாவின் தத்துவ விளக்கம்.

கலம், நிலையூர், கப்பலூர், யாதவர்களின் 25 ஊர்கள் போன்ற சிறுசிறு கிராமங்கள் நிறைய உள்ளன. ஆகவே இங்கு நடக்கும் திருவிழாக்களில் சில திருவிழாக்கள் பெரும்பான்மையான நாட்டுப்புற மக்களின் ஈடுபாட்டுடன் நடைபெறுகின்றன. சில திருவிழாக்கள் மக்கள் யாருமின்றிக் கோயில் ஊழியர் களாலும், கட்டளைதாரர்களாலுமே நடத்தப்படுகின்றன. ஆகவே இத்திருவிழாக்களில் மக்களின் ஈடுபாட்டை பார்க்கும் பொழுது, இத்திருவிழாக்கள் ஏற்பட்ட முறைமையை அறிந்து கொள்ள முடிகின்றது. அவை:

1. பழைய நாட்டுப்புறத் திருவிழாக்கள் ஆகமத்திற்குட் படுத்தப்பட்டுள்ளன.
2. மற்றைய பெரிய ஊர்களில் உள்ளவை போல் இக் கோயிலிலும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.
3. சில அன்பர்கள், செல்வர்கள், அரசர்கள் (சமஸ் தானங்கள்) விருப்பத்தினால் ஏற்பட்டவை.

என்ற மூன்று பிரிவுகளாக இவைகளை இன்று காணமுடிகின்றது. இம்மூன்று பிரிவுகளையும் சேர்ந்த திருவிழாக்களில் மக்களின் ஈடுபாடு, வழிபாடு இவைகளை வைத்து இவற்றிற்கு இங்கு இரண்டு பெரும் பிரிவுகளின்கீழ் விளக்கம் தரப்படுகின்றது.

1. சமூகத் தொடர்புடைய திருவிழாக்கள்
2. சமூகத் தொடர்பில்லாத திருவிழாக்கள்

### சமூகத் தொடர்புடைய திருவிழாக்கள்

இங்கு ஒவ்வொரு தமிழ் மாதம் முதல் தேதியன்றும், மக்கள் இங்கு வந்து பெருமளவில் கூடி, அதிகாலையில் இங்குள்ள சரவணப் பொய்கையில் நீராடிவிட்டு மலையை வலமாக வந்து முருகனைக் கூடிநின்று கும்மிப்பாடல்கள் பாடி வழிபாடு செய்கின்றனர். அன்று இக்கோயிலில் உள்ள ஒவ்வொரு வாயிற்படிக்கும் விளக்குகள் வைத்து படியுத்சவம் என்று கொண்டாடுகின்றார்கள். அப்பொழுது இவ்வூரில் உள்ள சில குறிப்பிட்ட இனத்தார்களின் மண்டபங்களில் அன்னதானம் சாதி வேறுபாடின்றி நடக்கின்றது. இதைப்போன்று ஒவ்வொரு மாதமும் வருகின்ற கார்த்திகைக்கும் பெருமளவில் மக்கள் கூட்டம்கூட்டமாகக் கால்நடையாகவே நெடுந்தூரத்திலிருந்து வந்து இவ்வாறு வழிபாடுசெய்கின்றார்கள். இதில் சிலர் மௌன விரதமாக வருவதும், குடும்பத்துடன் வருவதும், கோழி,

ஆடு, மாடு போன்றவற்றைத் தூக்கிக்கொண்டு வந்து கோயிலுக்கு நேர்த்திக் கடனாக விடுவதும் இங்கு ஒவ்வொரு மாதமும் நடைபெற்று வருகின்றது. இவை தவிர மக்கள் கூட்டாக வந்து கலந்துகொள்ளும் திருவிழாக்கள் இங்கு ஐந்து மாதங்களில் நடைபெறுகின்றன.

### வைகாசி விசாகம் (வசந்தோத்சவம்)

முருகனுக்கு விசாகன் என்பது ஒரு பெயர். முருகனுக்குரிய நட்சத்திரம் விசாகம். வைகாசி விசாகவிழா முருகன் கோயில் களில் சிறப்பாகக் கொண்டாடப் பெறுதல் உண்டு. விசாகம் ஞானத்திற்குரிய சிறப்புடைய நட்சத்திரம். மிகச்சிறந்த ஞானி களாக உலகம் மகிழ்ந்தேத்தும் புத்தர், நம்மாழ்வார் ஆகியோர் விசாகத்தில் தோன்றியவராவர். விசாகம் ஆறு நட்சத்திரங்கள் ஒன்று சேர்ந்தது. எனவே அதற்குரிய முருகனும் ஆறு திருமுகங் களோடு திகழ்கின்றார். பறவை, மயில், சாகன் சஞ்சரிக் கின்றவன்; மயிலை ஊர்தியாகக் கொண்டு எங்கும் உலாவி வருபவன் 'விசாகன்' எனவும் சிலர் பொருள் கூறுவர்.[24] இது முருகனுக்குரிய சிறப்பான நாளாகையால் இங்கு இவ்விழா சிறப்பான முறையில் நடைபெறுகின்றது. இவ்விழா மூன்று பிரிவாக இங்கு நடைபெறுகின்றது. வைகாசி விசாகத்திற்கு முதல் ஒன்பது நாட்கள் வசந்த உத்சவம் நடைபெறுகிறது. இதில் முருகனும், தெய்வயானையும் இலட்சுமி தீர்த்தத்திற்கு அருகிலுள்ள வசந்த மண்டபத்திற்கு உலாவாகச் சென்று, அங்கு நைவேத்தியம், தூப, தீபாராதனைகள் நடைபெறு கின்றன. இவ்வாறு எட்டு நாட்கள் நடந்ததும், ஒன்பதாம் நாள் வசந்த மண்டபத்திலிருந்து முருகனும் தெய்வயானையும் திருவீதியுலா வந்து கோயிலை அடைகின்றனர். அங்குக் கட்டளைதாரர்க்கும், கோயில் ஊழியர்களுக்கும் மரியாதை செய்யப்படுகின்றது. கோயில் ஊழியர்களுக்குச் செய்யப்படும் மரியாதை திருக்கைவழக்கம் என்று பெயர் சொல்லப்படுகிறது. இவ்வுத்சவம் முத்தம்பலமுதலியாரின்கட்டளையாகக் கோயிலில் நடந்து வருகின்றது. முத்தம்பல முதலியார் நாயக்கர் ஆட்சிக் காலத்தில் அமைச்சராக இருந்தவரென்றும், அவருடைய சிலை அவரமைத்த வசந்த மண்டபத்தில் இருப்பதாகவும் கூறு கின்றார்கள்.[25] ஒன்பதாம் நாள் திருவீதியுலாவன்று முருகனும்

24. திருக்கோயில் (திங்களிதழ்—அக்டோபர் 1962), ப 52
25. தகவல்: கே. நடராசபிள்ளை (வயது 50), கோயில் கணக்கர், கள ஆய்வு நாள்: 13-8-82.

தெய்வயானையும் காலையில் கோயிலைவிட்டுப் புறப்பட்டு திருவாவடுதுறை ஆதீனத்து மடத்திற்குச் செல்கிறார்கள். அங்குத் தூப, தீபாரதனைகள் முடிந்து அன்று மாலை மயில் வாகனத்தில்திருவீதியுலாவாகக்கோயில் வந்து சேருகின்றார்கள். இத்துடன் வசந்த உத்சவத்தின் ஒரு பிரிவு நிறைவேறுகின்றது. அடுத்தநாள் விசாகம் பாலாபிடேகம் நடைபெறுகின்றது.

விசாகம்–பாலாபிடேகம்

இவ்விசாகம்-பாலாபிடேகம்,'இங்கு ஆறுமுகர் மண்டபத்தில் உள்ள ஆறுமுக சுவாமிக்கு (உத்சவமூர்த்தி) நடைபெறுகின்றது. அன்று ஒருநாள் மட்டும்தான் ஆறுமுகசாமி இங்கிருந்து படியிறக்கிக் கொண்டு வரப்பட்டு அபிடேகக்குறட்டில் அபிடேகம் செய்யப்படுகிறார். பிற நாட்களில் ஆறுமுக சாமிக்கு அபிடேகம் செய்யப்பவடுதில்லை. திருநெல்வேலியார் (சைவச் செட்டியார் வகையினர்) இங்கு ஆறுமுகர்க்கு(சேத்தியில்)முதன்முதலில் பாற்குடங்களை அபிடேகம் செய்கின்றனர்.26 ஊர்மக்கள் அனைவரும் ஒன்றாகத் திரண்டு வந்து சரவணப் பொய்கையில் நீராடிவிட்டு, பாற்குடங்களை வைத்துப் பூசை செய்து, பின்னர் மலையை வலமாக வந்து அபிடேகம் செய்கின்றனர். பின்னர் சிவகெங்கை சமஸ்தானத்தின் பாற்குடமும் மதுரை ஆயிர வைசியச் செட்டியார்கள் பாற்குடமும்கொண்டு அபிடேகங்கள் செய்யப்படுகின்றன. அபிடேகங்கள் முடிந்ததும் ஆறுமுகர் சேத்தியைவிட்டு, கம்பத்தடி மண்டபம் வந்து அங்குள்ள அபிடேகக் குறட்டில் இறக்கி வைக்கப்படுகிறார். அபிடேகக் குறட்டில் தூத்துக்குடியாரின் பாற்குடங்கள் முதன் முதலில் அபிடேகம் செய்யப்படுகின்றன.27 பிறகு அனைத்து மக்களின் பாற்குடங்களும், காவடிக்குடங்களும் வரிசையாக ஓய்வின்றி அபிடேகங்கள் நடந்த வண்ணம் இருக்கின்றன. இவை தவிர மதுரையைச் சுற்றியுள்ள கிராமத்து மக்களும் பாற்குடங்ளைக் கொண்டுவந்து மூலவர் முருகன் வேலிற்கு அபிடேகங்கள் செய்கின்றனர். அவ்வபிடேகங்கள் காலை எட்டு மணிக்குத் தொடங்கி மாலை நான்கு மணி வரையில் ஓய்வில்லாமல் நடந்தவண்ணம் இருக்கின்றன. விசாகத்தன்று மூலவரின் வேல்,ஆறுமுகசாமி ஆகியஇரண்டிற்கும்அபிடேகம்நடக்கின்றது.

26. தகவல்: பி. சோமசுந்தரம் செட்டியார் (வயது 48), கள ஆய்வு நாள்: 25-5-82

27. தகவல்: ரா. சண்முகசுந்தரபட்டர், கள ஆய்வு நாள் 25-5-82.

இங்குள்ள சுற்று வட்டாரத்துக் கிராமங்களிலிருந்து பலவித மான காவடிகள் வருகின்றன (நாட்டுப்புற வழிபாட்டில் இவை விளக்கப்பட்டுள்ளன). பெண்களும் காவடி எடுத்து வருகின்றனர். பிறகு பதினாறுகால் மண்டபத்தில் நெருப்புக்குழி வளர்த்து, அதில் இருபதுக்கும் மேற்பட்டவர்கள் 'பூக்குழி' இறங்கு கின்றார்கள். இது நாட்டுப்புற வழிபாடும் இணைந்த ஒன்றாகக் காணப்படுகின்றது. இத்துடன் விசாகத்தின் இரண்டாவது பிரிவு முடிவடைகின்றது.

மொட்டையரசு உத்சவம்

மொட்டையரசு என்ற இடம் தியாகராசர் பொறியியற் கல்லூரிக்குப் பின்புறம் உள்ளது. இங்கு ஒரு தெப்பக்குளமும், பிள்ளையார் கோயிலும் இருக்கின்றன. இங்குத் தெப்பக்குளத் திற்கு அருகேயிருந்த அரசமரம் பட்டுப்போய் நீண்டநாட்கள் மொட்டையாய் இருந்ததால் இவ்விடத்திற்கு "மொட்டை யரசு" என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.[28] விசாகப் பாலாபிடேகம் முடிந்த மறுநாள் வைகாசி மாத முழுமதி நாளன்று நடைபெறும் திருவிழா "மொட்டையரசு உத்சவம்" எனப்படுகின்றது. திருப் பரங்குன்ற முருகனும், தெய்வயானையும் வைகாசி மாதம் பௌர்ணமியன்று காலை கோயிலிலிருந்து அபிடேகம் ஆரா தனை முடித்து வெளியே புறப்பட்டு வருகின்றனர். இதுவரை ஆகும் செலவினைக் கோயில் தேவஸ்தானம் செய்கிறது. இதற்கு பின்னர் அவனியாபுரம் அயன்பாப்பாகுடி இராமசாமிக் கோனார் ஏற்படுத்திய கட்டளைப்படிக் கோயிலுக்கு வெளியே சுவாமியை வரவேற்று சப்பரத்தில் வைத்து மொட்டையரசு வரை கொண்டு போவது இவர்கள் தொண்டு. கோயிலிலிருந்து சுவாமி சப்பரத்தில் மயில் மண்டபம் வரை செல்கிறார். அங்குள்ள அவனியாபுரம் மண்டைச் சுப்பையாபிள்ளை வகை யறா, அய்யாச்சாமி பிள்ளை வகையறா மண்டபத்தில் முதலில் இறங்குகிறார். (இரவு திரும்பிவரும் பொழுதும் இம்மண்ட பத்தில் இறங்கிவிட்டுத்தான் கோயிலுக்குள் வருகிறார்). இம் மண்டபத்துடன், சப்பரம் மட்டும் தனியாக மொட்டையரசு சென்றுவிடுகிறது. சுவாமி இங்கிருந்து தங்கக் குதிரை வாகனத் தில் மொட்டையரசு செல்கிறார், (வழியில் பல மண்டபங் களில் சுவாமி இறங்கி ஏற வேண்டியிருப்பதால் சப்பரம் இல்லா

28. தகவல்: கு. சுப்பிரமணியக் கோனார் (வயது 75), கள ஆய்வு நாள்: 26-5-83.

மல் குதிரை வாகனத்தில் செல்வதாகக் கூறப்படுகிறது). குதிரை வாகனத்தில் புறப்பட்ட வழியில் 16 மண்டபங்களில் (பிற் சேர்க்கை எண். 5) இறங்கித் திருக்கண்கள் முடித்து இறுதியாக அவனியாபுரம் குமாரசாமிக் கோனார் மண்டபத்திற்கு வந்து சேருகின்றார். இம்மண்டபங்கள் உள்ள இடம்தான் மொட்டை யரசு என்று சொல்லப்படுகிறது. இங்குள்ள எல்லா மண்டபங் களிலும் நண்பகலும், இரவும் பிராமணர்களுக்கும், மற்றவர் களுக்கும் அன்னதானம் நடைபெறுகின்றன. குமாரசாமிக் கோனார் மண்டபத்தில் இறங்கிய சுவாமிக்கு அங்கு இரவு அபிடேக ஆராதனைகள் முடிந்தபிறகு, அதற்கு எதிரேயுள்ள பெரிய பரப்பில் போடப்பட்டுள்ள பந்தலில் சுவாமியைத் தூக்கிக் கொண்டு பத்தியுலாத்தல், தட்டுச் சுற்றுதல் போன்றவை நடை பெறுகின்றன. அப்பொழுது இங்கு நாட்டுப்புறப் பாடல்கள் (கும்மி, சிந்து) பாடுதலும், நாதம், மேளம் இசைப்பதுமாகக் கிராம மக்கள் பெருமளவில் கூடிப் பாடி மகிழ்கின்றார்கள். பிறகு, இங்குள்ள அவனியாபுரம் வீரணக்கோனார், சண்முகவேல் கோனார் மண்டபத்தில் (பூப்பல்லக்கு மண்டபம்) பூப்பல்லக்கில் சுவாமி அலங்காரம் செய்யப்பட்டு மொட்டையரசை விட்டுப் புறப்படுகிறார். மொட்டையரசிலிருந்து கோயில் வரும்வரை மறுபடியும் எல்லா மண்டபங்களிலும் இறங்கித் திருக்கண்கள் முடித்து சுவாமி கோயிலுக்கு வருகின்றார்.

இத்திருவிழா 1890-இல் திருப்பரங்குன்றம் பட்டர்கள் நடத்தி வந்ததாகவும், பின்னர் அவர்கள் கைவிட்டு விட்டதால், அவனியாபுரம் குமாரசாமிக் கோனார் காலத்தில் 1902-லி ருந்து இதுபோன்று நடைபெற்று வருவதாகவும், குமாரசாமிக் கோனார் வில்லாபுரம் பகுதியில் இத்திருவிழாவிற்கென விளை நிலங்களைக் கோயிலுக்குக் கொடுத்துள்ளார் என்றும், குமார சாமிக் கோனாருக்கு ஆண்மகவு இல்லாமையால் இத்திருவிழா வைத் தொடர்ந்து நடத்தியதாகவும், இதனால் ஆண்மகவு ஒன்றைப் பெற்று, அவர்க்கு 'சுப்பிரமணியன்' என்று பெயர் இட்டதாகவும் கூறுகின்றார்கள்.29 இத்திருவிழா பெரும்பான் மையும் அவனியபுரத்து மக்களுக்காகவே ஏற்பட்டது போலக் காணப்படுகிறது. இங்குள்ள திருக்கண்கள், மண்டபங்கள் பெரும்பாலும் 90 சதவீதம் அவனியாபுரம் மக்களுக்காகவே உள்ளன. சில மண்டபங்கள், திருக்கண்கள் மதுரை, திருப்பரங்

29. தகவல்: குமாரசாமிப்பிள்ளை (முன்னாள் மணியம்), கள ஆய்வு நாள்: 26-5-83.

குன்றம் பகுதி மக்களுக்காகவும் உள்ளன. பின்னர் அரசியல் செல்வாக்குடைய சிலரின் விருப்பத்தால் சுவாமி மொட்டையரசு செல்லும் வழியில் அவர்களுடைய வீட்டிற்கும் சென்று காட்சி கொடுத்துவிட்டுத் திரும்புகிறார்.[30] குமாரசாமிக் கோனார் வில்லாபுரம் பகுதியில் விளைநிலங்களைக் கோயிலுக்கு விட்டதால், தற்பொழுது கோயிலிலிருந்து ஆண்டுதோறும் ரூ.1750/- குமாரசாமிக் கோனார் மகன் சுப்பிரமணியக் கோனார் குடும்பத்திற்குக் கொடுக்கிறார்கள். ஆனால் இவர்கள் குடும்பத்தினர் ஆண்டுதோறும் ரூ. 9000/- வரை செலவு செய்கிறார்கள்; அவனியாபுரம் மக்கள் பெரும் ஈடுபாட்டுடன் இத்திருவிழாவில் கலந்து கொள்கிறார்கள்.

"மதுரைச் சித்திரைத் திருவிழாவிற்கு அழகர் கோயிலிலிருந்து கள்ளழகர் மதுரை வந்து போவதற்கும், திருப்பரங்குன்றம் முருகன் மொட்டையரசிற்கு வந்து போவதற்கும் நிறைய ஒற்றுமைகள் உள்ளன.

| கள்ளழகர் | முருகன் |
| --- | --- |
| 1. தல்லாகுளம் பெருமாள் கோயிலில் ஆயிரம்பொன் சப்பரத்தில் புறப்படுகின்றார். | 1. கோயிலிலிருந்து ஆயிரம் பொன் சப்பரத்தில் புறப்படுகின்றார். |
| 2. கோயிலிலிருந்து புறப்பட்ட அழகர் வைகையாற்றை அடைவதற்குள் பல மண்டபங்களில் இறங்குகின்றார். | 2. கோயிலிலிருந்து புறப்பட்ட முருகன் மொட்டையரசை அடைவதற்குள் பல மண்டபங்களில் இறங்குகின்றார். |
| 3. ஆற்றில் இறங்குவதற்கு முன் தங்கக் குதிரை வாகனத்தில் வருகின்றார். | 3. மொட்டையரசிற்கு வருமுன் தங்கக்குதிரை வாகனத்தில் வருகின்றார். |
| 4. மறு நாள் திரும்பும் பொழுது அழகர் பூப்பல்லக்கில் புறப்படுகின்றார். | 4. இரவு திரும்பும்பொழுது முருகன் பூப்பல்லக்கில் புறப்படுகின்றார். |

30. மதுரைப் பழக்கடை எஸ்.பாண்டியன்(அ.இ.அ.தி.மு.க., செயலர்) வீடு, கள ஆய்வு நாள்: 26-5-83.

| | |
|---|---|
| 5. கோயிலுக்குப் போகு முன் பல மண்டபங்களில் அழகர் இறங்குகின்றார். | 5. கோயிலுக்குப் போகும் முன் பல மண்டபங்களில் முருகன் இறங்குகின்றார். |
| 6. சித்திரைப் பௌர்ணமியில் இவ்விழா நடைபெறுகின்றது. | 6. வைகாசிப் பௌர்ணமியில் இவ்விழா நடைபெறுகிறது. |

"அவனியாபுரம் கோனார்களுக்கு மதுரைச் சித்திரைத் திருவிழாவில் சிறிது மரியாதைக் குறைவு ஏற்பட்டதால், அது போல வைகாசித் திருவிழாவாக இதை ஏற்படுத்தினார்கள்" என்ற ஒரு கருத்து இங்கு நிலவுகின்றது. மதுரைச் சித்திரைத் திருவிழாவில் கோனார்கள் மண்டபம் நிறைய உள்ளது. சுவாமி அழகர் அம்மண்டபங்களில் இறங்குகிறார். ஆகவே இக்கருத்து தவறானது என்கின்றார் அவனியாபுரம் கு. சுப்பிரமணியக் கோனார்..[31] மதுரைச் சித்திரைத் திருவிழாவில் கோனார்களுக்கும் கள்ளர்களுக்கும் ஏதோ சண்டை ஏற்பட்டு, கோனார்களுக்கு மரியாதைக் குறைவு ஏற்பட்டுள்ளது. இந் நிகழ்ச்சியை அழகர் வருணிப்புப் பாடல்களில் காணமுடிகின்றது என்றார் கோ. விசயவேணுகோபால். [31] இத்திருவிழா ஒற்றுமைகளைப் பார்க்கும்பொழுது, மற்ற பிற கோயில்களில் உள்ளதைப் போன்று இக்கோயிலில் திருவிழா நமக்காக ஏற்பட வேண்டும் என்ற மக்களின் பெருவிருப்பத்தால் அதுபோன்று அமைக்கப் பட்டிருக்க வேண்டும் என எண்ண வேண்டியுள்ளது.

### வேல் திருவிழா

இது புரட்டாசி மாதம் வெள்ளிக்கிழமை நடைபெறுகின்றது. இது முழுக்க முழுக்க நாட்டுப்புற வழிபாடாக இருப்பதால், நாட்டுப்புற வழிபாடு பற்றிய இயலில் இதுபற்றி விளக்கப் பட்டுள்ளது.

### கந்த சட்டித்திருவிழா

கந்தசட்டியாவது முருகப்பெருமானைச் சிறப்பாக வழிபடுதற்கென நூல்களால் விதிக்கப்பட்ட விசேட காலங்களுள்

31. தகவல்: கு. சுப்பிரமணியக் கோனார் (வயது 75) கள ஆய்வு நாள் 1-10-83.
தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 2-10-83.

ஒன்று. அது ஐப்பசித் திங்கள் வளர்பிறை முதல் ஆறாம் பிறை ஈறாக (சுக்கில பக்கப் பிரதமை முதல் சட்டி ஈறாக) உள்ள காலமாகும். ஐப்பசி மாதம் பிரதமையிலிருந்து ஆறு நாட்கள் நோன்பிருத்தலையே கந்தர்சட்டி விரதம் எனச் சிறப்பாகக் கூறுவர். சூரபதுமன் முதலிய அசுரர்களைக் கொன்று, துறக்கமிழந்த தேவர்கள் அதனைப்பெற்று இன்புற்று வாழுமாறு செய்த முருகனது பேரருளை அக்காலத்தோடு தொடர்பு படுத்தி நினைவு கூர்வது வழக்கமாகவுள்ளது. மேற்குறித்த ஆறு நாட்களில் முருகன், சூரபதுமன் முதலி யோரை எதிர்த்துப் போர்புரிந்து, ஆறாவது நாளில் அசுரர் எல்லோரையும் மாய்த்தபின், மாமர வடிவாய் நின்ற அவர் தம் தலைவன் சூரபன்மனைக் கொன்றமையின் அவ்வாறாவது நாள் ஏனைய ஐந்து நாட்களிலும் சிறப்புடையது. அது பற்றியே ஆறுநாள் அளவினையுடைய அக்காலம் 'கந்தசட்டி' என அவ்வாறாவது நாளின் பெயராற் குறிக்கப்படுகின்றது.[32]

இங்குக் கந்தசட்டித் திருவிழா சிவகெங்கை சமஸ்தானத்தின் விருப்பப்படி செய்யப்படும் ராசரீக உத்சவம் எனப்படுகிறது. இங்கு இது ஏழு நாள் விழாவாக நடைபெறுகிறது. முதல் நாள் விநாயகருக்கு அனுக்ஞை பூசை, வாஸ்து சாந்தி முடிந்து, மூலவர், உத்சவமூர்த்திகளுக்குத் தூப, தீபாராதனை நடைபெறுகிறது. கோயில் பட்டர்கள் முதல் காவற்காரர்கள் ஈறாக வரிசை முறைப்படி கோயில் மரியாதை செய்யப்படுகிறது. அடுத்து யாகசாலை முடித்து, உத்சவர் சந்நிதியில் (முருகன் தெய்வ யானை) நம்பியாருக்கு (பூசை முறை ஏற்றிருக்கும் பட்டர்) ரட்சாபந்தனம் (காப்புக் கட்டு) செய்யப்படுகிறது. நம்பியார் உத்சவமூர்த்திகளுக்கு ரட்சாபந்தனம் செய்கிறார். இது முடிந் ததும் கோயிலில் வந்து தங்கி சட்டி விரதமிருக்கும் ஆண், பெண் களுக்கு (சேவார்த்திகள்) பட்டர்கள் ரட்சாபந்தனம் செய் கிறார்கள். ரட்சாபந்தனம் செய்யப்பட்டது முதல் சட்டி விழா தொடங்கியதாகக் கருதப்படுகிறது.பின்னர் ஆறுமுகருக்கு (உத்சவமூர்த்தி) பால், தயிர், பன்னீர், மஞ்சள், சந்தனம், பழச்சாறு, தேன், பஞ்சாமிர்தம் ஆகியவற்றால் அபிடேகம் செய்யப்பட்டு அலங்காரம் முடிந்தவுடன், ஆறு பரிசாரகர்கள் நைவேத்தியம் படைக்க, ஆறு சாஸ்திரிகள் மந்திரம் சொல்ல, ஆறு பட்டர்கள் தூப, தீபாராதனைகள் செய்ய, ஆறு

32. க. வச்சிரவேலு முதலியார், கந்தசட்டி விரதச் சிறப்பு. ப. 7.

முகருக்கு 'சண்முகார்ச்சனை' நடைபெறுகிறது. இது இந்த ஆறு நாட்களுக்கு காலை, மாலை இருவேளையும் நடைபெற்று வருகின்றது.

ரட்சாபந்தனம் செய்து கொண்ட சேவார்த்திகள் (நோன்பிருப்போர்) திருப்பரங்குன்றம் கோயில் எல்லையை விட்டுத் தாண்டக் கூடாது. இவர்கள் தினமும் காலை, மாலை இரு வேளையும் சரவணப் பொய்கையில் குளித்து விட்டு, மலையை வலமாக வந்து கோயிலிலுள்ள மண்டபங்களில் தங்கியிருக்க வேண்டும். திருப்பரங்குன்றம் எல்லையை விட்டுத் தாண்டினால், அது காப்புக்கட்டை மீறியதாகும் என்கிறார்கள். இந்த ஆறு நாட்களும் மாலையில் உத்சவர் முருகனுக்கும் தெய்வயானைக்கும் அபிடேக அலங்கார ஆராதனைகள் முடிந்து அலங்கார மண்டபத்திலிருந்து கம்பத்தடி மண்டபத்திற்குத் தூக்கி வருகிறார்கள். அங்குக் கோயில் ஊழியர்களின் திருக்கண் நடைபெறுகிறது. பின்னர், சுவாமி திருவாச்சி மண்டபத்திற்கு வருகிறார். இங்குதான் நோன்பிருக்கும் ஆண், பெண் பலரும் உண்ணாது உறங்காது இருக்கிறார்கள். இவர்கள் இம்மண்டபத்தைச் சுற்றிக் கூரை வேய்ந்து கொண்டு, அவற்றில் பாத்திரங்களில் சந்நியாசிக் கிணற்று நீரை, அல்லது பாலை வைத்துக் கொண்டு ஒவ்வொருநாள் மாலையும் முருகன் வரவிற்காகக் காத்துக் கொண்டிருக்கின்றார்கள். இங்கு வந்ததும் முருகன் இம்மண்டபத்தை ஆறு சுற்றுச் சுற்றுகிறார். ஒவ்வொரு சுற்றுக்கும், ஒவ்வொரு கூரைகளுக்கும் எதிரில் சுவாமி நிறுத்தி வைக்கப் பட்டு தீபாராதனை செய்யப்பட்டு பட்டர்கள் சேவார்த்திகள் வைத்திருக்கும் தண்ணீர், பால் ஆகியவற்றிற்குத் திருநீறு போடுகின்றார்கள்.

முதல் சுற்றில் பெரியமேளம் எனப்படும் நாதஸ்வர மேளம் காவடிச்சிந்து, தேவாரம், திருப்புகழ் இசைக்க முருகன் வருகின்றார். இரண்டாவது சுற்றில் சாத்திரிகள் வேதபாராயணம் செய்து வருகின்றார்கள். மூன்றாவதுசுற்றில் கோயில் திருமுறை ஓதுவார்கள் தேவாரம், திருப்புகழ் பாடி வருகின்றார்கள். நான்காவது சுற்றில் தித்தி, முகவணை, நட்டுவதாளம், மத்தளம் ஆகிய சின்ன மேளங்கள் இசைக்க, நட்டுவனார் பாடிவர, தேவதாசி ஆடி வருதல் என்ற பழக்கம் இருந்துள்ளது. ஆனால் இது இருபத்தைந்து ஆண்டுகளாக இல்லை. ஆகவே நட்டுமுட்டு, நட்டுவதாளம், மத்தளம் போன்ற கருவிகள்

இசைத்துவர சுவாமி வருகின்றார்.[33] ஐந்தாம் சுற்றில் திருமுறை ஓதுவார்கள் தேவார, திருப்புகழ்ப் பாடல்களை மீண்டும் பாடி வருகின்றார்கள். ஆறாம் சுற்றில் பெரியமேளம் எனப்படும் நாதஸ்வர மேளம் இசைக்கப்படுகிறது. முருகன் வரும் ஆறு சுற்றுக்களிலும் சேவார்த்திகள் முருகனைப் பின் தொடர்ந்து கும்மிப் பாடல்கள், வளையல்சிந்து, காவடிச்சிந்து, திருப்புகழ் (பிற்சேர்க்கை எண். 1) கந்தசட்டிக் கவசம் ஆகிய பாடல் களைப்பாடி வருகின்றார்கள். ஆறு சுற்றுக்களும் முடிந்து முருகன் மண்டப நடுவில் வந்து நிற்கிறார். மேளதாளம், யானை, குடை, சுருட்டி ஆகியவை எல்லாம் சுவாமியை மூன்று முறை சுற்றிவர (தட்டுச் சுற்றுதல்), தீபாராதனை முடிந்து, கட்டளைதாரர் மரியாதை முடிந்து, சுவாமி சேர்த்தி மண்டபம் சேருகிறார்.

முதல்நாள் சுவாமி நின்ற கோலமாகவும், இரண்டாம் நாள் பீடத்தில் அமர்ந்த கோலமாகவும், மூன்றாம் நாள் மயில் மீதமர்ந்த கோலமாகவும், நான்காம் நாள் உமையம் மையை எண்ணித் தவம் செய்யும் கோலமாகவும், அலங் காரங்கள் செய்யப்படுகின்றன. ஐந்தாம் நாள் சுவாமி சிவபூசை செய்வது போல அலங்காரம் செய்யப்படுகிறது. அன்று மூலவர் ஆவுடைய நாயகியின் கையிலிருந்து இரத்தின வேலை நம்பியார் பெற்று வந்து முருகன் கையில் வைத்துக் காட்டுகிறார். இது சுவாமி சிவலிங்கத்தை வைத்து சிவபூசை செய்த பிறகு அம்மையை வணங்கி சக்திவேல் பெறுவதாக ஐதீகம் என்பர்.[34] அம்மையை வழிபட்டு முருகன் வேல் வாங்குதல் என்ற நிகழ்ச்சி, அம்மன் வழிபாடு பெருவழக்குப் பெற்ற பிறகு, அதற்குச் சிறப் பிடம் அளிக்க வேண்டும் என்பதற்காக ஏற்படுத்தப்பட்டது. இவ்வாறுதான் மீனாட்சியிடம் அரசர் செங்கோல் வாங்கு தல் போன்ற வழக்கங்களும் ஏற்பட்டிருக்கின்றன.[35] முருகன் வேல்வாங்குதல் என்ற நிகழ்ச்சி ஐந்து ஆண்டுகளுக்கு முன்பாக இக்கோயிலில் இல்லை. திரு. ஆறுமுகம் என்பவர் இக்கோயில் நிருவாக அதிகாரியாக இருந்த பொழுது, சிக்கல் கோயிலில் இருப்பது போல் இங்கு நடைபெற வேண்டும் என்ப

---

33. தகவல்: க. முத்தையாபிள்ளை (பெரிய நாதஸ்வரம்), களஆய்வு நாள்: 18-12-82.
34. தகவல்: சொ.சுந்தரப்பட்டர் (மூன்றாவது ஸ்தானிகர்), களஆய்வு நாள்: 2-8-81.
35. தகவல்: கே. விசயவேணுகோபால், களஆய்வு நாள்: 19-12-82.

தால் இவ்வழக்கம் ஏற்படுத்தப்பட்டு நடைபெற்று வருகிறது.[36] இவ்விழாவில் நம்பியாருக்குப் பரிவட்ட மரியாதைகள் செய்யப் பட்டு, அவர் கையில் வேல் கொடுக்கப்படுகிறது.

ஆறாம்நாள் முருகன் மயில் வாகனத்திலும், வீரவாகு மரக் குதிரை வாகனத்திலும் திருவீதியுலா சென்று கோயிலின் சந்நிதியில் சூர சம்கார நிகழ்ச்சி நடைபெறுகின்றது. சூரசம் காரம் முடிந்தவுடன் வடமொழிப் புராணத்திலும், வழக்கிலும் பெரிதும் பேசப்படுகிற தெய்வயானை திருமணம் என்ற நிகழ்ச்சி இவ்விழாவில் நடைபெறவில்லை. ஐப்பசித் திங்களில் சம்காரம் முடித்து, பங்குனித் திங்களில் நடைபெறும் பிரம் மோத்சவத்தில்தான் இங்குத் தெய்வயானை திருமணம் என்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது. அ. உத்தண்டராமபிள்ளை என்பவர் இந்து அறநிலைய ஆட்சித் துறையின் ஆணையராக இருந்த காலத்தில் சூரசம்காரம் முடிந்ததும் கோயிலினுள் முருகன், தெய்வயானை ஆகியோர்க்கு அபிடேகம் செய்து திருக் கல்யாணம் போல் மாலை மாற்றிக் கொள்ளும் ஒரு நிகழ்ச்சியை ஏற்படுத்தியுள்ளார். இந்நிகழ்ச்சியும் பன்னிரண்டு ஆண்டுகளாக நடந்து வருகிறது; இதற்குமுன் இவ்வழக்கம் இல்லை.[37] இக்கோயிலில் மட்டும் ஆண்டிற்கு மூன்று தடவை சூரசம்கார நிகழ்ச்சி ஐப்பசி, தை, பங்குனி ஆகிய மாதங்களில் நடைபெறு கின்றது. சூரபன்மனும் தம்பியரும் மூன்று பேர் இருப்பதால் இங்கு மூன்று சூரசம்காரம் நடைபெறுகிறது என்பர்.[38] தெய்வ யானை திருக்கல்யாணம் புராணப்படி ஐப்பசி மாதத்தில்தான் ஏற்பட்டது. மதுரையில் மீனாட்சி திருக்கலியாணம் மாசி மாதம் ஏற்பட்டது. கள்ளழகர், அழகர் கோவிலிலிருந்து சித்திரை மாதம் மண்டூகமகிரிஷிக்கு மோட்சம் கொடுக்கத் தேனூர் செல்வது வழக்கம். மதுரையில் பெருவிழா வேண்டும் என்பதாலும், அறுவடைக்குப் பின்னர் மக்கள் ஒருங்கு திரண்டு ஒன்று கூடுவதற்காகவும், திருமலைநாயக்கர் தெய்வயானை திருக்கலியாணத்தைப் பங்குனி மாதத்திற்கும், மீனாட்சி திருக் கலியாணத்தைச் சித்திரை மாதத்திற்கும், தேனூர் செல்லும் அழகரை மதுரை வரும்படியாகவும் மாற்றினார். புராணப்படி

---

36. தகவல்: சொ.சுந்தரபட்டர்(மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 2-8-81.
37. தகவல்: சொ.சுந்தரபட்டர்(மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 2-8-81.
38. தகவல்: குமாரசாமிப் பிள்ளை (கோயில் முன்னாள் மணியம்), கள ஆய்வு நாள்: 15-12-83.

ஐப்பசி மாத சூரசம்காரத்திற்குப் பிறகுதான் திருக்கலியாணம் நடப்பது வழக்கு. ஆனால் திருக்கலியாணம் பங்குனி மாதம் நடப்பதால், பங்குனியில் ஒரு சூரசம்காரமும், ஐப்பசியில் ஒரு சூரசம்காரமும், கோயில் ஸ்தானிகர்கள் வசதிக்காகத் தை மாதத்தில் ஒரு சூரசம்காரமும் நடைபெறுகிறது.[39] தமிழ் நாட்டிலேயே இக்கோயிலில் மட்டும்தான் மூன்றுமுறை சூரசம் காரம் நடைபெறுகின்றது.

ஏழாம் நாள் காலை முருகன், தெய்வயானை இருவரும் தங்கமயில் வாகனத்தில் புறப்பட்டு, சட்டத்தேரில் (சிறியதேர்) மலையை வலமாக வருகிறார்கள். இத்தேரை இங்கு நோன் பிருக்கும் சேவார்த்திகளே (பெரும்பான்மையும் பெண்களே) இழுத்து வருகிறார்கள். இத்தேரின் பின் கும்மி, சிந்து போன்ற நாட்டுப்புறப் பாடல்களைப் பாடிக் கொண்டு வருகிறார்கள். தேரிலிருந்து சுவாமியை இறக்கியபின் மயில்யாகம் செய்யப் பட்டு, மயிலுக்கு அபிடேக ஆராதனைகள் செய்யப்பட்டபின் சேவார்த்திகளின் கையில் கட்டப்பட்டிருக்கும் காப்பு அவிழ்க்கப் படுகிறது. சிவன் கோயில்களில் தேர்த்திருவிழா முடிந்தவுடன் காளையாகம் செய்வது போல் இங்கும் மயில்யாகம் செய்யப் படுகிறது.[40] மாலையில் மூலவர் முருகனுக்கு சொர்ண அங்கி (தங்க அங்கி) சார்த்தப்பட்டு, தயிர்ப்பாவாடை சார்த்தப்படு கிறது. பாவாடை தரிசனம் முடிந்ததும்தான் விழாவும், விரதமும் நிறைவு பெற்றதாகக் கூறப்படுகிறது. இப்பாவாடை நைவேத்தியத்திற்குப் பள்ளயச்சோறு கொடுப்பதை ஆயிர வைசியக் காசுக்காரச் செட்டியார்கள் செய்து வருகின்றார்கள்.

சட்டி விரதம் ஐப்பசி மாதத்துச் சுக்கிலபட்சத்துச் சட்டி தொடங்கி ஓராண்டில் வரும் இருபத்துநான்கு சட்டிகளிலும் அனுட்டிக்கப்படுவது. கந்த சட்டியில் முதல் ஆறுநாளும் உமிழ் நீரும் உள்ளே விழுங்காதபடி அனுட்டிக்கத் தக்கது. இவ் வண்ணம் செய்ய இயலாதவர்கள் நண்பகலில் ஒவ்வொரு முறை ஆறு மிளகையும், ஆறு கை நீரையும் உட்கொள்ளலாம். ஏழாம் நாள் காலை விதிப்படி சிறப்பு வழிபாடுகள் ஆற்றி, சிவனடி யாருடனிருந்து பாரணம் செய்தல் வேண்டும்.[41] இங்கு, சட்டி

39. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 2-8-81.
40. தகவல்: மணிப்பட்டர் (இரண்டாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 18-12-82.
41. ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., ப. 133

விரதம் இருப்போர் மிளகு விரதம், துளசி விரதம், பால் விரதம், சோற்று விரதம் (ஒரு வேளைச் சோறு) என்று நான்கு முறைகளில் விரதம் இருக்கின்றார்கள். இவர்களின் எண்ணிக்கை 1979-இல் 710 ஆகவும், 1980-இல் 832 ஆகவும், 1981-இல் 890 ஆகவும், 1982-ல் 1500 ஆகவும் உயர்ந்து கொண்டே வருகின்றது. இதில் பெரும்பான்மையினர் பெண்கள். இதில் பெண்கள் பிள்ளைப் பேற்றிற்காகவும், நோய் நீக்கத்திற்காகவும் மன அமைதிக்காகவும் இருக்கின்றார்கள். ஆண்கள் பிள்ளை வேண்டும் என்பதற்காகவும், நோய் நீக்கம், பதவியுயர்வு வேண்டுதல், அச்சத்தின் காரணமாகவும், பிறர் சொல்லக் கேட்ட ஆசை (வாரியார், ஞானியார் அடிகள் இவர்கள் சொற்பொழிவு கேட்டு வந்த ஆசை), செல்வம் பெருகும் என்ற நம்பிக்கை, துன்பத்திலிருந்து காக்க வேண்டும் என்ற வேண்டுதல், மன அமைதி போன்ற காரணங்களுக்காகவும் இருக்கின்றார்கள்.[42] விரதம் இருப்போர் இங்குள்ள சந்நியாசிக் கிணற்று நீரைத்தான் உண்டு வருகிறார்கள். இச்சந்நியாசிக் கிணற்றைப் பற்றி வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ளார்.[43] 'ஸத்யகிரி மஹாத்மியம்' என்ற வடமொழியாலானத் திருப்பரங்கிரித் தல புராணத்தில் இது 'பிரஹ்மதீர்த்தம்' என்று கூறப்பட்டுள்ளது. இத்தீர்த்தம் பிரம்மாவின் தண்டத்தினால் உண்டாக்கப்பட்டது என்றும், திராவிட அரசனாகிய கோவிதாரத்வஜன் என்பவனின் வெண்குட்ட நோயைப் போக்கியது என்றும் கூறுகின்றது.[44]

பரிபாடல் எட்டாம் பாடலில் ஆசிரியர் நல்லந்துவனார் பொன், பொருள், மழைவளம், பிள்ளைப்பேறு இவை வேண்டி மகளிர் தண்பரங்குன்றத்து முருகனை வழிபட்டதனைக் குறிப்பிடுகிறார். கந்தபுராணம், திருப்பரங்கிரிச் சிறப்பைக் கூறும்பொழுது இங்கு மக்கள் உள்ளம் வலிமை பெறுதல், உடற்குறை நீக்கம் பெறுதல் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது.

அண்மைக்காலத்தில் வெளிவந்த மு. ரா. அருணாசலக்கவிராயரின் திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய துதிமஞ்சரியில், இராமநாதபுர மாவட்டம் முறையூர் வள்ளல் பழ. சி. சண்முகம்

42. நோன்பிருப்போரிடம் சேகரித்த தகவல்களின் அடிப்படையில் தரப்பட்டுள்ளது.
43. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், படைவீட்டுப் பதிகம், ப. 7.
44. ஆர். துரைசாமி நாயுடுகாரு, ஸத்யகிரி மஹாத்மியம், ப. 8.

செட்டியார் என்பவர் தன் வாத நோய் நீங்க வேண்டி இங்கு வந்து சட்டிவிரதம் இருந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இவரின் நோய் நீக்கத்திற்காகத் திருப்பரங்கிரி மாலை, பரங்கிரிப் பதிகம் போன்ற நூல்களும் இயற்றப்பட்டுள்ளன (பிற்சேர்க்கை எண். 2)

திருப்பரங்குன்ற மலையைப் பார்த்து சத்தியம் செய்தல், சத்தியம் செய்தவர்கள் மீறினால் முருகனால் தீங்கு ஏற்படும், பரங்குன்றத்திற்குச் சேவல், மயில், ஆகியவற்றைக் கொடையாக அளித்தால் நன்மை ஏற்படும் என்பன போன்ற நம்பிக்கைகளைப் பரிபாடலில் காணமுடிகிறது. இன்னும் முருகனுக்கு கோழி, ஆடு, மாடு போன்றவைகளைக் கொடுத்தால் நன்மை ஏற்படும், காவடி, பாற்குடம் எடுப்பதால் நோய் நீங்கிச் செல்வம் பெருகி வளமான வாழ்க்கை ஏற்படும் என்பன போன்ற நம்பிக்கைகளை இன்றைய வழக்கிலும், இலக்கியத்திலும் காணமுடிகின்றது. நோன்பு இருப்பவர்கள் அனைவரும் கடைசி நாளன்று தாம் இருக்குமிடத்திலேயே வாழை இலையை விரித்து, பழங்களைப் பரப்பி, தேங்காயை உடைத்து வைத்து, மாவினால் விளக்கு வைத்து தூப, தீபம் செய்து முருகனை எண்ணி வழிபட்டு நோன்பை நிறைவு செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. இன்னும் சிலர் கோயிலில் வந்து தங்கி நீரைமட்டும் உண்டு விரதம் இருந்தாலும் பட்டர்களிடம் காப்புக்கட்டிக் கொள்ளுதல், அவிழ்த்தல் போன்றவைகளைச் செய்துகொள்வதில்லை. இவர்கள் தம் குடும்பத்துடன் வந்துகோயிலில் நோன்பு மேற்கொண்டு, ஆறாம் நாள் பூவும், பழமும் வைத்து மாவிரதம் கொண்டு நோன்பை நிறைவு செய்கிறார்கள். இது நமக்குப் பண்டைக்கால மக்களின் நேரடி வழிபாட்டை நினைவு கூர்வதாய் உள்ளது.

### திருக்கார்த்திகை உத்சவம்

கார்த்திகை மாதம் வரும் கார்த்திகை நட்சத்திரத்திற்குத் திருக்கார்த்திகை (பெரிய கார்த்திகை) என்று பெயர். இக் கார்த்திகைக்கு எட்டு நாட்களுக்கு முன்பு, இங்குக் கார்த்திகை உத்சவம் நடைபெறத் தொடங்குகிறது. இது கொடியேற்றிச் செய்யப்படும் திருவிழா. இத்திருவிழாவில் முதல் ஐந்து நாட்கள் முருகனும், தெய்வயானையும் அபிடேக, அலங்கார, ஆராதனைகள் முடித்துத் திருவீதியுலா வந்து செல்கின்றனர்.

ஆறாவது நாள் சிவன், ஆவுடைய நாயகி, முருகன், தெய்வ யானை ஆகியோர் திருவீதியுலா வருகிறார்கள். பதினாறு கால் மண்டபத்திற்கு எதிரில் ஞானசம்பந்தர் மூர்த்தியை எழுந்தருளச்செய்து சைவ சமயத்தை நிறுவிய வரலாறு திரு முறை ஓதுவார்களால் விளக்கப்பட்டு 'பச்சைப் பதிகம்' பாடப்படுகிறது. பிறகு சுவாமிகள் திருவீதியுலா முடித்துக் கோயில் சேருகின்றனர். ஏழாம் நாள் சிவன் கங்காள நாதராக பிட்சாடனர் கோலத்தில் திருவீதியுலா வருகிறார். இது, சிவபெருமான் தாருகாவனத்து ரிஷி பத்தினிகளுக்கு காட்சி கொடுப்பதற்காக நடைபெறுகிறது. அன்று மாலையில் சிவன், அம்மன் தனித்தனிச் சிம்மாசனத்திலும், முருகன் தெய்வ யானை ஒரு சிம்மாசனத்திலுமாக திருவீதியுலா வருகிறது திருவீதியுலா முடிந்து வந்ததும் கோயிலினுள் ஆனந்த ஹோமம் என்ற ஹோமம் வளர்த்து, தீபாராதனை செய்ய, இந்த நாள் நிகழ்ச்சி முடிகிறது. நடராசர் தாருகா வனத்து ரிஷிபத்தினியர்களின் மோகப் பார்வையில் பட்டு வந்ததால் அது கழிப்பதற்காக இந்த ஹோமம் நடப்பதாகக் கூறுகிறார்கள். எட்டாம் நாள் காலையில் சிவனும், அம்மனும் திருவீதியுலா சென்று அம்மன் மட்டும் கோயிலுக்குள் வந்து விடுகின்றார், சிவன் பிறகு தனியாக வருகிறார், சிவன்மீது கொண்ட கோபத்தால் அம்மன் மட்டும் தனியாக வந்துவிடு கிறார், இக்கோபத்தை (ஊடலை) சுந்தரமூர்த்தி சுவாமிகள் தீர்த்து வைக்க வருகின்றார். இங்குக் கோயில் ஓதுவார் சுந்தர மூர்த்தி சுவாமியாக வந்து தேவாரம் பாடுகிறார். அவரிடமும் ஊடல் கொண்ட அம்மன் அவரை வாழை மட்டையால் அடிக்கிறார். பின்னர்ச் சண்டிகேஸ்வரர் வந்து ஊடல் தீர்த்து அம்மனும் சிவனும் சேர்த்தி சேருகின்றனர். இதற்கு ஊடல் உற்சவம் என்றும், மட்டையடி உத்சவம் என்றும் பெயர் கூறப்படுகின்றது.

இங்குச் சிவனுக்கும் முருகனுக்குமாக நடக்கும் திருவிழாக் களில் ஆறாம் நாள் திருஞானசம்பந்தர் சைவ சமயத்தை நிறுவிய விழாவும், ஏழாம் நாள் சிவபெருமானின் பிட்சாடனர் கோலமும், எட்டாம் நாள் ஊடல் உத்சவமும் இடம் பெறு கின்றன. எட்டாம் நாள் மாலையில் சுவாமி முருகனும், தெய்வயானையும் அலங்காரம் செய்யப்பட்டு ஆறுகால் பீடத்திலுள்ள மேடையில் கொண்டு வந்து வைக்கப் படுகிறார்கள். பிறகு திருமஞ்சனக் குடம், செங்கோல், கிரீடம், சேவல் முத்திரை ஆகியவை மேடைக்கு கொண்டு வந்து வைக்கப் படுகின்றன. இதன்பிறகு நம்பியார் யானை மரியாதை

களுடன் அழைத்து வரப்படுகின்றார். சுவாமிக்கு தூப, தீப ஆராதனைகள் முடிந்தவுடன் கிரீடத்தை நம்பியார் கையில் ஏந்தியிருக்கத் திருமஞ்சனம் நடக்கிறது. பின்னர்க் கிரீடம் சுவாமி முருகனுக்குச் சார்த்தப்படுகிறது. செங்கோல் முருகன் கையில் கொடுக்கப்படுகிறது. ஐந்தாவது நிருவாகத்தின் முத்திரையும் (சேவல், மயில்), ஆறாவது நிருவாகத்தின் சாவியும் பேனாவும் சுவாமியின் கையில் வைக்கப்பட்டுத் தீபாராதனைகள் நடைபெறுகின்றன. பின்னர் நம்பியாருக்குப் பரிவட்ட மரியாதை செய்யப்பட்டு, நம்பியார் கையில் செங்கோல் கொடுக்கப்படுகிறது. (இப்பொழுது நம்பியார் முருகனாக இருக்கிறார் என்பது ஐதீகம் என்கிறார்கள்). பின் ஐந்து, ஆறு நிருவாகங்களின் முத்திரை, சாவி, பேனா முதலியவற்றைக் கொடுத்து மாலை மரியாதைகள் செய்யப்பட்டு அவர்களைத் திருவாச்சி மண்டபத்தில் மும்முறை அழைத்து வருகிறார்கள். பின்னர் நம்பியார் கையில் உள்ள செங்கோல் முருகன் கையில் சார்த்தப்படுகிறது. இதன்பிறகு சுவாமியும் அம்மனும் தங்கக்குதிரையில் திருவீதியுலா வருகின்றார்கள். இது 'பட்டாபிடேகம்' என்று கூறப்படுகிறது. இதுபோன்ற பட்டாபிடேகம் பங்குனி மாதத் திருவிழாவிலும் நடைபெறுகிறது. கார்த்திகைத் திருவிழாவில் நடக்கும் பட்டாபிடேகம் சிவபெருமான் தன்னுடைய பொறுப்பை முருகனுக்குக் கொடுத்துச் செய்து வைக்கும் பட்டாபிடேகம் என்றும், பங்குனித் திருவிழாவில் நடக்கும் பட்டாபிடேகம் தேவேந்திரன் முருகனுக்குச் செய்து வைப்பது என்றும் கூறுகின்றார்கள். மதுரையில் சித்திரை மாதத்தில் நடக்கும் பட்டாபிடேகம் அம்மனுக்கு சிவபெருமான் செய்து வைப்பது என்றும், ஆவணி மூலத் திருவிழாவில் நடப்பது சிவபெருமானுக்குத் தேவர்கள் செய்து வைப்பது என்றும் கூறுகின்றார்கள்.[45]

ஒன்பதாம் நாள் சுவாமி முருகனும், தெய்வயானையும் அபிடேக அலங்கார ஆராதனை முடிந்து சின்ன வைரத்தேருக்கு எழுந்தருளுகிறார்கள். சின்ன வைரத்தேர் புறப்படுவதற்குமுன் ஸ்தானிகர்கள், அத்தியானம், மகாசனம், தச்சர், கொல்லர், கொத்தனார், சிற்பியன், மேஸ்திரி இவர்களுக்கு மரியாதை செய்யப்பட்டுத் தேருக்கு சுவாமி வருகிறார். தேருக்கு வந்த பின்னர் அறங்காவலர், நிருவாக அதிகாரி ஆகியோருக்கு மரியாதை செய்யப்பெற்றுப் பின் எலுமிச்சம்பழம் பலி

45. தகவல்: கே. சந்திரசேகர பட்டர் (இரண்டாவது ஸ்தானிகம்), கள ஆய்வு நாள்: 25-11-82.

கொடுத்து தேர்ச்சக்கரத்தில் தேங்காய்கள் உடைத்த பின்னர் தேர் புறப்படுகிறது. தேர் நான்கு இரத வீதிகளில் மட்டும் சுற்றித் தேரடி சேர்கிறது. பின்பு அங்கிருந்து தொண்டை மண்டல வேளாளர் மடத்தில் சுவாமி இறங்குகிறார். சுவாமி இறங்கியவுடன் சீர்பாதம் நான்கு கரையினர்க்கும், வயிரா விக்கும் பரிவட்ட மரியாதை நடைபெறுகிறது. பின் சுவாமி மண்டபத்தில் இறங்குகிறார். அன்று மாலை சுவாமி தங்கமயில் வாகனத்தில் புறப்பட்டுக் கோயில் ஆஸ்தான மண்டபத்திற்கு வருகிறார். அங்கு மண்சட்டியில் பாலதீபம் என்ற தீபம் ஏற்றி மூலவர் கருவறைக்குக் கொண்டுபோகப்பட்டு அங்குத் தீபா ராதனைகள் நடைபெற்றபின், அத்தீபம் சுவாமியுடன் பதினாறு கால் மண்டபத்திற்கு வருகிறது. பதினாறு கால் மண்டபத்திற்கு, எதிரேயுள்ள சொக்கப்பனை என்னும் தீபதண்டத்தில் இத் தீபம் வைத்துக் கொளுத்தப்படுகிறது. இதற்குப்பின் மலை மேலுள்ள தீபத்தூணில் தீபம் ஏற்றி வைக்கப்படுகிறது. இத்தீபத்தூணில் பொதுமக்களும் தீபம் ஏற்றுகிறார்கள். சொக் கப்பனை கொளுத்தப்பட்ட பிறகு, அத்தீயின் கருக்கு எடுத்து சுவாமிக்குச் சாத்தப்படுகிறது. பின்னர் அஃது எல்லோருக்கும் கொடுக்கப்படுகிறது. இக்கார்த்திகைத் திருவிழாவின் முதல் எட்டு நாட்களும் மக்கள் ஈடுபாட்டுடன் நடைபெறவில்லை. ஒன்பதாம் நாள் திருக்கார்த்திகையன்று சுற்றுப்புறக் கிராமங் களில் இருந்து ஆயிரக்கணக்கான மக்கள் வந்து 'முடிக் காணிக்கை' செலுத்துகிறார்கள். இதற்காகவே பல இடங்களில் முடிக்காணிக்கை செலுத்த நாவிதர்களை கோயில் தேவஸ் தானம் அமைத்துள்ளது. பல ஆயிரக்கணக்கான ரூபாய்கள் இன்று ஒருநாளில் மட்டும் தேவஸ்தானத்திற்கு வருவாயாக வருகிறது. முடிக்காணிக்கை இரவு, பகல் முழுவதும் நடந்து கொண்டேயிருக்கிறது.

### பங்குனிப் பெருந்திருவிழா

இக்கோயிலின் திருவிழாக்களில் இதுவே 14 நாட்கள் நடை பெறும் பெருந் திருவிழாவாகும் (பிரம்மோத்சவம்). இத்திரு விழா பங்குனி மாதம் கார்த்திகையன்று கொடியேற்றிச் செய்யப்படுகிறது. இது முருகனுக்கும் சிவனுக்குமாக நடக்கும் திருவிழாவாகும். திருவிழாவிற்கு முதல்நாள் துவசா ரோகணம் செய்யப்பட்டு அன்றையத் திருவிழா குயவர்களால் கோயி லுக்குள் நடத்தப்படுகிறது. திருவிழாவின் முதல் நாளிலிருந்து ஐந்து நாட்கள் வரை முருகனுக்கும் தெய்வயானைக்குமே திருவிழா நடைபெறுகிறது. முதல் நாள் சேது சமஸ்தானமும்,

இரண்டாம் நாள் வாணியச் செட்டியார்கள் மண்டபமும், மூன்றாம் நாள் காவேரியாபிள்ளை மண்டபமும், நான்காம் நாள் சேவியர் மண்டபமும், ஐந்தாம் நாள் கம்மாளர்கள் மண்டமும் திருவிழாவில் பங்கேற்கின்றன. ஐந்தாம் நாள் இரவு நக்கிரர் லீலை என்ற நக்கீரரின் வரலாறு கதையாக இங்குச் சொல்லப்படுகிறது. இது முடிந்தவுடன் முருகன், தெய்வயானை இருவரும் வெள்ளியானை வாகனத்தில் திருவீதியுலா வருகிறார்கள். வெள்ளியானை வாகனம் அதிக எடைப் பாரமுள்ளது. ஆகவே சீர்பாதம் நான்கு கரையார்க்கும் மேலாக இவ்வூர் கிராம மக்களும் சேர்ந்து மூன்று கம்பு கட்டித் தூக்கப்படுகிறது. இதில் 'கைபாரம்' தூக்குதல் என்ற விளையாட்டு நடைபெறுகிறது. இவ்வளவு அதிக எடையுள்ள வாகனத்தையும், சுவாமியையும் குறிப்பிட்ட சில தூரங்களுக்கு எல்லோரும் ஒட்டுமொத்தமாகக் கைகளை உயர்த்தி விரல் நுனியில் தூக்கிச் சென்று, திரும்பவந்து மீண்டும் தூக்கிச் சென்று மூன்றுமுறை வருகிறார்கள் (நிழற் படம் காண்க). இஃது இங்கு மயிர்க்கூச்செறியும் நிகழ்ச்சியாக உள்ளது. இதைப் பார்க்க மக்கள் கூட்டம் பெருந்திரளாகக் கூடுகிறது, ஆறாம் நாள் திருவிழா சிவகெங்கை சமஸ்தான விழாவாக வழக்கம்போலச் சிவன், அம்மன், சம்பந்தர் சைவ சமயம் நிறுவிய விழாவாக நடக்கிறது.ஏழாம் நாள் மதுரை ராமாயணச் சாவடி ஆயிரம் வீட்டு யாதவர்கள் பசு மேய்க்கின்ற மண்டபமும், பால் சுரக்கும் பஞ்சாரங்கட்டி இருபத்தைந்து ஊர் யாதவர்கள் மண்டபமும் ஆக இரண்டு மண்டபத்தினர் நடத்தும் திருவிழாவாக நடைபெறுகின்றது. இதில் சிவன் (பிட்சாடனர் கோலம்), அம்மன், முருகன், தெய்வயானை ஆகியோருக்கு வழக்கம் போல் நிகழ்ச்சி நடைபெறுகிறது. எட்டாம் நாள் ஆதியப்ப நாயக்கர் மண்டபம். இதில் சிவன், அம்மன் ஊடல் உத்சவமும் முருகன், தெய்வயானை திருவீதியுலாவும் நடைபெறுகிறது. ஒன்பதாம் நாள் நாட்டாண்மை சித்திரவேலு மண்டபத்திலும், அக்கயநாயக்கர் மண்டபத்திலும் முருகன் தெய்வயானைக்கு அபிடேக, அலங்காரம் முடிந்து திருவீதியுலா நடைபெறுகிறது. பத்தாம் நாள் விருதுநகர் காசுக்காரச் செட்டியார் மண்டபத்தில் காலையில் ஆராதனைகள் முடிந்து, மாலையில் சந்நிதித் தெருவில் சூரசம்காரம் நடைபெறுகிறது. பதினோராம் நாள் செட்டியார் மண்டபமும் எஸ். என் சொக்கஞ் செட்டியார் மண்டபமுமாகும். இவற்றில் ஆராதனைகள் முடிந்து கோயிலுக்குள் வந்த பின்னர், கோயிலில் பட்டாபிடேகம் நடைபெறுகிறது.

பன்னிரண்டாம் நாள் திருக்கலியாணம். இத்திருவிழாவிற்கு மதுரையிலிருந்து மீனாட்சியும், சொக்கரும் சப்பரத்தில் வருகிறார்கள். முருகன் அபிடேக ஆராதனை முடிந்து சந்திப்பு மண்டபத்திற்கு வந்து மீனாட்சி, சொக்கரை வரவேற்று அழைத்து வருகிறார். மீனாட்சி சொக்கர் வந்து கோயிலுக்குள் சேர்ந்தவுடன், முருகன் ஒடுக்க மண்டபத்தில் கன்னி ஊஞ்சலாடிய பின் திருவாட்சி மண்டபத்திற்கு வருகிறார். திருவாட்சி மண்டபத்தில் முருகன் தெய்வயானை திருக்கலியாணம் நடைபெறுகிறது. இதில் இரண்டு பட்டர்கள் முருகன், தெய்வயானை வேடமிட்டு வந்து இந்நிகழ்ச்சியை நடத்துகிறார்கள். இந்நிகழ்ச்சி முடிந்தவுடன் சுமங்கலிப் பெண்களுக்கு மஞ்சளும், மஞ்சள் கயிறும் கொடுக்கப்படுகிறது. அன்று மாலை மீனாட்சி சொக்கருக்கு வழியனுப்பும் விழா நடைபெறுகிறது. இது பதினாறுகால் மண்டபத்தில் நடைபெறுகிறது.

பதின்மூன்றாம் நாள் பெருந்தேர்த் திருவிழா நடைபெறுகிறது. இத்தேர்த் திருவிழாவிற்கு முருகன், தெய்வயானை இருவருக்கும் அலங்காரம் செய்து கொண்டு வரப்பட்டு மரியாதை செய்ய வேண்டியவர்களுக்கு உரிய மரியாதைகள் செய்யப்படுகின்றன. பின்னர் எலுமிச்சை பலி கொடுத்து, தேங்காய்கள் உடைத்த பின்னர்த் தேர் புறப்படுகிறது. தேர் மலையை வலமாக வந்து கோயிலை அடைகிறது. ''தேரினது அமைப்பை உற்று நோக்குமிடத்து அஃது ஒரு சிறிய கோயிலைப் போன்றிருப்பது தெரியவரும். இதன் அடிப்பாகத்தில் பூலோக வாழ்க்கை, ஆகாய வாழ்க்கை, சுவர்க்க வாழ்க்கை ஆகியவற்றைச் சித்திரிக்கும் அழகிய உருவங்களைக் காணலாம். தெய்வ வடிவங்களை மூஷிகம், ரிஷபம், மயில், குதிரை முதலிய வாகனங்களில் எழுந்தருளச் செய்து, வீதிவலம் வருவதைவிட கோயிலே போன்ற உருவமைந்த தேரில் எழுந்தருளித்து வலம் வரச் செய்வது, பரம்பொருள் தம் பரிவாரங்களுடன் தமது கோயிலிலிருந்தபடியே ஒவ்வொருவரது வீட்டுக்கும் வந்து, அவர்களது தீவினைகளை அழித்து அருள் பாலிக்கிறது என்ற கருத்தை இத்தேர்த் திருவிழா காட்டுகிறது.[46] இங்கு இரண்டு வைரத் தேர்களும், ஒரு சட்டத்தேரும் உள்ளன. பெரிய வைரத் தேர் பங்குனித் திருவிழாவிற்கும், சிறிய வைரத் தேர் கார்த்திகை, தைத்

46. கங்கேஸ்வரி கந்தையா, 'தேரிலே', தெல்லிப்புழை சித்திரைத் தேர் சிறப்புமலர், ப: 61.

திருவிழாக்களுக்கும், சட்டத்தேர் ஐப்பசி மாதக் கந்த சட்டிக்கும் பயன்படுத்தப்படுகின்றன. தேர் அமைப்பில் சதுரம், வட்டம், அறுகோணம், எண்கோணம், பலகோணம் என்று பலவகை உள்ளன. இங்குள்ள சிறிய வைரத்தேர் எண் கோணமாக 9 அடி உயரத்தில் உள்ளது. பெரிய வைரத்தேர் பல கோணமாக 18 அடி உயரத்தில் உள்ளது. மதுரை, அழகர்கோயில் ஆகியவற்றில் உள்ள தேர்களைவிட இத்தேர் உயரத்தில் பெரியது. மதுரை, அழகர்கோயில், திருப்பரங்குன்றம் ஆகிய மூன்று கோயில் தேர்களும் சமகாலத்தவையாக இருக்கலாம் என்பர்.[47] இங்கு நடைபெறும் தேர்த் திருவிழாவில் சுற்றுப்புறக் கிராம மக்களின் கூட்டம் மிகப் பெருமளவில் கலந்து கொள்வதைக் காண முடிகிறது.

பதினான்காம் நாள் ஆயிர வைசிய மகாஜனம் (சோழியர்) மண்டபத்தில் சுவாமி முருகன், தெய்வயானை ஆகியோர் எழுந்தருளித் தீர்த்தத் திருவிழா நடைபெறுகிறது. இத்துடன் பங்குனிப் பெருவிழா நிறைவு பெறுகிறது.

இதுவரை மேலே கூறப்பட்ட திருவிழாக்களில் இங்குள்ள கிராம மக்களின் ஈடுபாடும், தொண்டும், காணிக்கைகளும், நோன்பும் அதிகம் காணப்படுகின்றன. ஆகவே இவை சமூகத் தொடர்புடைய திருவிழாக்களாகக் கருதப்படுகின்றன.

### சமூகத் தொடர்பில்லாத திருவிழாக்கள்

#### சித்திரை மாதம்

சித்திரை மாதம் மதுரையில் நடக்கும் மீனாட்சி கல்யாணத்திற்கு முருகன் தெய்வயானை இங்கிருந்து மதுரைக்குப் புறப்பட்டுச் செல்கின்றனர். அங்கு ஐந்து நாட்கள் இருந்து விட்டு, சுவாமி திரும்ப இங்கு வருகிறார். இங்கிருந்து முருகன் மதுரை செல்வதைப் பாண்டிய அரசனாகச் செல்கிறார் என்றும், மீனாட்சி கல்யாணத்திற்கு முருகன் புரோகிதராகச் செல்கிறார். அதனால் இங்கு முருகனுக்கு சடங்குக் கந்தன், சடங்கு மைந்தன் என்ற பெயர்கள் வழங்குகின்றன என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணப் பாடல்களைச் சான்றாகக் காட்டுவர். இங்கு இவ்வாறு இருகருத்துக்களும் உள்ளன. சுப்பிரமணிய பராக்கிரமம் முருகனுடைய தோற்றங்களைக் கூறும் பொழுது

---

47. தகவல்: ராஜு, காளிதாஸ், கருமாத்தூர்,
கள ஆய்வு நாள்: 2-1-83.

புரோகிதமூர்த்தி என்ற ஒன்றையும் கூறுகிறது. இத்திருவிழாவில் கோயில் ஊழியர்களும், அதிகாரிகளுமே கலந்து கொள்கின்றனர்.

## ஆனி மாதம்

ஆனி மாதத்தில் ஊஞ்சல் திருவிழா பத்து நாட்கள் நடைபெறுகின்றது. பத்து நாட்களும் முருகன், தெய்வயானை ஆகியோர்க்கு அபிடேக அலங்கார, ஆராதனை முடித்து அவர்களை ஆஸ்த்தான மண்டபத்திற்குக் கொண்டு வருகிறார்கள். அங்கு ஊஞ்சலில் சுவாமியை வைத்துக் கோயில் திருமுறை ஓதுவார்கள் ஊஞ்சற் பாடல்களைப் பாட கோயில் நாதஸ்வர வித்துவான்கள் ஊஞ்சற் பாடல்களை இசைக்க இத்திருவிழா பத்து நாட்கள் இங்கு நடைபெறுகிறது. இது ஒவ்வொரு நாளும் இரவு நடைபெறுகிறது.

## ஆடி மாதம்

ஆடிக் கார்த்திகையன்று சுவாமி முருகன், தெய்வயானை ஆராதனைகள் முடித்துச் சொக்கநாதர் கோயில் எதிரேயுள்ள ஞானிச் செட்டியார் வகையறாவுக்குச் சொந்தமான மண்டபத்திற்குச் செல்கிறார்கள். அங்கு மாலை 5.00 மணிக்கு அபிடேக, அலங்கார, ஆராதனைகள் முடிந்து இரவு 7.00 மணிக்குத் திருவீதியுலா வந்து கோயில் சேருவர். இத்திருவிழாவிற்குச் சுமார் ரூ.1500/—வரை செலவு செய்கின்றனர். இத்திருவிழாவன்று ஏழைகளுக்கு அன்னதானம் நடைபெறுகிறது. இதற்கு ஆடிக் கார்த்திகை மண்டபம் என்று பெயர் வழங்குகிறது.[48] இது நூறு வருடமாக நடப்பதாகக் கூறுகிறார்கள்.

## ஆவணி மாதம்

மதுரையில் ஆவணி மூலத்தன்று நடைபெறும் புட்டுத் திருவிழாவிற்கு இங்கிருந்து சுவாமி முருகனும், தெய்வயானையும் புறப்பட்டுச் செல்கின்றனர். மதுரையில் நடைபெறும் நரியைப் பரியாக்கிய திருவிழா, புட்டுக்கு மண் சுமந்த திருவிழா ஆகியவற்றில் முருகன் பாண்டிய மன்னனாக இருந்து நிகழ்ச்சிகளில் பங்கேற்கிறார். இத்திருவிழாக்களில் பாண்டிய மன்னனின்

---

48. தகவல்: . மு.சி. சுப. ஞானபண்டிதன் செட்டியார் (வயது 70), கள ஆய்வு நாள்: 12-8-82.

பணிகள் அனைத்தையும் இங்கு முருகன் செய்கிறார். பின்னர் ஆறாம் நாள் காலையில் அங்கிருந்து புறப்பட்டுக் கோயில் வந்து சேருகிறார்.

### புரட்டாசி மாதம்

புரட்டாசி மாதம் நடைபெறும் நவராத்திரி விழா ஒன்பது நாட்கள் கொண்டாடப்படுகிறது. இந்தத் திருவிழா நாயக்க அரசர்கள் காலத்தில் ஏற்படுத்தப்பட்டது. இதில் ஒன்பது நாட்களிலும் இங்குள்ள அம்மனுக்கு (ஆவுடைய நாயகிக்கு) அலங்காரங்கள் செய்யப்பட்டுத் திருவாச்சி மண்டபத்தில் வைக்கப்படுகிறது. இறுதி நாளான ஆயுத பூசையன்று முருகன் பசுமலைக்கு அருகிலுள்ள அம்புபோடும் மண்டபத்திற்குச் செல்கிறார். அங்குப் பூசைகள் நடந்த பின் சிவாச்சாரியார் ஒருவர் அம்பு விடுகிறார். இதற்கு மானம்பு உத்சவம் என்ற பெயரும் வழங்குகிறது.

### மார்கழி மாதம்

மார்கழி மாதம் முப்பது நாட்களும் இங்குத் திருப்பள்ளியெழுச்சிப் பூசை நடைபெறுகிறது. ஆருத்ரா தரிசனத்திற்கு ஒன்பது நாட்களுக்கு முன் இங்கு மாணிக்க வாசகருக்குக் காப்பு கட்டப்பட்டுத் தினமும் திருவிழா நடைபெறுகிறது. ஒன்பதாம் நாள் மாணிக்கவாசகர் சட்டத்தேரில் மலையை வலமாக வருகிறார். பத்தாம் நாள் ஆருத்ரா தரிசனம் இங்குள்ள நடராசருக்கு நடைபெறுகிறது. மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசி ஒருநாள் மட்டும் இங்குள்ள பவளக்கனிவாய்ப் பெருமாளுக்குத் (உத்வசமூர்த்திக்கு) திருவிழா நடைபெறுகிறது.

### தை மாதம்

தைப்பூசத்தன்று இங்குத் தெப்பத்திருவிழா நடைபெறுவதில்லை. தைக் கார்த்திகைக்கு ஒன்பது நாட்களுக்கு முன்பு இங்குக் கொடியேற்றப்பட்டுத் தைத் திருவிழா நடைபெறுகிறது. இதில் முதல் எட்டு நாட்கள் முருகன், தெய்வயானை, சிவன், அம்மனுக்குமாக நடைபெறுகிறது. ஒன்பதாம் நாள் சிறிய வைரத்தேரில் முருகன் இரத வீதிகளில் மட்டும் உலா வந்து, தெப்பம் முட்டுத்தள்ளுதல் நடைபெறுகிறது. பத்தாம் நாள் காலையில் தெப்பத் திருவிழாவும் நடைபெறுகின்றன.

**மாசி மாதம்**

மாசி மாதம் ரோகினி நட்சத்திரத்தில் தொடங்கி, மிருக சீரியம், திருவாதிரை, புனர்பூசம், பூசம் ஆகிய ஐந்து நாட்கள் மட்டும் இங்கு எண்ணெய்க்காப்பு உத்சவம் நடைபெறுகிறது. இதில் தெய்வயானை அம்மனுக்கு முடி சார்த்திக் கொண்டு வந்து திருவாச்சி மண்டபத்தில் வைத்து, அங்கு அம்மன் துயிலெழும்பி, முசம் கழுவி, பல் துலக்கி, வெற்றிலை தாம்பூலம் தரித்து, தலையில் எண்ணெய் தேய்த்து, சிக்கு எடுத்து, சீவி முடித்துக் கண்ணாடி பார்ப்பது போல வெள்ளியால் செய்யப் பட்ட கருவிகளை வைத்துப் பாவனை முறையில் மூன்று தடவை செய்கிறார்கள். இவ்வாறு ஐந்துநாட்கள் இது நடைபெறுகிறது.

மாசி மாதம் மகாசிவராத்திரியன்று விசேடமாகச் சிவன், அம்மன், முருகன் மற்றுமுள்ள தெய்வங்களுக்கு அபிடேகம் அலங்காரம், ஆராதனைகள் நடைபெறுகின்றன.

இவை தவிர ஒவ்வொரு மாதமும் பிரதோசத்தன்று நந்திக் கும், சிவனுக்கும் அபிடேக, ஆராதனைகள் நடைபெறுகின்றன. தமிழ் வருடப் பிறப்பன்று மூலவர் முருகனுக்குச் சிறப்பு ஆரா தனைகள் செய்து தங்க அங்கி (சொர்ண அங்கி) சாத்தப்படு கிறது. தீபாவளியன்று இங்குள்ள தெய்வங்கள் அனைத்திற்கும் புதுத்துணி சாத்தப்படுகிறது. இவைகள் யாவும் தேவஸ்தானத் திலிருந்தும், தேவஸ்தானத்தில் ஏற்படுத்தப்பட்ட அறக்கட் டளைகளிலிருந்தும் நடந்து வருகின்றன. இங்கு நடைபெறும் திருவிழாக்களில் கட்டியங்கள் எதுவும் கூறப்படுவதில்லை. கட்டி யத்தைக் கையில் தூக்கிக்கொண்டு காவலுக்கு வருவதுபோல் வருகிறார்கள். இது எப்பொழுது நின்றது என்பது தெரிய வில்லை.

திருப்பரங்குன்றத்தில் நடைபெறும் திருவிழாக்களை மொத் தமாகப் பார்க்கும் பொழுது இங்கு ஆகமநெறிக்கு முற்பட்ட திருவிழாக்கள், ஆகமநெறிக்கு உட்பட்ட திருவிழாக்கள் என்ற இருவகையில் விழாக்கள் இருக்கக் காண்கிறோம். ஆகமநெறிக்கு உட்பட்ட திருவிழாக்களும் தொடக்க காலத்தில் முருகனுக்கு ஏற்பட்டு, பின்னர் இத்திருக்கோயில் பாண்டியநாட்டுப் பாடல் பெற்ற சிவன் கோயில்களில் ஒன்றாகக் கருதப்பட்ட பின்னர்ச் சிவனுக்கும் சேர்ந்த திருவிழாவாக மாற்றம் பெற்றிருக்க வேண் டும். ஆகவேதான் முருகன் திருவிழாக்களில் (கார்த்திகை, தை, பங்குனி) காளைக்கொடி ஏற்றப்பட்டு, சிவன், அம்மனின் நிகழ்ச்

சிகள் நடைபெறக் காணலாம். திருவிழாக்கள் சிவனுக்கும் சேர்த்துச் செய்யப்பட்டாலும் திருவிழாவின் சிறப்பு நிகழ்ச்சி யான தேர்த்திருவிழா இங்கு முருகனுக்கு மட்டுமே நடைபெறு கிறது.

மற்ற பிற கோயில்களில் உள்ளதுபோல் நிகழ்ச்சிகளை அமைக்க வேண்டும் என்ற விருப்பின் காரணமாகவும், மதுரை யில் உள்ளதுபோல் சைவசமயம் நிறுவிய லீலை, ஊடல் உற் சவம், பட்டாபிடேகம், திருக்கலியாணம், ஆருத்ர்ரா தரிசனம், வைகுண்ட ஏகாதசி, எண்ணெய்க் காப்பு உத்சவம், சிக்கலில் உள்ளது போல் வேல் வாங்குதல் போன்றவை ஏற்பட்டிருக்க வேண்டும்.

சூரசம்காரம் போன்ற நிகழ்ச்சிகள் இக்கோயிலில் மட்டும் மூன்றுமுறை நடைபெறுகின்றன. ஒவ்வொரு திருவிழாவிலும் நிகழ்ச்சிகள் அதிசம் இருந்தால், மக்கள் வரவும் ஈடுபாடும் அதிக மாகும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் இந்நிகழ்ச்சிகள் மாறி மாறி வருகின்றன என எண்ண வேண்டியுள்ளது.

ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்கு இறைவனைக் கொண்டு செல்வதன் மூலம், பல ஊர் மக்களையும் ஈடுபடுத்தி, ஒரே நாளில் ஒன்றுகூட வைத்து நட்பையும், உறவையும் வளர்க்க மன்னர் திருமலைநாயக்கர் செய்த இச்செயலின் விளைவாகத்தான் இன்றும் மதுரைக்கு முருகனும், பரங்குன்றிற்கு மீனாட்சி சொக் கரும் உலாவரும் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன எனலாம்.

இந்நிகழ்ச்சித் தொகுப்புகளின் அடிப்படையில் பார்க்கும் பொழுது இக்கோயிலின் தொடக்கக் காலத்தில் நாட்டுப்புற மக்களின் ஈடுபாட்டால் ஏற்பட்ட திருவிழா முருகனுக்கும், கிராம தெய்வங்களுக்கும் உரியதாக இருந்து, பின்னர் முருகன் திருவிழா தனியாகப் பரிணமித்து, இடைக்காலச் சமய வளர்ச்சி யால் சிவன் திருவிழாவுடன் சேர்ந்து, இன்று முருகனுக்கும் சிவ னுக்கும் சேர்ந்து நடக்கும் திருவிழா வளர்ச்சி பெற்ற நிலையாக வந்துள்ளது என எண்ண வேண்டியுள்ளது.

## விழா ஏற்கும் கடவுளர், நிகழ்ச்சிகள் (மாதவாரியாக)

| திருவிழா நாட்கள் | சித்திரை | வைகாசி | ஆனி | ஆடி | ஆவணி | புரட்டாசி |
|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் | முருகன் மதுரை சித்திரைத் திருவிழாவில் மீனாட்சி கல்யாணத்திற்குச் செல்கிறார். | முருகன் தெய்வயானை (வசந்தோத்சவம்) | முருகன் தெய்வயானை (ஊஞ்சல்) | முருகன் தெய்வயானை ஆடிக் கார்த்திகை | முருகன் பாண்டிய அரசனாக மதுரை ஆவணி மூலத் திருவிழாவிற்குச் செல்கிறார். | ஆவுடைய நாயகி நவராத்திரி விழா |
| 2 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 3 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 4 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 5 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 6 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 7 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 8 ஆம் நாள் | | ,, | ,, | ,, | | ,, |
| 9 ஆம் நாள் | | திருவீதியுலா | ,, | ,, | | முருகன் மானம்பு உற்சவம் |
| 10 ஆம் நாள் | | விசாகம் ஆறுமுகர் பாலாபிடேகம் | ,, | ,, | | ,, |

## விழா ஏற்கும் கடவுளர், நிகழ்ச்சிகள் (மாதவாரியாக)

| திருவிழா நாட்கள் | ஐப்பசி | கார்த்திகை | மார்கழி | தை | மாசி | பங்குனி |
|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் | முருகன் தெய்வயானை நின்றகோலம் | முருகன் தெய்வயானை | மாணிக்க வாசகர் உற்சவம் | முருகன் தெய்வயானை சிவன், அம்மன் | தெய்வ யானை எண்ணெய் காப்பு | முருகன் தெய்வ யானை |
| 2 ஆம் நாள் | பீடத்தில் அமர்ந்த கோலம் | ,, | ,, | ,, | ,, | ,, |
| 3 ஆம் நாள் | மயில்மீது அமர்ந்த கோலம் | ,, | ,, | ,, | ,, | ,, |
| 4 ஆம் நாள் | தவம் செய்யும் கோலம் | ,, | ,, | ,, | ,, | ,, |
| 5 ஆம் நாள் | சிவபூசை செய்யும் கோலம், வேல் வாங்குதல் | ,, | ,, | ,, | ,, | நக்கீரர்லீலை |
| 6 ஆம் நாள் | முருகன் சூரசம்காரம் | சிவன் அம்மன் சம்பந்தர் சைவ சமயம் நிறுவிய லீலை | ,, | ,, | ,, | சிவன் அம்மன் சம்பந்தர் சைவ சமயம் நிறுவியலீலை |

## விழா ஏற்கும் கடவுளர், நிகழ்ச்சிகள் (மாதவாரியாக)

| திருவிழா நாட்கள் | ஐப்பசி | கார்த்திகை | மார்கழி | தை | மாசி | பங்குனி |
|---|---|---|---|---|---|---|
| 7 ஆம் நாள் | முருகன் தெய்வயானை தேர்த்திருவிழா பாவாடை தரிசனம் | சிவன் அம்மன் (பிட்சாடனர்) கோலம் | ,, | முருகன் தெய்வயானை சிவன்,அம்மன் | தெய்வ யானை எண்ணெய் காப்பு | சிவன் அம்மன் (பிட்சாடவர்) கோலம் |
| 8 ஆம் நாள் | | சிவன் அம்மன் ஊடல் உத்சவம் (பட்டாபிடேகம்) | ,, | ,, | | சிவன் அம்மன் ஊடல் உற்சவம் |
| 9 ஆம் நாள் | | சிறிய தேர்த் திருவிழா (சொக்கப்பனைக் கொளுத்துதல்) | மாணிக்க வாசகர் மலை சுற்றுதல் | சிறிய தேர்த் திருவிழா | | முருகன் தெய்வ யானை |
| 10 ஆம் நாள் | | | சிவன் ஆரூர்த்ரா தரிசனம் | தெப்பம் சூரசம்காரம் | | முருகன் சூரசம்காரம் |

## விழா ஏற்கும் கடவுளர், நிகழ்ச்சிகள் (மாதவாரியாக)

| திருவிழா நாட்கள் | சித்திரை | வைகாசி | ஆனி | ஆடி | ஆவணி | புரட்டாசி |
|---|---|---|---|---|---|---|
| 11 ஆம் நாள் | முருகன் மதுரை சித்திரைத் திருவிழாவில் மீனாட்சி கல்யாணத்திற்குச் செல்கிறார்; | முருகன் தெய்வயானை மொட்டையரசு உற்சவம் | | | | |
| 12 ஆம் நாள் | | | | | | |
| 13 ஆம் நாள் | | | | | | |
| 14 ஆம் நாள் | | | | | | |

## விழா ஏற்கும் கடவுளர், நிகழ்ச்சிகள் (மாதவாரியாக)

| திருவிழா நாட்கள் | ஐப்பசி | கார்த்திகை | மார்கழி | தை | மாசி | பங்குனி |
|---|---|---|---|---|---|---|
| 11 ஆம் நாள் | | | | | | பட்டாபிடேகம் |
| 12 ஆம் நாள் | | | | | | திருக்கல்யாணம் |
| 13 ஆம் நாள் | | | | | | பெருந்தேர் விழா |
| 14 ஆம் நாள் | | | | | | தீர்த்த உத்சவம் |

# கோயிலும் குடிகளும்

பழங்காலத்தில் ஊருக்கு அணித்தாகவுள்ள குன்றுகளிலும் காடுகளிலும் வழிபடுமிடமாக இருந்தவைகள், அரசர்கள் காலத்தில் கோயில்கள் என்ற பெயரில் வரன்முறையான நிருவாக அமைப்பின்கீழ் உருப்பெறத் தொடங்கின. இவ்வாறு உருப்பெற்ற காலத்தில் இவை மக்களின் வாழ்க்கையில், பின்னிப்பிணைந்த ஒன்றாக மாறின. அப்பொழுது கோயில்கள் குடிகளைத் தழுவியவையாகவும், குடிகள் கோயில்களைத் தழுவியவையாகவும் அமைந்தன. தொழில்வழிப் பிரிவு கொண்ட அக்காலச் சமுதாயமக்கள் தம் தொழிலோடு தொடர்புடைய வகையில் கோயிலுக்குத் திருத்தொண்டு செய்து வந்துள்ளனர். "திருத்தொண்டு என்பது இறைநலத்தை உயிர்கள் பெறச் செய்யும் பணி; சிறப்பாகத் திருக்கோயிலைத் தூய்மை செய்தல், மலர் தொடுத்தல், உழவாரப்பணி செய்தல், பாடுதல் ஆகிய பணிகளாகும். பழங்காலத்தில் நம்முடைய திருக்கோயிற் பணிகள் திருத்தொண்டுகளாக இருந்தன. அன்று அவை உயிர்நலம் கருதிச் செய்யப் பெற்றன."[1] இவ்வாறு திருத்தொண்டு செய்து வந்த மக்கள் பின்னர் அவ்வத் தொழிலின் காரணமாய் அரச மானியங்கள் பெற்றனர். பரம்பரை பரம்பரையாகக் கோயிலோடு ஒன்றித் திருத்தொண்டு செய்து வரலாயினர். இவ்வகையில் திருப்பரங்குன்றக் கோயிலுடன் குடிகள் இணைந்து திருத்தொண்டாற்றியதைப் பற்றிய செய்திகள் இவ்வியலில் விளக்கப்படுகின்றது.

### கோயிலும் குடிகளும்

திருப்பரங்குன்றம் கோயிலின் நித்திய வழிபாட்டிலும் திருவிழாக்களிலும் திருத்தொண்டு செய்வதற்காகத் தம்மைத் தாமே ஈடுபடுத்திக் கொண்டு வழிவழியடிமையாக உறவு

1. குன்றக்குடி அடிகளார், 'நமது நிலையில் சமயம்', சமுதாயம், ப. 21.

நிலை கொண்ட மக்கள் ஒரு சாரார்; இக்கோயிலில் திருத் தொண்டு என்ற பெயரில் ஊழியம் செய்வதற்காக அரசர் களால் ஏற்படுத்தப்பட்டவர் ஒரு சாரார். பின்னர் இக் கோயிலின் சிறப்பையும் உயர்வையும் கருதி இங்கு வந்து இணைந்து கொண்ட மக்கள் பிறிதொரு பகுதியினர். இம் மூன்று நிலைகளில் இக்கோயிலுக்கும் குடிமக்களுக்கும் இருந்த தொடர்பு ஆய்வு செய்யப்படுகிறது. இக்கோயிலில் திருத் தொண்டாற்றி வந்த மக்கள், இத்தொண்டு கால முழுமையும் நடைபெறவேண்டும் என்ற பரந்த எண்ணத்தின் காரணமாகவும், இத்தொண்டின் மூலம் தம் குல மக்களையும் தம் ஊர் மக்களையும் ஒன்றுபடுத்த வேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையிலும், இத்திருத்தொண்டுகளுக்காக நிலையான, வருவாய் தரும் சொத்துக்களை இதற்கு ஏற்படுத்தி வைத் துள்ளனர். அரசர்கள் காலத்தில் கோயிலின் திருத்தொண்டும், ஊழியமும், அரசியல் பொருளாதாரக் காரணங்களால் நலி வடைந்துவிடாமல் இருக்க சொத்துக்கள் மானியங்களாக விடப் பட்டுள்ளன. ''இவை இனாம் மானியம், ஊழிய மானியம் என இரு வகைப்படும். மக்களின் திருத்தொண்டைக் கண்டு எண்ணி வியந்து, அத்திருப்பணி வழிவழியாய் அவர்களாலே இடையறவுபடாமல் நடந்துவர விடப்பட்ட மானியம் இனாம் மானியம் என்றும், கோயிலில், விழாக்களில் சில ஊழியங்கள் செய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட மானியங்கள் ஊழிய மானியம் என்றும் கூறப்படுகின்றன''[2] இவ்வாறு மானியங்கள் விடப்பட்ட காலத்தில் இம்மக்களுக்காக இவ்வூரில் மடம், மண்டபங்கள் ஆகியவை ஏற்படுத்திக் கொள்ளத் துணை செய்யப்பட்டுள்ளது. பின்னர் இக்கோயிலின் சிறப்பு உயர்வு கருதி இவ்வூரைச் சுற்றியுள்ள சிற்றூர், பெரு நகரகங்களிலிருந்து மக்கள் தத்தம் குலத்தாருடன், ஊராருடன் வந்து இக்கோயில் விழாக்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு அவர்களுக்கென மடங்களையும், மண்டபங்களையும் ஏற்படுத்திக் கொண்டு கோயில் தொண்டு செய்து வந்துள்ளனர். பின்னர் தனிப்பட்ட மக்கள் சிலர் இக்கோயிலில் நித்திய வழிபாட்டில், விழாக்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தொண்டாற்றி, அத்தொண்டின் வளர்ச்சிக்காகச் சில அறக்கட்டளைகளை ஏற்படுத்தி வந்துள்ளனர். அறக்கட்டளைகள் அரசர்கள், குடிமக்கள் என்ற வேறுபாடின்றி இங்கு ஏற்பட்டுள்ளன.

---

2. தகவல்: சி. கூழுத்தேவர் (வயது 55), கள ஆய்வு நாள் 26-12-82

இவ்வாறு மேலேகண்ட பல்வேறு நிலைகளில் தொண்டாற்றி வந்த மக்களுக்கு, அவ்வவர்களின் தொண்டுக்கேற்ப அவர்களின் வாழ்விலும், சாவிலும் சிறப்புக்கள் கோயிலிலிருந்து செய்யப்பட்டு வந்துள்ளன. கோயிலின் நித்திய வழிபாட்டிலும், விழாக் காலங்களிலும் இவர்களின் தொண்டை ஊரறியச் செய்யும் முகமாக இம்மக்கட்கு முதல் மரியாதை என்ற பெயரில் மாலை, விபூதி, பரிவட்ட மரியாதைகள் செய்யப்படுகின்றன. இவர்களில் யாரேனும் இறந்து விட்டால், அவர்களுக்கு 'மரிக்கைப்பரிவட்டம்' என்ற பெயரில் மாலையும் புதிய துணியும் கொடுக்கப்பட்டு அவர்களுக்கு இறுதி மரியாதை கோயிலிலிருந்து செய்யப்படுகிறது. திருவிழாக் காலங்களில் 'திருக்கை வழக்கம்' என்ற பெயரில், சந்தனம், வெற்றிலை, பாக்கு மரியாதை செய்யப்படுகிறது. திருக்கை வழக்கம், மரிக்கைப் பரிவட்டம் போன்ற மரியாதைகள் இங்கு மானியம் பெற்றுத் தொண்டு செய்யும் மக்களுக்கு மட்டுமே நடைபெறுகின்றன. மற்ற மாலை, விபூதி, பரிவட்ட மரியாதைகள் எல்லோருக்கும் ஒன்றுபோல நடைபெறுகின்றன. இவ்வாறு மானியம் பெற்றுத் தொண்டு செய்வோர் முறையே ஸ்தானிகர், (முதல் நான்கு நிருவாகம்), ஆபரணம், மாலைகட்டி மானியம் (ஐந்தாம் நிருவாகம்), கணக்கு (ஆறாம் நிருவாகம்), கருவேலம், முத்திரை, மானியம், மேளம், சீர்பாதம், வயிராவி, கொத்தனார், சிற்பி, கொல்லர், தச்சர், கன்னார், வண்ணார், கோனார், பரிகாரி, (நாவிதர்), பண்ணைப் பள்ளர், அத்தியான பட்டர், வாசல் மற்றும் தீவட்டி, வேளார், வீரமணியம், ஓதுவார், தேவதாசி எனப்படுவோர் ஆவார். இவை தவிர அறக்கட்டளை ஏற்படுத்தியவர்களும், மடம், மண்டபங்கள் போன்றவற்றை ஏற்படுத்தியவர்களும் சிலர் உள்ளனர்.

**கோயிலும் ஸ்தானிகரும்**

காமிகாமம் என்னும் நூலில் ஆசாரிய லட்சணப் படலத்தில் ஸ்தானிகர் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. தேவகாரியம் பார்ப்போர் ஆச்சாரியர், அர்ச்சகர், ஸ்தானீகர், பாசகர், பரீசாரகர் என ஐவர் ஆவர். ஆச்சாரியர் நாட்பூசை, உத்சவம், பிரதிஷ்டை, பிராயச்சித்தம் (கழுவாய்) இவை செய்வதற்கு உரியவர். அர்ச்சகர் நாட்பூசை மட்டும் செய்வதற்கு உரியவர். இவர் உத்சவம், பிரதிஷ்டை, பிராயச்சித்தம் செய்தல் கூடாது. ஸ்தானீகர் திருவீதி திருமேனிகட்கு (உத்சவருக்கு) அலங்காரம் மட்டும் செய்யலாம்; மூல இலிங்கத்தைத் தொடுதல் கூடாது.

பாசகர் சமையல் மட்டும் செய்வதற்கு உரியவர். பரிசாரகர் அபிடேகத் தீர்த்தம், பூசைக்கு வேண்டும் பொருள்கள் முதலிய வற்றைச் சித்தம் செய்பவர். ஸ்தானீகர் பொறுப்புள்ளவரும் ஆவர்.[3] இக்கோயிலின் ஸ்தானீகர்களாக நான்கு குடும்பங் களைச் சேர்ந்தவர்கள் உள்ளனர். இவர்களை ஆறு நிருவாகத் தார்களில் முதல், நான்கு நிருவாகத்தார்' என்று குறிப்பிடுவர். இக்கோயிலில் பழங்காலத்தில் இக்குன்றிற்கு அருகேயுள்ள மாடக்குளம் என்ற ஊரிலிருந்து சிவாச்சாரியார் வந்து பூசைகள் செய்து வந்ததாக இங்கு செவிவழிச் செய்தி வழங்குகிறது. பின்னர் எக்காலத்தில் ஆறு நிருவாகத்தார் என்ற அமைப்பு ஏற்பட்டது என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லை. ஆனால் நாயக்க அரசர்கள் காலத்தில் கோயில் நிருவாகங்களும், திருவிழாக்களும் முறைப்படுத்தப்பட்டு சில அமைப்புக்கள் ஏற்பட்டுள்ளன. ஆகவே இந்த ஆறு நிருவாகத்தார் என்ற அமைப்பு முறை நாயக்க அரசர்கள் காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும் என எண்ண வேண்டியுள்ளது. கோவில் பூசை, அலங் காரம் ஆகியவைகளுக்காக ஏற்படுத்தப்பட்ட இவர்கள், கோயி லுக்குத் தீங்கு நேரும் காலத்தில் கோயில் ஆட்சியில் பங்கு கொண்டு கோயிலைக் காத்த செய்தி இங்குள்ள இரத்தக் காணிக்கைக் கல்வெட்டு மூலம் தெரிய வருகிறது (பிற்சேர்க்கை யில் விளக்கப்பட்டுள்ளது). இவர்கள் உத்சவ புண்ணிய காலங் களிலே ஒரு காலப் போசனஞ் செய்து, விதிப்படி விரதம் அனுட் டித்தல் கடனாகும். தருப்பைப்பாயில் சயனித்தலும், தைலாப் பியங்கம், ஸ்திரீ சம்போகம் முதலியவற்றை விடுதலும் முறை யாகும் என்பர்.[4] இங்கு ஸ்தானீகர்களாக இருப்போர் நாள் வழிபாடுகளிலும் திருவிழாக் காலங்களிலும் ஆண்டு வரிசைப்படி நிருவாக வரிசையில் கலந்து கொள்கின்றனர். இவ்வாறு பூசை முறையேற்கும் நம்பியார் (ஸ்தானீகர்) விழாக் காலத்தில் தம் குடும்பத்தில் ஏதேனும் சுக, துக்கங்கள் ஏற்பட்டாலும் அதிலி ருந்து ஒதுங்கிக் கோயிற் பணியிலே ஈடுபட்டுள்ளனர். இவர்கள் நித்தியப்படி வழிபாட்டில் அபிடேகம், அலங்காரம், அருச்சனை திருவிழாக்களில் பூசைகள் ஆகியவற்றைச் செய்யும் பணிகளுக் காக ஏற்படுத்தப்பட்டவர்கள். இவர்களுக்கு மானியமான வெயிலாம்பட்டி, நாயணாம்பட்டி, வடிவேல்கரை, மேலநெடுங்

3. அ. கி. பரந்தாமனார், மதுரை நாயக்கர் வரலாறு, ப. 206.
4. ச. குமாரசுவாமிக் குருக்கள், மகோத்சவ விளக்கம், ப. 42.

குன்றம், திருப்பரங்குன்றம் (புன்செய் 3 ஏக்கர், 82 சென்டு; நன்செய் 21 ஏக்கர் 51 சென்டு) கிராமங்கள் விடப்பட்டுள்ளன. இதில் முதல் நான்கு கிராமங்கள் அரசினால் எடுத்துக் கொள்ளப்பட்டு நட்ட ஈட்டுத் தொகை கொடுக்கப்பட்டுள்ளது.5 இவர்களின் பணி இன்றும் முறையாக நடந்து வருகிறது. இன்று முத்துசுப்பிரமணியபட்டர், எஸ். எஸ். கற்பூரபட்டர், சொ. சுந்தரபட்டர், ரா. சண்முகசுந்தரபட்டர் ஆகிய நால்வரும் முறையே நான்கு ஸ்தானீகர்களாக இருந்து வருகின்றனர்.

திருவிழாக் காலங்களில் இறைவன் திருவிளையாடல்களை (நக்கீரர்லீலை, பட்டாபிடேகம், மட்டையடி, திருக்கலியாணம், சூரசம்காரம், வேல் வாங்குதல், அம்பு விடுதல்) அப்படியே மக்கட்குச் செய்து காட்டும் பணி இவர்களுடையது. இப்பணிக் காலத்தில் இவர்களுக்குப் பட்டாடை, சுத்தி, கேடயம், தலைப்பாகை, கிரீடம் போன்ற அலங்காரங்கள் செய்யப்படுகின்றன. கோயில் யானை மீது ஊர்ந்து வரும் தகுதி இவர்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் விழாக் காலத்தில் செய்யப்படும் 'திருக்கை வழக்கம்' என்னும் மரியாதை இவர்களுக்குத்தான் முதலில் செய்யப்படுகிறது. ஸ்தானீகர்களில் யாரேனும் இறந்து விட்டால், உடனே கோயில்நடை மூடப்படுகிறது. இறந்தவருக்கு மரிக்கைப் பரிவட்டம், மாலை, விபூதி, கைத்தீவட்டி ஆகியவைகளுடன் கோயிலிலிருந்து மேளத்துடன் அன்னாரது வீட்டிற்குச் சென்று கோயில் மரியாதை செலுத்தப்படுகிறது. இறப்பு வீட்டிலிருந்து மேளம் கைத்தீவட்டியுடன் யானை முன் செல்ல ஸ்தானீகரின் உடல் எடுத்துச் செல்லப்படுகிறது. அருச்சகர்கள், மற்ற கோயில் ஊழியர்கள் இறந்து பட்டால் பரிவட்டம், மாலை, விபூதி, பிரசாதம் இவைகள் சுத்துத்தவில் வாத்தியத்துடன் இறந்தவர் வீட்டிற்குக் கொண்டு செல்லப்படுகிறது. அவரின் உடல் சின்ன மேள வாத்தியத்துடன் எடுத்துச் செல்லப்படுகிறது.6 கோயில் ஊழியர்களில் மானியதார்களின் இனத்தார்கள் இறந்து விட்டால், அவர்கள் இறந்து விட்ட செய்தியை உடனே எழுதிக் கோயிலில்கொண்டு வந்து கொடுத்து நான்கு ஸ்தானீகர்களிடமும் கையெழுத்து வாங்கி, கோயில் நிருவாக அதிகாரியிடம் கொடுக்க வேண்டும். முதல் நான்கு ஸ்தானீகர்களும் இவர் மானியதார்தான் என்று

---

5. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன்கோயில் தேவஸ்தானம்,
6. தகவல்: சுப. குமாரசாமி (முன்னாள் மணியம்), கள ஆய்வு நாள்: 12-8-82

உறுதிக் கையொப்பமிட்டிருந்தால், நிருவாக அதிகாரி அதற்கு மேல் கையெழுத்திட்டு மரிக்கைப் பரிவட்டத்திற்கு அனுமதி கொடுப்பார். மரிக்கைப் பரிவட்டம் பெண்ணுக்கு ஒரு சேலையும், ஆணுக்கு ஒரு வேட்டியும் கொடுப்பது வழக்கம். இத்துடன் கோயில் மாலையும், விபூதி பிரசாதமும் கொடுப்பது வழக்கம். இதை இவர்கள் கோயிலிலிருந்து கிடைக்கும் பெரிய மரியாதையாகவும், கோயில் திருத்தொண்டு செய்ததற்காக இறப்பின் பின்னரும் கோயில் மரியாதை கிடைப்பதாகவும் எண்ணிப் பெருமைப்படுகிறார்கள்.

கோயிலில் உள்ள நகைகள், விலை மதிப்புள்ள பொருட்கள் அனைத்தும் இந்த ஆறு நிருவாகத்தாரின் பொறுப்பிலேயே உள்ளன. கோயிலுக்குத் தொண்டு செய்யும் குடிமக்களும், விழாக்கள் செய்யும் மக்களும் இந்த ஸ்தானிகர்களில் யாராவது ஒருவரை முதல்வராகக் கொண்டே செய்து வருகின்றனர். ஆகவே, இக்கோயிலின் நித்திய வழிபாடு, திருவிழாக்கள் அனைத்திலும் இவர்களின் பங்கு சிறப்பிடம் வகிக்கிறது. இவர்களில் அத்தியானபட்டர் என்ற பிரிவினர்க்குத் திருப்பரங்குன்றம் பகுதியில் (டி.டி. 1067) அவர்களின் கோயிற் பணிக்காக நிலம் மானியமாக விடப்பட்டுள்ளது.

### கோயிலும் ஐந்தாம் நிருவாகமும்

கோயில் ஆறு நிருவாகத்தாரில் ஐந்தாம் நிருவாகம் ஆபரணம், மாலை கட்டி மானியம் என்று கூறப்படுகிறது. ஆபரணம் பூட்டுதல், மாலை சூட்டுதல் போன்ற பணிகள் இவர்களுக்குரியன. இவர்களின் இப்பணிக்காக மேலநெடுக்குளம் என்ற கிராமம் மானியமாக விடப்பட்டுள்ளது.7 திருவிழாக் காலங்களில் மட்டும் இவர்கள் இப்பணியைச் செய்து வருகின்றனர். தற்பொழுது வேலம்மாள் ஆச்சி, சேனாதிபதிப்பிள்ளை ஆகிய இருவரும் ஆண்டுக்கு ஒருவராக இப்பணியைச் செய்து வருகின்றனர்.

### கோயிலும் ஆறாம் நிருவாகமும்

ஆறாம் நிருவாகம் கணக்கு நிர்வாகம் எனக் கூறப்படுகிறது. கோயில் கருவூல நகைகள், பொருட்கள் பற்றிய கணக்குகள் மட்டும் இவர்களுடையன. திருவிழாக் காலங்களில் மட்டும்

7. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.

இவர்கள் இப்பணியைச் செய்து வருகின்றனர். இவர்களில் இப்பணிக்காக மேலநெடுக்குளம் என்ற கிராமம் மானியமாக விடப்பட்டுள்ளது.8 தற்பொழுது பழனியப்பபிள்ளை என்பவர் இப்பணியைச் செய்து வருகிறார்.

### கோயிலும் முத்திரை நிருவாகமும்

கோயிலின் கருவூலத்தில் உள்ள நகைகள், பொருட்கள் இவைகளுக்கு மயில் முத்திரையிட்டுக் காக்கும் பணி இவர்களுடையது. இதற்காக இவர்களுக்கு திருப்பரங்குன்றம் (டி.டி. 1112) கிராமத்தில் ஒரு பகுதி மானியமாக விடப்பட்டுள்ளது. திருநாவுக்கரசுப்பிள்ளை என்பவர் இப்பணியைச் செய்து வந்துள்ளார். தற்பொழுது இப்பணியைக் கோயிலின் ஐந்தாம் நிருவாகத்தினரே மேற்கொண்டு வருகின்றனர்.

ஆறு நிருவாகத்தாரும், முத்திரையும், கோயிலின் நகைகள், விலை மதிப்புமிக்க பொருட்கள் அனைத்திற்கும் பொறுப்பு உள்ளவர்கள். இவர்கட்குக் கோயில் மரியாதைகளுடன் கோயிலின் பட்டாபிடேகத் திருவிழாவில் இவர்கட்குப் பொறுப்பு வழங்கும் நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. இவர்களுக்கு முருகன் பொறுப்புக்களை வழங்குவதாக நிகழ்ச்சிகள் நடத்திக் காட்டப்படுகின்றன.

### கோயிலும் இசை வேளாளரும்

கோயிலில் நடைபெறும் நாள் வழிபாடுகள், திருவிழாக்கள் அனைத்திற்கும் இன்றியமையாதது, நாதமும், மேள தாளமும். இங்கு இக்கோயிலில் இதை இசை வேளாளர் வகுப்பைச் சேர்ந்த நான்கு பங்காளிகள் பரம்பரையாகச் செய்து வந்துள்ளனர். இதைப் பெரிய மேளம் (நாதஸ்வரம், ஒத்து, மேளம், தாளம்) என்றும், சின்ன மேளம் (நட்டுவதாளம், மத்தளம்) என்றும் கூறுகின்றனர். இவர்கட்கு நாயக்க அரசர்கள் காலத்தில் மேலக்குயில்குடி கிராமம் முழுவதும் இனாம் மானியமாக விடப்பட்டுள்ளது. அரசின் சமீன் ஒழிப்புச் சட்டத்தில் இக்கிராமம் அரசினால் எடுத்துக் கொள்ளப்பட்டு, நட்ட ஈட்டுத்தொகையாக ரூபாய் 39,994/- கொடுக்கப்பட்டுள்ளது. இதை இந்நான்கு பங்

8. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.
9. மேலது.

காளிகளும் பிரித்துக் கொண்டு விட்டனர். நான்கு பங்காளி களில் மண்டைச் சுந்தர அண்ணாவி வகையறா, வாழை அண்ணாவி வகையறா செல்லம்பிள்ளை, சின்னமுத்துப்பிள்ளை நீலமேகம் பிள்ளை, கணபதியா பிள்ளை வகையறா ஆகிய மூன்று பங்காளிகளும் பெரிய மேளத்திற்காகவும், சுவாமிநாத பிள்ளை வகையறா ஆகிய நான்காவது பங்காளி சின்ன மேளத் திற்காகவும் மானியம் பெற்று வந்துள்ளனர். நட்ட ஈட்டுத் தொகை பெற்றுக் கொண்ட பின்னர்க் கணபதியா பிள்ளையின் மகனான முத்தையாபிள்ளை என்பவர் மட்டும் இப்பணியைத் தொடர்ந்து செய்து வருகிறார். முத்தையாபிள்ளை ஊதியம் எதுவும் பெறாமல் நித்தியப்படியாக 3½ கட்டிச் சோறு மட்டும் பெற்று வந்தார். தற்பொழுது பத்து ஆண்டுகளாக இப்பணிக்குத் திருக்கோயிலிலிருந்து ஊதியம் வழங்கப்படுகிறது. இப்பணிக் கென ஏற்பட்ட நான்கு பங்காளிகளில் ஒருவர் மட்டுமே உள்ளார். இவர் குடும்பத்தினருக்கு திருக்கை வழக்கம், மரிக் கைப் பரிவட்ட மரியாதைகள் நடைபெற்று வருகின்றன. இக் கோயிலின் பெருந்திருவிழாவான பங்குனித் திருவிழாவில் பெரிய மேளத்தில் இரண்டு பேருக்கும், சின்ன மேளம் ஓர் ஆளுக்கும் கொடியிறக்கிய பின்னர்ப் பரிவட்ட மரியாதை இருந்து வந்துள்ளது. தற்பொழுது பத்து ஆண்டுகளாக இப்பிரம் மோத்சவ மரியாதை நிறுத்தப்பட்டு வந்துவிட்டது என்கிறார் இக்கோயிலின் மூத்த இசை வேளாளர்.[10]

**கோயிலும் சீர்பாதமும்**

கோயிலின் திருவிழாக் காலங்களில் திருவீதியுலாக் கொள்ளும் மூர்த்தியைத் தூக்கிச் சுமந்து வரும் பணி இவர் களுடையது. இதற்குச் சீர்பாதம் மானியம் என்று கல்குளம் கிராமமும், திருப்பரங்குன்றத்தில் சில பகுதிகளும் விடப்பட்டி ருந்திருக்கின்றன. பின்னர் அரசினரால் இக்கிராமங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டு நட்ட ஈட்டுக்தொகை வழங்கப்பட்டு விட்டது.[11] செங்குந்த முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர்கள் இங்கு இப்பணியைச் செய்து வருகின்றனர். சூரசம்காரத்தில் ஈடுபட்ட வீரவாகுத் தெய்வத்தின் வழித் தோன்றல்கள் என்று இவர்கள் கூறிக் கொள்கின்றனர். அண்டாபரணர், உக்கிர

10. தகவல்: க. முத்தையாபிள்ளை (வயது 50), கள ஆய்வு நாள்: 18-12-82.
11. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.

மூர்த்தி ஆகிய முருகன் கோயில் காவற் தெய்வங்கள் இவர்களுக்கு வழிபடு தெய்வங்களாக உள்ளன. இவர்களில் பெரும்பாலானோர் இப்பெயரைச் சூடியுள்ளனர். இவர்களின் மரபில் வந்த ஒருவர் நிலச்சீர்கேடுகளை நீக்க வேண்டி, இக்கோயில் கோபுரத்தில் மீதேறிக் குதித்து இரத்தக் காணிக்கை செய்துள்ளார். (பிற்சேர்க்கை எண். 3). ஆகவே திருவிழாக் காலங்களில் இவர்கட்கு திருக்கை வழக்க மரியாதை செய்யும் பொழுது 'சாவான்' என்று வெற்றிலை மரியாதை செய்கிறார்கள். இவர்களும் நான்கு பங்காளிகளாக இருந்து இப்பணியைச் செம்மையாகச் செய்து வருகின்றனர்.

கோயிலும் வயிராவியும்

திருவிழாக் காலங்களில் சுவாமி, கோயிலிலிருந்து புறப்பட்டு திருவீதியுலா முடிந்து சேத்திமண்டபம், சேரும் வரை சுவாமியின் அருகிலேயே காவலாக இருக்கும் பணி இவர்களுடையது. இப்பணிக்காக இவர்கள் கூர்மையான கத்தியுடன் கூடிய மணியொன்றைப் பட்டுத் துணியில் கட்டி வைத்துள்ளனர். திருவீதியுலாப் புறப்படும் சுவாமி, கோயிலுக்குள் வலமாக வரும் பொழுதும், செல்லும் பொழுதும் இவர்கள் கையில் உள்ள மணியை அடித்துக் கொண்டே வருவார்கள். சுவாமி தெப்பத்திற்கும், தேருக்கும் போகும் பொழுதும் மணியடிப்பார்கள். பட்டாபிடேகம், சூரசம்காரம், திருக்கல்யாணம் ஆகிய திருவிழாக்களுக்கு ஸ்தானிகர்களைக் கோயிலுக்கு அழைத்து வருதல், வீட்டிற்குக் கொண்டு போய் விடுதல் ஆகியவைகள் இவர்களின் பணிகளாகும். திருவிழாக் காலங்களில் சுவாமிகளுக்கு நகை அலங்காரம் செய்யப்பட்டு சுவாமி திருக்கண்களில் (மண்டபங்கள்) இறக்கப்பட்டது முதல் திரும்பி வரும் வரை இவர்கள் இதற்குப் பொறுப்பாக உள்ளனர். இவ்வேளைகளில் ஏதாவது தீமைகள் ஏற்பட்டால் இவர்கள் தங்கள் கையில் உள்ள ஆயுதத்தைப் பயன்படுத்த அஞ்சுவதில்லை. இவர்கள் தெய்வத்தின் மெய்க் காவலர்களாக இருந்து தம்முயிரையும் இழக்கத் தயங்குவதில்லை. இவர்களின் மரபில் தோன்றிய குட்டியாபிள்ளை என்பவர் கருநாடக நவாபுகளின் ஆட்சிக் காலத்தில் கோயில் கோபுரத்திலிருந்து கீழே குதித்து இரத்தக் காணிக்கை செய்து இக்கோயிலைக் காத்துள்ளார். இதுபற்றி முன்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது (பிற்சேர்க்கை எண். 3) இச்செயலை நினைவுபடுத்தும் வகையில் இக்கோயிலின் திருவிழாக் காலங்களில் திருக்கை வழக்க மரியாதையில் 'சாவான்' என்ற வெற்றிலை மரியாதை இவர்கட்குச் செய்யப்

படுகிறது. இவர்களுக்குச் சாவான் மானியம் என்ற பெயரில் திருப்பரங்குன்றத்தில் தென்கால் நிலத்தில் 2 ஏக்கர் 27 செண்டு நிலம் மானியமாக விடப்பட்டுள்ளது. மேலும் கோயில் நித்தியப் படிச் செலவில் அரைப்படி சோறு கொடுக்க வேண்டும் என்று கட்டளை இருந்துள்ளது. ஆனால் தற்பொழுது கோயிலிலிருந்து இவர்கட்கு வாரத்திற்கு ஒருநாள் கால்படிச் சோறு (6 கட்டிகள்) கொடுக்கப்பட்டு வருகிறது. இவர்கட்குக் கீழ இரத வீதிக்கும், சாவடித் தெருவுக்கும் நடுவில் வீட்டடி மனைகள் விடப்பட்டுள்ளன. இதற்குக் குட்டியாபிள்ளை காலியிடம் என்று 18.9.1903-இல் பட்டா செய்யப்பட்டுள்ளது. கீழ இரத வீதிக்கும் சாவடித் தெருவுக்கும் இடைப்பட்ட தெரு குட்டியாபிள்ளைத் தெரு என்று பெயரிடப்பட்டுள்ளது. குட்டியாபிள்ளையின் சிலை தற்பொழுது மீனாட்சி மில்ஸ் தியாகராசர் குடியிருப்பில் உள்ள கோயிலில் உள்ளது. இவர்கட்குத் திருக்கார்த்திகை, தைக் கார்த்திகை, பங்குனிப் பெருந் திருவிழா ஆகிய மூன்றிற்கும் மூன்று படி எண்ணெய் வீட்டு விளக்கெரிப்பதற்காகக் கொடுக்கப் படுகிறது. இவர்கட்குத் திருக்கை வழக்கம், பரிவட்டம், மரிக் கைப் பரிவட்டம் ஆகிய மரியாதைகளும் செய்யப்படுகின்றன. இவர்கள் கையில் உள்ள ஆயுதத்தையும், மணியையும் ஆயுத பூசையன்று பிரித்து வைத்துப் புதுக்கயிறு கட்டி வணங்கு கிறார்கள். இதற்குக் கோயில் சீர்பாதக்காரர்கள் ஆண்டிற்கு இருகயிறு என்று கயிற்றை வழங்குகிறார்கள். இவர்கள் இந்து வேளாளர் என்ற குலப் பிரிவைச் சேர்ந்தவர்கள். தற்பொழுது இப்பணியை மு. சுப்பிரமணியபிள்ளை, மு. வீரபாகு பிள்ளை, மு. கருப்பணபிள்ளை என்ற மூவரும் வரிசை முறையில் பார்த்து வருகின்றனர். இவர்களுக்குத் தென்கால் நிலத்தில் 19 செண்டு நிலமும், செவந்தி குலத்தில் 15 செண்டும் மானியமாக விடப் பட்ட நிலங்களாக உள்ளன.[12]

### கோயிலும் கொத்தனாரும்

கோயிலில் நித்திய வழிபாடு விழாக் காலங்களில் கொத்து வேலைகள் செய்வதற்காக இம்மானியம் ஏற்படுத்தப்பட் டுள்ளது. இதற்காகத் திருப்பரங்குன்றம் கிராமத்தில் சில பகுதிகள் விடப்பட்டுள்ளன (டி.டி.1337). இப்பணி விழாக் காலங்களில் நடைபெற்று வருகிறது. இதன் மற்ற விவரங்கள் அறிய முடியவில்லை. கோயிலின் திருக்கார்த்திகைத் திருவிழா

12. தகவல்: மு. வீரபாகு பிள்ளை (வயது 52), கள ஆய்வு நாள்: 18-12-82.

வில் சொக்கப்பனைக்கு ஓலையும், மரமும் கொண்டு வந்து சொக்கப்பனை கட்டுதல் கொத்தனார் வேலை. இதற்காக அல்லாலபேரி (நெடுங்குளம்) கிராமம் இவர்களுக்குச் சொக்கப் பனை மானியமாக விடப்பட்டுள்ளது.[13]

**கோயிலும் சிற்பியரும்**

கோயிலின் திருவிழாக் காலங்களில் துணி, வண்ணக் காகிதம், இவைகளை வெட்டி, பசை காய்ச்சி ஒட்டி தேர், பல்லக்குப் போன்றவற்றை அலங்காரம் செய்தலும், கொடி யேற்றும் திருவிழாக்கட்குக் கொடிப்பட்டம் அமைத்துக் கொடுத் தலும் இவர்களது பணியாகும். இவர்கள் சித்திரைத் திங்களில் சுவாமிக்கு வேண்டிய ஆடை ஆபரணங்கள் தைத்தல், பழுது பார்த்தல், மயில் வாகனம், விடையாத்திச் சப்பரம் ஆகியவற் றிற்கு அலங்காரம் செய்தல் போன்ற பணிகளைச் செய்கின் றனர். வைகாசி விசாகத்தன்று கம்பத்தடி மண்டபம், பாலாபி டேகக் குறடு, மொட்டையரசு செல்லும் சட்டத்தேர் இவை கட்கு அலங்காரம் செய்கின்றனர். ஆடித் திங்களில் வசந்த மண்டபம், விடையாத்திச் சப்பரம், ஊஞ்சல் அலங்காரம் செய்தல்; ஆவணியில் மலர்ப் பல்லக்கு, விடையாத்திச் சப்பரம் அலங்காரம் செய்தல்; புரட்டாசித் திங்கள் நவராத்திரிக் கொலுவன்று பசுமலை நான்கு கால் மண்டபத்தில் சுவாமி அம்பு போடுவதற்கு வில், அம்பு செய்து கொடுத்தல்; ஐப்பசிக் கந்த சட்டியில் சூரனுக்குத் தலை, மற்ற அலங்காரங்கள், விடை யாத்திச் சப்பரம், மயில் வாகனச் சப்பரம், சட்டத்தேர் அலங் காரம் செய்தல்; கார்த்திகைத் திருவிழாவிற்கு விடையாத்திச் சப்பரம், மயில் வாகனச் சப்பரம், வயிரத்தேர் இவைகட்கு அலங்காரம் செய்தல்; மார்கழித் திங்களில் உத்சவமூர்த்திகட்கு அலங்காரம், விடையாத்திச் சப்பரம் அலங்காரம் செய்தல்; தைத் திங்களில் தைக் கார்த்திகைத் தேர், விடையாத்திச் சப்பரம், சப்தாவரணச் சப்பரம், மயில் வாகனச் சப்பரம்; தை தெப்பத் திருவிழாவிற்குச் சுவாமிக்கு அலங்காரம், முத்தங்கி, மலர்ப் பல்லக்கு அலங்காரம் செய்தல்; மாசி மகத் தன்று இவ்வூர் வெயிலுகந்த அம்மனுக்கு மலர்விமானம், தேர் அலங்காரம் செய்தல்; பங்குனிப் பெருந் திருவிழாவில் கொடிப் பட்டம் வரைதல், தைத்தல், மலர் விமானம், மலர்ப்பல்லக்கு, விடையாத்திச் சப்பரம், மயில்வாகனச் சப்பரம், சப்தாவரணச்

---

13. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்

சப்பரம், திருக்கலியாண மண்டபம், பெருந்தேர் அலங்காரம் செய்தல் ஆகியவைகள் இவர்களின் ஆண்டு முழுமைக்குமான பணிகள். இவர்கட்குத் தையற்காரர்கள் என்றும், சிப்பியர் என்றும், மேஸ்திரி என்றும் பெயர்கள் கூறப்படுகின்றன. இவர்கள் தங்களைப் பாணபத்திரர் வமிசத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், இவர்கட்கு நிலையூர் அருகில் பாணான்குளம் பகுதியில் 3 மைல் சுற்றளவில் மானியமாக நிலம் விடப்பட்டிருந்த தாகவும்; இவர்கள் இதனை மறுத்து விட்டு ஆலயத்தை ஒட்டிய பகுதியில் நிலம் விடுமாறு கேட்டதாகவும் அதற்கிணங்கத் தென் கால் வயலில் 4 ஏக்கர் 74 செண்டு நிலம் மானியமாக விடப் பட்டதாகவும், இதற்குத் தையற்காரர் முக்காணி என்று பெயர் வழங்குவதாகவும் கூறுகிறார்கள். மேலும் இவர்கட்குப் பெரிய இரத வீதியில் 275 இலக்கமுள்ள மண்டபம் 'தையற்காரர் மண்டபம்' என்ற பெயரில் விடப்பட்டதாம். இது திருவிழாக் காலங்களில் இவர்கள் வந்து தங்கிப் பசை காய்ச்சுவதற்கும், அலங்கார வேலைகள் செய்வதற்கும் ஏற்படுத்தப்பட்டதாம். தற்பொழுது வேறு யாரோ எடுத்துக் கொண்டு விட்டதாகக் கூறுகிறார்கள். ஆனால் திருப்பரங்குன்றம் நகராட்சி அலுவலகக் குறிப்பேட்டில் இந்த இலக்கமுள்ள மண்டபம் 'தையற்காரர் மண்டபம்' என்ற பெயரிலேயே இருந்து வருகிறது (பிற்சேர்க்கை எண். 5). இவர்கட்கு இங்கு நித்தியப் படி சோறு வழங்கும் மரபு இருந்ததாம். தற்பொழுது திருவிழாக் காலங்களில் மட்டும் சோறு வழங்குகிறார்கள். தேர் புறப்படு வதற்கு முன் தேரடியில் இவர்கட்குச் சந்தனம், வெற்றிலை, பாக்கு மரியாதை செய்கிறார்கள். பெரிய தேர் கிரிவலம் வந்த பிறகு இவர்கட்குப் பரிவட்ட மரியாதை நடைபெறுகிறது. 'திருக்கை வழக்கம்', 'மரிக்கைப் பரிவட்டம்' போன்ற மரியா தைகளும் நடைபெறுகின்றன. இங்கு இவர்கட்குக் கிடைக்கும் வருவாயை வைத்து ஆவணி மூலத் திருவிழாவிற்கு முருகன் மதுரை வரும் பொழுது அங்கு இவர்கள் திருக்கண் அமைத்துச் சிறப்புச் செய்கிறார்கள். மதுரை மீனாட்சி கோயிலில் ஆவணி மாதத் திருவிழாவில் அங்கம் வெட்டிய லீலையும், விறகு வெட் டிய லீலையும் இவர்கள் மரபினர்க்காக ஏற்படுத்தப்பட்டதாக வும் கூறுகிறார்கள். தற்பொழுது இவர்கள் எட்டுப் பங்காளி களாக இருந்து இப்பணிகளைச் செய்கிறார்கள்.[14]

14. தகவல்: கே. சண்முகசுந்தரம் (வயது 49,) மதுரை. கள ஆய்வு நாள்: 17-12-82.

### கோயிலும் கம்மாளரும்

கோயிலின் நித்தியப்படிக் காலத்திலும், திருவிழாக் காலங்களிலும் மரவேலை, பொன்வேலை, கல் வேலை, இரும்பு வேலை, ஈயம் பூசுதல், பாத்திரங்கள், வாகனங்கள் ஆகியவற்றைத் தேய்த்துச் சுத்தம் செய்தல் ஆகிய இவற்றைச் செய்யும் கொல்லர், தச்சர், கன்னார் ஆகியோரைக் கம்மாளர் என்று குறிப்பிடுகின்றனர். இவர்கள் இரும்புக் கொல்லர், ஈயம் பூசுவோர், கல்தச்சர், பொற்கொல்லர் (தட்டார்), தச்சர் (மரவேலை செய்வோர்) என்று ஐந்து பிரிவினராக உள்ளனர். இவர்கள் ஐவருக்குமாக இங்கு மேல இரதவீதியில் 'கம்மாளர் பொது மண்டபம்' என்ற மண்டபம் இவர்கள் பொறுப்பில் உள்ளது. பங்குனித் திருவிழாவில் ஐந்தாம் திருநாள் இவர்களால் இம்மண்டபத்திலிருந்து கொண்டாடப்படுகிறது. 'கைபாரம்' தூக்கும் திருவிழா ஐந்தாம் திருநாளில் சிறப்பாக நடைபெறுகிறது (நிழற்படம் காண்க) (திருவிழாக்கள் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது). இத்திருவிழாவில் ஐவரில் கொல்லரும், தச்சரும் மட்டுமே பரிவட்ட மரியாதை பெறுகின்றனர். கோயிலில் கொல், தச்சுப் பணிகளை இவர்களே செய்து வருகின்றனர். இவர்கட்குக் கோயிலிலிருந்து சிறுதொகை மரியாதைக்காகத் தற்பொழுது கொடுக்கப்படுகிறது. இவர்களின் பணிக்காகச் சிவந்திகுளம் பகுதியில் 2 ஏக்கர் நிலம் மானியமாக விடப்பட்டுள்ளது. நிலம் இவர்கள் ஐவருக்கும் பொதுவாக உள்ளது. கோயிற்பணிகளை ஆண்டுக்கொருவராகப் பார்த்து வருகிறார்கள். இடையர்காடு என்ற இடத்தில் 2 ஏக்கர் புன்செய் மானியமாக விடப்பட்டுள்ளது. இது தற்பொழுது கொல்லருக்கு மட்டுமே உடைமையாக உள்ளது. தச்சருக்கென விடப்பட்ட புன்செய் பற்றிய விவரம் தெரியவில்லை. இவர்கட்குக் கோயிலிலிருந்து வாரத்திற்கு நான்கு சோற்றுக் கட்டிகள் (ஒரு நாளைக்கு ½கட்டி வீதம்) கொடுக்கப்படுகிறது.[15]

### கோயிலும் வண்ணாரும்

கோயிலின் நித்திய வழிபாடு, திருவிழாக் காலங்களில் கோயில் துணிகளைச் சுத்தம் செய்வதற்காக இப்பணி ஏற்பட்டுள்ளது. இதில் நான்கு பங்காளிகள் இருந்துள்ளனர். இவர்கட்குத் திருப்பரங்குன்றம் பகுதியில் (டி. டி. 1222) நிலம்

15. தகவல்: வை. நா. ஆதனமிளகு ஆசாரி (வயது 50), கள ஆய்வு நாள்: 3-4-82.

மானியமாக விடப்பட்டுள்ளது.[16] ஆனால் தற்பொழுது இப் பணி முழுதும் மறைந்துவிட்டது. இப்பணி செய்யும் பரம் பரையினர் ஒருவரும் இல்லை.

### கோயிலும் கோனாரும்

கோயிலில் நித்தியப்படிப் பணிக்காகக் கோயில் மாடுகளை மேய்த்தல், பால்கறந்து அபிடேகத்திற்கு அளித்தல், வெண் ணெய் நெய் எடுத்துக் கோயிலில் விளக்கெரிக்கக் கொடுத்தல் போன்றவற்றிற்காகப் பணி செய்பவர்கள் கோனார்கள். இதற்காக இவர்கட்குத் திருப்பரங்குன்றத்தில் சில பகுதி நிலங் கள் (டி. டி. 1220) மானியமாக விடப்பட்டுள்ளன. தற்பொழுது கோயிலில் மாடுகளும் இல்லை; இப்பணியும் நடைபெறவில்லை. நிலங்கள், வருவாய் பற்றிய விவரங்கள் தெரியவில்லை.

இங்கு, மதுரை இராமாயணச் சாவடி ஆயிரம்வீட்டு யாத வர்கள் பசுமேய்க்கிற மண்டபம் என்ற ஒன்றும், பால் கரக்கும் பஞ்சாரம் கட்டி இருபத்தைந்து ஊர் யாதவர்கள் மண்டபம் என்ற ஒன்றும் ஆக இரு மண்டபங்கள் உள்ளன. பங்குனித் திங்களில் நடைபெறும் பெருந்திருவிழாவில் ஏழாம் திருநாளன்று இவ்விரு மண்டபத்திற்கும் ஆட்டுக்கடா வாகனத்தில் முருகன் வந்து இறங்குகிறார்.

திருப்பரங்குன்றம் நிலையூர்ச் சாலையில் மதுரை இராமா யணச் சாவடி ஆயிரம் வீட்டு யாதவர்கள் பசு மேய்க்கிற மண்ட பம் உள்ளது. மதுரையில் வடக்கு மாசி வீதியில் உள்ள இராமா யணச் சாவடி என்ற இடத்தில் இராமர் கோயில் உள்ளது. இச் சாவடி திருமலை நாயக்கருடையதாம். இதில் நெடுங்காலமாக இராமாயணக் கதை ஆண்டுதோறும் சொல்லப்பட்டு வருவதால் இதற்கு 'இராமாயணச் சாவடி' என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. இது திருமலை நாயக்கரால் இவர்களுக்கு விட்டுக் கொடுக்கப் பட்டதாம். இவர்கள் பொது நாட்டு இடையன் (பொதிகை மலை), சிவிகை இடையன், ஆயர் இடையன் என்ற மூன்று வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் ஆயிரம் தலைக்கட்டு உடையவர்கள். ஆகவே இவர்கட்கு ஆயிரம் வீட்டு யாதவர்கள் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. இவர்களின் மூதாதையர் திருநெல்வேலிப் பகுதியில் வாழ்ந்து வந்தவர்கள். அப்பொழுது திருநெல்வேலிப் பகுதியை ஆண்டு வந்த சிற்றரசன் (பெயர்

16. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.

ஆண்டு தெரியவில்லை) இவர்கள் குலப்பெண்கள் கைம்மை நோன்பு நோற்பதையும், வெள்ளை ஆடையுடுத்துவதையும் விடுத்து மறுமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தியதால், இவர்கள் அனைவரும் திருநெல்வேலியை விட்டு மதுரையை வந்தடைந்தார்களாம். மதுரையில் பிரமலைக் கள்ளர் இனத்தார் இவர்கட்கு ஆதரவு கொடுத்துள்ளனர். இவர்கள் மதுரையில் இராமாயணச் சாவடி அருகே குடியேறினர். பின்னர் இவர்கள் மதுரை, இராமநாதபுரம் பகுதிகளில் நாற்பத்தெட்டுக் கிராமங்களில் குடிபுகுந்தனர். திருமலை நாயக்கர் திருப்பரங்குன்றம் மீனாட்சியம்மன் கோவில் திருவிழாக்களில் இவர்கள் பங்குபெறுவதற்கு அனுமதி கொடுத்து மண்டபங்களும் கட்டிக் கொடுத்திருக்கிறார்.

இவர்கள் பசுமேய்க்கிற யாதவர்கள் எனப் பெயர் குறிப்பிடப்படுகின்றனர். திருப்பரங்குன்றம் பங்குனித் திருவிழாவில் ஏழாம் திருநாளன்று முருகன் கோயிலிலிருந்து இவர்களின் மண்டபத்திற்கு எழுந்தருளுகிறார். அப்பொழுது முருகனுடன் பொம்மைப்பசு ஒன்று அலங்காரம் செய்து வைக்கப்பட்டு, எடுத்து வரப்படுகிறது. பசுவிற்குத் தீபாராதனை முடிந்ததும் முருகனுக்குத் தீபாராதனை நடைபெறுகிறது. அவ்வைக்கு நெல்லிக்கனி கொடுப்பதற்காக முருகன் பசு மேய்த்துக் கொண்டிருந்தான். ஆகவேதான் நாங்களும் பசு மேய்க்கிற யாதவர்கள் என்று அழைக்கப்படுகிறோம் என்று கூறுகிறார்கள். இங்குள்ள கடை தட்டிப் பறம்பு என்னும் சிறிய குன்றம் இவர்களில் ஆயர் இடையர் என்ற வகுப்பைச் சேர்ந்தவர்களின் உடைமையாய் உள்ளது.[17]

திருப்பரங்குன்றம் பெரிய இரதவீதியில் 116 இலக்கமுள்ள மண்டபம் பால்கரக்கும் பஞ்சாரங்கட்டி இருபத்தைந்து ஊர் யாதவர்கள் மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. இவர்கள் முருகனுக்குப் பால் கரந்து கொடுக்கும் திருப்பணியைச் செய்த, தனால் இப்பெயர் ஏற்பட்டதாகக் கூறுகிறார்கள். நாமம், சங்கு சக்கரம், கதை, கத்தி என்று ஐந்தையும் பஞ்சாயுதம் என்றும், இதனால் பஞ்சாயுதம் கட்டி என்று பெயர் ஏற்பட்டது என்றும், பின்னர் இது தவறாகப் பஞ்சாரம் என்று வழங்கி வருகிறது என்றும் கூறுகிறார்கள். இவர்கள் கரிசல்குளம், மருதநத்தம்,

17. தகவல்: ப. அருணாசலம் (வயது 50), மதுரை நவகிருஷ்ணன் கோயில் பேஷ்கார், கள ஆய்வு நாள்: 5-4-82.

சீவல நாயக்கன்பட்டி, சிட்டலபட்டி, கரையான்பட்டி, காவெட்டி நாயக்கன்பட்டி, மாத்தூர், மா. தம்பிபட்டி, ரெங்க பாளையம், சிலைமலைப்பட்டி, அகத்தாபட்டி, வ. மீனாட்சி புரம், குமராபுரம், பாப்பையாபுரம், பாப்பநாயக்கன்பட்டி, காடநேரி, தெய்வநாயகபுரம், அரசபட்டி, தென்பழஞ்சி, மாதரை, மணப்பட்டி, பொதும்பு, பெருமாள் கோவில்பட்டி, மீனாட்சிபட்டி ஆகிய இருபத்தைந்து ஊர்களைச் சேர்ந்தவர்கள் என்பதால் இருபத்தைந்து ஊர் யாதவர்கள் என்ற பெயர் ஏற்பட்டதாகவும் கூறுகிறார்கள். இருபத்தைந்து ஊர் கோனார் களும் தலைக்கட்டிவாரியாக வரிப்பணம் வசூலித்துத் திருவிழாச் செய்கின்றனர். இவர்களுக்கென மானியநிலம் ஏதும் இல்லை. இவர்கள் ஆடு மேய்க்கின்றவர்கள். ஆகையால் முருகனுக்கு ஆட்டுக்கிடா வாகனம் இத்திருநாளில் வருவதாகக்கூறுகிறார்கள் இருபத்தைந்து ஊர் மக்களின் தலைவராக உள்ளவர்கள் ஆண்டுக்கு ஓர் ஊரினராக இத் திருநாளை நடத்தி வருகிறார்கள்.[18] இதில் இவர்களுக்குள் போட்டி ஏற்படுவதால் இங்குப் பரிவட்ட மரியாதை யாருக்குமே செய்யப்படுவதில்லை.

### கோயிலும் பரிகாரியும்

கோயிலில் பணிசெய்யும் ஸ்தானீகர், அருச்சகர்களுக்குத் திருவிழாக் காலங்களிலும், மற்ற நாட்களிலும் சிகை கழித்தல் போன்ற பணிகளுக்காகவும், பக்தர்களின் முடிக்காணிக்கைக்குத் தொண்டு செய்வதற்கும், பரிகாரிகள் (நாவிதர்) ஏற்படுத்தப் பட்டு மானியம் வழங்கப்பட்டுள்ளது. இவர்களுக்குத் திருப்பரங் குன்றம் பகுதியில் (டி.டி.எண். இல்லை) நிலம் விடப்பட் டுள்ளது.[19] இவர்கள் நான்கு பங்காளிகளாக இருந்து இப்பணி யைச் செய்து வந்துள்ளனர். தற்பொழுது இப்பணியைத் தேவஸ் தானத்திலிருந்து ஊதியம் பெற்றுச் சிலர் செய்து வருகின்றனர். பரம்பரையாக வந்த இப்பணியாளர்கள் தற்பொழுது இல்லை.

### கோயிலும் பண்ணைப்பள்ளரும்

கோயிலின் பண்ணை நிலங்களின் வேளாண்மை செய்தலும், கோயிலின் தேர்த்திருவிழாவில் தெருவைச் சுத்தம் செய்து

18. தகவல்: இருபத்தைந்து ஊர் யாதவர்கள் (தனியாக ஒருவர் பெயரைக் கூறத் தகவலாளர்கள் விரும்ப வில்லை), கள ஆய்வு நாள்: 5-4-82.
19. சொத்துப் பதிவேடு, மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.

சுண்ணாம்பு தூவுதலும் இவர்களின் பணி. கிராம விவசாயத்திற்கு வேண்டிய தண்ணீரை ஒரு கண்மாயிலிருந்து மற்றொரு கண்மாய்க்கு மாற்றுவது இவர்கள் வேலை. இதை இங்கு வழங்கும் நாட்டுப்புறப் பாடலில் காணமுடிகிறது (பிற்சேர்க்கை எண். 1). அறுவடைக் காலத்தில் நெல்லை இவர்கள்தான் அளக்க வேண்டும். நெல் அளவுக்குத்தக இவர்கள் தமக்கு ஊதியம் எடுத்துக் கொள்வார்கள். இவர்கள் நான்கு பங்காளிகளாக உள்ளனர். ஆண்டுக்கொருவராக இவர்கள் தொண்டாற்றி வருகின்றனர். தண்ணீர் பாய்ச்சுதல், நெல் அளத்தல், இறந்தவர்கட்குக் குழி தோண்டுதல், அடக்கம் செய்தல், வேல் திருவிழாவிற்கு மலைமேல் வேல் போகும் போது பாத்திரம், விறகு, சாமான்கள், கொண்டு போதல் இவர்களின் பணியாகும். சித்திரை மாதப்பிறப்பன்று இந்த நான்கு பேரும் நான்கு கலப்பை, நான்கு சோடி மாடுகளை கொண்டு போய் கோயில் நிலத்தில் ஏர் கட்டுவார்கள். முதலில் வயிராவி ஏரைத் தொட்டு ஓட்டுவார். பின்னர்க் கிராமத்து விவசாயிகள் அனைவரும் ஏரைத் தொட்டு ஓட்டுவார்கள். இறுதியில் இந்த நான்கு பேருக்கும் சந்தனம், வெற்றிலை, பாக்கு, மரியாதை செய்வார்கள்.

நான்கு ஸ்தானீகர்கள் வயிராவி இவர்களின் குடும்பத்தில் யாரேனும் இறந்து பட்டால், இவர்கள் மாவிலைத் தோரணம் கட்டிக் கொண்டு முன் செல்வார்கள். இதற்கு இவர்கள் மரியாதை பெற்றுக் கொள்வார்கள்.

புரட்டாசி மாதம் வெயிலுகந்த அம்மன் கோயிலில் நடைபெறும் பொங்கல் திருநாளன்று இக்குல மக்கள் அனைவரும் ஒருங்கு கூடி நின்று குலவையிட்டு நாட்டுப்புறப் பாடல்களைப் பாடி மகிழ்கிறார்கள். மேலும் இம்மாத நவராத்திரி விழாவில் சுவாமி முருகன் பசுமலை அருகே நான்கு கால் மண்டபத்திற்கு அம்பு போடப்போகும் பொழுது பச்சை இலை, கிளைகளை வைத்து (பச்சைப் புளிய மரக்கிளைகளை வைத்து) குடிசை கட்டி, அதற்கு நடுவில் வள்ளி மரக் கிளையை ஊன்றி வைப்பார்கள். அங்கு வந்துதான் சுவாமி அம்பு போடுவார். அந்தப் பச்சைக் குடிசை போடுவதற்காக கோயிலிலிருந்து ஆறே முக்கால் துட்டு (பழைய திட்டப்படி) கொடுக்கப்படுகிறது.

கார்த்திகை மாதம் சின்னத் தேர்த் திருவிழாவிற்குத் தெருவைச் சுத்தம் செய்து கொடுப்பார்கள். இதற்குக் கோயிலிலிருந்து பதினான்கு சல்லி (பழைய திட்டப்படி) கொடுக்கப்படுகிறது. இது போலவே தைக் கார்த்திகைக்கும் சுத்தம் செய்து

கொடுத்துப் பணம் பெற்றுக் கொள்கிறார்கள். திருக்கார்த்திகை சொக்கப்பனைக்குக் குழி தோண்டுவதும், குறுக்குக்கம்பு கொடுப்பதும் இவர்கள் பணியாகும்.

தை மாதம் தெப்பத் திருவிழாவிற்குத் தெப்பத்தில் எட்டுப் பகுதியில் ஒரு பகுதிக்குத் (மேற்குப் பகுதி) தீபம் போடுவது இவர்களது வேலை. தீபத்திற்குத் திரி, எண்ணெய் ஆகியவற்றைத் தெப்ப மண்டபத்தார் (நாட்டுக்கோட்டை நகரத்தார்) கொடுப்பார்கள். இதற்குக் கோயிலிலிருந்து பரிவட்டம் கொடுப்பார்கள்.

தை மாதப் பிறப்புக்கு இவர்கள் கோயிலில் சுவாமிக்கு நான்கு பூசனிக்காயும், நான்கு சிறிய விறகுக்கட்டும் (நான்கு பங்காளிகள் என்பதால்) கோயிலில் வைத்து விடுவார்கள். இதை தேவஸ்தானம் எடுத்துக் கொண்டு, நான்கு மண் கலயமும் நான்கு கால்படி அரிசியும் கொடுப்பார்கள். இதைப் போலவே ஆறு நிருவாகத்தாருக்கும், முத்திரை வயிராவி மெய்க்காவல் ஊழியம், பேஷ்கார், மணியம், வாசல், கொத்தனார், கோனார், ஓதுவார் இவர்கட்கும் பண்ணைப்பள்ளர் கொடுக்கின்றனர். இதைப் பெற்றுக்கொண்டு அவர்களும் கால்படி அரிசியும், மண் கலயமும் கொடுப்பார்கள்.

பங்குனித் திருவிழாவில் பெரிய தேர் கிரிவலமாக வருவதற்குச் சாலையில் இரு பக்கமுமுள்ள மரக்கிளைகளை வெட்டி வழியைத் தடுக்காமல் செய்து கொடுப்பர். இதற்குக் கோயிலிலிருந்து இவர்கட்கு பரிவட்டமும், ஒன்றே கால் ரூபாயும், பலிகொடுத்த ஆட்டுக்குட்டியும் கொடுப்பார்கள். இந்தப் பலி கொடுத்தல் மலையின் தென்புறத்தில் உமையாண்டவர் கோயில் அருகே தேர் வரும் பொழுது அங்குள்ள கருப்பண சுவாமி கோயிலில் நிகழும். பூசை செய்த ஆட்டுக் குட்டியைக் கோனார்கள் கொண்டு வந்து தேர்ச் சக்கரத்தில் வைப்பார்கள். அதை அங்கு ஆசாரி பலி கொடுப்பார். அந்த ஆட்டுக் குட்டியை இவர்கள் பெற்றுக் கொள்வார்கள். காங்கிரசு ஆட்சிக்கு வந்த காலத்தில் பலி கொடுப்பது நிறுத்தப்பட்டு அதற்கு மாறாக ரூபாய் எட்டு மட்டும் கொடுக்கப்பட்டது. பின்னர் அதுவும் நிறுத்தப்பட்டுப் பூசனிக்காய்ப் பலி கொடுக்கப்பட்டது. அதன் பின்னர் அப்பழக்கமும் கைவிடப்பட்டு எலுமிச்சம் பழம் பலி கொடுக்கப்பட்டது. தற்பொழுது எதுவும் கொடுக்கப்படவில்லை. ஆனால் தேர் மட்டும் அங்கு நின்று புறப்படுகிறது. பழைய வழக்கப்படி தீபாராதனை செய்து வழிபடுகிறார்கள். தென்பரங்குன்றம் வழி

பாட்டில் இருந்தபொழுது இந்தக் கருப்பணசாமி 'மலையடிக் கருப்பணசாமி' என்று வழங்கப்பட்டது. இதுதான் இவர்களின் குலதெய்வம்.

இவர்களுக்குப் பாணான்குலத்தில் 4ஏக்கர் 36 செண்டு நிலம் மானியமாக விடப்பட்டது. இந்த நிலம் இப்பொழுது இவர்கள் நான்கு பங்காளிகளுக்கும் உரியதாக உள்ளது. இது தவிர 'பள்ளர் மண்டபம்' என்ற பொது மண்டபம் ஒன்று இருக்கிறது. இதில், பங்குனித் திருவிழாவில் திருக்கலியாணத்தன்று மதுரை மீனாட்சி, சொக்கர், முருகன் ஆகியோர் வந்து திருக்கண் இறங்குகிறார்கள்.

இவர்கட்கு முன்பு நித்தியப்படியாக இரண்டு சோற்றுக் கட்டிகள் கொடுக்கப்பட்டதாம். தற்பொழுது அது கொடுக்கப் படவில்லை. தைக் கார்த்திகை, பங்குனித் தேர் ஆகிய இரண் டுக்கும் கொடுக்கப்பட்டு வந்த பரிவட்டங்கள் ஏழு ஆண்டு களாகக் கொடுக்கப்படவில்லை. ஆனாலும் இவர்கள் தொண்டு களை விடாமல் செய்து வருகிறார்ள்க. இவர்கட்கு மரிக்கைப் பரிவட்ட மரியாதை செய்கிறார்கள்.20

### கோயிலும் வாயிற் காவலரும்

இக்கோயிலின் வாயிற் காவற்பணிக்கும், விளக்கு எரித்தல், தீவட்டி தூக்குதல் போன்ற பணிகளுக்காகவும் ஏற்படுத்தப் பட்டவர்கள். வாசல் மானியம் என்றும் தீவட்டி மானியம் என்றும் அழைக்கப்படுறார்கள். இவர்கள் நான்கு பங்காளிகள். தற்பொழுது குமார வேல் சேர்வை, பரமன் சேர்வை, பாலு சேர்வை என்ற மூன்று பங்காளிகள் உள்ளனர். இவர்கள் சேர்வை அகமுடையார் இனத்தைத் சேர்ந்தவர்கள். இவர்கட்கு இப்பணிக்காகத் தென்கால் கண்மாய் பகுதியில் $1\frac{1}{2}$ ஏக்கர் நிலம் விடப்பட்டுள்ளது. தற்பொழுது இவர்கட்கு நித்தியப்படிக் கட்டளையாக இரண்டு கட்டி சோறு (1/8 படி அரிசி) கொடுக் கப்படுகிறது. கோயிலின் ஆறுகால் பீடத்துக் கதவு மடைப் பள்ளிப் பக்கத்து கதவு, (மேலவாசல்), வ ா க ன அறை, அரசர்கள் கட்டளை அறைகள் ஆறுமுகசாமி மண்டப அறை இவற்றின் காவல் இவர்களின் பொறுப்பாகும்.

ஒரு நாளைக்கு இரண்டரை லிட்டர் கடலையெண்ணெய் கோயிலிலிருந்து இவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இதைக் கொண்டு கோயில் முழுவதும் விளக்குப் போடுவதும், திருவனந்தல், காலைச்சந்தி, சாயரட்சை, பள்ளியறை ஆகிய

காலங்களில் தீவட்டி பிடிப்பதும் செய்கிறார்கள். தீவட்டிக்கு வேண்டிய துணிகளுக்காக மாதத்திற்கு ரூபாய் ஏழே முக்கால் கொடுக்கப்படுகிறது. கார்த்திகை, தை, பங்குனி ஆகிய மாதங் களில் நடைபெறும் திருவிழாவிற்குச் சுவாமி திருவீதியுலா வரும்பொழுது தீவட்டி (காலை இரண்டு, இரவு இரண்டு) பிடிக்க வேண்டும். பத்து நாள் திருவிழாவிற்கும் சேர்ந்து ஐந்தேகால் படி விளக்கெண்ணெய் கொடுக்கப்படுகிறது. திரு விழாக்காலங்களில் சுவாமி மண்டபங்களுக்குப் போகும்பொழுது இவர்கள் கோயிலிலிருந்து இரண்டு விளக்குகளைக் கொண்டு போய் வைப்பார்கள். அதற்கு மண்டபக்காரர்கள் (குத்து விளக்கு) மரியாதை செய்வார்கள். சுவாமி சித்திரை, ஆவணி மாதங்களில் மதுரை செல்லும் பொழுது ஒரு விளக்குக் கொண்டு போவார்கள்.

பங்குனி உத்திரத் திருவிழாவில் தேர் நிலைக்கு வந்த பிறகு இவர்கள் சுவாமியின் கிரீடத்தை எடுத்துக் கொண்டு கோயிலிலிருந்து வந்து சுவாமிக்குக் கொடுப்பார்கள். அதை நம்பியார் வாங்கிச் சுவாமிக்குச் சாத்துவார். இதற்கு இவர் கட்குப் பரிவட்ட மரியாதை (8 முழ வேட்டி) செய்வார்கள். திருக்கை வழக்க மரியாதையும், மரிக்கைப் பரிவட்டமும் இவர்களுக்கு உண்டு.[21]

**கோயிலும் வேளாரும்**

இக்கோயிலைச் சேர்ந்த வேளார்கள் (குயவர்கள்) ஐம்பது குடும்பத்தினர், விளாச்சேரி என்ற கிராமத்தில் இருந்து வரு கிறார்கள். இவ்வூர் இவர்களுக்காக மானியமாக விடப்பட்ட தாகக் கூறுகிறார்கள். வேளாச்சேரி என்பதுதான் விளாச்சேரி என்று மாறியதாகவும் கூறுகிறார்கள்.[22] கோயில் திருவிழா விற்கு வேண்டிய மண்பாண்டங்கள், கோயில் ஊழியர்களுக்கு வேண்டிய மண் பாண்டங்கள் கொடுப்பது இவர்களின் பணி. கோயிலின் கார்த்திகைத் திருவிழா, தைக் கார்த்திகை, தை மாதப்பிறப்பு, தைத் தெப்பம், பங்குனிப் பெருந்திருவிழா

---

20. தகவல்: மலையடியான் (வயது 75), கள ஆய்வு நாள்: 18-12-82.
21. தகவல்: ஆர் குமாரவேல் சேர்வை (வயது 60), திருப் பரங்குன்றம், கள ஆய்வு நாள்: 21-12-82.
22. தகவல்: சொ. சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானீகம்)

ஆகியவற்றிற்கு, பானை, முட்டி, தோண்டி, கலயம், உருண்டைக் கலயம், சட்டி, மடக்கு பாலிகை, விளக்குச்சட்டி இவைகளைக் கொடுக்கிறார்கள். ஆறு நிருவாகத்தார், மகா சனம், சீர்பாதம், வயிராவி, மணியாரர், இராமநாதபுர சமஸ்தானம், சிவகெங்கை சமஸ்தானம் ஆகியோர்களுக்கும் தை மாதப் பிறப்பன்று சோற்றுப்பானை, குடம் கலயம், சட்டி, கிண்ணி, மண் விநாயகர் இவைகளைக் கொண்டு வந்து கொடுக்கிறார்கள். பங்குனித் திருவிழாவில் குயவர்கள் திருவிழா முடிந்துதான் மற்றவர்கள் திருவிழா இங்கு நடைபெறுகிறது. தைத் தெப்பத் திருவிழாவிற்கும் பங்குனித் திருவிழாவிற்கும் இவர்கட்குப் பரிவட்ட மரியாதை நடைபெறுகிறது; மரிக்கைப் யரிவட்டமும் செய்யப்படுகிறது.

இவர்கள் கோயிலுக்குக் கொடுக்கும் மண்பாண்டங்களுக்கு உரிய தொகைக்கும் தற்பொழுது கோயிலிலிருந்து வழங்கப்படுகிறது.[23]

### கோயிலும் வீரமணியமும்

கோயிலின் எல்லைக் காவலுக்காக ஏற்பட்டவர்கள் வீர மணியம் எனப்படுபவர்கள். இவர்கள் போர்வீரர்கள் போல் உடையணிந்து, கையில் கத்தி தாங்கி விழாக் காலங்களில் வருவது வழக்கமாக இருந்துள்ளது. இவர்களின் இப்பணிக்காக நிலம் மானியமாக வழங்கப்பட்டுள்ளது. தற்பொழுது இது பற்றிய விவரம் சரிவரத் தெரியவில்லை. இப்பணி நடைபெறவில்லை.[24]

### கோயிலும் ஓதுவாரும்

கோயிலின் நித்திய வழிபாட்டிலும், விழாக்காலங்களிலும் திருமுறை வாணர்கள் மானிய ஓதுவார்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் நித்திய வழிபாட்டில் காலை, நண்பகல், மாலை, இரவு ஆகிய காலங்களில் தேவாரம், திருப்புகழ், இசைப்பதையும் விழாக் காலங்களில் இறைவனின் திருவிளையாடல்களில் பங்கேற்பதையும் தொண்டாகக் கொண்டவர்கள். இவர்களுக்கு விழா முடிவில் பரிவட்ட மரியாதை

23. தகவல்: ரா. ராசாங்க வேளார் (வயது 41), விளாச்சேரி, கள ஆய்வு நாள்: 29-3-82.
24. தகவல்: சி. கழுத்தேவர் (வயது 55), திருப்பரங்குன்றம், கள ஆய்வு நாள்: 16-12-82.

செய்யப்பட்டுள்ளது. தற்பொழுது மானிய ஓதுவார்கள் யாரும் இங்கு இல்லை. ஊதியம் பெறும் ஓதுவார்களே இத்திருப்பணிகளைச் செய்து வருகின்றனர். ஊதியம் பெறும் ஓதுவார்களுக்குத் தற்பொழுது பரிவட்ட மரியாதை செய்யப்படுவதில்லை.[25]

**கோயிலும் தேவதாசியரும்**

கோயிலில் திருவிழாக் காலங்களில் சின்ன மேளம் எனப்படும் நட்டுவதாளம் இசைக்கப்பட்டு தேவதாசியர் நடனமாடி வரும் வழக்கம் இக்கோயிலில் நெடுங்காலமாக இருந்து வந்துள்ளது. கோயிற் பணியாளரான தேவரடியாருக்கு நிலம் மானியமாக விடப்பட்ட செய்தி இங்குள்ள பிற்காலப் பாண்டியர் கல்வெட்டில் (ARE 242 OF 1941) காணப்படுகிறது. (பிற்சேர்க்கை எண். 3). நாயக்க அரசர்கள் காலத்தில் கூத்திகள் எனப்பட்ட இவர்களுக்கு விடப்பட்ட ஊர் 'கூத்தியார்குண்டு' என வழங்கப்பட்டுள்ளது. பின்னர் காங்கிரசு ஆட்சிக்காலத்தில் தேவதாசி ஒழிப்புச் சட்டத்தால் இவ்வழக்கம் கோயில்களிலிருந்து ஒழிக்கப்பட்டு விட்டது.

**கோயிலும் அறக்கட்டளைகளும்**

கோயிலில் நடைபெற்று வரும் நித்திய வழிபாட்டில், திங்கள் தோறும் வரும் கார்த்திகை வழிபாட்டில், விழாக் காலங்களில் திருவீதியுலா வரும் சுவாமிக்குத் திருக்கண்கள் அமைத்து வழிபடும் வழிபாட்டில் சுவாமிக்கு நித்திய வழிபாட்டிற்குப் பூக்கொடுத்தல், குடம் கொடுத்தல், ஆகிய பல திருப்பணிகளுக்கு இங்கு அறக்கட்டளைகள் அமைக்கப்பட்டுள்ளன. இதில் திருமலை நாயக்கர் கட்டளையாகப் பல இடம் பெற்றுள்ளன. ஐராவதநல்லூர், வலையப்பட்டி, ஆதர்ஆலங்குளம், வலையங்குளம், எலியார்பட்டி, பெரிய ஆலங்குளம், நெடுமதுரை, சிக்கம்பட்டி ஆகிய கிராமங்கள் கோயில் திருப்பணிகளுக்காகத் திருமலை நாயக்கரால் ஏற்படுத்தப்பட்டுள்ள அறக் கட்டளைகளாகும். எம். ஏ. முத்தம்பல முதலியார் கட்டளையாகச் சிமநூத்து, ஆரப்பாளையம் ஆகிய இரு கிராமங்கள் விடப்பட்டுள்ளன. முத்தம்மாள் கட்டளையாக வில்லாபுரம், திருப்பரங்குன்றம் நிலங்கள் விடப்பட்டுள்ளன. தாண்டவராய

25. தகவல்: தி. சோ. விசுவநாத தேசிகர் (வயது 45), திருக்கோயில் ஓதுவார், கள ஆய்வு நாள்: 4-4-82.

பிள்ளை கட்டளையாகச் சாக்குடிக் கிராமம் விடப்பட்டுள்ளது.26 சிவகெங்கை சமஸ்தானக் கட்டளையாகப் புதுக்குளம், குரவக்குளம் கிராமங்கள் விடப்பட்டுள்ளன. இவை வைகாசி விசாகம், காலசந்தி, உச்சிக்காலக் கட்டளையாக விடப்பட்டுள்ளன. இராமநாதபுர சமஸ்தானக் கட்டளையாக நெடுங்குளம், பெரிய ஆலங்குளம், சின்ன ஆலங்குளம், சொக்க நேந்தல், தாமரைக்குளம், திம்மம்பட்டி ஆகிய கிராமங்கள் விடப்பட்டுள்ளன. இவை நித்தியப்படி உச்சிக்கால அபிடேகம், நிவேதனம், தீபாராதனைகளுக்காக விடப்பட்டுள்ளன. தரும சம்வர்த்தனி அம்மாள் கட்டளையாகக் கல்லணைக் கிராமம் விடப்பட்டுள்ளது. சந்திப்பு மண்டபக் கட்டளையாக மாடக்குளம் கிராமம் விடப்பட்டுள்ளது. வைரவன் செட்டியார் கட்டளையாக மதுரைக் கீழைச் சித்திரை வீதியில் இரு கடைகள் கட்டளையாக விடப்பட்டுள்ளன. குளமங்கலம் இளையநாத முதலியார் கட்டளையாக மாடக்குளம், கோச்சடை, குளமங்கலம் கிராம நிலங்கள் விடப்பட்டுள்ளன. மதுரை வெள்ளியம்பலம் ஆயிர வைசிய காசுக்காரச் செட்டியார்கள் ஒடுக்கம் வகையறா அறநிறுவனத்திலிருந்து சில கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தானகோனேரியப்ப முதலியார் கட்டளையாகத் திருக்காலசந்தி, கோயிலில் விளக்கு எரித்தல், யானைப் பராமரிப்பு ஆகிய செலவுகட்காகச் சில கட்டளைகள் விடப்பட்டுள்ளன. குடம் கட்டளையாகக் குன்னத்தூர்க் கிராமம் விடப்பட்டுள்ளது. பொன்னுசாமிப் பிள்ளை அன்னதானக் கட்டளையாகப் பங்குனித் திருவிழாவில் அன்னதானம் செய்யும் பொருட்டுச் சில கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. வேலுசேர்வை கார்த்திகைக் கட்டளையாக நிலையூர், வாலானேந்தல் கிராமங்கள் விடப்பட்டுள்ளன. நாகப்ப செட்டியார் கட்டளையாக படமாத்தூர் கிராமம் நித்தியப்படி விழாப்பூசை, பள்ளியறை அபிடேக ஆராதனைகளுக்காக விடப்பட்டுள்ளது. டி. முத்தம்பல முதலியார் கட்டளையாக கே. புளியங்குளம் கிராமம் விடப்பட்டுள்ளது. நாகப்ப செட்டியார் கட்டளை, சிவகெங்கைக் கட்டளையாக இரு நந்தவனங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் திருப்பரங்குன்றத்தில் தண்ணீர்ப்பந்தல், அன்னம்பாலிப்பு, கிருத்திகை நாட்களில் பட்டர் அன்னம்பாலிப்பு ஆகியவற்றை ஏற்படுத்தி

26. சொத்துப் பதிவேடு, மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.

யுள்ளார். இன்னும் சிலர் பூக்கட்டளையாக ஆயிரம் ரூபாய் களைக் கட்டளையாக கொடுத்துள்ளனர். கானூர், கல்லூரணி, தெக்கூர் பெரியகோட்டை, சிறுகுடி, அன்னியேந்தல் ஆகிய ஐந்து ஊர் மக்கள் இணைந்து கானூர் மடம் என்ற ஒன்றை நிறுவி அன்னதானப் பணி செய்து வருகிறார்கள். வடலூர் வள்ளலார் மடம் என்ற ஒன்றும் இங்குக் கார்த்திகை அன்ன தானப்பணி செய்து வருகிறது. மதுரை எல்லப்பக் கோனார் (இராமாயணச் சாவடி யாதவர் வகுப்பைச் சேர்ந்தவர்) மனைவி விளங்காயி அம்மாள் (வயது 60) என்பவர் தம் சொந்த பந்தங்களை விட்டு வந்து திருப்பரங்குன்றத்தில் தங்கியிருந்து மாதம் முழுமையும் ஊர் ஊராகச் சென்று பிச்சையேற்று வந்து கார்த்திகை அன்னதானப்பணி செய்து வருகிறார். இவர் வாரந் தோறும் சந்நிதித் தெருவில் உள்ள சொக்கநாதர் கோயிலில் தேவாரம், திருப்புகழ் பஜனைகள் செய்து வருகிறார்.[27]

ஸ்ரீ காசிவாசி சி. செந்தில்நாதையர் 1902—ஆம் ஆண்டில் சந்நிதித் தெருவில் 'வைதீக சுத்தாத்துவித சைவ சித்தாந்த வித்தியாசாலை' என்ற ஒன்றை நிறுவி, அதில் மாணாக்கர் களுக்கு வடமொழி, தமிழ், ஆங்கில மொழிகளைக் கற்றுக் கொடுப்பதை ஒரு திருப்பணியாகச் செய்து வந்துள்ளார்.[28]

### சத்திரம், மடம், மண்டபங்கள்

இங்கு இக்கோயில் வழிபாட்டில், திருவிழாக்களில் தம்மை யும் ஈடுபடுத்திக் கொள்ள விரும்பிய மக்கள் பலர் ஒரு குலத்தின ராகவும், ஒரு ஊரினராகவும் சேர்ந்து சத்திரம், மண்டபங்கள் ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். வாணியர், சேணியர், நாயக் கர்கள், காசுக்காரச் செட்டியார்கள், ரெட்டியார்கள், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள், மஞ்சப்புத்தூர்ச் செட்டியார்கள், ஆயிரவைசிய மகாசன(சோழியர்)ங்கள், சௌராட்டிரர்கள், நாடார்கள், அகம்படியார், மறவர்கள், சேர்வை, துளுவ வேளா ளர்கள், முதலியார்கள், அய்யர்கள், காராளர், தெலுங்குச்

---

27. சொத்துப் பதிவேடு, மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம்.பக். 103-105.
    ஆ. குமரகுருபரன் இருபத்திமூன்றாம் ஆண்டு மலர் (15-1-72), ப. 18.
    இ. தகவல்: எஸ். விளங்காயி அம்மாள் (வயது 60), திருப்பரங்குன்றம், கள ஆய்வு: நாள்: 19-8-82,
28. சி. கணேசையர், கந்தபுராண நவநீதம், ப. 16.

செட்டியார்கள், இசை வேளாளர், ஒக்கலிகர், கவுண்டர், பிள்ளைமார், ஆசாரிமார், அம்பலம், தேவர்கள், பணிக்கர், கோமுட்டிச் செட்டியார், தேவாங்கர், ஏழூர்சாலியர், மலை வேடன் சமூகத்தார் (பிற்சேர்க்கை எண். 5) ஆகியோருக்கு இங்குச் சத்திரம், மடம், மண்டபங்கள் உள்ளன. இவை தவிர தனிப்பட்ட சிலரும் தமக்கெனவும், தம் குலத்தினர்க்கெனவும் தம்மூரினர்க்கெனவும் மண்டபங்கள் அமைத்துள்ளனர். அவனியா புரம், பழங்காநத்தம், திருப்பரங்குன்றம், மதுரையைச் சேர்ந்த பலர் வைகாசி விசாகம் மொட்டையரசுத் திருவிழாவின் போது முருகன் மொட்டையரசு செல்லும் வழியில் வந்து திருக்கண் இறங்குவதற்கெனப் பதினேழு மண்டபங்களை ஏற்படுத்தி யுள்ளனர். இம்மண்டபங்கள் அனைத்தும் மொட்டையரசு செல்லும் முருகனை வரவேற்பதற்காகவும், வரும் அடியவர் களுக்கு அன்னதானம் செய்வதற்கெனவுமே ஏற்பட்டுள்ளன. இம்மண்டபங்கள் வேறு எதற்கும் பயன்படுத்தப்படவில்லை. இதில் பெரும்பாலான மண்டபங்கள் அவனியாபுரத்தைச் சேர்ந்த மக்களுடையனவாகும்.

சத்திரங்கள் தொடக்க காலத்தில் வழிப் போக்கர்கள், கோயிலுக்கு வரும் அடியவர்கள் தங்குவதற்காகவும், திருவிழாக் காலங்களில் அன்னதானம் செய்வதற்காகவும் ஏற்பட்டுள்ளன. பின்னர் இவை திருவிழாக் காலங்களில் தம் குடும்பத்தினர் தம் சாதியினர் தங்குவதற்காக என்ற நிலைக்கு மாறி விட்டன.

மடங்கள் விநாயகர், முருகன் போன்ற சுவாமிகளை உடையதாகவும், அடியவர்கள் தங்கி இளைப்பாறும் இடங் களாகவும், அன்னதானப்பணி நடக்கும் இடங்களாகவும் இருந்துள்ளன. சில சைவ ஆதீனங்களின் மடங்கள், அந்தந்த ஆதீனத் தலைவர்கள் வரும்பொழுது தங்குவதற்காகவும், ஆதீனங்களில் நித்திய பூசைக் கட்டளை, அன்னதானப்பணி, திருவிழாக்கள் ஆகியவற்றை இருந்து மேற்பார்வையிடுவதற் காகவும் திருவிழாக் காலங்களில் சுவாமி திருவீதியுலா வரும் பொழுது மடத்திற்கு வரவேண்டும் என்பதற்காகவும் அமைக் கப்பட்டுள்ளது.

மண்டபங்கள் தொடக்க காலத்தில் அறச்சிந்தனையோடு அடியவர்களுக்கும், ஆண்டவனுக்கும் திருத்தொண்டு செய்யும் நோக்கத்தில் ஏற்பட்டுள்ளன. பின்னர் அடியவர்கள் என்னும் பொது நோக்கிலிருந்து சாதியினர் என்னும் வட்டத்திற்குள் ளாகவும், இன்னும் சிறிய வட்டமாகக் குடும்பத்தினர்க் கென்றும் மாறியுள்ளன. திருவிழாக் காலங்களில் தம் சாதி-

யார்க்கு என்றும், தம் பகுதியினர் என்றும், தம் ஊரினர்க் கென்றும் திருக்கண்கள் (மண்டகப்படி) ஏற்படுத்திக்கொண்டு அவற்றிற்குத் திருவீதியுலா வரும் தெய்வத்தை வரவழைத்துக் கொள்ளப் பயன்படுத்தியுள்ளனர். தெய்வயானை திருமணம் திருப்பரங்குன்றில் நடந்ததாகவும், இங்கு வந்து திருமணம் செய்துகொண்டால் மிகவும் நல்லது என்பதற்காகவும் சில மண்டபங்கள் தம் ஊர் மக்கள் அல்லது தம் சாதி மக்கள் திருமணம் செய்து கொள்வதற்கெனப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சில மண்டபங்கள் எல்லாச் சாதியினர்க்கும் திருமண மண்டபமாக வாடகைக்கு விடப்பட்டுப் பணம் வசூலிக்கப் பயன் படுகின்றன. இப்பணம் சில மண்டபங்களில் அவ்வூர் மக்களின் திருவிழாவிற்காகப் பயன்படுத்தப்படுகிறது. சில மண்டபங்கள் சொந்தத்திற்காகப் பயன்படுத்தப்படுகின்றன. திருக்கலியாண மண்டபங்களாக அமைப்பதால், ஆண்டிற்குப் பெருத்த வருவாய் இருப்பதால் பல மண்டபங்கள் 'கலியாண மகால்' என்ற பெயரில் மாற்றப்பட்டு விட்டன. தேவஸ்தானமும் இரண்டு கலியாண மண்டபங்களைக் கட்டி (வள்ளி, தேவசேனா மண்டபம்) கலியாணம், முடிக்காணிக்கை இவற்றிற்குப் பயன் படுத்துகிறது.

கால்நடையாக வரும் அடியவர்கள் தங்குவதற்காக ஏற் பட்ட மண்டபங்கள், தற்பொழுது வெளியூரிலிருந்து வரும் அடியவர்கள், சுற்றுலாப் பயணிகள் ஆகியவர்கள் தங்கு வதற்கு வாடகைக்கு விடப்பட்டுப் பணம் வசூலிக்கப்படுகிறது. சில மண்டபங்கள் ஆண்டு முழுமைக்கும் கடைகள், உணவு விடுதிகள், பள்ளிகள், தையற்பள்ளிகள் போன்றவற்றிற்கு நிரந்தரமான வாடகைக்கு விடப்பட்டுத் திருவிழாக்காலங்களில் (பங்குனிப் பெருந்திருவிழாவில்) மட்டும் கடைகளைத் தற் காலிகமாக எடுத்துவிட்டு, திருவிழாவிற்குப் பயன்படுத்தப் பட்டு, மீண்டும் அவை கடைகளாக, உணவு விடுதிகளாக மாற்றப்படுகின்றன.

சில மண்டபங்கள் திருப்பரங்குன்றத்திற்கு அருகேயுள்ள பஞ்சாலைகளுக்குப் பஞ்சு மூட்டை அடுக்கி வைக்கும் அறை களாக மாற்றப்பட்டு ஆண்டு முழுமைக்குமாக வாடகைக்கு விடப்பட்டுள்ளன. இவற்றைத் திருவிழாவிற்குக்கூடப் பயன் படுத்துவதில்லை. சில மண்டபங்கள் மாற்றியமைக்கப்பட்டுத் தனியார்களின் வீடாகவே மாறிவிட்டன. சில மண்டபங்கள் நல்ல பெரிய கட்டிடங்களாக மாற்றியமைக்கப்பட்டுப் பள்ளி

கள், வங்கிகள், உணவு விடுதிகள் அஞ்சல், அலுவலகங்கள் போன்றவற்றிற்கு விடப்பட்டுள்ளன.

சில மண்டபங்கள் பேணிக் காப்பாரின்றிப் பிச்சைக்காரர்கள், மற்றும் ஆடு மாடுகள் போன்ற விலங்குகள் தங்குமிடமாகவும் உள்ளன. சில மண்டபங்கள் யார் காலத்தில் எந்த நோக்கத்திற்காக ஏற்பட்டதென்பதே தெரியவில்லை. தற்பொழுது வேறு யார் பெயரிலோ, யாரிடமோ இருக்கின்றன. இன்னும் சில மண்டபங்கள் கள்ளுக்கடை, சாராயக்கடை வைப்பதற்குப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

சில மண்டபங்கள் திருவிழாக் காலங்களில் தண்ணீர்ப் பந்தல்கள், வைப்பதற்காக ஏற்படுத்தப்பட்டு, அவை தற்பொழுதும் அத்தொண்டைச் செய்து வருகின்றன. சில மண்டபங்கள் அரசர்கள் காலத்தில் கோயில் ஊதியம் செய்பவர்களுக்குக் கட்டிக் கொடுக்கப்பட்டுத் தற்பொழுது அவை வேறு யார் வசமோ உள்ளன. சில தனிப்பட்ட செல்வர்கள், தங்களுக்கெனத் தனிப்பட்ட முறையிலும் மண்டபங்கள் ஏற்படுத்தியுள்ளார். சிலர் கோயிலில் சில தனியான பூசை அறக்கட்டளைகளை ஏற்படுத்தி வைத்து அவற்றைப் பார்க்க, பராமரிக்க ஆட்களை நியமித்து, அதற்கெனத் தனி மண்டபங்களையும் அமைத்துள்ளனர்.29

29. ஆய்வாளர் இங்குள்ள மண்டபங்களில் (நேரில்) பேட்டி கண்டு தொகுத்த செய்திகள்.

# குன்றைச் சூழ்ந்துள்ள கோயில்கள்

திருப்பரங்குன்றில் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் பாண்டியர்களால் எடுக்கப்பட்ட குன்றத்து குடைவரைக் கோயிலைச் சுற்றியும், குன்றின் மேலும் சிறிய கோயில்கள் சில உள்ளன. இவற்றில் சில அரசர்களால் கட்டப்பட்டவை; சில நாட்டுப்புற மக்கள் தம்முடைய வழிபடும் தெய்வங்களுக்காகக் கட்டியவை. இக்கோயில்கள் பற்றி இவ்வியலில் விளக்கப்படுகிறது.

இக்குன்றைச் சுற்றி சொக்கநாதர் கோயில் குருநாதசுவாமி கோயில், வெயிலுகந்த அம்மன் கோயில், பழனியாண்டவர் கோயில், ஆறுமுக நயினார் கோயில், பாம்பலம்மன் கோயில், கன்னிமார் கோயில் ஆகிய ஏழு கோயில்களும், குன்றின் மேல் காசி விசுவநாதர் கோயில் ஒன்றும், குன்றின் தென் பக்கத்தில் தென்பரங்குன்றம் என்ற பகுதியில் உடையாண்டவர் கோயில் ஒன்றும், குன்றின் உச்சியில் சிக்கந்தர் தர்கா என்னும் முகமதியர் கோயில் ஒன்றும் ஆகப் பத்துக் கோயில்கள் உள்ளன. இதில் கன்னிமார் கோயில், தென்பரங்குன்றிலுள்ள உமையாண்டவர் கோயில், சிக்கந்தர் தர்கா ஆகிய மூன்றையும் தவிர மற்றைய ஏழு கோயில்களும் மதுரை மீனாட்சியம்மன் கோயிலைச் சார்ந்த துணைக் கோயில்களாக ஆட்சிமுறையில் இருந்து வருகின்றன. கன்னிமார் கோயில் என்னும் இடம் குன்றின் தென் கிழக்குப் பகுதியில் மரத்தினடியில் கன்னிமார் பெண்கள் எழுவரை ஒரே கல்லில் வைத்து நாட்டுப்புற மக்கள் வழிபடும் இடமாக உள்ளது. தென்பரங்குன்றிலுள்ள உமையாண்டவர் கோயில் என்னும் குடைவரைக் கோயில் வழிபாடற்ற நிலையில் மத்திய அரசின் தொல் பொருள் ஆய்வுத் துறை பாதுகாப்பில் உள்ளது. இதுபற்றி வரலாற்றுப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. குன்றின் உச்சியிலுள்ள சிக்கந்தர் தர்கா என்னும் முகமதியர் கோயில் முகமதியர்கள் பொறுப்பில் உள்ளது.

**சொக்கநாதர் கோயில்**

பதினாறுகால் மண்டபத்திலிருந்து குடைவரைக் கோயிலுக்குச் செல்லும் வழியில் கிழக்கு நோக்கி இக்கோயில் அமைந்துள்ளது. இதன் முன்புறம் கோபுரங்கள் இன்றி ஒரு பெரிய மண்டபம் போன்று இது காட்சி தருகிறது. திருப்பரங்குன்றத்துக் கோயில் கோபுரத்தில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டின் மூலம் கி. பி. 1583-இல் கச்சிப் பெருஞ்செல்வன் என்ற சிறப்புப் பெயர் பெற்ற கிருஷ்ணவீரப்ப நாயக்கரால் கோபுரத்திற்கு அருகில் விசுவநாத நாயக்கரின் நினைவாக ஒரு கல்மடம் கட்டப்பட்டு, அதில் விநாயகரின் உருவம் ஏற்படுத்தப்பட்டது என்ற குறிப்புக் காணப்படுகிறது.1 கிருஷ்ண வீரப்ப நாயக்கரால் கட்டப்பட்ட கல்மடம் தான் இன்று சொக்கநாதர் கோயில் என்ற பெயரில் உள்ளது என எண்ண வேண்டியுள்ளது. இங்குள்ள தூண் சிற்பங்களில் பல்வேறு தோற்றங்களில் விநாயகர் உருவங்கள் காணப்படுகின்றன. ஒரு விநாயகர் வணங்கும் கோலத்திலும், ஒருவர் குள்ளபூதத்தின் மேல் நர்த்தனம் செய்யும் கோலத்திலும், ஒருவர் வலது கையில் தண்டம் வைத்துள்ள கோலத்திலும் மற்ற மூன்று விநாயகர்கள் கைகளைத் தலைக்கு மேல் தூக்கிய கோலத்திலும் உள்ளனர். இங்கு நான்முகன், முருகன், இந்திரன், திருமால் ஆகிய சிற்பங்களும் உள்ளன. சேரமான் பெருமாள் நாயனாரின் சிற்பம் ஒன்றும் உள்ளது. இங்குத் தனியம்மன் கோயில் ஒன்றும், இலிங்கத்திற்கான கருவறையொன்றும் உள்ளன. இம்மூர்த்தங்களை மீனாட்சி, சொக்கநாதர் என்று கூறுகிறார்கள். இக்கோயில் மண்டபத்தில் சேரமான் பெருமாள் நாயனார் சிலை இருப்பதால், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான் பெருமான் நாயனாரும் சேர்ந்து வந்து வழிபட்ட கோயில் இதுவேயாகும் என்பர்.2 இக்கருத்தை மெய்ப்பிக்கின்ற சான்றுகள் எவையும் இங்கு இல்லை. இக்கோயிலில் திருவிழாக்கள் ஒன்றும் இல்லை. இங்கு ஆண்டுதோறும் வெள்ளை மேல் வெள்ளையாக வண்ணம் தீட்டிக்கொண்டே வருவதால் இங்குள்ள சிற்பங்களின் கலைச்சிறப்பைக் காண இயலவில்லை. முருகனை வழிபடச் செல்வோர் முதற்கண் இங்கே வழிபட்டுச் செல்ல வேண்டும் என்பர்.3

---

1. ARE 264 of 1942.
2. தகவல்: சொ. சுந்தரபட்டர் (மூன்றாவது ஸ்தானீகம்) கள ஆய்வு நாள்: 12-5-81.
3. தி. இ. சுந்தரமூர்த்தி, திருப்பரங்குன்றம் தலவரலாறு, ப. 13.

**பழனியாண்டவர் கோயில்**

குன்றின் வடமேற்குப் பகுதியில், காசி விசுவநாதர் கோயிலுக்குச் செல்லும் வழியில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின் கருவறை மேற்கு நோக்கி அமைந்துள்ளது. கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் என்ற மூன்று பிரிவுகளைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயில் அர்த்த மண்டபத் தூண் ஒன்றில் திருமலை நாயக்கர் தம் தேவியருடன் நித்திய அஞ்சலி செய்யும் கோலத்தில் சிலை வடிக்கப்பட்டுள்ளது. இக்கோயில் திருமலைநாயக்கர் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டிருக்கக் கூடும் என எண்ண வேண்டியுள்ளது. இக்கோயிலின் மண்டபங்கள், தூண்கள் அனைத்தும் நாயக்கர் கலைப்பாணியைக் கொண்டு விளங்குகின்றன. இங்குப் பழனியாண்டவரின் நின்ற கோலம் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. இக்கோயிலுக்கும், குடைவரைக் கோயிலுக்கும் முன்பு மலையையொட்டியே பாதை இருந்துள்ளது. அது காலப் போக்கில் சீர்கேடு அடைந்து விட்டதால், குடைவரைக் கோயிலின் இரத வீதியே இதற்குப் பாதையாய் அமைந்துள்ளது. இக்கோயிலின் பின்புறம் மலைச்சரிவில் செஞ்சி நாயக்கரின் கல்வெட்டு ஒன்றுள்ளது. கோயிலின் தென்புறத்தில் சிறிய சுனையொன்றும் மகாவீரர், பார்சுவநாதர், இயக்கன், இயக்கி சிலைகள் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. இவை கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தவை யென்பர்.[4] இக்கோயிலுக்கென தனியாகத் திருவிழாக்கள் இல்லை.

**ஆறுமுகநயினார் கோயில்**

குடைவரைக் கோயிலுக்குக் கிழக்கே, ஒரு கிலோமீட்டர் தொலைவில் கிழக்கு நோக்கி இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் சரவணப் பொய்கையின் எதிரே கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் என்ற மூன்று பிரிவுகளைக் கொண்டு அமைந்துள்ளது. இங்குள்ள மூலவர் ஆறுமுகங்களையும் பன்னிரு கரங்களையும் கொண்டு, நின்ற கோலமாக அமைக்கப்பட்டுள்ளார். குடைவரைக் கோயிலின் திருவிழாக்களின் போது பெரிய கோயிலின் முருகன் தெய்வயானை உத்சவமூர்த்திகள் இங்கு ஒருநாள் திருக்கண் வைத்துத் திருவீதியுலா வருகிறார்கள். இக்கோயிலுக்கு எதிரேயமைந்துள்ள சரவணப் பொய்கைத் தீர்த்தம் சுமார் நான்கு ஏக்கர் பரப்

4. தகவல்: ஒய். சுப்பராயலு, கள ஆய்வு நாள்: 30-1-82.

பளவுடையது. புனிதமாகக் கருதப்படும் இத்தீர்த்தம் உரிய பாதுகாப்பு இன்மையால் தூய்மையற்றுக் காணப்படுகிறது. இதையொட்டியமைந்துள்ள மலைப்பகுதியை நக்கீரர் இருந்து சிவபூசை செய்த 'பஞ்சாட்சரப்பாறை' என்றும், அதையடுத்துள்ள ஒரு சிறிய குகையை 'நக்கீரர் குகை' என்றும் பெயரிட்டுக் கதைகள் கூறி வழங்குகின்றனர். இக்கோயிலுக்கெனத் தனியாகத் திருவிழாக்கள் இல்லை.

**காசிவிசுவநாதர் கோயில்**

குன்றின் உச்சியில் தென்மேற்குத் திசையில் இக்கோயில் அமைந்துள்ளது. குன்றின் அடிவாரத்தில் வடமேற்கு மூலையில் பழனியாண்டவர் கோயிலுக்கு எதிரேயமைந்துள்ள பாதை இக்கோயிலுக்கு வரும் மலைப் பாதையாக அமைந்துள்ளது. இக்கோயிலுக்கு வரும் பாதையும், சிக்கந்தர் தர்காவிற்குச் செல்லும் பாதையும் ஒரு குறிப்பிட்ட எல்லை வரை ஒன்றாகவே அமைந்துள்ளன. இக்கோயிலுக்கு வரும் வழியில் பாதி மலைத்தொலைவில் 'தீபத்தூண்' ஒன்றுள்ளது. ''இந்தத் தூண் நாயக்கர் காலத்தது. நாயக்கர் காலத்துக் கல்வெட்டும் தூணிலேயே எழுதப்பட்டுள்ளது. கல்வெட்டுக்கு மேல் அனுமன் ஒரு கையை ஓங்கிக் கொண்டு முகத்தை இடதுபக்கம் திருப்பிக் கொண்டிருப்பதாகச் சிற்பமும் உள்ளது. இத்தீபத்தூண் ஆண்டவனுடைய தலையின் உச்சியில் நாட்டப்பட்டிருப்பதாகவும், இதில் புண்ணியவான்கள் அனைவரும் விளக்கேற்றலாம் என்றும் அக்கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.[5] இத்தீபத் தூணில் திருக்கார்த்திகையன்று தேவஸ்தானத்திலிருந்து பெரிய தீபம் ஒன்று ஏற்றி வைக்கப்படுகிறது. பிற கார்த்திகை தோறும் மக்கள் விளக்கேற்றி வருகிறார்கள். கட்டிடக் கோயில்களில் மூலவர் கருவறையின் உச்சியில் கருவறை விமானம் அமைக்கப்பட்டிருக்கும். இது குடைவரைக் கோயில் ஆனதால் மூலவர் கருவறையின் நேர் மேற் பகுதியில் தீபத்தூண் அமைந்திருக்க வேண்டும் என எண்ண வேண்டியுள்ளது. இத்தீபத்தூணைத் தாண்டிக் குன்றின் உச்சியில் தென்மேற்காக வளைந்து சென்றால் காசி விசுவநாதர் கோயிலை அடையலாம். இக்கோயிலை அடைவதற்கு முன்னுள்ள மலைப்பரப்பு நன்கு விரிந்து சமதரை போல் காணப்படுகிறது. இங்கு முற்காலத்தில் மரங்கள் நிரம்பிய சோலைகள் இருந்திருக்க வேண்டும் என்பதற்கு அடையாளமாகத் தற்பொழுது நிறைய மரங்களும், ஆங்காங்கே நீர்

5. செ. போசு, திருப்பரங்குன்றம், ப. 129.

தேங்கிய சுனைகளும் காணப்படுகின்றன. பல இடங்களில் 'நாரத்தை' என்னும் புல்பயிர்கள் மண்டிக் காணப்படுகின்றன. இவ்விடத்தை மக்கள் 'நெல்லித் தோப்பு' என்று அழைக்கிறார்கள். இங்குச் சில முகமதியர்களின் சமாதி மேடைகள் உள்ளன, இவற்றைத் தாண்டிச் சென்றால் காசி விசுவநாதர் கோயில் காணப்படுகிறது. காசி விசுவநாதர் பெயரால் இப்பொழுது வழங்கும் கோயிலுள்ள மலையின் உச்சித் தென் முகப் பகுதியில் அமைந்த பெரும்பாழிச் சுனையாகக் காட்சி தருகின்றது. இச்சுனையில் சிறந்த பச்சிலைகளும், வெள்ளை நிறப் பூக்களும், கொடிகளும் வளர்ந்துள்ளன. அப்பாழிச் சுனைக்கு நடுப்பகுதியில் நிமிர்ந்துள்ள பாறை முகப்பில் சமணத் தீர்த்தங்கரர்களின் சிற்பங்கள் இரண்டு உள்ளன. தீர்த்தங்கரர்கள் நின்ற கோலத்தில் விளங்கத் தேவர்களும், இயக்கிகளும் சூழ்ந்து நின்று வணங்கும் பாங்கில் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. இதில் வலப்புறம் இருப்பது, ஐந்து தலைப் பாம்பு தலைக்கு மேல் விரித்து நிற்கும் பார்சுவநாதருடைய வடிவமாகும். இதற்குரிய இலச்சினையும் அப்பகுதியிலேயே சிறிய வடிவில் செதுக்கப்பட்டுள்ளது. இடப்புறம் உள்ள சிற்பம் மகாவீர வர்த்தமானருடையதாகும். இச்சிற்பங்களுக்கு மேற்பகுதியில் பிராமி எழுத்துக்களால் ஆன கல்வெட்டு உள்ளது.

இச்சுனையைத் தாண்டி உள்ளே மேற்காகச் சென்றால் காசி விசுவநாதர் கோயில் என்னும் சிறிய கோயிலும், அதனுள் காசிச்சுனை என்னும் சுனையொன்றும், உள்ளன. இக்கோயிலில் காசி விசுவநாதர், விசாலாட்சி, எதிரே நந்தி, அருகே விநாயகர் உருவங்கள் உள்ளன. இக்கோயிலுக்கு எதிரேயமைந்துள்ள சிறிய கோயிலில் முருகன் (நின்ற கோலம்) நக்கீரர், விநாயகர் உருவங்கள் உள்ளன. இக்கோயிலை ஒட்டியமைந்துள்ள பெரும் பாழியின் (காசிச்சுனை) முகப்புப் பாறையில் மாடங்கள் போன்ற குடைவும், விமான அமைப்பும் பொருந்திய நிலையில் முறையே சிவலிங்க வடிவமும், அதன் இடப்புறம் பைரவர், அடியில் சண்டேசுவரருடன் கூடிய நந்தி, வலப்புறம் அம்பிகை, முருகன், விநாயகர் உருவங்களும் அமைக்கப்பட்டுள்ளன. அதைத் தொடர்ந்து சிவபெருமானின் அமர்ந்த கோலமும், அருகே நான்கு சிவலிங்க வடிவங்களும் அமைக்கப்பட்டுள்ளன. இப்பகுதியின் கீழ்ப்புறத்தில் இவற்றை விடப் பழமையான ஐந்து சிற்பங்கள் பிற்காலத்தில் வடிவம் தெரியாத அளவிற்கும் சிதைந்து காணப்படுகின்றன. இச்சுனை மிகவும் ஆழமுடையது. இங்குத் தேளி மீன்கள் என்னும் பலவண்ண மீன்கள் இருந்ததாகவும், இச்சுனை நீரில் நீந்திச் சென்று இப்பாறைச் சிற்பங்

களுக்குப் பூசாரி பூசை நிகழ்த்தியதாகவும் கூறுவர்.[6] இப்பெரும் பாறையும், பாழியும் முன்பு சமணர்களுக்குரியதாக இருந்து வந்துள்ளன. பின்னர்ச் சமய மாற்றத்தின் காரணமாக இங்குள்ள சமணச் சிற்பங்கள் பெரும்பாலானவை சிதைக்கப் பட்டு, அவற்றுக்கு அருகிலேயே சிவன், அம்மன், இலிங்கம் ஆகியவற்றின் உருவங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இச்சுனை யைக் காசிச்சுனை என்றும், இது முருகனால் ஏற்படுத்தப் பட்டது என்றும் கூறுகின்றனர். கீழேயுள்ள குடைவரைக் கோயிலில் உள்ள முருகன் திருக்கைவேல் ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் இவ்வூர் மக்களால் இங்குக் கொண்டு வரப் பட்டு இச்சுனையில் நீராட்டப் பெறுகிறது. இது வேல் திருவிழா (மலைமேல் குமரன்) என்று கூறப்படுகிறது.

குன்றின் உச்சியில் உள்ள முசுலிம்களின் தர்காவிற்கு இச்சுனை நீரே எடுத்துச் செல்லப்படுகிறது. மதுரை மீனாட்சி யம்மன் கோயில் நிருவாக அதிகாரியாக சி. எஸ். தீனதயாளு என்பவர் இருந்த காலத்தில் மதுரை, மீனாட்சியம்மன் கோயிலி லிருந்து இக்கோயிலுக்குக் காசி விசுவநாதர், அம்மன், நந்தி, முருகன், விநாயகர் சிலைகள் கொண்டு வரப்பட்டு இக்கோயில் திருத்தியமைக்கப்பட்டது. இங்குள்ள நக்கீரர் சிலையைத் திருப் பரங்குன்றத்திலுள்ள கானாடுகாத்தான் இராம. மு. இராம நாதன் செட்டியார் என்பவர் கொடுத்தார். சி. எஸ். தீனதயாளு என்பவரின் காலத்தில் இக்கோயில் கும்பாபிடேகம் செய்யப் பட்டு, ஒழுங்கான பூசை, விளக்கு, காலம் அனைத்தும் ஏற்படுத் தப்பட்டன.[7]

## பாம்பலம்மன் கோயில்

இஃது இங்கு மேலரத வீதியில் அமைந்துள்ளது. இஃது ஒற்றைக் கல்லால் ஆகிய சிறு கோயில். இதைப் பாம்பாளம்மன் என்றும் கூறுகிறார்கள். இங்கு நாகதேவதை இருப்பதாகக் கூறுகிறார்கள். ''சான்றோர் செய்யுட்களிலே நடுகல் வருணிக் கப்படுமிடத்துச் சில சமயங்களில் கற்களிடையே பாம்பு குடி கொள்வதாகக் கூறப்படும். இது ஆழ்ந்து சிந்திக்கற்பாலது. பழங்காலத்திலிருந்தே நாகவழிபாட்டிலும் ஈடுபட்டு வந்த திராவிடர் மத்தியில் இத்தகைய நம்பிக்கைகள் வழக்கிலிருந்தன.

6. B.S. Baliga, Madras District Gazeeteer, P. 405
7. தகவல்: எஸ். பாலு, பேஷ்கார், மீனாட்சியம்மன் கோயில், கள ஆய்வு நாள்: 27-11-82.

'தாழ்ந்த மக்கள்' தாழ்ந்த தெய்வங்களை வழிபட்டனர். அதே சமயத்தில் உயர்ந்தோர் 'உயர்ந்த' தெய்வங்களை வழிபடலாயினர்.[8] இப்பாம்பு வழிபாடு பற்றி இங்குச் சில நாட்டுப்புறப் பாடல்கள் (பிற்சேர்க்கை எண். 2) வழங்குகின்றன. இப்பாடல்கள் வேளாண்குடி மக்களான பள்ளர்களின் வழிபடு தெய்வமாக நாகர் விளங்கியதைக் காட்டுகின்றன. வேளாண்மை செய்யும் மக்கள் பெரிதும் இதனால் பாதிக்கப்படுவதால் அச்சத்தின் காரணமாக இவ்வழிபாடு பெரிதும் வளர்ந்து வந்துள்ளதைக் காண முடிகிறது. அம்மன் காப்பு, மஞ்சள் காப்பு ஆற்றுத் தண்ணீர், குளத்துத் தண்ணீர், கோழி பலியிடுதல் ஆகியவை இவ்வழிபாட்டில் குறிப்பிடத்தக்க கூறுகளாக அமைந்துள்ளன. இங்கு விசக்கடியுண்டவர்கள் இக்கோயிலை வலம் வந்து தீர்த்தம் குடித்து வரும் வழக்கம் இன்றும் உள்ளது. பழந்தமிழ் மக்களின் வழிபாடான நாகவழிபாடு பிற்காலத்தில் பெருந் தெய்வ வழிபாட்டுடன் இணைந்த பொழுது, கோயில்களின் திருக்குளங்களில், ஆல், அரசு, வேம்பு ஆகிய மரங்களின் அடியிலும், கணபதி சிலைகளைச் சுற்றிலும் அமைந்து ஒரு காவல் தெய்வமாகக் கருதப்பட்டுள்ளது. இந்த இருநிலைகளையும் இங்குக் காண முடிகிறது.

**கன்னிமார் கோயில்**

மலையின் தெற்குப் பக்கத்தில் மரத்தினடியில் கன்னிமார் கோயில் என்று ஏழு கன்னியர்கள் உள்ள ஒரு கற்பலகை உளது. (நிழற்படம் காண்க) அஃது இன்று வழிபாட்டில் உள்ளது. இவ்வழிபாடு பழங்காலத்தில் சிறப்புப் பெற்றிருந்து இடைக் காலத்தில் வழக்கொழிந்தது. இப்பொழுது இருபது ஆண்டுகளாக இங்கு மீண்டும் புத்துயிர் பெற்றுப் புதுவிழாக்களுடன் நடைபெற்று வருகிறது. இக்கோயிலுக்கு ஞாயிற்றுக்கிழமை தோறும் மக்கள் பெருந்திரளுடன் வருகிறார்கள். பொங்கல் இடுவது, குறிகேட்பது (நிழற்படம் காண்க), வழிபாடு முடிந்து அனைவரும் கூடியிருந்து உண்டு பின்னர்த் திரும்புவது வழக்கமாக உள்ளது. ஒவ்வோர் ஆண்டும் வைகாசிமாதம் பௌர்ணமியன்று பாற்குடம், தீச்சட்டி எடுப்பதும், ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கன்று காவடி எடுப்பதும் இங்கு நடைபெற்று வருகின்றன. இங்குப் பலியிடும் வழக்கம் இல்லை. எலுமிச்சம் பழத்தை அரிந்து, குங்குமம் தோய்த்து எறியும் வழக்கமும், வாழைப் பழத்தைச் சூறையிடும் வழக்கமும் உள்ளன.

8. க. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும் ப. 62.

"'அன்னை' அல்லது 'பேரன்னை' பிற்காலத்திலே தோன்றிய சக்தியைத் தோற்றுவித்த மூலப் பொருளின் (பிரகிருதி) முதலுருவாகும். அவளுடைய பிரதிநிதிகளே கிராம தேவதைகள் அல்லது கிராமச் சிறு பெண் தெய்வங்கள். அவற்றின் பெயர்களும் தல சரிதைகளும் கணக்கிடலங்கா. எனினும் அவை யாவும் ஒரு பொருளையே குறிக்கின்றன. அந்த மூலசக்தியே வளத்தின் தெய்வம். இப்பெண் தெய்வங்கள் யாவும் ஆரிருக்கு முற்பட்ட, ஆரியரல்லாத இம்மக்களிடையே செல்வாக்குடையனவாயிருந்தன என்பதில் ஐயமில்லை. ஆரியருக்கு முற்பட்டு வாழ்ந்த பூர்வீகக் குடிமக்கள் சிலர், இந்து சமயத்தை ஏற்கவில்லை. அத்தகைய மக்களிடையே பெண் தெய்வ (அன்னை, தாய்) வழிபாடு நிலைத்துள்ளது. மார்ஷல் அவர்களின் இக்கூற்றானது சிந்து வெளி நாகரிகத்துடன் பெண் தெய்வ வழிபாடு மறைந்து விடவில்லை என்பதை நினைவுறுத்துகின்றது."[9]

கன்னித் தெய்வம் என்ற கருத்து பழங்காலத்தது என்று தெரிகின்றது. ஆண் உறவின்றிக் கன்னியாகவே எல்லோரையும் தானே பெற்ற தாய் (Virgin Mother Goddess) என்று கருதப்படுவாள். "அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறை பேசும்" என்று தாயுமானவர் கூறியிருப்பதிலிருந்து தாய்த் தெய்வத்தையே கன்னித் தெய்வமாகக் கருதுவது தெளிவாகின்றது. 'உலக முழுதீன்ற பெரும் கன்னி' என்று திருவாரூப் புராணம் கூறுகின்றது. காடமர்செல்வி, துணங்கயஞ் செல்வி, கடல்கெழு செல்வி, என்ற பெயர்களில் செல்வி என்ற சொல் கன்னித் தெய்வத்தைக் குறிப்பதாகக் கருத வேண்டும். செல்வி என்ற சங்ககாலப் பெயருக்கு நேராகப் பின்னர் குமரி, கன்னி என்ற சொற்கள் வழங்கப்பட்டனவாகத் தெரிகின்றது என்பர்".[10] இக்கன்னித் தெய்வங்கள் எழுவர் என்றும், இவ்வெழுவரும் உடன் பிறந்தோர் என்றும் பல கருத்துக்கள் வழங்குகின்றன. இன்றும் கிராமங்களில் ஐயனார் கோயில்களில் ஏழு கற்களை வைத்துக் கன்னிமார் தெய்வங்கள் என்று வணங்கும் வழக்கம் உள்ளது. இராமநாதபுர மாவட்டம், செட்டி நாட்டுப் பகுதியில் இவ்வேழு கன்னிமார்களும் ஏழு ஊர்களிலிருந்து வந்து ஒரிடத்தில் (வேலங்குடி வயல்நாச்சி கோவில்) கூடும் நிகழ்ச்சியை 'ஏழுர்ச் செவ்வாய்' என்று குறிப்

9. க. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 196
10. பி. எல். சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு, பக். 40, 82.

பிடுகின்றனர். ஏழு ஊர்களிலிருந்தும் பெண்கள் மதுக்குடங் களைத் தூக்கி வருவர். இவ்வாறு நாட்டுப்புற மக்கள் வழிபாட் டில் சிறப்பிடம் பெற்றிருந்த ஏழு கன்னிமார்கள் காப்பிய காலத்தில் பெருவழக்குப் பெற்றிருந்துள்ளனர். புராண காலத் தில் சிவபெருமான் அந்தகாசுரனை அழிக்க முற்படுகையில் மற்றைய தேவர்களும் அவர்கட்குத் துணையாக அவர்களின் தேவிமார்களும் சேர்ந்து அழித்ததாகக் கதை எழுந்தது. அவர்கள் ''ப்ராம்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வராஹீ, மஹேந்த்ரீ (இந்திராணி), சாமுண்டா எனப்படும் சப்தமாதர்கள்'' ஆவர். இடைக் காலத்தில் இந்து சமயத்தில் சப்தமாதர்கள் பெருவழக்குப் பெற்றனர். அக்கால கட்டத்தில் திருப்பரங்குன்றம் முருகன் கோயிலில் திருமகள் கருவறைக் குள்ளே குடைவரைச் சிற்பமாகச் சப்தமாதர்களுக்குப் படிமங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பின்னர் ஒரு காலத்தில் இப்படிமங்கள் அனைத்தும் சிதைக்கப்பட்டுள்ளன. இவை இன்று வழிபாடற்ற நிலையில் கோயில் நகைகள் வைக்கும் கருவூல அறையாகப் பயன்பட்டு வருகிறது. பழைய நாட்டுப்புற மக்களின் வழிபாடான கன்னிமார் கோயில் நம் பழமைக்குப் புத்துயிர் கொடுத்துப் புதுவிழாக் காண்பதை இன்று இங்கு காண முடிகிறது. நாட்டுப்புற வழிபாட்டைப் புராணச் சார் புடைய ஒரு இடைக்காலத் தெய்வ வழிபாட்டுடன் இணைக்க ஏற்படுத்திய முயற்சி இங்குத் தோல்வி பெற்று விட்டது என எண்ண வேண்டியுள்ளது.

**வெயிலுகந்த அம்மன் கோயில்**

திருப்பரங்குன்றத்தில் தென்கால் கண்மாய் ஓரத்தில் புகை வண்டிப் போக்குவரத்துப் பாதைக்கும், சாலைப் போக்கு வரத்துப் பாதைக்கும் நடுவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது இது. இங்குள்ள பெண் தெய்வத்தை 'வெயில் உகந்த அம்மன்' என்று கூறி வழிபாடு செய்து வருகின்றனர், இக்கோயில் ஒரு காலத்தில் தென்கால் கண்மாயில் இருந்து வந்ததாகவும், பின்னர் நெடுஞ்சாலைப் போக்குவரத்து, புகைவண்டிப் போக்கு வரத்து ஆகியவற்றிற்காகப் பாதைகள் அமைக்கும் பொழுது, இக்கோயிலும், இக்கண்மாயும் தனித்தனியாக உள்ளன என எண்ணுமாறு பிரிந்தன என இங்குள்ளோர் கூறுகின்றனர். இத்தெய்வத்தின் சிறப்பையும், வழிபாட்டையும், இக்கோயில் அமைப்பையும் இங்கு வழங்கும் நாட்டுப்புறப் பாடல்கள் (பிற்சேர்க்கை எண். 2) படம் பிடித்துக் காட்டுகின்றன. மழை பொய்ப்பதால் வருந்தும் பயிர்களையும் வறட்சியால் ஏற்படும்

நோயால் வருந்தும் உயிர்களையும் காப்பதற்காக இவ்வம்மனை வழிபடுவர். விருதுநகரிலும் இவ்வம்மனுக்குக் கோயில் உண்டு. மாசித் திங்கள் முழுநிலவுக்கு மறுநாள் இக்கோயிலில் விழா நடைபெறுகிறது. "மாரி" என்ற தெய்வம் அம்மை நோய்க்கு அதிகாரி; அதைத் தணிக்க உதவுபவள்; மழையைத் தருபவள் என்ற கருத்து இந்தியா முழுவதும் நிலவி வருகின்றது. பலுச்சிஸ்தானத்தில்கூட இந்தத் தெய்வத்தை நாநீ மாரி நாநீ என்று அழைக்கின்றனர். இத்தெய்வம் நன்மையும் தருவாள், துன்பமும் தருவாள். மாரியம்மன் என்ற தெய்வமாக இப்பொழுது எங்கும் வணங்கப்படுகிறாள்".[11] "இத்தெய்வம் வெம்மையை விரும்பி ஏற்றுக்கொண்டு மக்களுக்குக் குளிர்ச்சியைத் தரும் என்பதாலும், வெயிலை எடுத்துக் கொண்டு பயிர்களுக்கு மழையைத் தரும் என்பதாலும், நோய் நீக்கம், மழைவளம் தருதல் போன்ற காரணத்திற்காகவும் இம்மாரியம்மனுக்கு வெயிலுகந்த அம்மன் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. மேலும் இத்தெய்வத்தை ஏரிக்கரையில் வைத்து வழிபடுவதும் இக்காரணம் பற்றியேயாகும்.[12] மழை வேண்டுதல், நோய் நீக்கம், உடற்குறை ஆகியவற்றிற்காக இக்கோயிலில் பலியிடுதல், பொங்கலிடுதல் போன்றவைகளும், பிள்ளைகட்கு வெண்புள்ளி; கரும்புள்ளி குத்தி நேர்த்தி செய்தல் போன்றவைகளும் இங்கு நடைபெறுகின்றன. இக்கோயில் திருவிழாவில் நூற்றுக்கணக்கான ஆடுகள், கோழிகள் பலியிடப்படுவதை இன்னும் காணமுடிகிறது. இக்கோயிலின் உற்சவமூர்த்தி (நிழற்படம் காண்க) திருப்பரங்குன்றம் முருகன் கோயிலில் உள்ளது. திருவிழாக் காலங்களில் முருகன் கோயிலிலிருந்து இவ்வுத்சவ மூர்த்தி தினமும் காலையில் எடுத்துவரப்பட்டு இரவு விழா முடிந்ததும் முருகன் கோயிலில் கொண்டு வைக்கப்படுகிறது. இக்கோயில் திருவிழாவின் இறுதி நாளான தேர்த்திருவிழாவன்று இக்கோயிலின் சட்டைத்தேர் முருகன் கோயிலின் முன் நிறுத்தி வைக்கப்பட்டு அங்கு இரவு முழுவதும் கூத்து (நாடகம்) நடைபெறுகிறது. இவ்வாறு கூத்து நடத்துவதற்கெனத் திருமலை நாயக்கரால் வலையன்குலத்தைச் சேர்ந்த கூத்தாடிகட்கு மானியங்கள் (வலையன்குலமும் அதைச் சுற்றி 48½ கிராமமும்) கொடுக்கப்பட்டுத் 'திருமலை மெச்சான்' என்ற பட்டமும்

---

11. பி.எல். சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு, பக். 40, 58.
12. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 21-2-83.

வழங்கப்பட்டுள்ளது. திருமலைநாயக்கர் காலத்தில் மதுரை நகர் முழுவதும் கொடிய அம்மை நோய் ஏற்பட்டு மக்கள் இறந்துபட்டதால், மக்கள் பயந்து திரண்டெழுந்து திருமலை நாயக்கரை வேண்டியதாயும், திருமலை நாயக்கர் என்ன செய்வதென்று அறியாது கவலை கொண்ட பொழுது, இங்குள்ள வெயிலுகந்த அம்மனுக்கு நாடகம் நடத்தி விழாக் கொண்டாடினால் நோய் போகும் என்று பெரியவர்கள் கூறியதாயும், அதன்படி வலையன்குளம் கிராமத்தைச் சேர்ந்த கூத்தாடிகளை (சேர்வைகளை) அழைத்து வந்து திருமலை நாயக்கர் கூத்து நடத்தினார் என்றும் இங்கு ஒரு செவிவழிச் செய்தி வழங்குகிறது. இதற்காக 48½ கிராமம் மானியமாகத் திருமலைநாயக்கர் கொடுத்தார் என்றும், இப்பொழுதும் இக்கிராமங்களிலிருந்து இவர்களின் திருமணம், இறப்புப் போன்றவைகட்கு இக்கிராம மக்கள் மரியாதைகள் செய்கிறார்கள் என்றும் கூறுகிறார்கள். இதற்கான செப்புப்பட்டயம் ஏழுமலை சமீனில் இருந்ததாகக் கூறுகிறார்கள் (தற்பொழுது அங்கு இது கிடைக்கவில்லை). இவர்களை 'மெச்சனார் குடும்பம்' என்றும், இவர்கள் நான்கு பங்காளிகளாக 25 குடும்பங்கள் தற்பொழுது உள்ளனர் என்றும் கூறப்படுகிறது. நிலமானியமாக விடப்பட்ட 48½ கிராமங்களில், தற்பொழுது வலையங்குளம், நல்லூர் என்ற இரு கிராமங்கள் மட்டுமே இவர்கள்பால், உள்ளன. இவர்கள் இருபத்தைந்து குடும்பத்தினரும் இக்கோயில் நாடகத்திற்கு வந்துவிடுவார்களாம். இல்லையெனில் நோய், நொடி ஏற்பட்டு இறப்பு வந்து விடும் என்று அஞ்சுகிறார்கள். இவர்கட்கு நாடக முடிவில் இக்கோயிலில் இருந்து 16 முழச் சேலை (அம்மனுக்குச் சாற்றப்பட்டது) மரியாதைப் பரிவட்டமாக அளிக்கப்படுகிறது. இவர்கள் குடும்பத்தில் யாரேனும் இறந்தால், முருகன் கோயிலிலிருந்து மரிக்கைப் பரிவட்டம் என்று மரியாதை செய்யப்படுகிறது. நாயக்கர் காலத்திலிருந்தே மார்க்கண்டேயன், அபிமன்யு சுந்தரி என்ற இரண்டு நாடகம் தான் நடத்தி வருகிறார்கள். வேறு எந்த நாடகம் நடத்தினாலும் பரிவட்ட மரியாதை ஏற்கும் பொழுது, ஆண், பெண் வேடதாரிகள் மார்க்கண்டேயன், அபிமன்யு சுந்தரி நாடக மாந்தர்கள் பெயர் கூறித்தான் மரியாதை ஏற்றுக் கொள்கிறார்கள்.[13]

இக்கோயில் திருவிழாக்களில் கிராம மக்கள் பெருமளவில் ஈடுபாட்டுடன் கலந்து கொள்கிறார்கள். இந்நாட்டுப்புறத்

13. தகவல்: சோ. ஆண்டிச்சேர்வை (வயது 97), வலையங்குளம், கள ஆய்வு நாள் : 24-2-83.

தெய்வத்தின் சிறப்பையும், மக்களின் ஈடுபாட்டையும் கருதித் திருமலை நாயக்கர் மேற் கூறிய ஏற்பாடுகள் செய்திருக்க வேண்டும். இவ்வழிபாட்டைப் பெருங் கோயில் வழிபாட்டுடன் இணைத்து இரண்டையும் தொடர்புபடுத்த வேண்டும் என்ப தற்காக, இக்கோயிலின் உத்சவமூர்த்தியை முருகன் கோயிலில் வைத்தும், இக்கோயில் விழா நாடகத்தை முருகன் கோயில் முன்பு நடத்தச் செய்தும் முயற்சிகள் நடந்திருக்கின்றன. ஆனால் ''இவ்விணைப்பு மக்களின் இணைப்பாக (Religious Synthesis) இல்லாமல், நிருவாக இணைப்பாக மட்டும் (Administrative Synthesis) உள்ளது. இதேபோன்று அழகர் கோவிலிலும் கருப்பணசாமியையும், அழகரையும் இணைக்கும் போக்கு இருந்துள்ளது. ஆனால் இவ்விணைப்புகள் மக்கள் மனத்தில் அவ்வளவு அதிகம் இடம் பெறாமல் தனித்தனி வழிபாடாகவே உள்ளன. இது நிருவாக இணைப்பே தவிர வழிபாட்டில், வரலாற்றில் எவ்வித இணைப்புக்கும் இடமில்லை.[14]

## குருநாதசாமி கோயில்

இங்குக் கீழரத வீதியில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இதற்குக் குருநாதன் கோயில், அங்காள ஈசுவரி கோயில், பேய்ச்சியம்மன் கோயில் என்ற பெயர்கள் வழங்குகின்றன. இக்கோயிலின் மூலவர் பெண் தெய்வமான அங்காள ஈசுவரி, இதற்கு இடப்புறம் பேச்சியம்மன் கோயிலும், வலப்புறம் சப்பாணி கோயிலும், கருப்பண சுவாமி கோயிலும் உள்ளன. குருநாதசாமி, அங்காள ஈசுவரி அருகில் அமர்ந்த கோலத்தில் உள்ளார்.

''அங்காள ஈசுவரி கோயில் என்பது பழந்தமிழரின் வெற்றித் தெய்வமான கொற்றவை கோயில் எனலாம். கொற்றம் தருபவள் கொற்றவை எனப்பட்டாள். கொற்றி என்ற பெயரும் இந்தப் பொருளையே தரும். சிலப்பதிகாரத்திலும், பெருங் கதையிலும் கொற்றவை வேடர்களுக்கும், எயினர்களுக்கும் வெற்றி தரும் வேட்டைத் தெய்வமாகவும், மன்னர்களுக்கு வெற்றியை அளிக்கும் போர்த் தெய்வமாகவும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.''[15] ''இத்தெய்வம் கங்காளநாதர் என்ற சிவனின் உருவத்துடன் தொடர்புபடுத்தி அங்காள

14. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 21-2-83.
15 பி.எல். சாமி, மு. நூ., ப. 67.

ஈசுவரி என்று பெருவழக்குப் பெற்றிருக்க வேண்டும்''.[16] இக்கோயிலில் நடைபெறும் 'பாரிவேட்டை' என்ற திருவிழா குறிப்பிடத்தக்கது. இக்கோயிலின் உத்சவமூர்த்தியான அங்காள ஈசுவரி முருகன் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. இக்கோயில் திருவிழாவின் போது இம்மூர்த்தி எடுத்து வரப்பட்டு, திருவிழா முடிந்ததும் கொண்டு வைக்கப்படுகிறது. இக்கோயிலுக்கு அரசர் மானியமாக நன்செய் 3—3/4 ஏக்கரும் (செவந்திக்குளம், தெங்கால்) புன்செய் 6 ஏக்கரும் கொடுக்கப்பட்டுள்ளன.[17]

இங்குள்ள பேய்ச்சியம்மன் கோயில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது. இங்குள்ள பேய்ச்சியம்மன் மடியில் ஒரு குழந்தையைக் கிடத்தி வைத்துக் கொண்டு, அதன் குடலை உருவிக் கடிக்கும் கோலத்தில் உள்ளது. "திருநெல்வேலி மாவட்டத்தில் கழுகு மலைக்கு அணித்தாகப் பேச்சியம்மன் மலையொன்று இருக்கிறது. அங்கும் இதுபோன்ற சிலை வடிவம் இருப்பதாகக் கூறுவர்.[18] பேய்ச்சியம்மன் திருவடிவங்கள் பாண்டிய நாட்டின் சில பகுதிகளில் காணப்படுகின்றன. "சங்க இலக்கியமான புறநானூற்றில் அச்சம் பொருந்திய பேய்மகள் பாடிக் குரவைக் கூத்தாடுவதைப் பல பாடல்களில் (புறம் 356, 359. 371) காண்கிறோம். பதிற்றுப்பத்து, சிறுபாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, திருமுருகாற்றுப்படை முதலிய இலக்கியங்களில் இத்தகைய செய்திகள் ஆங்காங்குக் காணப்படுகின்றன. இந்தப் பேய் மகளே பேய்ச்சி—பேச்சி—பேச்சியம்மன் ஆக வந்திருக்கலாம் என எண்ண வேண்டியுள்ளது. பக்தியியக்கக் காலத்தில் பேய் வடிவு கொண்ட காரைக்காலம்மையாரையும் பேயார், பேய்ச்சியாத்தா என்று வழிபடும் வழக்கம் உள்ளது.[19] இறைவனைப் பேயன் என்று கூறிய பொழுது, அம்மையைப் பேய்ச்சி என்று கூறும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பர்.[20] புராதன உலகின் முக்கிய தெய்வங்களுள் ஒன்று பேரன்னை என்றும், அது தமிழர் (திராவிடர்) தெய்வமாக இருந்தது என்றும், அது மந்திரச் சடங்குகளினால் வழிபடப்பட்டது

16. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள்: 21-2-83.
17. தகவல்: என். கணேசபிள்ளை, பூசாரி, கள ஆய்வு நாள்: 8-3-83.
18. க. கைலாசபதி, மு.நூ., ப. 68.
19. தகவல்: தமிழண்ணல், கள ஆய்வு நாள்: 25-4-84
20. தகவல்: ச. தண்டபாணி தேசிகர், கள ஆய்வு நாள், 20-4-84.

என்றும், அதன் பின்னர் அது உழவுத் தெய்வமாக மாறியது என்றும், அவற்றின் அடிப்படையில் இறப்பு, பிறப்பு முதலிய வற்றின் தெய்வமாகப் பிற்காலத்தில் நிலவியது என்றும் கருத வாய்ப்புள்ளது. சங்க இலக்கியங்கள் அத்தகைய பழைய செய்திகள் சிலவற்றை இனநினைவுகளாகவோ அல்லது எஞ்சி யிருந்த வழிபாட்டு முறையாகவோ காட்டுகின்றன. பேய் மகளிர் உண்மையான மகளிரே. ஆனால் பெண் தெய்வ வழி பாட்டில் பிணந் தின்னிகளாகவும் இருந்தனர். அந்த வழக்கம் பின்னாலே சிவவழிபாட்டுடன் கலந்தது என்பர்.[21] வடமொழி யில் உள்ள ஸ்கந்த புராணமும், பவிஷ்யபுராணமும் துர்க்கையின் வழிபாட்டை மூன்று வகையாகப் பிரித்துக் காட்டுகின்றன. தாமசம், இராஜசம், சாத்துவிகம் என்று மூன்று வகை வழி பாடுகள் கூறப்பட்டுள்ளன. மதுவும் மாமிசமும் படைத்துத் தொழுவது தாமசம் என்றும், பலி கொடுப்பது வேட்பது இராஜசம் என்றும், மந்திர செபத்தோடு வழிபடுவது சாத்து விகம் என்றும் குறிக்கப்பட்டுள்ளன.[22] காடுகிழாள், கொற் றவை, பேய் மகளிர் ஆகிய பழந்தமிழ்த் தெய்வங்கள் அங்காள ஈசுவரி, இராக்காயி அம்மன், பேச்சியம்மன் என்ற நாட்டுப்புறத் தெய்வங்களாக வழிபடப்பட்டு வந்துள்ளன. பின்னர் இது துர்க்கை என்ற பொதுப் பெயரின் கீழ், தாமசம், இராஜசம், சாத்துவிகம் என்ற முக்குணங்களின் அடிப்படையிலான தெய் வங்களாக வழிபடப்பட்டுப் பெருங் கோயில்களில் இடம் பெற் றுள்ளன. திருப்பரங்குன்றம் முருகன் கோயிலில் துர்க்கைக்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டு நாட்டுப்புறத் தெய்வங்களின் ஒட்டு மொத்தமான வழிபாடாகத் துர்க்கை ஏற்படுத்தப் பட்டுள்ளது.

இங்குள்ள சப்பாணி சாமியும், கருப்பண சாமியும் வடக்கு நோக்கியுள்ளன. சப்பாணி சாமியைப் பற்றி இங்கு வழங்கும் நாட்டுப்புறப் பாடல் (பிற்சேர்க்கை எண். 2) சிறப்பாகவுளது. இங்கு நடைபெறும் 'கப்பரை'த் திருவிழாவில் கருப்பணசாமி, சப்பாணி சாமிக்கு ஊனும், சோறும் வைத்துப் படைக்கப்படு கின்றன. பலி கொடுக்கும் வழக்கமும் உள்ளது. ''மலரும் மதுவும், ஊனும், சோறும் நடுகற்களுக்குப் படைக்கப்பட்டதை நோக்குமிடத்துப் பிற்காலத்தில் (இன்றுவரை) தாழ்ந்த சாதி யினர் எனக் கருதப்படுவோர், வேள்வி நடாத்தி மடை

21. க. கைலாசபதி, மு.நூ., பக். 89-90.
22. பி.எல். சாமி, மு.நூ., பக். 66.

கொடுத்துச் சிறு தெய்வங்களை வழிபடுவது நினைவிற்கு வரும். ஐயனார், மதுரை வீரன், இருளன், கறுப்பன், நொண்டி முதலியன நடுகற் தெய்வங்களை ஒத்தனவாயுள்ளன".[23]

**தென்பரங்குன்றம்**

மலையின் தென்புறத்தே தெற்கு நோக்கியமைந்துள்ள குடைவரைக் கோயில் இது. இக்கோயில் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் பாண்டியர்களால் உருவாக்கப் பெற்றது. இது சிவபெருமானுக்காக ஏற்பட்ட கோயில் என்பர். 19 அடிநீளமும், 17 அடி அகலமும், 9 அடி உயரமும் கொண்டு இது விளங்கு கிறது. இக்குடைவரைக் கோயிலில் மேற்குப் பகுதியில் ஒரு தனிக் கருவறை 8 அடி நீள, அகலத்தில் சதுர வடிவில் உள்ளது, இக்கருவறையில் உமையொருபாகனான சிவன் நின்ற கோலம் (நிழற்படம் காண்க) புடைப்புச் சிற்பமாக உள்ளது. இக்கரு வறையின் நடுவில் இலிங்கம் அமைக்கப்பட்டிருந்ததற்கான வட்டம் கீழே உள்ளது. இக்குடைவரைக் கோயிலின் மையப் பகுதியில் ஆடல்வல்லானின் அழகிய கோலமும், அருகே அம்மையின் நின்ற கோலமும், மேலே வலப்புறத்தில் ஹேரம்ப கணபதியின் (ஐந்து முகக் கணபதி) கோலமும், இடப்புறத்தில் மயில் மீதமர்ந்த முருகன் கோலமும் உள்ளன. கீழே நந்தி மத்தளம் வாசிக்கும் கோலமும் உள்ளது (நிழற்படம் காண்க). இதற்கு அடுத்த இடப்பக்க மாடத்தில் வள்ளி தெய்வயானை யுடன் முருகன் நின்ற கோலமும் உள்ளது. (நிழற் படம் காண்க). இச்சிற்பங்கள் அனைத்தும் சிதைக்கப்பட்ட நிலையில் உள்ளன. இக்குடைவரைக் கோயிலின் வெளிப்புறத்தே விநாயகர் சிலை யும், முனிவர்கள் சிலையும், நால்வர்கள் சிலையும், சிவபெரு மானின் பைரவக் கோலமும் உள்ளன. சிவபெருமானின் பைரவக் கோலம் முன்பு சமணச் சிற்பமாக இருந்து பின் மாற்றியமைக்கப்பட்டிருக்கலாம் (நிழற் படம் காண்க). இச்சிற் பங்களும் சிதைக்கப்பட்டு உள்ளன. இக்கோயில் சமண, வைதீக சமயப் போராட்டத்தில் சிதைவு பெற்றதாக இங்குள்ள மத்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் அறிக்கைப் பலகை காட்டுகிறது. இங்குள்ள உமையொரு பாகனான ஈசனின் கோலத்தை வைத்து இக்கோயிலுக்கு "உண்மையாண்டார் கோயில்" என்றும், "ஊமையாண்டார் கோயில்" என்றும் பெயர்கள் வழங்குகிறது.

23. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 112.

இக்குடைவரைக் கோயிலின் கிழக்குச்சுவரில் சோணாடு கொண்டருளிய முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனது (1216-1238) ஏழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் காணப்படு கிறது. இது 129 அடிகளைக் கொண்ட மெய்க்கீர்த்தியாகும். இது 'பூமருவிய திருமடந்தையும் புலிமடந்தையும்' என்று தொடங்குகிறது. இம்மெய்க்கீர்த்தி இப்பெருவேந்தன் திருப் பரங்குன்றத்துத் தென்பக்கத்து உட்பக்கத்தில் எழுந்தருளுவித்த சுந்தரபாண்டிய ஈசுவரமுடையார் கோயில் நிவந்தங்களுக்கும் திருப்பணிக்குமாக வீரநாராயணக்குளக் கீழ் புளிங்குன்றூரான சுந்தரபாண்டிய நல்லூரை நன்கொடையாக வழங்கியதைக் கூறுகிறது இங்குள்ள சிற்பங்கள் இவனால் ஏற்படுத்தப் பட்டவை. எனவே இச்சிவன் கோயில் பதின்மூன்றாம் நூற் றாண்டில் தோன்றியிருக்க வேண்டும். இக்குடைவரை எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்றாலும், இதில் முதலாம் மாற வர்மன் சுந்தரபாண்டியனால் சிவனுக்காகக் கோயில் ஏற் பட்டது.[24] இக்கோயிலில் வள்ளி, தெய்வயானையுடன் நின்ற கோலமான முருகன், ஆடல்வல்லான், உமையொருபாகனான சிவபெருமான் மூவருக்கும் தனித்தனியாக கோயில் அமைப்பு உள்ளது. இதில் முருகன், வள்ளி, தெய்வயானை, ஆடல் வல்லான் ஆகிய சிற்பங்கள் சிதைக்கப்பட்டுவிட்டன (நிழற் படம் காண்க). உமையொரு பாகனுக்கு எதிரே பிரதிட்டை செய்யப்பட்டிருந்த சுந்தரபாண்டிய ஈசுவரமுடையார் என்ற இலிங்கமும் அவ்விடத்தில் இல்லை. அவ்விலிங்கம் இருந்ததற் கான வட்டம் மட்டும் காணப்படுகிறது. இக்குன்றின் வெளியே மலைப்பிரகாரத்தையொட்டிப் பெரிய இலிங்கம் ஒன்று மரத் தினடியில் வைக்கப்பட்டுத் தற்பொழுது இப்பகுதி மக்களால் வணங்கப்பட்டு வருகிறது. இவ்விலிங்கத்தின் விட்டம், குடை வரைக் கோயிலினுள் இருக்கும் விட்டத்துடன் ஒத்துக் காணப் படுவதால் இவ்விலிங்கமே முன்பு இக்கோயிலினுள் பிரதிட்டை செய்யப்பட்ட இலிங்கமாக இருக்கலாம் (நிழற்படம் காண்க), என எண்ணத் தோன்றுகிறது. இக்கோயிலின் வெளியே சமணச் சிற்பங்கள் மாற்றியமைக்கப்பட்ட நிலையில் காணப் படுகின்றன (நிழற்படம் காண்க). இக்கோயில் முன்பு சமணர் களுக்குரியதாக இருந்துள்ளது. பின்னர்ச் சமண-சைவப் போராட்டத்தின்போது சிவன் கோயிலாக மாற்றம் பெற் றுள்ளது.[25] இக்கோயிலுக்கு முதலாம் மாறவர்மன் சுந்தர

24. தகவல்: ஒய். சுப்பராயலு, கள ஆய்வு நாள்: 30-1-82.
25. D. Deva Kunjari, Madurai Through the Ages, P.112.

பாண்டியன் காலத்தில் நிவந்தங்கள் ஏற்படுத்தப்பட்டுத் திருப் பணிகள் செய்யப்பட்டுள்ளன.

''இதுவே பாடல்பெற்ற பாண்டி நாட்டுப் பதினான்கு சைவத் தலங்களில் ஒன்றான தென்பரங்குன்றாகும். அவை:

''கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெய்வேலி இராமேசுரம் -ஆடானை
தென்பரங்குன்றம் சுழியல் தென்திருப்புத்தூர் காணை
வன்கொடுங்குன்றம் பூவணம்''

இத்தலத்தை திருஞானசம்பந்தரும், சுந்தரரும், பாடியுள்ளனர். ஆகவே இக்கோயிலில் திருஞானசம்பந்தர் காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதலே சிறப்புற்று விளங்கி வருகிறது'' என்பர்.[26] தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் பெரும் பாலானவை முன்பு சமண, பௌத்தக் கோயில்களாக இருந்து மாற்றம் பெற்றவையே என்பர் மயிலை. சீனி. வேங்கடசாமி.[27] இக்கோயிலின் சமணச் சிற்பங்கள் சிதைவுபட்டிருப்பதும் இதை உறுதிப்படுத்துகிறது. கி. பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வரான அருணகிரிநாதர் தாம் பாடிய திருப்பரங்குன்றத் திருப் புகழ் 14 பாக்களில் நான்கு பாக்களில் மட்டும்,

''தென்பரங்குன்றுறை பெருமாளே'' (14)
''தென்பரங்குன்றிற் பெருமாளே'' (15)
''தென்பரம் பொருப்பிற் றங்கும்'' (16)
''தென்பரங்குன்றிலுறை பெருமாளே'' (17)

என்று குறிப்பிடுகிறார். அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் 14 பாக்களுமே தென்பரங்குன்றிலுள்ள முருகனைப் பாடியதாகும் என்பர்.[28] ஆனால் அருணகிரிநாதரின் பாடல்களைப் பார்க்கும் பொழுது அவர் திருப்பரங்குன்றம், தென்பரங்குன்றம் இரண் டிலுள்ள முருகனைப் பாடியதாகத்தான் தெரிகிறது.

ஆகவே இக்கோயில் அருணகிரிநாதர் காலம் வரை நன்கு வழிபாட்டில் இருந்து வந்துள்ளது. ''பின்னர் அருணகிரிநாதர் காலத்திற்கும் (கி. பி. 15-ஆம் நூற்றாண்டு) திருமலை

26. எஸ். முத்துக்கோனார். திருப்பரங்குன்றம் (கையெழுத்துப்படி), ப. 4.
27. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும்,
28. எஸ். முத்துக்கோனார், திருப்பரங்குன்றம் (கையெழுத்துப்படி), ப. 5.

நாயக்கர் காலத்திற்கும் (17-ஆம் நூற்றாண்டு) இடைப்பட்ட காலத்தில் இக்கோயில் சிதைக்கப்பட்டு வழிபாடு இழந்து விட்டது. ஆகவேதான் திருமலை நாயக்கர் காலத்தில், சிதைந்த இக்கோயிலை வைத்துவிட்டு, வழிபாட்டிலுள்ள திருப்பரங் குன்றக் கோயிலில் மண்டபங்களைக் கட்டி, சிறப்புப் பூசனை களை ஏற்படுத்தினார். இதைத்தான் ''திருமலையன் திருப் பரங்குன்றத்தைத் திருப்பி வைத்தான்'' என்ற பழமொழி குறிப்பிடுகிறது'' என்பர்.[29]

இன்று தென்பரங்குன்றக் கோயில் வழிபாடற்ற நிலையில் மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறையின் பாதுகாப்பில் உள்ளது.

**சிக்கந்தர் தர்கா**

திருப்பரங்குன்றின் உச்சியில் முகமதியர் தர்கா உள்ளது. இதற்குச் சிக்கந்தர் தர்கா என்று பெயர் வழங்குகிறது. இதனால் இம்மலையை இவர்கள் 'சிக்கந்தர் மலை' என்று அழைக்கிறார்கள். இத்தர்காவிற்கு எதிரேயுள்ள கல்மண்டபம் இந்துக்களின் பாணியில் அமைந்துள்ளது. இது முகமதியர் கட்டிடமாக அதற்குரிய சின்னங்களோடு கட்டப்பட்டுள்ளது.[30] இத்தர்காவினுள் இரண்டு சமாதிகள் உள்ளன. ஒன்று சுல்தான் சிக்கந்தர் பாதுஷா அவுலியா ரெக்மான் செரிப் (அல்லது) சுல்தான் சிக்கந்தர் பாதுஷா துல்கர்னைன் அவுலியாவினுடைய தாகும். இதற்கு எதிரேயமைந்துள்ளது இவருடைய மந்திரி லுக்மான் செரிப் என்பவருடையதாகும்.

இக்கட்டிடங்கள் ஆண்டவரின் உத்தரவுப்படி முகமதிய மக்களிடம் வசூல்செய்து இளையான்குடி மீராமுகையதீன் ராவுத்தர் (மஸ்தான்) என்பவரால் 1905-இல் கட்டப்பட்டதாம். வாலாஜா நவாபு காலத்தில் திருநகர் அருகேயுள்ள தணக்கங் குளம் என்ற கிராமத்தில் 1500 ஏக்கர் நிலம் இத்தர்காவிற்கு மானியமாக விடப்பட்டதாம். தற்பொழுது தணக்கங்குளம் கிராமம் வக்போர்டிற்குக் கீழ் உள்ளதாகவும், ஆண்டிற்கு ரூபாய் 1566.58 பைசாவை வக்போர்டும் தஷ்திக் தொகை யாகக் கொடுத்து வருவதாகவும் கூறுகின்றனர். இதற்கு ஐந்து அறங்காவலர்கள் (ஐந்து அண்ணன்-தம்பிகள்) உள்ளனர்.

29. தகவல்: எஸ். முத்துக்கோனார், கள ஆய்வு
நாள்: 10-8-81
30. B.S. Baliga, Madurai District Gazeeteer, P.405

சந்தனக்கூடு உரூஸ் என்னும் பைரவம் ரஜ்ஷப் மாதம் (பிறை) 16க்கு நடைபெறும். ரஜ்ஷப் 16—க்கு கொடியேறுகிறது 16—ஆம் நாள் இரவு இவ்வைபவம் நடைபெறுகிறது. இத்தர்காவின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுவோர், சுல்தான் சிக்கந்தர் பாதுஷா திருப்பரங்குன்றம் வந்தவுடன் இரண்டு மலையும் திறந்து கொடுத்தது (இவர் சமாதி மலையிடுக்கில் அமைந்துள்ளது) குகையில் போய் இவர் நிட்டையில் ஆழ்ந்து விட்டார். இவர் எப்படி அடங்கினார், யார் அடக்கம் செய்தார்கள் என்ற விபரம் யாருக்கும் தெரியாது'' என்று கூறுகிறார்கள்.[31] பாண்டிய நாட்டில் முகமதியரது ஆளுகை கி. பி. 1330-ஆம் ஆண்டிற் கணித்ததாகத் தொடங்கி கி. பி. 1378 வரையில் நடைபெற்றது.[32] விசயநகர அரசரான குமார கம்பணர் கி.பி. 1371-இல் படையெடுத்து வந்து மதுரையில் பக்ருபீன் முபராக்ஷாவை வென்று ஆட்சியைக் கைக் கொண்டார். முபராக்ஷாவிற்குப் பின்வந்த சுல்தான் சிக்கந்தர் ஷாவின் ஆட்சி மதுரையில் கி. பி. 1378 வரை இருந்தது. இவர் தம் பெயரில் நாணயங்களையும் வெளியிட்டுள்ளார்.[33] திருப்பரங்குன்றத்து குகையில் இறந்து பட்ட மதுரையின் கடைசி சுல்தான் சிக்கந்தர் ஷாவிற்கும் அவருடைய படைத் தளபதியருக்கும் இங்குள்ள முசுலிம்களால் தர்கா அமைக்கப்பட்டு அவர்களை அவுலியாவாக வணங்கினார்கள்.[34] இத்தர்காவிற்கு வெள்ளிக்கிழமை தோறும் முசுலிம் மக்கள் வந்து வணங்குகிறார்கள். இங்கேயே வந்து தங்கியிருக்கும் மக்களும் உள்ளனர்.

குன்றைச் சூழ்ந்துள்ள கோயில்களுக்கும், இன்று இங்குச் சிறப்பான வழிபாட்டில் இருக்கும் பெருங் கோயிலுக்கும் வழிபாட்டில், விழாக்களில் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆகம வழிபாட்டிற்குட்பட்ட பெரும் கோயில் இக்கோயில்களின் வழிபாட்டை, விழாக்களைக் கட்டுப்படுத்த இயலவில்லை. ஆட்சி முறையில் இக்கோயில்களைப் பெருங் கோயிலின் துணைக் கோயில்களாக மட்டும் கொள்ள முடிந்துள்ளது. இவை

---

31. தகவல்: பி. உஸ்மான்கான் (வயது 87), 4-வது கரை டிரஸ்டி, கள ஆய்வு நாள்: 12.3,81.
32. தி.வை. சதாசிவ பண்டராத்தார், பாண்டியர் வரலாறு, ப. 151.
33. N. Subramanian, History of Tamil Nadu, P.13.
34. S.A.O.Husaini, The History of the Pandya Country, pp.109-110.

இங்குள்ள மக்களின் அன்பிற்கும், அவாவிற்கும் ஏற்ப அமைக்கப்பட்டுள்ள கோயில்கள். ஆகவேதான் மக்களின் எண்ணத்திற்கு ஏற்ப ஒரே தெய்வத்திற்குப் பல வடிவங்கள் இருந்தாலும், அத்தகைய பல வடிவங்களுக்கும் தனித்தனியே கோயில் எடுத்துள்ள மரபை இங்குக் காண முடிகிறது. (உ—ம்) ஆறுமுகசாமி கோயில், பழனியாண்டவர் கோயில், இம்மரபு பெருங் கோயிலில் இருந்த முருகன் வழிபாடு ஆகம வழிபாட்டிற்குக் கொண்டு வரப்பட்ட பின்னர், மக்கள் பெருங் கோயிலை விட்டுத் தம்தம் விருப்பத்திற்கேற்ப, இவை போன்ற கோயில்களை அமைத்து வழிபடத் தொடங்கியிருக்கலாம் என எண்ண இவை இடமளிக்கின்றன.

இம்மலையின் உச்சியில் உள்ள சிக்கந்தர் தர்காவை வழிபடும் மக்களுக்கும், காசிச்சுனையை வழிபடும் மக்களுக்கும் அடிக்கடி சண்டை சச்சரவுகள் ஏற்பட்டுள்ளன. இவை ஆங்கிலேயர் காலத்தில் உயர்நீதி மன்றம் (Privy Council) வரை சென்றுள்ளன. ஆகவே காசிச்சுனைக்கு முகமதிய மக்களின் வரவைத் தடுக்கும் பொருட்டும், இதை ஒரு தனியான கோயிலாக, புனிதத் தன்மை மிக்க இடமாக அமைக்கும் எண்ணத்திலும்தான் பிற்காலத்தில் காசி விசுவநாதர் கோயில் என்ற கோயில் இம்மலையில் கட்டப்பட்டுள்ளது.[35]

35. பெயர்கூற விரும்பாத கோயில் ஊழியர் அளித்த தகவல், கள ஆய்வு நாள்: 15-3-81.

# நாட்டுப்புற வழிபாடுகள்

மன உறுதி நிலைபெறுவதற்குப் பலதிற முறைகளுண்டு. அவைகளுள் எவரும் எளிதில் ஆற்றக் கூடியன இரண்டு. ஒன்று நோன்பு; மற்றொன்று வழிபாடு. இவ்விரண்டனுள் பிற முறைகள் யாவும் அடங்கும்.[1] இதில் தனிமனிதனுடைய மன அமைதிக்கு, உறுதிக்கு வழிபாடு செய்தல் நோன்பு, விரதம் என்ற முறையில் அமைந்துள்ளது. சமுதாயத்தில் மொத்தமான வழிபாடு கூட்டு வழிபாடுகளாகத் திருவிழாக்களாக அமைந் துள்ளன. "இலக்கியங்கள் திருப்பரங்குன்றில் இருவகை வழி பாட்டு முறைகள் இருந்தமையைக் கூறுகின்றன. கோயிலில் சிலை உருவில் செவ்வேளை வழிபட்ட செய்தியோடு, கோயி லுக்கு வெளியே கடம்ப மரத்தடியில் வேலன் வெறியாட பொது மக்கள் வேலையும் கடம்ப மரத்தையும் வழிபட்டதும் கூறப் பட்டுள்ளன. மரவழிபாடும், வேல்வழிபாடும் உருவவழிபாட்டிற்கு முந்தியன என்பதை மானிடவியலார் விளக்கியுள்ளார். இவ்விரு வழிபாடுகளிலும் மக்கள் எவ்வரங்களை வேண்டினர் என்பதைத் தொகுத்து அக்கால மக்களின் கருத்து வளர்ச்சியையும் கடவுளுக் கும் மக்களது வாழ்க்கைக்கும் எத்தகைய தொடர்பு இருந்த தாக அவர்கள் கருதினார்கள் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது''.[2]

திருப்பரங்குன்றில் இன்றுள்ள வழிபாடுகளின் அடிப்படை யில் காணும் போது மூன்று முறையில் வழிபாடுகள் ஏற்பட் டுள்ளன என்ற முடிவுக்கு வரவியலும்.

1. பண்டுதொட்டு இருந்துவரும் நாட்டுப்புற மக்கள் வழி பாடுகள்: ஆகம மரபிற்கு முற்பட்ட வழிபாடுகள்.

2. அரசர்களாலும், அந்தணர்களாலும் ஏற்படுத்தப்பட்ட வழிபாடுகள்.

1. திரு. வி. கலியாணசுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 99
2. நா. வானமாமலை, "பரிபாடலில் முருக வணக்கம் ஆராய்ச்சி" (இதழ்) ஜுலை, 1971, ப. 246

3. பிற ஊர்களைப் பார்த்து, அவற்றைப் போலவே கோயில் ஆட்சியாளர்களால் இக்கோயிலில் ஏற்படுத்தப்பட்ட வழிபாடுகள். பின்னர்க் கூறப்பட்ட இரண்டு வழிபாடுகளும் வேத, ஆகமத்திற்கு உட்பட்ட வழிபாடுகள்.

நாட்டுப்புற வழிபாடுகள் என்ற இவ்வியலில் ஆகம மரபிற்கு முற்பட்டதான நாட்டுப்புற மக்களின் வழிபாடுகள் விளக்கப் படுகின்றன.

நாள் ஏர் உழுதல்

திருப்பரங்குன்றம் கிராமத்திலும் அதன் சுற்றுப் பகுதி களிலும் சேர்த்து இங்கு ஏழு ஏரிகள் (கண்மாய்கள்) உள்ளன. இவை தென்கால் கண்மாய், பாணான்குளம், ஆரியன்குளம், செவந்திக்குளம், சேமட்டான்குளம், குருக்கட்டான் குளம், நெடுங்குளம் ஆகும். இந்த ஏழு ஏரிப் பாசனத்தில் வேளாண்மை செய்யும் உழவர்கள் அனைவரும் சித்திரை மாதம் முதல் தேதி யன்று (தமிழ் வருடப்பிறப்பு) முருகன் கோயிலின் ஆஸ்தான மண்டபத்தில் கூடுகிறார்கள். அங்குத் தச்சர்களும், கொல்லர் களும் முன்னதாகவே வந்து அவரவர்களின் தொழிற் கருவி களுடன் அமர்ந்துள்ளனர். உழவர்கள் தாங்கள் கொண்டு வந்துள்ள குச்சிகளைத் தச்சர்களிடம் கொடுக்க, அதை அவர்கள் வாங்கிச் சீவிச் செம்மைப்படுத்திக் கொடுக்கிறார்கள். பின்னர்க் கொல்லர்கள் அதை வாங்கிக் கூர்மை தீட்டிய ஆணிகளைப் பொருத்திக் கொடுக்கிறார்கள். ''முற்காலத்தில் நாட்டுக்கரு வேலை, புளியங்குச்சி ஆகிய பச்சையான குச்சிகளைத்தான் கொண்டு வருதல் வழக்கமாக இருந்துள்ளது. தற்பொழுது கடைகளில் விற்கும் மூங்கில் குச்சிகளை வாங்கிக்கொண்டு வருகிறார்கள்''.[3] கூர்மைப்படுத்தப்பட்ட தார்க்குச்சிகளைத் தச்சர், கொல்லர்களுக்குப் பாக்குப்பணம் வைத்து வாங்கிப் பூச்சூடி எடுத்துக் கொண்டு ஊர் மக்கள் அனைவரும் முருகனை வணங்கி விட்டு, மலையின் தென்புறத்தில் உள்ள கோயில் நிலத் திற்குச் செல்கிறார்கள். அங்கு நான்கு ஏர்கள் பூச்சூட்டி, மாடுகள் பூட்டப்பட்டு நிற்கின்றன. அவற்றை ஒவ்வொரு வரும் தொட்டு வணங்கிச் சிறிது தூரம் உழுது விட்டுக் கோயிலின் தென்புறமுள்ள தென்பரங்குன்றம் கோயிலின் முன்பாக மரத்தினடியில் கூடுகிறார்கள். பின்னர் முருகன்

---

3. தகவல்: எஸ். சுப்பிரமணியக் கோனார் (வயது 58) திருப்பரங்குன்றம், கள ஆய்வு நாள்: 14-4-83.

கோயில் வயிராவி (ஒருவர்) ஊர் நாட்டாண்மை (இருவர்) ஊர்க் காவலர்கள் (அறுவர்) பண்ணைப் பள்ளர் (மடையன் 4, தோட்டி 4) ஆகியோர் கூட்டத்தை நடத்துகிறார்கள். இதில் இவ்வூருக்கு ஆக்க வேண்டியவை, இவ்வூரில் காக்க வேண்டியவை, நீக்க வேண்டிய குறைகள் பற்றிப் பேசி முடிவுகள் எடுக்கப்படுகின்றன. பின்னர்க் கிராம மக்கள் அனைவரும் தங்களால் இயன்ற காணிக்கைகளைக் கூட்ட நடுவில் வைக்கிறார்கள். இக்காணிக்கை ரூபாய்களைக் கோயில் வயிராவி ஏற்றுக்கொண்டு, அன்று மாலையே முருகனுக்கு ஊர் நலம் வேண்டிச் சிறப்பு பூசைகள் செய்து, சோற்றை (பிரசாதத்தை) ஊர் மக்களுக்கு வழங்குகிறார். இங்கு இக்கூட்டத்தில் எடுக்கப் பட்ட முடிவை யாரும் மீறக் கூடாது; யாரும் மீறுவதும் இல்லை என்கிறார்கள்.

நல்லநாளில் உழவு தொடங்குவதால், இதற்கு நாள் ஏர் உழுதல் என்று பெயர் ஏற்பட்டது என்கிறார்கள். பண்ணைப் பள்ளர் நால்வர் என்பதால், இங்குக் கோயில் நிலத்தில் நான்கு ஏர்கள் பூட்டப்படுகின்றன. ஆகவே இதற்கு நான்கு ஏர் உழுதல் (நாலு ஏர் உழுதல்) என்கிறார்கள். இங்குக் கண்மாய்கள் ஏழு என்பதால் ஏழு ஏர் உழுதல் என்றும், கருத்துத் தெரிவிக்கப் பட்டது.[4] இங்கு வேளாண்மை செய்யும் மக்கள் அதிகம் இருப் பதால் முதலில் ஏரை வணங்கித் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்து, ஊரே ஒருங்கு கூடிப் பேசி முடிவுகள் செய்து, ஒன்றாக வழிபாடு செய்யும் ஒருகூட்டு வழிபாட்டைக் காண முடிகிறது. பொன்னேர் உழுதல் என்ற ஒரு வழக்கமும் இதுபோல வேறுசில பகுதிகளில் நடைபெறுவதைக் காணமுடிகிறது.

### வேல் திருவிழா

முருகன் கோயிலில் இருக்கும் முருகனின் திருக்கை வேலை ஊர் மக்கள் அனைவரும் பல்லக்கில் வைத்துத் தூக்கி கொண்டு மலையுச்சியில் உள்ள காசிச்சுனைக்கு எடுத்துச் சென்று, அங்கு நீராட்டி அலங்காரங்கள் செய்து, அங்கேயே சோறு, கறி இவை களை ஆக்கி, வேலுக்கு வைத்துப் படைத்து எல்லோரும் கூடியி ருந்து உண்டு திரும்பும் விழா வேல் திருவிழா எனப்படுகிறது. இஃது ஒவ்வோர் ஆண்டும் புரட்டாசி மாதம் வெள்ளிக்கிழமை யொன்றில் நடைபெறுகிறது. இதற்கு மலைமேல் குமரன்,

4. தகவல்: எஸ். சுப்பிரமணியக் கோனார் (வயது 58), திருப்பரங்குன்றம், கள ஆய்வு நாள்: 14-4-83.

வேல் திருவிழா என்று பெயர்கள் வழங்குகின்றன. முருகப் பெருமான் நக்கீரரைக் காத்தல் பொருட்டு வேலினால் மலையைப் பிளந்தார். அவ்வனுபவத்தை நினைவு கூர்தற் பொருட்டு இவ்வேல் திருவிழா நடைபெறுகிறது என்று இங்கு சிலர் கூறுகிறார்கள். முருகன் கையிலுள்ள வேலை இங்குள்ள சுனைநீரில் நீராட்டி, பூசைகள், படையல்கள் செய்து ஊரோடு சேர்ந்து வணங்கும் வழக்கம் இங்கு நெடுங் காலமாக இருந்து வருகிறது. இவ்வாறு வேல் மலைக்குச் சென்று வந்தவுடனே எந்த வறட்சிக் காலத்திலும் இங்கு மழை பெய்து விடும் என்று கூறுகிறார்கள்.[5] இது மழைவளம் வேண்டி நீண்ட நெடுங் காலமாக நடப்பதாகக் கூறுகிறார்கள். இவர்களின் நம்பிக்கையைப் போல ஆண்டு தோறும் இவ்விழாக் கழிந்ததும் மழை வருகிறது. இவ்விழா பண்டைத் தமிழ் மக்கள் வேற்கோட்டம் அமைத்து வேலை வழிபட்டதைக் காட்டுவது போல் உள்ளது. இதற்கு இடைக் காலத்தில் புராணக் கதையைச் சேர்த்து நக்கீரரைக் காப்பதற்காகச் சென்ற வைபவத்தைக் கூறும் விழாவெனக் கூறப்படுகிறது. இதற்கும் புராணத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

வெள்ளிக்கிழமை காலையில் முருகன் திருக்கை வேலிற்கு அபிடேகம் செய்து, பட்டுடுத்தி அலங்காரம் செய்து முருகன் திருக்கையில் வைக்கிறார்கள். அருச்சனை, ஆராதனைகள் முடிந்தவுடன் ஏழு கண்மாய்க்காரர்கட்கும் மரியாதைகள் செய்யப்படுகின்றன. பின்னர் பட்டர் வேலைக் கையில் ஏந்திக் கோயிலை வலமாக வந்து வேலினைப் பல்லக்கில் வைக்கிறார். வேலை மலைக்கு மேலே கொண்டு செல்கிறார்கள். மலைக்குச் செல்லும் வழியில் கிராமத்துப் பெண்கள் கூடி நின்று குலவையிட்டு வேலுக்கு வரவேற்புச் செய்கிறார்கள். வேல் மலைமேலுள்ள காசுச்சுனைக்கு கொண்டு வரப்பட்டு, அங்குச் சுனைநீரில் வேலை வைத்து அபிடேகம் செய்து, பிறகு அங்குள்ள முருகன் கையில் அவ்வேலை வைக்கிறார்கள். அவ்வூர் மக்கள் அங்குச் செய்த சேற்றைப் படையல்செய்து, பின்னர் எல்லோரும் கூடியிருந்து உண்கிறார்கள். பிறகு மலையிலிருந்து வேல் கீழே கொண்டு வரப்பட்டு, மலையடிவாரத்திலுள்ள பழனியாண்டவர் கையில் வைக்கப்பட்டு, அங்கு அபிடேகம் ஆராதனை நடக்கிறது. பின்னர்ப் பூப்பல்லக்கில் வேல் ஊர்வலமாகக் கொண்டு வரப்பட்டு அன்றிரவு மூலவராகிய முருகன் கையில் கொண்டு வைக்கப்படுகிறது. மூலவர் முருகன் கையிலிருந்து

5. தகவல்: ஏ. கே. கரந்தமாலை (வயது 60), திருப்பரங்குன்றம், கள ஆய்வு நாள்: 15-10-82.

வேலை மலைக்குக் கொண்டு சென்றது முதல் திரும்பி வரும் வரை மூலவர் முருகனுக்கு ஆராதனைகள் செய்வதில்லை. இது மழைவளம், நாட்டு நலம் வேண்டி இவ்வூர் மக்களால் நடத்தப் படும் வழிபாடு, பிற்காலத்தில் சமயச் சார்புடையதாக மாற்றம் பெற்று வந்துள்ளது.

இக்கோயிலில் ஆகம வழிப்பட்ட வழிபாடுகள் இருந்தாலும், இங்குள்ள மக்களின் நாட்டுப்புற வழிபாட்டுப் போக்கை இவ்வாகம வழிபாடுகள் கட்டுப்படுத்த இயலவில்லை. ஆகவே இங்கு நாட்டுப்புற வழிபாடுகள் ஆகம வழிபாட்டிற்கு இணை யாகவும், சில காலங்களில் இதற்கு மேலாகவும் நடைபெறக் காண்கிறோம்.

### நேர்த்திக் கடன்கள்

இங்குள்ள மக்கள் ஒவ்வொரு தமிழ் மாதம் முதல் நாளன் றும் இங்குச் சரவணப் பொய்கையில் நீராடி, மலையை வலமாக வந்து, முருகனை நினைந்து பாடி, அவர்களால் இயன்ற அளவு அன்னதானம் செய்கிறார்கள்.

ஒவ்வொரு மாதமும் வருகின்ற கார்த்திகை தினத்தன்று முருகன் கோயிலில் வாயிற் படிகளில் விளக்கேற்றி வழிபாடு செய்கிறார்கள். அது தவிர சில ஊர் மக்கள் தங்களுக்கெனத் தனித்தனி மடங்களையமைத்துக் கொண்டு, ஒவ்வொரு கார்த்தி கையன்றும் அன்னதானம் செய்து வருகிறார்கள்.

ஒவ்வோர் ஆண்டும் ஐப்பசி மாதம் வருகின்ற கந்தசட்டித் திருவிழாவின் ஆறு நாட்களிலும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து முருகன் கோயிலில் நோன்பு இருக்கிறார்கள். இவர்கள் தினமும் சரவணப் பொய்கையில் காலை, மாலை இருவேளை நீராடி மலையை வலமாக வந்து முருகன் கோயிலினுள் இருக் கும் சந்நியாசிக்குளம் நீரை உண்டு விட்டு, அக்கோயில் மண்ட பங்களிலேயே பாடு கிடக்கிறார்கள். சாதி வேறுபாடின்றி, ஆண் பெண் வேறுபாடின்றி, மக்கள் ஆறுநாளும் இங்குத் தங்கியுள் ளனர். இவர்கள் இங்கு நான்கு வகையான விரதங்களை மேற் கொள்ளுகின்றனர்.

1. துளசி விரதம் (சந்நியாசிக் குளத்து நீர், துளசி மட்டும் உட்கொள்ளுதல்)
2. மிளகு விரதம் (மிளகு மட்டும் உட்கொள்ளுதல்)

3. பால் விரதம் (பால் மட்டும் உட்கொள்ளுதல்)

4. சோத்து விரதம் (ஒருவேளை சோறு மட்டும் உட்கொள்ளுதல்)

இவ்வாறு ஆறு நாட்களும் இருக்கிறார்கள். இதில் வாய் பேசாமல் மௌனமாக 'மௌன விரதம்' இருப்பவர்களும் உளர். கந்தர்சட்டி ஏழாம் நாளன்று முருகனுக்குச் சாத்தப்படும் தயிர்ச்சோறு (பாவாடை தரிசனம்) வாங்கி உண்டு விரதத்தை முடிக்கிறார்கள். இவர் நோய் நீக்கம், மனஅமைதி, பிள்ளைப் பேறு, வறுமை களைய வேண்டுதல் போன்ற காரணங்கட்காக இவ்விரதத்தை மேற் கொள்கிறார்கள்.[6] இவ்விரதத்திற்குக் கோயில் பட்டர்கள் கைகளில் காப்புக் கட்டி விட்டு விரதத்தை மேற்கொள்ளச் சொல்கிறார்கள். காப்புக் கட்டிக் கொள்ளாமல் வந்து விரதம் இருப்பவர்களும் இங்கு இருக்கிறார்கள். விரத முடிவில் இவர்கள் மாவினால் விளக்கு வைத்துக் காய் கனிகளை வைத்து முருகனை வழிபட்டு விட்டு இல்லம் திரும்புகிறார்கள்.

வைகாசி மாதம் விசாகத்தன்று இவ்வூர் மக்களும், சுற்றுப் புறக் கிராமங்களிலிருந்தும், திருநெல்வேலி, தூத்துக்குடி, அருப்புக்கோட்டை, விருதுநகர் போன்ற ஊர்களிலிருந்தும் மக்கள் வந்து பாற்குடங்களைக் கொண்டு அபிடேகங்கள் செய்கின்றனர். அன்று ஒரு நாள் மட்டும் ஆறுமுகசாமி மண்டபத்திற்கும் ஆறுமுகசாமியை 'அபிடேகக் குறட்டில்' வைத்துக் காலை ஆறு மணி முதல் இரவு வரை பல்வேறு அபிடேகங்களை, ஆயிரக்கணக்கில் மக்கள் செய்கிறார்கள்.

பங்குனி மாதம் நடைபெறும் முருகன் கோயில் பெருந் திருவிழாவில் (பிரம்மோத்சவம்) பன்னிரண்டாம் நாள் முருகன் திருக்கலியாணத்தன்று,இங்கு மஞ்சள், மஞ்சள் கயிறு இவற்றைச் சுமங்கலிப் பெண்களுக்கு ஒருவருக்கொருவர் அன்புடன் அளிப் பதை நேர்த்திக் கடனாகச் செய்து வருகிறார்கள். இவ்வாறு கொடுப்பதும், கொடுப்பதைப் பெறுவதும் சுமங்கலிப் பெண் களுக்குச் சிறப்பானது என்று எண்ணுகிறார்கள்.

இங்குப் பங்குனி உத்திரத்தன்றும், வைகாசி விசாகத் தன்றும், நூற்றுக்கணக்கான காவடிகளும், ஆயிரக்கணக்கான பாற்குடங்களும் வருகின்றன. இங்கு வருகின்ற காவடிகள் பலதிறப்பட்டவை:

---

6. தகவல்கள்: ஆய்வாளர் நேரில் கேட்டுத் தெரிந்து கொண்டது.

| | | | |
|---|---|---|---|
| 1. | பால்காவடி | — | பால் |
| 2. | பஞ்சாமிர்தக் காவடி | — | பஞ்சாமிர்தம் |
| 3. | சக்கரைக் காவடி | — | சக்கரை |
| 4. | எலுமிச்சைக் காவடி | — | எலுமிச்சைப்பழம் |
| 5. | இளநீர்க் காவடி | — | இரு இளநீர்கள் |
| 6. | வேற்காவடி | — | உடம்பு முழுமையும் வேலால் குத்திக்கொண்டு முருகன் உருவத்தையும், மயில் தோகையையும் கொண்டு வருதல். |
| 7. | சப்பரக் காவடி | — | 1. சப்பரத்தில் தொட்டில் பிள்ளையைக் கட்டி இழுத்து வருதல்.<br>2. சப்பரத்தில் முருகன் திருவுருவப் படம்.<br>3. சப்பரத்தில் முருகன் சிலை.<br>இவற்றை இழுத்துக் கொண்டு, தோளில் காவடி சுமந்து வருதல். |
| 8. | ஆறுமுகக் காவடி | — | ஆறுகாவடிகளை ஆறுபக்கத்தில் வைத்து அவற்றை நடுவே சக்கரம் போல் அமைத்துத் தலையில் தூக்கி வருதல். |

இங்கு பெண்களும் காவடி எடுத்து வருகின்றனர். இது தவிர இங்குள்ள பதினாறு கால் மண்டபத்தில், நெருப்புக் குழியில் இருபதுக்கும் மேற்பட்டவர்கள் இறங்குகிறார்கள். இதனைப் பூக்குழி என்று கூறுகிறார்கள். இதற்கு ‘அக்கினிக் காவடி’ என்றும் சிலர் பெயர் கூறுகிறார்கள். இவ்வாறு இங்கு விரதங்களும், நோன்புகளும், வழிபாடுகளும் இப்பகுதி மக்களின் பண்டையுணர்வுடன் கூடியதாய் அமைந்துள்ளது. இவற்றைக் காலப்போக்கில் சமய உணர்வுடன் சேர்த்துச் சமயச் சார்பு கொடுத்து வளர்த்து வந்துள்ளனர். இவ்வழிபாடுகளில் சில, இடைக்காலச் சமயப் போக்கை ஏற்று அதற்கேற்ப மாறியமைந்துள்ளது; சில வழிபாடுகள் புதியவற்றை ஏற்றுக் கொள்ளாமல் தம் பழைய நெறியிலே செல்வதையும் இங்குக் காணமுடிகிறது.

**செவ்வாய் சாட்டுதல்**

இவ்வூர்க் கிராம தேவதையான வெயிலுகந்த அம்மனுக்கு நடக்கும் திருவிழாவிற்கு “செவ்வாய் சாட்டுதல்” என்று கூறப்

படுகிறது. ஒவ்வோர் ஆண்டும் மாசி மாதம் பத்து நாட்கள் நடைபெறுகிறது. ஒவ்வொரு நாளும் ஊர் மக்கள் அனைவரும் கூடிப் பொங்கல் வைத்து, மாவிளக்கு ஏற்றிக் கொட்டுக் கொட்டிக் கும்மியடித்து, நாட்டுப் பாடல்கள் பாடிக் குலவை யிட்டுப் பாடி மகிழ்கிறார்கள். ஒவ்வோராண்டும் புரட்டாசி மாதம் செவ்வாய்க் கிழமைகளிலும், மாசி மாதம் பத்து நாட்களிலும் இவ்வம்மனுக்குப் படையல் செய்து வணங்குவதால் இதற்குச் 'செவ்வாய் சாட்டுதல்' என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். சாறு என்பது திருவிழா. 'சாறு' என்ற சொல் திருவிழா என்ற பொருளில் சங்க இலக்கியங்களில் வந்துள்ளது. ஆகவே சாறு என்பதுதான் சாற்றுதல் என்று விழா எடுத்தல் என்ற பொருளில் வந்துள்ளது. பின்னர்ச் சாற்றுதல் என்பது சாட்டுதல் என்று வழங்கியிருக்க வேண்டும்.[7] இவ்விழாவில் இறுதி நாளான பத்தாம் நாளன்று தேர்த்திருவிழா நடைபெறுகிறது. இந்நாளன்று நூற்றுக்கணக்கான ஆடுகளும், கோழிகளும் பலி கொடுக்கப்படுகின்றன. இவ்வம்மனின் சிறப்புகளையும், திருவிழாவையும் இங்குப் பாடப்பெறும் நாட்டுப்பாடல் (பிற்சேர்க்கை எண் 2) தெளிவாகக் காட்டுகிறது. இத்தேர்த்திருவிழாவன்று திருமலை நாயக்கரால் ஏற்படுத்தப்பட்ட நாடகம் வலையங்குளம் கிராம மக்களால் இங்கு நடத்தப்படுகிறது. இவ்விழாவில் மக்களின் நேர்த்திக் கடன்கள் அதிகம் காணப்படுகின்றன. இவைகள் பெரும்பாலும் நோய் நீக்கம், மழை வளம் இவை பற்றியதாகவே அமைந்துள்ளன.

**பாரிவேட்டை கப்பரைப்பூசை**

இவ்வூர் குருநாதசுவாமி கோயிலிலிருக்கும் அங்காள ஈசுவரி, பேய்ச்சியம்மன், இராக்காயி அம்மன், கருப்பணசாமி, சப்பாணி சாமிகளுக்கு நடக்கும் திருவிழா பாரிவேட்டை, கப்பரைப்பூசை என்று கூறப்படுகிறது. இத்திருவிழாக்கள் மாசி மாதம் சிவராத்திரி தினத்தையொட்டி ஐந்து நாட்கள் நடைபெறுகின்றன. பாரிவேட்டைத் தினத்தன்று அங்காள ஈசுவரி அம்மனைத் தூக்கிக் கொண்டு, இக்கோயில் பூசாரியும், மக்களும் இங்குள்ள காட்டிற்குச் செல்கிறார்கள். (இக்காட்டுப் பகுதிகள் எல்லாம் தற்பொழுது அழிக்கப்பட்டு அங்குப் புகை வண்டி நிலையம் உள்ளது.) அங்கு மான் வேட்டையாடுவதாகவும் அங்கு வேட்டையாடச் சென்ற இடத்தில் அம்மனின்

7. தகவல்: தமிழண்ணல், கள ஆய்வு நாள்: 26-3-84.

குதிரையைப் பிடித்து வைத்து விட்டதாகவும், அம்மன் அங்குச் சென்று தன் குதிரையின் அடையாளத்தைச் சொல்லி அக் குதிரை பேசும் என்று சொல்வதாகவும் கூறுகிறார்கள். உடனே காட்டுப்பகுதி மக்கள் குதிரையைப் பேசச் சொல்கிறார்கள். அங்குள்ள மறைவான இடத்தில் இருந்துகொண்டு நாதசுவர வித்துவான் நாதசுவரத்தில் பேசுகிறார். உடனே காட்டுப் பகுதி மக்கள் அம்மனை வணங்குகிறார்கள். பிறகு எல்லோரும் சேர்ந்து கோயிலுக்கு வருகிறார்கள். இவ்வாறு ஒவ்வோ ராண்டும் நடித்துக் காட்டப்படுகிறது. அக்காலத்தில் அரசர் கள் பரியில் வேட்டைக்குச் சென்று வயல்வெளிகளை அழிக்கும் காட்டுப்பன்றி போன்ற விலங்குகளை வேட்டை யாடி மக்களைக் காப்பது கடமையாக இருந்தது. அம்முறை யில்தான் இன்றும் பாரிவேட்டை என்பது நடைபெறுகிறது.[8] இப்பொழுதும் இங்குப் பாரிவேட்டைக்குச் செல்லும் பொழுது வேல், வில், அம்பு, தாரை, தம்பட்டையுடன் செல்கிறார்கள். இந்நிகழ்ச்சி முடிந்த இரவு இங்குள்ள அங்காள ஈசுவரி, பேய்ச் சியம்மன், இராக்காயியம்மன், கருப்பணசாமி, சப்பாணிசாமி ஆகிய தெய்வங்களின் முகங்களை மட்டும் மாவினால் செய்து வண்ணம் தீட்டி, அவற்றைப் பெரிய கம்புகளில் வைத்து கட்டி வைத்துள்ளனர். இதற்கு ''ஐந்து முகக் கப்பரை' என்று கூறு கிறார்கள். பின்னர் ஒரு பெரிய கூடையில் சோற்றை வைத்து அவற்றின் நடுவில் கோழியின் தலை, கால்களையும், அவித்த முட்டையையும் வைத்துச் சுற்றி மாவினால் செய்த பலகாரங் களையும் வைத்துள்ளனர். 'இதற்குச் சோற்றுக் கப்பரை' என்று, கூறுகிறார்கள். இரவு நடுநிசியில் இவற்றிற்குப் பூசை செய்து இவற்றைத் தலையில் தூக்கிக் கொண்டு பூசாரிகள் ஊரை வலமாக வருகிறார்கள். ஊரின் முக்கியமான இடங்களில் நின்று கோடங்கிகள் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடி இப் பூசாரிகட்கு ஆவேசம் வரச் செய்கிறார்கள். பின்னர் இவற்றையெடுத்துக் கொண்டு, இவ்வூர்ப் புறத்தேயுள்ள சுடுகாட்டிற்குச் செல்கிறார்கள். அங்குப் பன்றிக் குட்டிகளைப் பலி கொடுத்து, அந்தப் பலிக் குருதியில் சோற்றை உருட்டி வானத்தில் எறிகிறார்கள். 'இது பலிசோறு எறிதல்' என்று கூறப்படுகிறது, இவையெறிந்து முடிந்தவுடன், அவ்விடத்தை விட்டு எல்லோரும் திரும்பிப் பார்க்காமல் வந்து விடுகிறார் கள். அவ்விடத்திலேயே ஐந்துமுகக் கப்பரையை வைத்து விட்டுச் சோற்றுக் கப்பரையை மட்டும் எடுத்துக் கொண்டு வந்து

---

8. தகவல்: கோ. விசயவேணுகோபால், கள ஆய்வு நாள் 25-3-84.

விடுகிறார்கள். எறிகின்ற பலிச்சோற்றை அங்காள ஈசுவரி, பேய்ச்சி, இராக்காயி, கருப்பணசாமி, சப்பாணிசாமி ஆகிய தெய்வங்கள் வந்து பெற்றுச் செல்வதாகக் கூறப்படுகிறது. பின்னர் அங்குள்ள கருப்பணசாமி கோயிலில் கொண்டுவந்து சோற்றுக் கப்பரையை இறக்கி வைத்துப் பூசை செய்கிறார்கள். பின்னர் இச்சோறு அனைத்தும் அங்குள்ள மக்களுக்கு வழங்கப் படுகிறது. இவ்வழிபாட்டில் ஆண், பெண் அனைவரும் கலந்து கொள்கிறார்கள். ஆனால் சுடுகாட்டிற்குப் பெண்கள் வர அனுமதிக்கவில்லை; ஆண்கள் மட்டுமே செல்கிறார்கள். இவ்வழிபாட்டில் இடம்பெறும் பலி கொடுத்தல், படையல் செய்தல், வெறியாட்டு நடத்துதல் போன்றவைகள் பண்டைக் கால வழிபாட்டைக் காட்டுவனவாக அமைகின்றன.

இங்கு நடைபெறும் நாட்டுப்புறவழிபாட்டில் இவ்வூரிலிருந் தும், இவ்வூரைச் சுற்றியுள்ள சிற்றூர்களிலிருந்தும் மக்கள் பெருந்திரளாக வந்து கூடுகிறார்கள். இங்கு வழிபடும் மக்களின் உணர்வுகள், விருப்பங்கள் கட்டுப்படுத்தப்படவில்லை. அவர்கள் விரும்பியபடியெல்லாம் வழிபாடு செய்வதற்கு நாட்டுப்புற வழி பாடுகள் இடம்கொடுக்கின்றன. வேதமோ, ஆகமமோ, இலக் கியமோ இவர்களின் உணர்வுகளுக்குக் குறுக்கே நிற்க முடிய வில்லை. இதுவரை இவ்வூர் மக்களின் கூட்டு வழிபாடான சில வழிபாடுகள் மட்டும் இங்கு விளக்கிக் கூறப்பெற்றன. இனி இம் மக்களின் தனிப்பட்ட வழிபாடுகள் இங்கு விளக்கிக் கூறப் படுகின்றன.

### நேர்த்திக் கடன்கள்

மக்கள் தம் வேண்டுகோள் நிறைவேறச் சிலவற்றை இறை வனிடம் நேர்ந்து கொள்ளும் வழக்கம் எங்கும் உள்ளது. அது போல் இங்குள்ள சில பழக்கங்கள் காணப்படுகின்றன. இங்குள்ள கன்னிமார் கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் முழுமதி நாளன்று பலர் கன்னிமார் பெண்டுகளுக்குக் காவடி எடுத்தல், தீச்சட்டி தூக்கி வருதல், மஞ்சள் ஆடை உடுத்தி வேப்பிலை தாங்கி ஈர உடையுடன் வந்து வணங்குதல் போன்ற வைகளையும் செய்து வருகிறார்கள். இதே வழக்கம் இங்குள்ள வெயிலுகந்த அம்மன் கோயிலிலும் நடைபெறுகிறது. வெயிலு கந்த அம்மன் கோயிலில், தம்முடைய பிள்ளைகளுக்கு கரும் புள்ளி, வெண்புள்ளி குத்தி ஊரார் பார்க்கக் கூட்டி வரும் வழக்கமும் உள்ளது.

செவ்வாய் சாட்டுதல், பாரிவேட்டை, கப்பரைப்பூசை போன்ற வழிபாடுகள் முருகன் கோயிலோடு தொடர்பின்றி இங்குள்ள கிராமப்புறக் கோயில்களில் நடைபெறும் முழுமை யான நாட்டுப்புற வழிபாடுகளாகக் காணப்படுகின்றன. இவை பண்டைய நாட்டுப்புற வழிபாடுகளாகக் காணப்படுகின்றன. இவை பண்டைய நாட்டுப்புற வழிபாடுகளின் எச்சங்கள் எனக் கருதலாம்.

# பிற்சேர்க்கை-I

## இலக்கியங்களில் பரங்குன்றமும் பரங்குன்று பற்றிய இலக்கியங்களும் பட்டியல்

| வரிசை எண் | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 1. | அகநானூறு | | |
| | 59 ஆம் பாடல் | மருதனிள நாகனார் | |
| | 149ஆம் பாடல் | எருக்காட்டூர் தாயங்கண்ணனார் | |
| 2. | கலித்தொகை | | |
| | 27 ஆம் பாடல் | மருதனிள நாகனார் | |
| | 93 ஆம் பாடல் | பெருங்கடுங்கோன் | |
| 3. | பரிபாடல் | | |
| | 5 ஆம் பாடல் | கடுவனிளவெயினனார் | |
| | 6 ஆம் பாடல்(வையை) | நல்லந்துவனார் | |
| | 8 ஆம் பாடல் | ,, | |
| | 9 ஆம் பாடல் | குன்றம்பூதனார் | |
| | 18 ஆம் பாடல் | ,, | |
| | 14 ஆம் பாடல் | கேசவனார் | |
| | 17 ஆம் பாடல் | நல்லழிசியார் | |
| | 19 ஆம் பாடல் | நப்பண்ணனார் | |
| | 21 ஆம் பாடல் | நல்லச்சுதனார் | |

| வ. எண் | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 4. | மதுரைக் காஞ்சி 262 முதல் 270 வரை | மாங்குடி மருதனார் | |
| 5. | பரிபாடல் திரட்டு 11 ஆம் பாடல் (வையை) | -- | |
| 6. | திருமுருகாற்றுப்படை | நக்கீரர் | |
| 7. | திருமுருகாற்றுப்படை (பழைய வெண்பா 9 ஆம் பாடல்) | -- | |
| 8. | திருஞானசம்பந்தர் தேவாரம் எண்: 100 (ஒரு பதிகம்) | திருஞானசம்பந்தர் | |
| 9. | திருநாவுக்கரசர் தேவாரம் ஒரு பாடல், எண்: 165 | திருநாவுக்கரசர் | திருவிடைமருதூர்ப் பதிசம்-ஒரு பாடல் |
| 10. | சுந்தரர் தேவாரம் எண்: 11-21 | சுந்தரர் | |
| 11. | திருக்கோவையார் பாடல்கள் 11, 144, 178, 292 & 299 | மாணிக்கவாசகர் | |
| 12. | கல்லாடம் 1, 6, 8, 41, 48, 56, 70, 81. | கல்லாடனார் | |
| 13. | பெரியபுராணம்-கழறிற்றறிவார் புராணம் (மூன்று பாடல்கள்) | சேக்கிழார் | |
| 14. | திருவிளையாடற் புரணங்கள் | செல்விநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி, பரஞ்சோதியார் | |

| வ. எண். | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 15. | கந்தபுராணம்-கரம்புகு படலம் (திருப்பரங்குன்று படலம் தெய்வயானை திருமணப் படலம்) | கச்சியப்பர் | |
| 16. | கந்தபுராணச் சுருக்கம் | சம்பந்த சரணாலயர் | |
| 17. | திருப்புகழ் (16 பாடல்கள்) | அருணகிரிநாதர் | |
| 18. | திருவகுப்பு (ஒரு வகுப்பு) | ,, | |
| 19. | திருப்பரங்குன்றம்<br>முருகன் பதிகம் 3-39 பாடல்கள்<br>முருகன் பதிகம் 1-13 பாடல்கள்<br>படைவீட்டுப் பதிகம் 13 பாடல்கள்<br>படைவீட்டுத் திருப்புகழ் 1 பாடல் | வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் (கௌமார மடாலயம் திருவாமாத்தூர்) | 1839-1898 |
| 20. | திருப்பரங்கிரிப் புராணம் | நிரம்பவழகிய தேசிகர் | |
| 21. | திருப்பரங்கிரி மாலை | வள்ளிநாயகம் பிள்ளை | 1894 (மு.ப.) |
| 22. | திருப்பரங்கிரி முருகக்கடவுள் பேரில் தாய் மகளேசல் | ,, | ,, |
| 23. | திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ் | மு.ரா. அருணாசலக் கவிராயர் | 1899-ம் ஆண்டு |
| 24. | திருப்பரங்கிரிக் குமரவேள் தாலாட்டு | இராமசாமிச் செட்டியார் | 1908 ,, |
| 25. | திருப்பரங்குன்றம் சுப்பிரமணியர் தோத்திரம் | த. சு. மாடசாமிப்பிள்ளை | 1909 ,, |

| வ. எண். | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு | |
|---|---|---|---|---|
| 26. | கந்தர் சட்டிக் கவசம் | பாலன் தேவராய சுவாமிகள் | -- | |
| 27. | திருப்பரங்குன்றம் சுப்பிரமணியக் கடவுள் பேரில் காவடிச் சிந்து | சித்தனாசாரியார் | 1909-ம் | ஆண்டு |
| 28. | திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய தோத்திரம் | இ. ஆர். எம். குருசாமிக் கோன் | 1909 | ,, |
| 29. | திருப்பரங்கிரி பிரபாவம் | கூடலிங்கம் பிள்ளை | 1909 | ,, |
| 30. | திருப்பரங்குன்றம் சிக்கந்தர் சாயபு ஒலிவர்கள் மீது பலசந்த வழி நடை அலங்காரச் சிந்து | வ.அ. கபீபு முகம்மது ராவுத்தர் | 1909 | ,, |
| 31. | பரங்கிரிப் பதிற்றுப்பத்தந்தாதி | மு. கோவிந்தசாமி ஐயர் | 1910 | ,, |
| 32. | சிவசுப்பிரமணியர் திருப்பரங்கிரி மாலை | சேவுகப் பெருமாள் உபாத்தியாயர் | 1910 | ,, |
| 33. | திருப்பரங்குன்றம் சிவ சுப்பிர மணியக் கடவுள் மீது காவடிச் சிந்து | நாராயணசாமி முதலியார் | 1911 | ,, |
| 34. | திருப்பரங்குன்றம் முருகக் கடவுள் பேரில் திருவருட்பதிகம் | சுப்பிரமணியக் கவிராயர் | 1911 | ,, |
| 35. | திருப்பரங்குன்றம் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி பேரில் காவடிச் சிந்தென்னும் பாவடிச்சந்தம் | லிங்கதாஸ் சாமியார் | 1912 | ,, |

| வ.எண். | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 36. | திருப்பரங்குன்றம் சுப்பிரமணியக் கடவுள் பேரில் நூதனக் காவடிச் சிந்து | குப்பாத் தேவர் | 1912 ஆம் ஆண்டு |
| 37. | திருப்பரங்குன்றம் வழி நடைச் சிந்து | ஏ. பொன்னுச்சாமித் தேவர் | 1912 ,, |
| 38. | திருப்பரங்குன்றம் மஹாத்துவச் சிந்து | ஆர். சொக்கலிங்கம் பிள்ளை | 1912 ,, |
| 39. | திருப்பரங்கிரிக் கட்புலமாலை | L. A. வெங்குசாமி ஐயர் | 1912 ,, |
| 40. | மேலைப்பரங்கிரி மாலை | சி. பி. அப்பாவுக் கவிராயர் | 1912 ,, |
| 41. | பரங்கிரி முருகன் மீது அருட் பதிகம் | சுப்பிரமணிய செட்டியார் | 1913 ,, |
| 42. | திருப்பரங்கிரி சுப்பிரமணிய பஜனைக் கீர்த்தனம் | S. முத்தையா பிள்ளை | 1913 ,, |
| 43. | திருப்பரங்குன்றம் சுப்பிரமண்யர் திருவருளை முன்னிட்ட வினை நீத்தல் விண்ணப்ப பதிகம் | சுப்பிரதீப நாயக்கர் | 1913 ,, |
| 44. | திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய சுவாமி பேரில் திருப்பள்ளி யெழுச்சிப் பதிகங்கள் | லிங்கதாஸ் | 1913 ,, |

| வ. எண், | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 45. | திருப்பரங்குன்றாதிபன் மாலை | எஸ். அய்யாசாமி பிள்ளை | 1914 ஆம் ஆண்டு |
| 46. | திருப்பரங்கிரி சுப்பிரமணியக் கடவுளென்னும் முருகேசர் பதிகம் | சுப்பையா நாயுடு | 1916 ,, |
| 47. | பரங்கிரிப் பதிகம் | வெள்ளையாண்டிப் பிள்ளை | 1916 ,, |
| 48. | மதுரை மாநகரைச் சார்ந்த திருப்பரங்குன்றம் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி பேரில் பார்ஸி, இந்துஸ்தான் பஜனைக் கீர்த்தனைகள் | வேலூர் நாராயணசாமி பிள்ளை | 1917 ,, |
| 49. | கந்தகிரி என்னும் திருப்பரங்குன்றம் சண்முகக் கடவுள் காவடிச்சிந்து | இராஜவடிவேல் தாசர் | 1918 ,, |
| 50. | சிவசுப்ரமணியக் கடவுள்மீது காவடிச்சிந்து | நா. கிருஷ்ணசாமி நாயுடு | 1919 ,, |
| 51. | திருப்பரங்குன்றம் சிவசுப்ரமண்யர் ஸ்வரஸாகித்ய பஜனைக் கீர்த்தனை மாலை | கிருஷ்ண பாகவதர் | 1919 ,, |
| 52. | திருப்பரங்கிரி பதிகம் | முத்துசாமி | 1924 ,, |
| 53. | திருப்பரங்கிரி முருகக் கடவுள் யமகப் பதிகம் | க. மா. முத்துசாமி மூப்பனார் | 1925 ,, |

| வ. எண். | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 54. | திருப்பரங்குன்றப் பதிகம் | சரணாலய சுவாமிகள் | 1925 ஆம் ஆண்டு |
| 55. | திருப்பரங்குன்றம் ஸ்ரீ சுப்பிரமணியர் மீதுஆனந்தக் களிப்பு | வேம்பத்தூர் சிலேடைப்புலி பிச்சுவையர் | 1926 ,, |
| 56. | பரங்கிரிப் பாமாலை | மு. ரா. அருணாசலக் கவிராயர் | 1927 ,, |
| 57. | பரங்கிரி கலித்துறை அந்தாதி | ,, | 1927 ,, |
| 58. | பரங்கிரி பதிற்றுப்பத்தந்தாதி | ,, | 1927 ,, |
| 59. | பரங்கிரி வெண்பா அந்தாதி | ,, | 1927 ,, |
| 60. | பரங்கிரி அலங்காரம் | ,, | ,, |
| 61. | பரங்கிரி மும்மணிக்கோவை | ,, | ,, |
| 62. | பரங்கிரி அநுபூதி | ,, | ,, |
| 63. | பரங்கிரிக் கோவை | ,, | ,, |
| 64. | திருப்பரங்குன்றம் வழிநடை காவடிச் சிந்து | க. ஒய். முத்துச் செல்லமாச் சாரி | 1930 ,, |
| 65. | திருப்பரங்குன்றம் ஸ்தல புராணம் | பி. ராமசாமி ஐயர் | 1931 ,, |
| 66. | திருப்பரங்கிரி மும்மணிக் கோவை | பாலகவி வே. இராமநாதன் செட்டியார் | 1931 ,, |
| 67. | ஸத்யகிரி மாஹாத்மியம் (கிரந்த மூலம்) திருப்பரங்குன்ற ஸ்தல புராணம் | ஆசிரியர் பெயர் தெரிய வில்லை | 1931 ,, |

| வ. எண். | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
| --- | --- | --- | --- |
| 68. | திருப்பரங்குன்றம் முருகக் கடவுள்மீது பாடியருளிய முருகமணிமாலை | மதுரை மதுரஞ் சுந்தர பாண்டியனார் | 1936 ஆம் ஆண்டு |
| 69. | திருப்பரங்குன்றம் பாமாலை (ஏட்டுச் சுவடி) | ஆசிரியர் பெயர் தெரியவில்லை | -- மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை சுவடிகள் நூலகத்தில் உள்ளது |
| 70. | திருப்பரங்குன்றம் கந்தசாமி பதிகம் | அனந்தநாராயணசர்மா | பரிதாவி ஆண்டு |
| 71. | திருப்பரங்கிரிமாலை | மு. கோவிந்தசாமி ஐயர் | துந்துபி ஆண்டு |
| 72. | திருப்பரங்கிரியில் எழுந்தருளி-யிருக்கின்ற சுப்பிரமணிய சுவாமி துதிமஞ்சரி | மு. ரா. அருணாசலக் கவிராயர் | ,, |
| 73. | பரங்கிரிப்பதிகம் | பி. பாஸ்கர ஐயர் | ,, |
| 74. | திருப்பரங்கிரிப் புராணம் (கையெழுத்துப்படி) | ஆசிரியர் பெயர் இல்லை | உ. வே. சா. நூல்நிலையம் |
| 75. | திருப்பரங்குன்றம் முருகன் பாட்டு (ஓலைச்சுவடி) | ,, | கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை, |

| வ. எண் | நூற் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 76. | திருப்பரங்குன்றத் திருவாயிரம் (கையெழுத்துப்படி) | கனகராஜையர் | 1939-ம் ஆண்டு |
| 77. | திருப்பரங்குன்றக் கலம்பகம் | ,, | 1965 ,, |
| 78. | திருப்பரங்குன்றக் குறவஞ்சி | ,, | |
| 79. | திருப்பரங்குன்றக் கோவை | ,, | |
| 80. | திருப்பரங்குன்ற மாலை (கையெழுத்துப்படிகள்) | ,, | |
| 81. | பரங்கிரிச் சிலேடை வெண்பாக்களும் தனிச் சிலேடைகளும் | மு. முத்துசாமி பாவலர் | 1958 ,, |
| 82. | திருப்பரங்கிரி திருப்புகழ் | இராம. சுப்பிரமணியம் (மணிமன்ற அடிகள்) | 1979 ,, |

# பிற்சேர்க்கை : II

## (நாட்டுப்புறப் பாடல்கள்)

இப்பகுதியில் முருகன் பாட்டு, கந்தன் திருவிழா ஆடும் மயிலே, பாம்பலம்மன் பாட்டு, நாகர் பாட்டு, நாகத்தாள் பாட்டு, மாரியம்மன் பாட்டு, வெயிலுகந்த அம்மன் பாட்டு, சப்பாணிப் பாட்டு ஆகிய பாடல்கள் கொடுக்கப்படுகின்றன. இவற்றைப் பாடியவர் மதுரை மாடக்குளம் கிராமத்திற்கு அருகேயுள்ள புதுக்குளம் என்ற சிறிய கிராமத்தைச் சேர்ந்த அம்மாப்பிள்ளை என்ற பெயருடைய 75 வயது அம்மையார்.

### 1. முருகன் பாட்டு

திருப்பரங்குன்றத்தில் நடைபெறும் பங்குனி உத்திரத் தேர்த் திருவிழாவில் பாடும் பாடல்.

தந்தன தானானே தனதன
தந்தன தானானே
தந்தன தானானே தனதன
தந்தன தானானே

காலைப் பொழுதினிலே வள்ளியவள்
வாசத் தெளிக்கையிலே
கட்டில்ல படுத்துக்கிட்டு முருகன்
எட்டியெட்டிப் பார்க்கிறாராம்

வாசலைக் கூட்டியள்ளி வள்ளிப்பொண்ணு
கோலங்கள் போட்டாளாம்
கோலத்தைப் பார்த்திடவே முருகன்
குனிஞ்சு நிற்கிறாராம்

வாய்க்கால் கரையோரம் வள்ளியவள்
வட்டி விளக்கையிலே
கட்டெறும்பு போலே முருகன்
கழுத்திலே ஊறுறாராம்

ஆத்தாங் கரையோரம் வள்ளியவள்
சருவம் விளக்கையிலே
சிட்டுக்குருவிபோல முருகன்
வட்டங்கள் போடுறாராம்

குளத்தாங் கரையோரம் வள்ளியவள்
குடமும் விளக்கையிலே
கூடவும் நிற்கிறாராம் முருகன்
குனிஞ்சு பார்க்கிறாராம்

தண்ணிக் கரையோரம் வள்ளியவள்
தட்டு விளக்கையிலே
மூட்டைப்பூச்சி போலே முருகன்
முந்தாங்கியிலே ஊறுறாராம்

செவ்வாய்க்கிழமையாம் வள்ளியவள்
திண்ணை மொழுகையிலே
சின்னப்பயல் போலே முருகன்
கூடவும் மொழுகுறாராம்

வெள்ளிக்கிழமையன்னைக்கு வள்ளியவள்
வீடு மொழுகையிலே
அத்தைமகன் போல முருகன்
வெத்திலை கேக்கிறாராம்

வழுக்கப் பாறையிலே வள்ளியவள்
குளிக்கப் போகையிலே
கூந்தல் அழகைக்கண்டு முருகன்
கூடத் தொய்ந்தாராம்

தெங்காக் கம்மாயிலே வள்ளியவள்
தீர்த்தங்கள் ஆடையிலே
மின்னிட்டாம் பூச்சிபோல முருகன்
முன்னேயும் நடக்கிறாராம்

கண்ணுக்கு மைதீட்டி வள்ளியவள்
கண்ணாடி பார்க்கையிலே
கண்ணாடி உள்ளேயிருந்து வேலவரும்
காட்சி கொடுக்கிறாராம்

சந்தன மேடையிலே வள்ளியவள்
சடுகுடு ஆடையிலே
தாதிப் பொண்ணுபோல முருகன்
கூடவும் ஆடுறாராம்

பழனிமலை யோரம் வேலவரும்
பந்து விளையாடையிலே
பக்கம் வரச்சொல்லி அவரும்
பாடி முழிக்கிறாராம்

பழனிமலை யோரம் வள்ளியவள்
பந்து விளையாடையிலே
பந்தைப் பிடுங்கிக்கிட்டு முருகன்
பாங்காய்ப் பார்க்கிறாராம்

குண்டுமலை மேலே குமரன்
குண்டு விளையாடையிலே
கூப்பிட்டு அழைக்கிறாராம் வள்ளியைக்
கூடவரச் சொல்லுறாராம்

பஞ்சணை மெத்தையிலே வள்ளியவள்
படுத்து உறங்கையிலே
சித்தெறும்பு போலே முருகன்
சேர்ந்து உறங்குறாராம்

சரவணப் பொய்கையிலே வள்ளியவள்
தானங்கள் செய்கையிலே
தாதிப் பொண்ணு போல முருகன்
கூடவும் நிற்கிறாராம்

## 2. முருகன் பாட்டு

(திருப்பரங்குன்றத்தில் ஐப்பசி மாதம் நடைபெறும் கந்தசட்டித் திருவிழாவின் போது நோன்பு இருக்கும் மக்கள் பாடும் பாட்டு)

தன்ன னன்னே னான னன்னே-னானேனா னன்னே
　　னான னன்னே னான னன்னே-னானேனா னன்னே
ஆறுபடை வீட்டிலேயும் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
　　அமர்ந்து விளையாடுவதும் முருக வேலனே
சூரனை வெல்வதற்குக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
　　சுப்பிரமணியர் பிறந்துவந்தார் முருகவேலனே
ஆராரும் வெல்லலையே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
　　சுப்பிரமணியர் வெல்லப்போறார் முருகவேலனே
ஆவருகள் தேவர்களைக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
　　அடைச்சுப்புட்டான் சிலையிலேயே முருகவேலனே
மயங்கியழுகிறாராக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
　　ஆராலும் முடியலையே-முருகவேலனே

பிறக்கிறாராம் முருகனுமே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
பிறக்கப்போறார் சரவணையில் முருகவேலனே
இந்திரனை தேவர்கள் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அடைச்சிருக்கான் சிறையிலேயே முருகவேலனே
என்னாலே முடியவில்லை கந்தவேலனே-சாமி கந்தவேலனே
நீவந்து பிறக்கவேணும் முருகவேலனே
சக்தியுள்ள மீனாட்சி கந்தவேலனே-சாமி கந்தவேலனே
பிறக்கும்படி உத்திரவாம் முருகவேலனே
சரவணப் பொய்கையிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
பிறந்திருக்கார் முருகனுமே முருகவேலனே
ஓடிவந்து குழந்தையையும் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
உமையாத்தா எடுக்கிறாளாம் முருகவேலனே
இன்பமுள்ள குழந்தையையும் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
எடுத்து வளர்க்கிறாராம் முருகவேலனே
முருகன்நல்லா ஓடிவந்து கந்தவேலனே-சாமி கந்தவேலனே
முதற்படை வீட்டிலே இருக்கார் முருகவேலனே
சக்திசிவனோட கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சக்தியான விரதமிருக்கார் முருகவேலனே
தாயை நினைச்சாராம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
தகப்பனை எண்ணினாராம் முருகவேலனே
ஜெயிச்சு வரவேணுனாராம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வரங்கொடுக்க வேணும்னாராம் முருகவேலனே
உறங்காமல் உறங்காமல் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
ஒருகோடி விரதமிருக்கார் முருகவேலனே
ஆறுகாலமும் பூசைதானே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அரும்பூசை செய்யுறாரே முருகவேலனே
உச்சிக்காலப் பூசையிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
ஒரு பூசை தான்செய்வார் முருகவேலனே
ஆராரும் போயுமங்கே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அவனைச்செயிக்க முடியலையே முருகவேலனே
வாயுவு பகவானை கந்தவேலனே சாமி கந்தவேலனே
வாசல் கூட்ட வைச்சிருக்கான் முருகவேலனே
அக்கினி பகவானைக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அடுப்பூத வைச்சிருக்கான் முருகவேலனே
வருண பகவானைக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வாசல் தொளிக்க வைச்சிருக்கான் முருகவேலனே
எப்படிச் செயிப்போமென்று கந்தவேலனே-சாமி கந்தவேலனே
இருமாதம் விரதமிருக்கார் முருகவேலனே

இடதுபுறம் ஈசுவரன் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வலதுபுறம் சக்திநின்றாள் முருகவேலனே
மகன்போற வேலையங்கே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
செயிச்சுவர வேணுமென்றாள் முருகவேலனே
மெத்தக் கவலையோட கந்தவேலனே-சாமி கந்தவேலனே
ஈசுவரி வரங்கொடுத்தாள் முருகவேலனே
அஞ்சாம்நாளு விரதத்தில் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அன்னையிடம் வேலுவாங்கினார் முருகவேலனே
அஞ்சாம்நாள் வாங்கினாராம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அருமையான வேலுகளை முருகவேலனே
ஆறாம்நாள் போறாராமே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அந்த சூரனை விரட்டிடவே முருகவேலனே
அங்கே வீதிக்குவீதியெல்லாம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
விரட்டியடிக்கிறாராம் முருகவேலனே
சூரனும் பயந்து நல்லா கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சுற்றிச்சுற்றி ஓடுறானாம் முருகவேலனே
வெள்ளைக் குதிரையேறிக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வீரவாகு வாராறாம் முருகவேலனே
அண்ணன் கணேசரும் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அருகே வந்து நிற்கிறாராம் முருகவேலனே
ஓடியொளிஞ்சவனைக் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
ஒருபிடியில் பிடிச்சுப்பட்டார் முருகவேலனே
வெட்டுறாராம் வேலுனாலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வென்றுவிட்டார் சூரனையே முருகவேலனே
வெட்டிவந்தார் வேலுனாலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வேலைக் கைப் பிடித்துவந்தார் முருகவேலனே
சக்திகொடுத்த வேலுனாலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
செயிச்சுநல்லா வந்துட்டாரு முருகவேலனே
ஆவருகள் தேவருகள் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
அடைபட்டுக் கிடந்தவர்கள் முருகவேலனே
அஞ்சு பேரையும் திறந்துவிட்டார் கந்தவேலனே-சாமி
கந்தவேலனே
அனைவரையும் போகவிட்டார் முருகவேலனே
சூரனைக்கொன்று விட்டார் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சோரா வள்ளியைக் கைபிடித்தார் முருகவேலனே
குடலைகொண்டு மலரெடுப்போம் கந்தவேலனே-சாமி கந்த
வேலனே
குருபூசைக்கு நடந்திடுவோம் முருகவேலனே

குருபூசைக்கு நடக்கையிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
குனிஞ்சு நல்லாக்கும்பிடுவோம் முருகவேலனே
செம்புகொண்டு மலரெடுப்போம் கந்தவேலனே-சாமி கந்த வேலனே
சிவபூசைக்கு நடந்திடுவோம் முருகவேலனே
சிவபூசைக்கு நடக்கையிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
செவக்கிநின்று வணங்கிடுவோம் முருகவேலனே
இலையுங்கொண்டு மலரெடுத்து கந்தவேலனே-சாமி கந்த வேலனே
இடும்பன் பூசைக்கு நடந்திடுவோம் முருகவேலனே
இடும்பன்பூசை செய்யயிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
இருந்து பணிஞ்சுடுவோம் முருகவேலனே
சரவணப் பொய்கையிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
தானங்களும் செய்திடுவோம் முருகவேலனே
குளிச்சி முழுகிக்கொண்டு கந்தவேலனே-சாமி கந்தவேலனே
குமரமலை சுற்றிவந்தோம் முருகவேலனே
சுற்றிச்சுற்றி வருகையிலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சுகங்களையும் கொடுக்கவேணும் முருகவேலனே
கந்தனுக்கே அடிமையென்று கந்தவேலனே-சாமி கந்தவேலனே
காப்புகளை கட்டப்போறோம் முருகவேலனே
காப்புக்களை கட்டிக்கொண்டு கந்தவேலனே-சாமி கந்தவேலனே
கன்னிப்பொண்ணு விரதமிருக்கோம் முருகவேலனே
சூரனைச்செயிக்கவென்று கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சுப்பிரமணியர் விரதமிருந்தார் முருகவேலனே
வந்தவினை தீர்ந்திடவே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
வலுவாக விரதமிருக்கோம் முருகவேலனே
பாலுவிரதமிருக்கோம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
பத்துக்கோடி நோன்புஇருக்கோம் முருகவேலனே
பத்துக்கோடி நோன்பிருந்தோம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
பாவங்களைத் தீர்க்கவேணும் முருகவேலனே
மிளகுவிரதம் இருந்தோம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
மூன்றுலட்சம் நோன்பிருந்தோம் முருகவேலனே
மிளகு விரதத்திலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
மீறிவந்த கஷ்டங்களை போக்கவேணும் முருகவேலனே
துளசிவிரதம் இருந்தோம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
தொண்ணூறுநாள் நோன்பிருந்தோம் முருகவேலனே
துளசி விரதத்திலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
தொடர்ந்த பாவம் போக்கவேணும் முருகவேலனே

சோத்துவிரதம் இருந்தோம் கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சோடியாக நோன்பிருந்தோம் முருகவேலனே
சோத்து விரதத்திலே கந்தவேலனே-சாமி கந்தவேலனே
சொந்தபந்தம் காக்கவேணும் முருகவேலனே

## 3. கந்தன் திருவிழா

கந்தனுக்கும் திருவிழா
கந்தசட்டிப் பெருவிழா
தீராவினை தீர்த்திடுவார்
செந்திவேலன் திருவிழா
வந்தவினை தீர்த்திடுவார்
வடிவேலன் திருவிழா
சந்தனம் விளங்கிடும்
சண்முகன் திருவிழா
சந்தானம் தந்திடும்
சரவணன் திருவிழா
பூமுடிக்கும் பரங்கிரியின்
புகழ்பாலன் திருவிழா
தேரோடும் பரங்கிரியில்
சிவபாலன் திருவிழா
மாங்கொலைத் தோரணங்கள்
மல்லிகைப் பூச்சரங்கள்
கோயில்அழகு செய்யும்
குமரேசன் திருவிழா

## 4. ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
குமரனைக் கண்டோமென்று
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
வள்ளியைக் கண்டோமென்று
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
தோகையை விரித்துக் கொண்டு
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
சுழற்றி சுழற்றி விட்டு
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
சிங்காரக் கொண்டையோட
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
சிலுக்குச் சிலுக்கென்று
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
குண்டுமலை மேலேயிருந்து
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
கூவிக் கூவியிங்கே
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
பரங்கிரி மேலே வந்து
ஆடுமயிலே

ஆடுமயிலே வந்து ஆடுமயிலே
பறந்து பறந்து வந்து
ஆடுமயிலே

## 5. பாம்பலம்மன் பாட்டு

(கும்மிப் பாடல்கள்)

தானானே தானானே
தானானே தானானே

கொம்பேறி மூக்கனாம் கொடுசூரி
கொள்ளி விரியனாம் மலைப்பாம்பு
என்னவிதமா தீண்டுச்சம்மா
என்ன மருந்தம்மா பாம்பலம்மா

அம்மன் காப்பை மருந்துன்னு சொல்லி
அரச்சுக் கொடுத்தாளாம் பாம்பலம்மா
மஞ்சக் காப்பை மருந்துன்னு சொல்லி
மாத்திக் கொடுத்தாளாம் பாம்பலம்மா

ஆத்துத் தண்ணியத் தீர்த்தமினு சொல்லி
அள்ளிக் கொடுத்தாளாம் பாம்பலம்மா
குளத்துத் தண்ணியத் தீர்த்தமினு சொல்லி
கொட்டிக் கொடுத்தாளாம் பாம்பலம்மா

அறுத்த சாவலும் எதிர்த்துக் கூவுதாம்
ஆயிரம் பானைகள் பொங்கி நிற்க
ஏட்டிலே அடங்கின சாவத்தலை
எண்ணூறு கேட்குதாம் பொங்கல்பானை

ஆத்து மணலிலே சோறாக்கி
ஆவரம் பூவைக் கறி சமைச்சு
மின்னுட்டாம் பூச்சியை விளக்காக்கி
வேடிக்கை பார்ப்பாளாம் பாம்பலம்மா

## 6. பாம்பலம்மன் பாட்டு
### (கும்மிப் பாடல்)

தானானே தானானே
தானானே தானானே

பாம்பலம்மா பாம்பலம்மா
பால்வார்க்கும் பாம்பலம்மா
நிறத்துக்கொரு படம்எடுப்பா
நீதியுள்ள பாம்பலம்மா
காடுவெட்டிப் படம்எடுப்பா
கருணையுள்ள பாம்பலம்மா
பக்கமொரு படம்எடுப்பா
பத்தினியாள் பாம்பலம்மா
பத்தினியைத் தீண்டமாட்டா
பார்த்து நல்லாப் போயிடுவா
கும்பிட்டு நின்றோமானால்
கொத்தமாட்டா பாம்பலம்மா
நல்லபாம்பு என்றோமானால்
நைசாவும் பார்த்திடுவாள்

தானானே தானானே
தானானே தானானே

## 7. நாகர் பாட்டு

புத்துப் புத்து நாகரே
பூமிக்குடையவரே
குண்டு முத்துப் போலே
கூடி முழிக்கிற நாகரே
பச்சரிசி போலே
படமெடுக்கும் நாகரே
பள்ளர்மகன் பள்ளன்
மடை திறக்க வாராக
படத்தை ஒதுக்கிவிடு
பாதையைக் காட்டிவிடு

## 8. நாகத்தாள் பாட்டு
(கும்மிப் பாடல்)

தானானே தானானே
தானானே தானானே

கும்மிப்பாட்டை நாம சொன்னா
கொடுப்பாளம்மா பாக்கியத்தை
நாகசோதி நின்னவளாம்
நாகத்தாளும் படமெடுக்க
நாகசோதி மின்னுதம்மா
நாகமலை மேலிருந்து
இரத்தினமும் மின்னுதம்மா
நித்தம்ஒரு நிறமாக
அஞ்சுதலை உள்ளவளாம்
அருந்ததியாள் நாகத்தாள்
கருநாகம் செந்நாகம்
கலந்து பிறந்தவளாம்
செந்நாகம் கருநாகம்
சேர்ந்து பிறந்தவளாம்
ஆலமரம் மேலேயிருந்து
ஆடுறாளாம் நாகத்தாள்
நெல்லிமரம் மேலேயிருந்து
ரெண்டுபடம் எடுக்கிறாளாம்
மாமரத்துச் சோலையிலே
மறுத்துப்படம் எடுக்கிறாளாம்

பூமரத்து மேலேயிருந்து
பூநாகப்படம் எடுத்தாள்
புண்ணியவாள் நாகத்தாள்
பொழுதன்னைக்கும் காத்திடுவாள்

## 9. மாரியம்மன் பாட்டு

(கும்மிப் பாட்டு)

தானானே தானானே தானானே தானானே

மாரிநல்ல மகமாயி மஞ்சணைக் காரியவள்
உமையவளே மாரியாத்தா உண்மையுடன் வாருமம்மா
அஞ்சிலே மைக்காரி ஆராட்டம் கொண்டிடுவாள்
தாயே கலைவாணி சங்கரியே வாருமம்மா
வாணி சரசுவதி வந்தருள வேண்டுமம்மா
மாரியோட மகமைகளை யாரறிஞ்சா நாட்டிலேயே
ஆங்காரி ஓங்காரி அக்னிச் சுடலைக்காரி
பம்பை பிறந்ததம்மா பளிங்குக்கால் மண்டபத்தே
உடுக்கை பிறந்ததம்மா கண்ணினூரு மேடையிலே
வேம்பு பிறந்ததம்மா விசயநகர்ப் பட்டணத்தே
பிரம்பு பிறந்ததம்மா பிச்சாண்டி மண்டபத்தே
சிலம்பு பிறந்ததம்மா சிவலிங்கப் பாறையிலே
உத்தி பிறந்ததம்மா உத்தினாவார்த்தியிலே
அழகு பிறந்ததம்மா அயோத்திநகர்தனிலே
உன்னோட ரூபங்களும் ஒருகோடி பொன்பெறுமே
அம்மாவின் அட்சரங்கள் அஞ்சுகோடி பொன்பெறுமே
மாரியவள் பிறந்தஇடம் மலையாளதேசம் அம்மா
மலையாள தேசத்திலே விளையாடப் பெண்பிறந்தாள்
அக்காதங்கை ஏழுபேரு அங்கேவந்து பிறந்தார்கள்
மலையாள தேசத்திலே ஆலயங்கள் இல்லையென்று
ஆலயங்கள் இல்லையென்று அலைமோதி நின்றாளுக
ஐந்திரண்டு ஏழுபேர் அக்காதங்கை பிறந்தவளாம்
வாங்கடி அக்காதங்கை மறுநாடு போவோமென்று
மறுநாடு போவோமென்று மந்திரத்தை உச்சரித்தார்
இரண்டுகோடி மந்திரத்தை இருந்துநல்லா உச்சரித்தார்
கருங்கடலாம் செங்கடலாம் கண்ணுக்கெட்டா கானல்களாம்
கருங்கடல் தண்ணியிலே கன்னிப்பொண்ணா வாராளம்
கன்னிப்பொண்ணா வந்தஅவ கன்னியாகுமரி தங்கினாளாம்
செங்கடல் தண்ணியிலே சின்னப்பொண்ணா வாராளாம்

சின்னப்பொண்ணா வந்தஅவ சிவகெங்கையிலே தங்கினாளாம்
ஏழாறும் எட்டாறும் எதிர்த்துவந்து மலட்டாறும்
ஏழாறு தண்ணியிலே இளம்பிள்ளையா வாராளாம்
இளம்பிள்ளையா வந்தஅவ இருக்கங்குடி தங்கினாளாம்
மறிச்சுவரும் வையையிலே மதலைப்பிள்ளையா வாராளாம்
மதலைப்பிள்ளையா வந்தஅவ மடப்புரத்திலே தங்கினாளாம்
குழந்தைப்பிள்ளையா வந்தஅவ கொல்லங்குடி தங்கினாளாம்
தாயில்லாப் பிள்ளைக்கெல்லாம் தாயாஅவ வாராளாம்
தாய்போல வந்தஅவ தாயமங்கலம் தங்கினாளாம்
வயதுஊரு பிள்ளிளபோல வண்டியூர் தங்கினாளாம்
வண்டியூர்ல தங்கினவள் நிற்கிறாளாம் நிலைத்து அங்கே
மதுரைக்கு நேர்கிழக்கே மாரியம்மன் தெப்பக்குளம்
நாலுபக்கம் குடிசைப்புரம் நடுவேஒரு கோபுரமாம்
நாலுபக்கம் படித்துறையாம் நாயகி குளிக்கிறாளாம்
மாரியங்கே குளிக்கத்துக்க மஞ்சனப் படித்துறையாம்
காளியங்கே குளிக்கத்துக்க கல்லாலே படித்துறையாம்
முத்துமாரி குளிக்கத்துக்க முத்தாலே படித்துறையாம்
தாயவரும் குளிக்கத்துக்க தங்கத்தாலே படித்துறையாம்
குளிச்சு முழுகினாளாம் கோலவர்ண புடவைகட்டி
அவிழ்த்துவிட்ட அவகூந்தல் அஞ்சுலட்சம் மயிருகளாம்
அஞ்சுலட்சம் முடிமயிற்றை அக்கணமே சிக்கெடுத்தாள்
சிக்கெடுத்து முடியிறாளாம் சீமாட்டி முத்துமாரி
மாமரத்து ஓரத்திலே மாரிநல்லா குத்தவைச்சான்
பூமரத்து சோலையிலே பொன்மாரி குத்தவைச்சாள்
ஆத்துக்குத் தென்புறமாம் ஆத்தாளோட ஆலயமாம்
தெப்பத்துக்கு வடபுறமாம் தேவியோட ஆலயமாம்
தேவியோட ஆலயமாம் தெண்டலிட்டு நிற்கிறாளாம்
கோயிலுக் குள்ளேயே கொடுசூலி கொளுவிருக்காள்
ஆலயத்துக் குள்ளேயே அம்மாமாரி கொளுவிருக்காள்
கொட்டுச்சத்தம் கேட்டவுடன் கோயிலைவிட்டு எந்திருப்பாள்
கோயிலைவிட்டு எந்திரிச்சா குழந்தைவரம் தந்திடுவாள்
மணிச்சத்தம் கேட்டவுடன் மனையைவிட்டு எந்திருப்பாள்
மனையவிட்டு எந்திரிச்சா மக்கள்வரம் தந்திடுவாள்
சங்குச்சத்தம் கேட்டவுடன் தளத்தைவிட்டு எந்திருப்பாள்
தளத்தைவிட்டு எந்திரிச்சா தாயிவரம் தந்திடுவாள்
விபூதிப்பையை கையிலெடுப்பாள் வீதி விளையாண்டிடுவாள்
வீதியிலே பார்த்தவர்களுக்கு விபூதியள்ளித் தந்திடுவாள்
பச்சைஇலையும் கைப்பிடிப்பாள் பாதிநேரம் வாயாடுவாள்

பாதையிலே பார்த்தவர்களுக்கு பவளமல்லிகை தந்திடுவாள்
ஆத்தோரம் குடியிருப்பா அழகான மாரியாத்தா
அழகான மாரியாத்தா அன்னப்பொட்டுக் காரிதானே
குளத்தோரம் குடியிருப்பா குங்காக்காரி மாரிதானே
குங்காக்காரி மாரிதானே குங்குமப் பொட்டுக்காரி
வேலியோரம் குடிசைகட்டி வெகுசுருக்கா குடியிருப்பா
வெகுசுருக்கா குடியிருப்பா விபூதிபூச்சுக் காரிதானே
சாலையோரம் குடிசைகட்டி தகுந்தகுடி தானிருப்பாள்
சாலையோரம் இருக்கிறவ சந்தனப்பொட்டுக் காரிதானே
மந்தையோரம் குடிசைகட்டி மாயமாய் குடியிருப்பா
மாயக்காரி மருமக்காரி மஞ்சனப் பூச்சுக்காரி
அம்மாளும் வருவாளாம் கம்மாய்க் கரையோரம்
கல்பதித்த ஓலைகளும் கண்ணாடி மூக்குத்தியும்
சென்னப்பட்டணம் சீட்டெழுதி சீமைபார்த்து வாராளாம்
தண்ணியூற்றிமாப்பிணைந்துதட்டுத்தட்டாய் வைப்போமம் மா
தட்டுத்தட்டாய்வைச்சோமென்றுதகுந்தவரம் கேட்போமம்மா
தளத்தைவிட்டு நீராடி தகுந்தவரம் தந்திடுவாள்
நெய்யூற்றி மாப்பிணைந்து நெட்டுநெட்டாய் வைப்போமம்மா
நெட்டுநெட்டாய்வைச்சோமென்று நின்றுவரம் கேட்போமம்மா
நிலத்தைவிட்டு நீராடி நினைச்சவரம் தந்திடுவாள்
சிங்கமுக ரதங்களேறி தெருப்பறந்து வந்திடுவாள்
வேப்பிலையைக் கைப்பிடித்து வீதிவழி வந்திடுவாள்
பச்சிலையக் கைப்பிடித்து பாதிநிலம் வந்திடுவாள்
மாரிநல்ல மகமாயி மஞ்சணைக் காரியம்மா
உமையவளே மாரியத்தா உண்மையுடன் வாருமம்மா

## 10. வெயிலுகந்த அம்மன் பாட்டு

### (கும்மிப் பாட்டு)

தானானே தானானே தானானே தானானே

தெங்காநல்லா கம்மாயோரம் தேவிவந்து குடியிருக்காள்
தேவிவந்து குடியிருக்கா கம்மாயைப் பார்க்கிறாளாம்
மாரிநல்ல மகமாயி மணிமந்திர வெயிலுகந்தா
மணிமந்திர வெயிலுகந்தா நிற்கிறாளாம் தேவியங்கே

மடப்புரத்துத் தேவியங்கே மறுத்துவந்து பிறக்கிறாளாம்
வெயிலுகந்தா மாரியங்கே வெட்டுக்குடி பிறக்கிறாளாம்
வெட்டுக்குடி பிறக்கிறாளாம் தாயமங்கல மாரியங்கே
தாயமங்கல மாரியங்கே சோழவந்தான் மாரி
சோழவந்தான் மாரிவயள் ஒன்னாப் பிறந்தவளாம்
விருதுநகர் மாரியவள் வெண்கலத் தொண்டைக்காரி
அருப்புக்கோட்டை மாரியாத்தா அழகான கொண்டைக்காரி
எல்லோரும் மாரிதானே இருந்தொருநாள் பிறந்தவளாம்
சமயபுரத்தாளே சங்கரியே வாரும் அம்மா
சமயபுரத்தாளே சடுதியே வாரும் அம்மா
வெயிலுகந்தா அழைக்கிறாளே வேகமாய் வாரும் அம்மா
இருக்கிற இடங்களிலும் எல்லைதானே தெரியலையே
தெங்காகம்மாய் ஓரத்திலே தேவியவள் இருக்கிறாளே
பட்டியல்ல மண்டபமாம் பள்ளர்கள் ஓடைகளாம்
நாலுபக்கம் தூணுகளாம் நடுவேயிரு பூதங்களாம்
ரயிலுநல்லா போகுதுல்ல இருக்கிறாளாம் தேவியங்கே
ரயிலுசத்தம் கேட்கிறாளாம் நாயகியும் வெயிலுகந்தா
ரயிலிலே போறவுக நின்றங்கே வணங்குறாக
வண்டியிலே போறவுக வந்துநின்று வணங்குறாக
லாரியிலே போறவுக கன்னியே வணங்குறாக
வடபுறத்திலே ரயிலுபோகுது தென்புறத்திலே காருபோகுது
நடுவேயிருக்கிறாளாம் நாயகியும் வெயிலுகந்தா
திருப்பரங்குன்றத்திலே தெங்காக்கம்மாய் ஓரத்திலே
முருகனோட வாசலிலே முத்துமாரி அமர்ந்திருக்கா
கண்ணனோட பிறந்தவளாம் காரியக்காரியவ
கோப முழிக்காரி யம்மா கோபாலன் தங்கையம்மா
பச்சை முழிக்காரி யம்மா பரசுரரமன் தங்கையம்மா
கருத்த முழிக்காரியம்மா கண்ணனோட தங்கையம்மா
உத்தமியாள்வெயிலுகந்தா ஒத்தைப்பானை பொங்கல்கேட்பாள்
பொங்கல்பானை வருதுல்ல பொன்னாளுக்குச் சந்நதிக்கு
பொங்கல்நல்லா பொங்குதம்மா பொன்னாளோட வாசலிலே
உத்தமியும் ஏழுபேரும் ஒத்துநின்று பேசுறாக
தேவியோட பொங்கலென்று சேர்ந்துநின்று பேசுறாக
தானானே தானானே தானானே தானானே
தானானே சொல்லுங்கம்மா தந்திடுவாள் பாக்கியங்கள்
தானானே தானானே தானானே தானானே
புதுப்பாட்டைப் படிச்சிடுங்க கொடுத்திடுவாள் பாக்கியத்தை
அஞ்செழுத்துக் காரியவள் மந்திரங்கள் உச்சரிப்பாள்

செவ்வாயைச் சாட்டச்சொன்னாள் சேர்ந்துபொங்கல்
வைக்கச் சொன்னாள்
மாவிளக்குச் சட்டிகேட்டா மங்கையெல்லாம் ஓடிவந்து
சந்நதிக்கு முன்னாக திருப்பொங்கல் வைக்கிறாக
கோயிலுக்கு முன்னேவந்து கொட்டுக்கொட்டி வைக்கிறாக
கொட்டும் குலவையும் கொம்புகளும் பாடிவர
சந்தனப் பூச்சுக்காரி தாயேநம்ம வெயிலுகந்தா
குங்குமப் பூச்சுக்காரி குலவைக்காரி வெயிலுகந்தா
அன்னப் பொட்டுக்காரியவ ஆசார வெயிலுகந்தா
விபூதிப் பூச்சுக்காரியவ வீரமான வெயிலுகந்தா
மஞ்சப் பூச்சுக்காரியவ மாறாட்டம் வெயிலுகந்தா
வெயிலுகந்தா வாசலிலே வெண்பொங்கல் வையுங்கம்மா
தாயோட வாசலிலே சக்கரைப்பொங்கல் வையுங்கம்மா
வட்டியும் காத்திடுவாள் வாய்ப்பானைப் பொங்கல் கேட்பாள்
தொட்டிப்பிள்ளை காத்திடுவாள் துணைக்குவந்து நின்றிடுவாள்
கம்மாயைப் பார்த்திடுவாள் கழனிநல்லா காத்திடுவாள்
அம்மாளைப் பாடுங்கம்மா அவபேரைச் சொல்லுங்கம்மா
தானானே தானானே தானானே தானானே

## 11. சப்பாணிப் பாட்டு

தன்னனனாதினம் தன்னனனாதினம் தன்னனனாதினம்-
தன்னானே
தன்னனனாதினம் தன்னானே

சுற்றிநல்ல திருமதிலாம் சப்பாணி சாமிக்கு
சுற்றிநல்ல காரைக்கட்டாம்
காரைக்கட்டும் கட்டடமும் சப்பாணி சாமிக்கு
அழகாயிருப்பதைப் பாருங்களே
அவரை கிடந்ததைப் பாருங்களே
அதுபற்றிப் படர்ந்ததைப் பாருங்களே
சுரை படர்ந்ததைப் பாருங்களே
சுரைசுற்றிப் படர்ந்ததைப் பாருங்களே
நவாப் பழம்போல சப்பாணி சாமிக்கு
நல்ல பல்வரிசையைப் பாருங்களே
சுரைப் பழம்போல சப்பாணிசாமிக்கு
தொந்தி வரிசையைப் பாருங்களே
சின்னத்தோப்பிலே கம்பெடுத்து ஒரு
சிங்காரத் தோப்பிலே ஆட்டம் ஆடி

அடித்து வாராறாம் சப்பாணிசாமிக்கு
தங்க குஞ்சம் போட்டு வீசுங்கம்மா
வெள்ளை வேட்டிதனை யுடுத்தி அவர்
வெள்ளியினாலே மாலைபோட்டு
அடித்து வாராறாம் சப்பாணிசாமிக்கு
அள்ளிக்குஞ்சம் போட்டு வீசுங்கம்மா
சாய வேட்டிதனை யுடுத்தி அவர்
தங்கத்தினாலே மாலை போட்டு
அடித்து வாராறாம் சப்பாணி சாமிக்கு
தங்கக்குஞ்சம் போட்டு வீசுங்கம்மா
ஊசி நுழையாத காட்டுக்குள்ளே
ஒத்தக் குதிரையாம் சப்பாணி சாமிக்கு
ஒத்தக் குதிரையும் ஓடிநல்லா
சப்பாணி சாமியிடம் போனதம்மா
பாசிநுழையாத காட்டுக்குள்ளே
பத்துக்குதிரையாம் சப்பாணி சாமிக்கு
பத்துக்குதிரையும் ஓடிநல்லா
சப்பாணி சாமியிடம் போனதம்மா
பாப்பாகுளத்திலே மண்ணெடுத்து நல்ல
மதுரைக்கேற்ற குதிரைசெஞ்சு
ஏறிவாராறாம் சப்பாணி சாமி
இலைகுழுங்கவே மரத்திலே
இடைநடுவேயே அரிவாளாம்
ஏறிவாராறாம் சப்பாணி சாமி
எந்திரிச்சா மலைகுலுங்கும்
எலுமிச்சம்பழம் மாலைகளும்
ஓடிவந்தா சலசலக்கும்
ஒன்பதுமணி மாலைகளும்
ஒத்தைக்காலு நொண்டியில்ல அவர்க்கு
ஒருகாலுமே சப்பாணி
வலதுகாலுவே நொண்டியில்ல அந்த
வலதுகாலுமே சப்பாணி
ஒருகாலு வேகத்திலே
ஊரைக் காப்பாராம் சப்பாணி
பாதிநேரமாய் எந்திரிச்சு எங்களைப்
பாதுகாப்பாராம் சப்பாணி
புளியமரத்து அடியிலே அந்த
புண்ணியவானும் வந்திருக்கான்
பூவெடுத்து நல்லபொட்டு வைப்பாராம்நம்ம

பொன்னுதுரை மகன் சப்பாணி
புளியமரம் பெரியமரம் அந்த
புண்ணியவான் வச்சமரம்
புளியமரம் சோலையிலே அந்த
பொன்னும் சப்பாணி வந்திருக்கிறார்
எத்தனையாண்டு கண்டுறுச்சோ இன்னும்
எத்தனையாண்டு காணப்போகுதோ
இத்தனையாண்டு காலம் இங்கே
இருக்குதில்ல புளியமரம்
புளியமரம் ஓரத்திலே அந்த
பொன்னுசப்பாணி வந்திருக்கார்
சலங்கைமணி ஓசைதானே அந்த
சப்பாணி சாமி கோயிலிலே
வயிரமணி ஓசைதானே நம்ம
வாழும் சப்பாணி கோயிலிலே
வயிரமணி ஓசைகளும் அங்கே
வாசிக்குதே கோயிலிலே
கொப்புக்கொரு மணியும் தொங்குதாம்
கோலமணி வாசலிலே
வாதுக்கொரு மணியும் தொங்குதாம்
வயிரமணி ஓசையும் கேட்குதாம்
காதளவாம் மல்லியப்பூ அவர்க்கு
கரையளவாம் இருவாச்சி
நாட்டுமக்களுக்கு நலம் கொடுப்பாராம்
நல்லதுரைமகன் சப்பாணி
வரம் கொடுப்பாராம் சப்பாணி
சுகம் கொடுப்பாராம் சப்பாணி
பட்டமரம் சிட்டம்பட்டி
படர்ந்த மரம் மாடன்வயல்
மாடப்புறா பொங்கலிடும்
மயில்வந்து கூடுகட்டும்
சதுர் ஆடுதே பச்சைக்கிளி
சப்பாணிசாமி மரத்தினிலே
தெற்கே போற காத்து அங்கே
தென்றல் அடிக்குதே பாருங்கடி
தென்றல் அடிக்கவே தூங்குறாராம் நம்ம
சீமான்துரை மகன் சப்பாணி
மேரு சுத்தி வாதினிலே அங்கே
மேகக்காத்து வீசுதில்ல
மேரு சுத்தி காத்தடிக்க அங்கே

மேகம்போல தூங்குறாராம்
தெற்குச்சீமை தென்றலடிக்க அங்கே
சீமைராசன் தூங்குகிறாராம்
கிழக்கேயொரு காத்தடிக்க அங்கே
தூங்குறாராம் சப்பாணிசாமி
தூங்குறாப் போலே கல்லுகளாம் அவர்
குடிக்கிறதும் சாராயங்களாம்
உசந்தபனை கள்ளும் கேட்பார் அவர்க்கு
ஒன்பது கும்பம் சாராயமாம்
சாய்ந்த பனை கள்ளுகளாம் அவர்க்கு
சாராயமும் பத்துக்கும்பம்
கள்ளைக் குடிப்பாராம் கறியும் தின்பாராம்
கல்லுலே சத்தே தூங்குவாராம்
ஆராமீனு பொறியலாம் அவர்க்கு
அயிரை மீனுமே கூட்டாமே
கெண்டை நல்ல பொறியலாம் அவர்க்கு
கெழுத்தி மீனுமே கூட்டாமே
வரால் நல்ல பொறியலாம் அவர்க்கு
வரால் மீனுமே கூட்டாமே
சாவல் நல்ல பொறியலாம் அவர்க்கு
சாவக்கறியுமே கூட்டாமே
கோழி நல்ல பொறியலாம் அவர்க்கு
கோழிக் கறியுமே கூட்டாமே
கள்ளைக் குடிப்பாராம் சப்பாணி அங்கே
கல்லுலே தூங்குவாராம் சப்பாணி
வயிரமணி ஓசைகளும் அங்கே
வாசிக்குதாம் பத்தையிலே
எந்திரிச்சா சலசலக்கும் அவர்க்கு
இருபுறமும் மணியோசை
புளியமரம் அடியினிலே அங்கே
பொன்னுசப்பாணி அமர்ந்திருக்கிறார்
இஞ்சிபூத்து மணக்குதில்ல அங்கே
எலுமிச்சைக் காய்ச்சுச் சரியுதில்ல
புளியும் பூத்து மணக்குதில்ல நம்ம
பொன்னு சப்பாணி கோயிலிலே
தாழை பூத்து மணக்குதில்ல நம்ம
சாமி ஐயனார் கோயிலிலே
கொய்யா பூத்து மணக்குதில்ல அங்கே
கோபாலஈசுவரி கோயிலிலே

கட்டடமும் சித்திரங்களும் நம்ம
காளை சப்பாணி கோயிலிலே
பேனாபுடிச்சு எழுதுவார் நம்ம
பெரியதுரை மகன் சப்பாணி
காளைநல்ல கறுத்தகாளை
கண்ணாடிநல்ல மயிலக்காளை
திமிலுநல்ல பெருத்த காளை
சித்திரம்போல வெழுத்த காளை
கண்ணு நல்ல கறுத்தகாளை
கண்ணாடி மயிலக்காளை
சப்பாணிக்கு வந்தகாளை
சதுராடுதே மந்தையிலே
ஓடுதல்ல காளையங்கே
ஒருமைல் தூரத்திலே
ஓடுற காளையே பார்த்தாராம் சப்பாணி
சீழ்கை நல்லா அடிக்கிறாராம்
சீழ்கைச் சத்தத்தைக்கேட்டு
திரும்புதல்ல மயிலக்காளை
மந்தையிலே மயிலக்காளை
மண்டிபோட்டுக் கூத்தாடுதாம்
புடிகயிறு இல்லாதகாளை
போருல திங்குதாம் சப்பாணிக்காளை
செப்புக்கயிறுமே போடாதகாளை
வரப்பிலே திங்குதாம் சப்பாணிக்காளை
நெத்திக்கயிறு இல்லாத காளை
நெல்லுலே திங்குதாம் சப்பாணிக்காளை
புல்லுலே திண்டாலும் விரட்ட மாட்டோம்
புல்லுக்கு ஒருகலங்காணும்
வரப்புலே திண்டாலும் விரட்டமாட்டோம்
வரப்புக்கு ஒருகலங்காணும்
ஊரிலே திண்டாலும் விரட்டமாட்டோம்
பொலிக்கு ஒருகலங் காணும்
மலையேறுதாம் மயிலக்காளை
சந்துக்குள்ளே ஓடுதாம் சப்பாணிக்காளை

12. திருப்பரங்குன்ற வட்டார நாட்டுப்புறப் பாடல்கள் பற்றி ஆய்வு செய்த மாணவி கா. கலைச்செல்வி தொகுத்த பாடல்கள் (இப்பகுதியிலுள்ள ஒன்பது பாடல்கள் மட்டும்)

1. ராரிராரோ ராரிராரோ
ராமர் என்ன சொன்னாரோ
என்றும் பதினாறு நீ
இருக்கவரம் தந்தாரோ
சங்கரா உன்காவல்—மலைச்
சாத்தாவே உன்னடிமை
சுப்பிரமணி உன்காவல்—தம்பிக்குச்
சொப்பனங்கள் தட்டாம
வேலய்யா உன்காவல்—உனக்கு
வேறபிணி அண்டாம
கந்தையா உம்மருந்து—வேறே
க(டை)ட மருந்த நானறியேன்
சொல்லையா உம்மருந்தெ
சொப்பனத்தில் ஓடிவந்து
குளங் கலங்கத் தலை முழுகி—உங்களுக்கு
கொடிபோல ராமமிட்டு
மலை கலங்கப் பாடிவரும்—என்னைப் பெற்ற நீ
மகராசர் பெற்ற கண்ணோ

(இராமலெட்சுமி,
விளாச்சேரி,
5-10-'82)

2. உச்சிமலைக் கந்தரே
உயர்ந்த மலை வேலவரே
சாஞ்சமலை குண்டுமலை
சனத்தை வரவழைச்சு—முருகன்
சக்தி விளங்குறாரோ
மலையைத் துளைச்சு
மண்டபங்கள் உண்டுபண்ணி
சனத்தை வரவழைச்சு—முருகன்
சக்தி விளங்குறாரோ

(பேச்சியம்மாள்,
கிழக்குயில்குடி,
3-10-'82)

3. சந்தனம் மணக்குதில்ல
சரவணப் பொய்கையில
சாம்பிராணி வாடைதட்டும்—வேலவரு

சன்னதிக்கு முன்னாலே
புனுகாப்பு மணக்குதில்ல—கந்தையா
மூலதாவைப் பொய்கையில
மயிலிருந்து கூவுதில்ல—கந்தையா
மடப்பள்ளி மேலிருந்து
குயிலிருந்து கூவுதில்ல—கந்தையா
குருதப்படி மேலிருந்து

(பேச்சியம்மாள்,
கிழக்குயில்குடி,
3-10-'82)

4. வெள்ளிமலைப் பேனாவாம்
வேலர் கைப் புத்தகமாம்
தங்கமலைப் பேனாவாம்
தருமர் கைப் புத்தகமாம்
சாஞ்சு கணக்கெழுத முருகன்
சன்னதிக்கு முன்னாலே
மலையை வளைச்சு—சுப்பையா
மண்டபங்கள் உண்டு பண்ணி
மண்டபத்துக்குக் கீழே—முருகன்
கொடுத்தாராம் தனிக்காவல்
மல்லிகைப்பூ வாசம்—முருகன்
மலையடி வாரத்திலே
சாம்பிராணி வாசம்—முருகன்
சரவணப் பொய்கையிலே

(பேச்சியம்மாள்,
திருப்பரங்குன்றம்,
21-10-'82)

5. தங்கமோ உம்மேனி
தனிவெங்கலமோ உங்ககுலம்
ஓசையிடும் வெங்கலமோ
உயர்ந்தகுல வம்சமோ
மலையைச்சுற்றி மண்டபமாம்
மாதம் ஒரு கார்த்திகையாம்
தவறாமே நடந்தவர்க்கு—முருகன்
தம்பி வரந்தந்திடுவார்
சந்தனத்தைப் பூசி—முருகன்

சல்லாவ மேல் போட்டு
மல்லிகைப்பூ மாலைபோட்டு—முருகன்
மலையைச் சுற்றியே வாராறாம்

(பேச்சியம்மாள்,
கப்பலூர்,
25-10-'82)

6. தெப்பத்தில் தானமிட்டுத்
திருமலையைச் சுற்றிவந்து
வடக்கே முகம் இருப்பாகளோ
வள்ளி தெய்வானை
பண்டார வேஷங்கொண்டு
பரதேசி ஆனாரோ
திருவோடக் கையிலே எடுத்து
திருச்சடையா ஆனாரோ
திங்கள் புதன்கிழமை
தேரோடும் சனிக்கிழமை
நிலா மின்னுங்க—சுப்பையா
நெத்திக் கண்ணே சோதி மின்ன
தேரிழுக்க மணி குலுங்க
தேசத்தார் கையெடுக்க
சப்பரத்து மேலிருந்து
சனத்தை வரவழைச்சு—சுப்பையா
தனிப்பூசை போட்டாராம்

(வயிரக்காள்,
விளாச்சேரி,
27-10-'82)

7. திருப்பரங்குன்றமாம் தெங்காக் கம்மாயாம்
சேர்ந்த சரவணப் பொய்கைகளாம்
வந்த சனமெல்லாம் நீராடிப் போகுதாம்
வற்றாத சமுத்திரப் பொய்கையிலே
சிக்கந்தர் மலைக்குப் போனவுக
என்னென்ன அடையாளம் கொண்டுவந்தாக
கல்லால மண்டபம் காணிக்கை சப்பரம்
வில்வ மரங்களடையாளம்
சிக்கந்தர் மலைக்குத் தெக்கிட்டுத் தெக்கிட்டு

சீரகச்சம்பா வெள்ளாமை
கோம்ப மலைக்கிளி கொய்ய வருதுன்னு
கூப்பிட்டுச் சொன்னாளாம் வள்ளியம்மை

(ராமலட்சுமி,
விளாச்சேரி,
5-10-82)

8. மலையே மலையழகு
மலையைச் சுற்றித் தோப்பழகு
சிக்கந்தர் மலையழகு
திருப்பரங்குன்றத்துத் தெருவழகு

(கருப்பாயி,
திருப்பரங்குன்றம்,
28-10-82)

9. உம்மனசும் எம்மனசும்
ஒருமனசா இருந்துட்டாக்கா
பஸ்பகிரி மலையைப்
புஷ்பமா நிறுத்திடுவேன்
உம்மனசும் எம்மனசும்
ஒருமனசா இருந்துட்டாக்கா
சிக்கந்தர் மலையைச்
செந்தூரக்காத் தூக்கிடுவேன்

(வயிரக்காள்,
விளாச்சேரி,
27-10-82)

# பிற்சேர்க்கை III

## கல்வெட்டுச் செய்திகள்
## கல்வெட்டுக் குறிப்புகள்

திருப்பரங்குன்றம் கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் தரும் செய்திகள், கல்வெட்டு இதழிலிருந்தும் (S. I. I.) கல்வெட்டு ஆண்டறிக்கையிலிருந்தும், (A.R.E.) இங்கே தொகுத்துத் தரப் படுகின்றன.

**1. அரசன் பெயர்கள்**

பராந்தக நெடுஞ்சடையன் (கி. பி. 765-815)
முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் (கி. பி. 1190-1218)
முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1216-1238)
இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1239-1251)
மாறவர்மன் விக்கிரமபாண்டியன்
மாறவர்மன் குலசேகரபாண்டியன்
பொன்பரப்பின பெருமாள் வீரப்பெருமாள் மகதேசன்
வீரப்பநாயக்கர் (கி. பி. 1572-1595)
வரதப்பநாயக்கர் (செஞ்சி)

**2. மெய்க்கீர்த்திகள்**

1. பூவின் கிழத்தி (என்று தொடங்கும்) முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன்
2. பூமருவிய திருமடந்தையும் (என்று தொடங்கும்) முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்
3. திருமலர் திருவும் (என்று தொடங்கும்) இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்
4. திருமலர் மாது (என்று தொடங்கும்) மாறவர்மன் விக்கிரமபாண்டியன்

## 3. இறைவன் பெயர்கள்

**திருப்பரங்குன்றமுடைய நாயனார்:-**

திருப்பரங்குன்றத்தில் உள்ள சிவபெருமான் திருப்பரங்குன்ற முடைய நாயனார் என்ற பெயர் மூலம் அழைக்கப்பட்டி ருக்கிறார். பின்னர் விக்கிரமபாண்டியன் காலத்தில் இவ் விறைவனுக்கு விக்கிரமபாண்டீஸ்வரமுடையார் என்னும் பெயர் வழங்கியுள்ளது.

**சுந்தரபாண்டிய ஈஸ்வரமுடையார்:-**

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் தென் பரங்குன்றத்தில் பிரசன்னதேவர் என்பவர் வேண்ட சுந்தர பாண்டிய ஈஸ்வரமுடையார் கோயில் எடுக்கப்பட்டது.

## 4. இறைவி பெயர்

இங்குள்ள இறைவியின் பெயர் திருக்காமக் கோட்டத்து ஆளுடைய நாச்சியார் என்றும், ஆவுடையநாயகி என்றும் வழங்கப்பட்டுள்ளது.

## 5. நிலதானம்

இங்குள்ள இறைவன் இறைவி, க்ஷேத்திரபால பிள்ளையார் ஆகியோருக்கு மன்னர்களாலும் மக்களாலும் நிலங்கள் நிவந்தமாக அளிக்கப்பட்டுள்ளன. மன்னர் பெயர் தெரி யாமல் சிதைந்து போன ஒரு கல்வெட்டில் ஆவுடைய நாயகிக்கு நிலம் அளிக்கப்பட்ட செய்தி குறிப்பிட் டுள்ளது. திருக்காமக் கோட்டத்திற்கு அரசனாலும், உலகு டைய நாயனார் என்பவராலும், ஸ்ரீவல்லப சதுர் வேதிமங் கலத்தாராலும் நிலங்கள் நிவந்தமாக அளிக்கப்பட்டுள்ளன.

குலசேகரபுரம் என்ற ஊர்ச்சபையினரால் இக்கோயிலுக்கு நில தானம் செய்யப்பட்டுள்ளது.

திருவுண்ணாழிகை நல்லூர் என்ற கிராமமும் இக்கோயில் வழிபாட்டிற்காக வழங்கப்பட்டுள்ளது.

குலசேகரபுரம் என்ற ஊர் நிலம் க்ஷேத்திரபால பிள்ளை யாருக்கு நிவந்தமாக அளிக்கப்பட்டுள்ளது.

## 6. பொற்கொல்லர்களுக்கு நிலதானம்:-

ஸ்ரீருத்ர மாகேஸ்வரர் என்பவரால் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் இரண்டு பொற்கொல்லர்

களுக்கு இறைவன் வழிபாடு செய்வதற்காக நிலம் விடப் பட்டுள்ளது.

7. கொசக்காணி:-

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் வீரதாவளத்தில் இருந்துகொண்டு ஆழ்வி ராஜ கம்பீர விண்ணதரையன் என்பவனுக்குக் கொசக்காணியாக நிலம் விடப் பட்டுள்ளது. கொசக்காணி-குயவர்களுக்காக விடப்பட்ட நிலம்.

8. தேவரடியாள் மானியம்:—

இவ்வரசன் காலத்தில் கோயில் ஊழியர் ஒருவரின் மகளும் தேவரடியாளுமான ஒருத்திக்கு நிலமும், வீட்டு மனையொன்றும் வழங்கப்பட்டுள்ளது.

9. திருவிளக்கு:—

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருப்பரங்குன்றமுடைய நாயனார் கோயிலில் உள்ள அம்மன் சன்னதியில் இரு விளக்குகள் எரிப்பதற்காக மலை மண்டலத்தைச் சேர்ந்த (சேரநாடு) ஒருவன் ஒரு பொன் பணம் வழங்கியுள்ளான். அது கோயில் சிவபிராமணர்களிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

10. மடங்கள்:—

இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருப்பரங்குன்றமுடையார் கோயிலுக்கு வடகிழக்கில் பகவதி ஆழ்வார் மடம் கட்டியதற்கு மடப்புறமாக நிலம் அளிக்கப்பட்டுள்ளது.

திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான், சோழ குலாந்தகச் சதுர்வேதி மங்கலத்தின் ஒரு பிரிவான குலசேகர நத்தத்தில் உள்ள நிலமொன்றைத் தன்னுடைய மச்சாழ்வி விக்கிரம சோழ தேவன் வேண்டுகோளுக்கிணங்க மடப்புறமாக இராவளர் பசுபதி தேவருக்குக் கொடுத்துள்ளான்.

11. இரத்தக் காணிக்கை:—

1. கி. பி. 1793-இல் ஸ்ரீ கோபாலராயரவர்கள் காலத்தில், ஐரோப்பியர்கள் திருப்பரங்குன்றத்துக் கோயிலுள் புக

ஆரம்பித்தனர். இதனால் கோயிலின் தூய்மை கெட்டு' திருவிழாக்கள் நின்று தலமும் ஊரும் அழிந்து பட்டுப் போகும் என்பதால் சுந்தரபட்டர், தெய்வேந்திரபட்டர், குட்டிபட்டர், சிதம்பரம்பிள்ளை, விழுப்பாதராயர், ஆறு நிருபாகக்காரர், நாட்டாண்மை முத்துக்கருப்பபிள்ளை, காவல் ஆறுகரைப்பேர் உள்ளிட்டாரும் கூடி வயிராவி முத்துக்கருப்பன் என்பவருடைய மகன் குட்டியைக் கோபுரத்திலேறிக் கீழே விழச் செய்தனர். அவனுக்கு இரத்தக் காணிக்கையாக நிலம் கொடுக்கப்பட்டது. மேலும் கோயிலில் இருந்து நாடோறும் அரைப்படி அரிசிச் சோறும் கொடுக்க வேண்டும் என்று இக்கல்வெட்டுக் கூறுகிறது. (இன்றும் இக்கோயிலில் பணிபுரியும் வயிராவியின் சந்ததியார்க்கு, திருவிழாக் காலங்களில் வெற்றிலை மரியாதை செய்யும் பொழுது 'சாவான்' என்று கூறித் தனியே மரியாதை செய்கிறார்கள்)

2. எல்லப்ப முதலியின் மகன் அண்டராபரண முதலியென்பவன் கோயிலுக்கு விடப்பட்ட நிலத்தில் ஏற்பட்ட முறைகேடுகளைக் களைந்து உரிமைகளை நிறுவுவதற்காக இக்கோயில் கோபுரத்திலிருந்து தன் உயிரை மாய்த்துக் கொண்டான். இவன் சந்ததியாருக்கு ஒரு பாளையம் இரத்தக் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. (இன்றும் இக்கோயிலில், பணிபுரியும் சீர்பாதம் என்னும் முதலியார் வகையினர்க்குத் திருவிழாக் காலங்களில் வெற்றிலை மரியாதை செய்யும்பொழுது 'சாவான்' என்று கூறித் தனியே மரியாதை செய்கிறார்கள்)

**12. ஊர்ப் பெயர்கள்:—**

வீரநாராயணக்குளம்
புளிங்குன்றூர் (சுந்தரபாண்டியபுரம்)
திருவுன்னாழிகை நல்லூர்
மாடக்குளம்
புதுக்குளம்
குலசேகர நத்தம்
குலசேகர புரம்
ஸ்ரீ வல்லப சதுர்வேதி மங்கலம்

**புளிங்குன்றூர்:—**

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (1216—39) திருப்பரங்குன்றம் கல்வெட்டு சுந்தரபாண்டியபுரம் என்ற புளிங்

குன்றூரைத் திருப்பரங்குன்றம் கோயில் வழிபாட்டுச் செலவு களுக்காகக் கொடையாக அளித்ததைக் குறிப்பிடுகின்றது. புளியங்குன்றூர் புளியங்குளமாக மாறி இன்று வேடர் புளியங் குளம் என்று வழங்குகின்றது.

**புதுக்குளம்:—**

திருப்பரங்குன்றம், மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு புதுக்குளம் என்னும் ஊரைத் திருப்பரங்குன்றம் கோயிலுக்கு அளித்ததைக் குறிப்பிடு கின்றது. மாடக்குளம் என்னும் பெரிய குளத்திற்கு அருகில் வெட்டப்பட்ட புதிய குளம், புதுக்குளம் எனப் பெயர் பெற்றுப் பின் அதுவே ஊர்ப் பெயராகவும் மாறியது என்று கொள்ள லாம்.

**ஸ்ரீ வல்லப சதுர்வேதி மங்கலம்:—**

மதுரைக்கு ஏழுகல் தொலைவிலிருக்கும் ஊர் சதுர்வேதி மங்கலம். இவ்வூர் திருமலை நாயக்கர் காலத்தில் கூத்திகளுக் காகக் கொடுக்கப்பட்டதால், இதற்கு கூத்தியார்குண்டு என்ற பெயர் வழங்குகிறது. திருமலை நாயக்கரின் படைத் தலைவ ரான இராமப்பய்யர் இவ்வூரில் பிறந்து வளர்ந்தவர். இவர் இங்கு ஒரு சிவன் கோயிலைக் கட்டியுள்ளார்; அதில் திருமலை நாயக்கர், இராமப்பய்யர் ஆகியோரின் சிலைகள் உள்ளன.

## கல்வெட்டுக் குறிப்புகள்

1. ARE 49 of 1890 (S. I. I. Vol. IV Page 108)
2. ARE 37 of 1908 (S. I. I. Vol. XIV Page 2)
3. ARE 333 of 1908
4. ARE 860 of 1917
5. ARE 861 of 1917
6. ARE 336 of 1918
7. ARE 337 of 1918
8. ARE 338 of 1918
9. ARE 339 of 1918

1938ம் ஆண்டு முதல் இன்று வரை

10. ARE 238 of 1942
11. ARE 239 of 1942
12. ARE 240 of 1942
13. ARE 241 of 1942

14. ARE 242 of 1942
15. ARE 243 of 1942
16. ARE 244 of 1942
17. ARE 245 of 1942
18. ARE 246 of 1942
19. ARE 247 of 1942
20. ARE 248 of 1942
21. ARE 249 of 1942
22. ARE 250 of 1942
23. ARE 251 of 1942
24. ARE 252 of 1942
25. ARE 253 of 1942
26. ARE 254 of 1943
27. ARE 255 of 1944
28. ARE 256 of 1945
29. ARE 257 of 1946
30. ARE 258 of 1947
31. ARE 259 of 1942
32. ARE 260 of 1942
33. ARE 261 of 1942
34. ARE 262 of 1942
35. ARE 263 of 1942
36. ARE 264 of 1942
37. ARE 265 of 1942
38. ARE 140 of 1952
39. ARE 141 of 1952
40. ARE 142 of 1952
41. ARE 143 of 1952
42. மதுரை நாயக்கர் வரலாறு, அ. கி. பரந்தாமனார்
43. மதுரை மாவட்ட ஊர்ப்பெயர்கள்-ஓர் ஆய்வு (ஆய்வேடு)
பா. அ. ம. மணிமாறன்

## பிற்சேர்க்கை-IV

# திருப்பரங்குன்றம் கோயிலுக்குரிய சொத்துக்கள்

## திருப்பரங்குன்றம் கோயிலுக்குரிய மண்டபம், தெப்பக்குளம்

| | | | |
|---|---|---|---|
| 1. | தெப்பக்குளம் | .. | மலையின் வடபுறம், கிரி வீதிக்கும், நெடுஞ்சாலைக்கும் வடக்கு |
| 2. | தாமரைக்குளம் | .. | கிரிவீதிக்கு வடபுறம் |
| 3. | திருமலை நாயக்கர் வாகடம் | . | திருப்பரங்குன்றம் போகும் நெடுஞ்சாலை |
| 4. | பசுமலை அம்புபோடுகிற மடம் | .. | பசுமலைக்கிராமம், திருப்பரங்குன்றம் நெடுஞ்சாலையின் தெற்கு எல்லை |
| 5. | திருக்குளம் (நந்தவனம் உட்பட) | .. .. | திருப்பரங்குன்றம் கோயிலின் கீழ்புறம் |
| 6. | முடிகாணிக்கை கட்டிடம் காம்பவுண்டு | .. | கிரிப்பிரகாரம் கீழ்புறம் |
| 7. | தானப்ப முதலியார் மண்டபம் | . | சரவணப் பொய்கையின் வடபுறம் |
| 8. | சின்னத்தேர் முட்டி | .. | சந்நிதித் தெருவிலுள்ளது |
| 9. | பதினாறுகால் மண்டபம் | .. | சந்நிதித் தெருவிலுள்ளது |

| | | |
|---|---|---|
| 10. | தேர்முட்டி மண்டபம் .. | வடக்குக் கிரிவீதி |
| 11. | சரவணப் பொய்கை .. | மலையின் கீழ்புறம் |
| 12. | ஆபீஸ் பங்களா (தற்பொழுது ஓய்வு விடுதி) | திருக்குளத்தின் வடபுறம் |
| 13. | நாகப்ப தலைவர் மண்டபம் .. | வடக்கு ரதவீதி |
| 14. | வலையங்குளம் கிராமம் மாட்டுத்தாவணி .. | வலையங்குளம் கிராமம் |
| 15. | கிளி பங்களா (தற்பொழுது முதியோர் இல்லம்) .. | சந்நிதித்தெரு |
| 16. | ஆதியப்பநாயக்கர் மண்டபம் .. | திருப்பரங்குன்றம் கிரிவீதி மேற்குப் பக்கம் |
| 17. | வள்ளிதேவசேனா மண்டபம் .. | திருக்கோயிலுக்கு மேற்கு பக்கமுள்ளது |
| 18. | யானைக்கல் தெரு மண்டபம் .. | சண்முக வேலாயுதம் பெருமாள்பிள்ளை கட்டளை மண்டபம் |
| 19. | திருக்குளம் பங்களா .. | திருப்பரங்குன்றம் அருள்மிகு ஆண்டவர் சுப்பிரமணிய சுவாமி பெண்கள் உயர்நிலைப்பள்ளி |

(இக்குறிப்பு மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானம், சொத்துப் பதிவேட்டிலிருந்து (பக். 69) எடுத்து எழுதப்பட்டது)

## வாகனங்கள் விவரம்

### மர வாகனங்கள்

| | | |
|---|---|---|
| 1. பள்ளியறை பல்லக்கு | ... | 1 |
| 2. சீவிலிநாயகர் பல்லக்கு | ... | 1 |
| 3. சிம்மாசனம் (சிறியது & பெரியது) | ... | 2 |
| 4. தொட்டில் | ... | 1 |
| 5. பச்சைக்குதிரை | ... | 1 |
| 6. குதிரை (சிறியது) | ... | 1 |
| 7. சப்பரம் | ... | 2 |
| 8. அன்னப்பட்சி | ... | 1 |
| 9. ஆதிசேஷன் | ... | 1 |
| 10. காமதேனு | ... | 1 |
| 11. கமலம் | ... | 1 |
| 12. இடபம் (பெரியது) | ... | 1 |
| 13. இடபம் (சிறியது) | ... | 1 |
| 14. விமானம் (உபயம்) | ... | 1 |
| 15. பள்ளியறை ஊஞ்சல் | ... | 1 |
| 16. ஊஞ்சல் பலகை | ... | 1 |
| 17. பெரிய வைரத்தேர் (வைரக்கட்டையில் செய்தது) | | 1 |
| 18. சிறிய வைரத்தேர் | ... | 1 |
| 19. சட்டத்தேர் | ... | 1 |

### தங்கம், வெள்ளி, தந்த வாகனங்கள்

(இவை மரக்கட்டையின் மேல் உள்ள செப்புத்தகட்டின் மேல் தங்கமுலாம் பூசியவையாகவும், மரக்கட்டையின் மேல் வெள்ளித்தகடு பதிக்கப்பட்டவையாகவும், மரக்கட்டையில் தந்தம் பதித்தவையாகவும் உள்ளன)

| | | |
|---|---|---|
| 1. தங்கக்குதிரை | ... | 1 |
| 2. வெள்ளியானை | ... | 1 |
| 3. வெள்ளி அம்பாரி | ... | 1 |
| 4. தங்கப் பல்லக்கு | ... | 1 |
| 5. ஆனந்தராயர் தந்தப் பல்லக்கு | ... | 1 |
| 6. தங்க ரிஷபம் | ... | 1 |
| 7. வெள்ளிச் சிம்மாசனம் | ... | 1 |

8. தங்கச் சப்பரம் ... 1
9. வெள்ளிப் பூதவாகனம் ... 1
10. வெள்ளி ஆட்டுக்கடா ... 1
11. தந்தத் தொட்டில் ... 1
12. தங்க மயில் ... 1

பஞ்சலோக விக்கிரகங்கள் விவரம்

1. அஸ்திர தேவர் (சிறியது) ... 1
2. அஸ்திர தேவர் (பெரியது) ... 1
3. நடராசர் (சுடருடன்) ... 1
4. சிவகாமியம்மன் ... 1
5. சுடர் ... 1
6. துர்க்கையம்மன் ... 1
7. மனோன்மணியம்மன் ... 1
8. சீவலிநாயகர் (அம்மனுடன்) ... 1
9. அங்காள ஈசுவரி ... 1
10. சோமாஸ்கந்தர் (சிவன்) ... 1
11. ,, (அம்மன்) ... 1
12. ,, (ஸ்கந்தர்) ... 1
13. பீடம் ... 1
14. பிட்சாடனர் (மான், குள்ள பூதத்துடன்) ... 1
15. அண்டாபரணர் ... 1
16. நக்கீரர் (பித்தளை) ... 1
17. ஞானசம்பந்தர் ... 1
18. அப்பர் ... 1
19. சுந்தரர் ... 1
20. மாணிக்கவாசகர் ... 1
21. தண்டாயுதபாணி ... 1
22. வீரவாகுத்தேவர் ... 1
23. சுப்பிரமணியர் (மயிலுடன்) ... 1
24. வள்ளி ... 1
25. தெய்வயானை ... 1
26. முத்துக்குமாரசாமி ... 1
27. வள்ளி ... 1
28. தெய்வயானை ... 1
29. விநாயகர் ... 1
30. சூதானம் சுப்பிரமணியர் ... 1

| | | |
|---|---|---|
| 31. வெயிலுகந்த அம்மன் | ... | 1 |
| 32. பெருமாள் | ... | 1 |
| 33. சண்முகர் | ... | 1 |
| 34. வள்ளிநாயகி | ... | 1 |
| 35. தெய்வநாயகி | ... | 1 |
| 36. உற்சவநாயகர் மண்டபம் சுப்பிரமணியர் | ... | 1 |
| 37. செப்புவேல் | .. | 1 |
| 38. தெய்வநாயகி | ... | 1 |
| 39. கோவர்த்தனாம்பிகை | ... | 1 |
| 40. சண்டிகேசுவரர் | ... | 1 |

(இவை 1978-ஆம் ஆண்டு மதிப்பீட்டு அறிக்கையிலிருந்து மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தானத்திலிருந்து எடுத்து எழுதப்பட்டவை)

**திருவாபரணங்கள்**

1. பொன்நகைகள் (96 எண்ணிக்கை) மதிப்பு ரூபாய் 6,79,832/-
2. வெள்ளி நகைகள் & பொருள்கள் (84 எண்ணிக்கை) மதிப்பு ரூபாய் 5,38,559/-
3. வாகனங்கள் மதிப்பு ரூபாய் 3,96,200/-

(இக்குறிப்பு 20.2.78 தேதியில் மதிப்பீடு செய்யப்பட்ட அறிக்கையின் தட்டச்சுப்படியிலிருந்து எழுதப்பட்டது)

**சொத்து விவரம்**

| | | | |
|---|---|---|---|
| 1. கடைகள் | | ... | 16 |
| 2. வீடு | | ... | 1 |
| 3. நிலங்கள் - | நன்செய் | ... | 62 ஏக்கர் - 23 செண்டு |
| | புன்செய் | ... | 15 ஏக்கர் - 65 செண்டு |

(இக்குறிப்பு மதுரை மீனாட்சியம்மன் கோயில் சொத்துப் பதிவேட்டிலிருந்து எடுத்து எழுதப்பட்டது)

## கோயில் வருமான விவரங்கள் (பசலி வரிசையில்)

| வ.எண் | தலைப்புக்கள் | | பசலி 1385 (1975-76) | பசலி 1386 (1976-77) | பசலி 1387 (1977-78) | பசலி 1388 (1978-79) | பசலி 1389 (1979-80) |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ரூபாய் | ரூபாய் | ரூபாய் | ரூபாய் | ரூபாய் |
| 1. | உண்டியல் வருமானம் | | 273068 | 276061 | 318025 | 392549 | 394725 |
| 2. | கடை வாடகை | | 7492 | 6500 | 5163 | 9472 | 10933 |
| 3. | அருச்சனைச்சீட்டு விற்பனை | | 124199 | 279850 | 362535 | 414638 | 277061 |
| 4. | தஸ்திக் அலவன்ஸ் | | 3593 | 2231 | 2271 | — | — |
| 5. | நிலக்குத்தகை (ரொக்கமாக) | | 830 | 3197 | 3190 | 5027 | 4928 |
| 6. | நிலக்குத்தகை (நெல்லாக) | | 3375 | 16128 | 1889 | 13238 | — |
| 7. | சில்லரைக் குத்தகை | | 205944 | 226976 | 224282 | 169385 | 91254 |
| 8. | மனை வாடகை | | 2042 | 3496 | 1765 | 698 | 793 |
| 9. | வள்ளி, தேவசேனா கல்யாண மண்டபம் வரவு | | 8520 | 8551 | 8700 | 4200 | 17855 |
| 10. | காணிக்கை, இதர வரவுகள் | | 746 | 1200 | 11333 | 6367 | 17918 |
| 11. | மின் கட்டணம் | | — | — | — | 5444 | 4591 |
| 12. | பிரசாத விற்பனை | | — | — | — | — | 175155 |
| | மொத்தம் | ரூ. | 629809 | 824190 | 939153 | 1021018 | 995213 |

## கோயில் செலவு விவரங்கள் (பசலி வரிசையில்)

| வ. எண். | தலைப்புக்கள் | பசலி 1385 (1975-76) | பசலி 1386 (1976-77) | பசலி 1387 (1977-78) | பசலி 1388 (1978-79) | பசலி 1389 (1979-80) |
|---|---|---|---|---|---|---|
| | | ரூபாய் | ரூபாய் | ரூபாய் | ரூபாய் | ரூபாய் |
| 1. | படித்தரம் | 44999 | 45309 | 143666 | 146057 | 114959 |
| 2. | திருவிழா, கச்சேரி | 9576 | 11998 | 6699 | 8306 | 13000 |
| 3. | நிருவாகம் | 137644 | 181260 | 141297 | 167611 | 163769 |
| 4. | பஞ்சாயத்துக்குச் செலுத்தும் வரி | 1736 | 1962 | 1963 | 2034 | 2813 |
| 5. | மின்சாரக் கட்டணம் | 37177 | 45428 | 34101 | 41609 | 44377 |
| 6. | மராமத்துச் செலவு | 86830 | 20675 | 41799 | 16045 | 4730 |
| 7. | கால்நடை பேணுதல் | 10933 | 9100 | 9402 | 12603 | 8513 |
| 8. | பலவகைச் செலவு | 9380 | 9000 | 10597 | 6367 | 8709 |
| 9. | அச்சுக்கூலி | 7816 | 6000 | 5771 | 4377 | 4967 |
| 10. | எழுது பொருள்கள் | 5300 | 5000 | 6243 | 6505 | 1835 |
| 11. | பெண்கள் உயர்நிலைப்பள்ளி | 74933 | 15000 | 74785 | 234770 | 50000 |
| 12. | சித்த வைத்தியசாலை முதியோர் இல்லம் | 9989 | 9000 | 20668 | 18943 | 6793 |
| 13. | அரசு வரி | — | -- | 4200 | 1622 | 1676 |
| 14. | பிரசாதம் தயாரித்தல் | — | — | — | — | 118451 |
| | மொத்தம் ரூ. | 436313 | 359732 | 501191 | 666849 | 544592 |

(இக் குறிப்பு மதுரை மீனாட்சியம்மன் கோயில் தேவஸ்தான அலுவலகத்திலுள்ள வரவு செலவு அறிக்கையிலிருந்து எடுத்து எழுதப்பட்டது.)

# பிற்சேர்க்கை V

## திருப்பரங்குன்றம் ஊரில் உள்ள மடம், மண்டபங்கள்

| வ.எண். | பெயர் | இருப்பிடம் |
|---|---|---|
| 1. | பள்ளர் மடம் | சி. எஸ். டி. ரோடு (பேருந்து நிலையம் எதிர்புறம்) |
| 2. | சௌராஷ்டிரா மண்டபம் (லெ. பாலுச்சாமி ஐயா மண்டபம்) | 160, பெரியரத வீதி, மலைக்குப் பின்புறம் |
| 3. | ப. மு. அ. ப. அவியம் பெருமாள் நாடார் மண்டபம் | 197, பெரியகடை வீதி, (மருத்துவமனை அருகில்) |
| 4. | சோத்துக்கடை மண்டபம் (க. சு. மாரியப்பன் செட்டியார் மண்டபம்) | 198 ,, |
| 5. | மதுரைத் தெற்கு வாசல் கீழைத்தெரு முஸ்லீம்கள் உறவின் முறைக்குப் பாத்தியப் பட்ட மண்டபம் | 200, பெரியரத வீதி |

| வ.எண். | பெயர் | | இருப்பிடம் |
|---|---|---|---|
| 6. | மதுரைத் தெற்கு வாசல் மேலைத்தெரு முஸ்லீம்கள் மண்டபம் | 209 | பெரியரத வீதி |
| 7. | குமாரசாமி மண்டபம் | 213 | ,, |
| 8. | மதுரை சுண்ணாம்புக்காரத் தெரு அகம்படியர் & மறவர்களுக்கு பாத்தியப் பட்ட மண்டபம் | 215 | ,, |
| 9. | திலையூர் மண்டபம் (வே. ஆலடி சேர்வை) | 219 | ,, |
| 10. | ராவுத்தராய மண்டபம் | 220 | ,, |
| 11. | தண்ணீர்ப்பந்தல் மண்டபம் (ராமநாதன் செட்டியார் தண்ணீர்ப்பந்தல்) | 224 | ,, |
| 12. | மதுரை சௌராஷ்டிரா புருஷார்த்த அபிவிருத்தி சபை | 231—233 | ,, |

| வ.எண். | பெயர் | இருப்பிடம் |
| --- | --- | --- |
| 13. | மேலமன்று ராஜமட அகமடியர்களுக்கு பாத்தியப் பட்ட மண்டபம் | 241—245 பெரியரத வீதி |
| 14. | நாற்பத்திரண்டு ஊர் துளுவ வேளாளர் உறவின் முறை யார்கள் சங்கம் | 248—251 ,, |
| 15. | நல்லதம்பி நாடார் மடம் (திருமங்கல நாடார் உறவின் முறைக்குப் பாத்தியப் பட்டது) | 252—258 ,, |
| 16. | மாந்தோப்பு தேசம் ஏழூர் கௌரவ பல்ஜர் சங்கம் | 272—273 ,, |
| 17. | தையல்காரர் மண்டபம் | 275 ,, |
| 18 | புனாகாப்பு மடம் (வெள்ளாளர் பொதுமடம்) | 107, கோட்டைத் தெரு |
| 19. | வேம்புக்கோனார் என்ற சுந்தரராஜக் கோனார் மண்டபம் | 293—295, பெரியரத வீதி |

| வ.எண். | பெயர் | இருப்பிடம் |
|---|---|---|
| 20. | ராமசாமி, திருமலை, குப்புசாமி, சமயன் & தன்னக்குட்டி மண்டபம் | 296—300, பெரியரத வீதி |
| 21. | குருவம்மாள் அண்ணி மண்டபம் (கு. குழந்தைவேல் முதலியார்) | 301 ,, |
| 22. | பிள்ளையார் பாளையம் சேணியர்கள் மண்டபம் | 304 ,, |
| 23. | வி. ஜெயலெட்சுமி மண்டபம் | 305 ,, |
| 24. | திருஞான பண்டாரச் சந்நதிகள் மண்டபம் (மதுரை ஆதீனத்துக்குச் சொந்தமானது) | 306—310 ,, |
| 25. | கூடக்கோவில் நாடார் மண்டபம் | 315 ,, |
| 26. | மதுரைத் தாலுகா அயர்ன் முப்பத்து மூன்று நெடுங்குளம் அகமடியர்களுக்கு பாத்தியப் பட்ட பொது மண்டபம் | 321 ,, |

| வ.எண். | பெயர் | | இருப்பிடம் |
|---|---|---|---|
| 27. | கதிர்வேலுப்பிள்ளை மண்டபம் | 322 | பெரியரத வீதி |
| 28. | மதுரைநகர் விறகுக்கடை வியாபாரிகள் சங்கம் | 323 | ,, |
| 29. | விருத்தாசல முதலியார் கல் மண்டபம் | 325 | ,, |
| 30. | தியாகு நாட்டாண்மை வகையறா திருப்பரங்குன்றம் தர்மச்சத்திரம் | 326 | ,, |
| 31. | கே. என். ஆர். வெங்கடாசலபதி அய்யர் சௌராஷ்டிரர் மண்டபம் | 333—337—சி. | ,, |
| 32. | சிதம்பர நாடார் மண்டபம் | 338 | ,, |
| 33. | திருப்பாச்சேத்தி மண்டபம் (சு. சீராளபிள்ளை) | 345—ஏ | ,, |
| 34. | மு. ப. வெங்கடாஜலபதி அய்யர் சௌராஷ்டிரர் மண்டபம் | 1. | சன்னியாசிக் கிணற்றுச் சந்து |

